அருணகிரிநாதர் அருளிய

# திருப்புகழ்

விருத்தியுரை







அ. குழந்தைவேல் முதலியார்

தேவநாயகன் விலாச அச்சுக்கூடம்

சென்னை

காப்பிரைட்] 1947 [விலை ரூபா 4

உ

முருகன் துணை

# திருப்புகழ்

## (முதற்பாகம்)


சென்னை பச்சையப்பன் காலேஜ் தமிழாசிரியரும்
'செந்தமிழ்ச்செல்வி' பத்திராசிரியரும்
'நாவலராற்றுப்படை' 'புலவர்கதை' 'இராஜராஜன்'
முதலியவற்றின் நூலாசிரியருமாகிய
**மணி. திருநாவுக்கரசு முதலியார் அவர்கள்**
எழுதிய


**விருத்தியுரை அடங்கியது.**




அமரம்பேடு. இரங்கசாமிமுதலியார் குமாரர்
**அமரம்பேடு. குழந்தைவேல் முதலியார்**
தெய்வமகள் விலாச அச்சுக்கூடம்
சென்னை





1947
24. தாண்டவராயபிள்ளை வீதி.

# முகவுரை



**திருப்புகழ்** முத்தமிழ்ப்புலமையும் வித்தகக்கவியும் வல்லவரும், மெய்ஞ்ஞானனுபூதிச் செல்வருமாகிய **அருணகிரிநாதரால்** அருளிச்செய்யப்பட்ட மிகச் சிறந்த நூலென்பது யாவருமறிந்த தொன்று. அது செந்தமிழ் இலக்கியச்செறிவும் இலக்கணவமைதியும் சாத்திரப்பொருள் அடக்கமும் பெற்றிருந்ததோடு வடமொழிக் கலப்பும் பெரிதும் உடையதாய் உள்ளது. அன்றியும் சந்தப் பாட்டாதலின் அதன் இன்பம் நோக்கிச் சொற்கள் திரித்தும் பெயத்துரைக்கப்பட்டுள்ளன. அல்லதூஉம் பாட்டுக்கள் பல பாடபேதங்களோடும், ஆங்காங்குச் சிதைந்து, பொருள் புலப்படாநிலையிற் காணப்படுகின்றன. அதனால் திருப்புகழுக்கு உரை வகுப்பது ஒரு கடினமான வேலையென்பது எல்லார்க்கும் இனிது விளங்கும். அத்தகைய நூலை ஒருவாறு உரையெழுத மேற்கொண்டு முதல் நூறுபாட்டுக்களுக்கு எழுதியுள்ளேன். சிலவிடங்களில் யாருக்கும் பொருள் விளங்காத இடங்களும் இருக்கின்றன. அவையெல்லாம் ஏடெழுதுவோரால் ஏற்பட்ட வழூஉக்களென்பது எனது துணிபு.

பொருட்டொடரியில் பெரும்பாலும் இந்நூலாசிரியர் ஒரே நெறியைப் பற்றிச் செல்லுதலின் விருத்தியுரை முதலிலிருந்து முடிவுவரையில் ஒரே ஒழுங்காகச் செல்லுதற்கு இயலவில்லை எனினும், பல விடங்களில் தக்க மேற்கோள்களை எடுத்துக் காட்டியும், சொல்நயம் பொருணயங்களை விளக்கியும், பொருளை ஒழுங்குபடுத்தித் தூய்மை செய்தும் இருக்கின்றேன். இதனைத் தொடுத்து முடிப்பதற்கு இடையிலே பல இடையூறுகளால் காலம் நீட்டித்து விட்டபடியாலும், வேறு சில காரணங்களாலும், என் விருப்

பத்திற் கிணங்க இவ்வுரை முடிவதற்கு இயலாதுபோயிற்று. இனி மறு பதிப்பில் குமரன் திருவருளால் இக்குறை களை யெல்லாம் ஒழித்தது நான் விரும்புமாறு செய்து முடிக்கலாமென எண்ணுகின்றேன். நூலாசிரியர் வரலாறும் சுருக்கமாக ஆராய்ந்து எழுதியுள்ளேன். இதைக் கண் ணுறும் செந்தமிழ்ச் செல்வர்கள் இந்நூலின் அருமை பெருமைகளையும் உணரயிடுவதற்குத் தடையாயுள்ள பல காரணங்களையும் உணர்ந்து, குறைகளைப் பொருட்படுத் தாது, குணத்தைமேற்கொண்டு இதனை விரைந்து ஏற்றுக் கொள்வார்களென நாடுகின்றேன். இனி இரண்டாம் பாக மாய நூறுபாட்டுக்களை ஆராய்ந்து எடுத்து அவைகளுக் கெல்லாம் குறிப்பீடு கொடுத்தும், முறை வகுத்தும், செவ்வை யாக விருத்தியுரை வரைந்து வெளியிடக் கருதியுள்ளேன். அவ்வகையில் எத்துணைப் பாட்டுக்கள் ஏற்படுமோ அத் துணையும் நூறு நூறாக ஒவ்வொரு பாகமாக வெளியிட்டு வரக் கருதுகின்றேன். அறுமுகச்செல்வன் அருள்புரிக.

இந்நூலை அச்சிடுங் காலத்தில் உடனிருந்து உதவி புரிந்த என் மாணவருடன் சென்னை முத்தியாலுப்பேட்டை உயர்தர பாடசாலைத் தமிழ்ப்புலவருமாகிய மயிலை சிவ **முத்துக்குமாரசுவாமி முதலியார்** அவர்களது உதவி பாராட் டற்பாலது.

இந் நன்முயற்சியிலே எளியேனைப் புகுத்தி முட்டின்றி முடித்த முருகவேள் திருவருள் எழுமையும் எழுபிறப்பும் சிந்தித்து உருகற்பாலது.

இங்ஙனம்,

சென்னை
1923ஹு

**மணி. திருநாவுக்கரசன்.**



அருணகிரிநாதர்

# அருணகிரிநாதர் வரலாறு

## தொடக்கம்

நமது தெய்வச் செந்தமிழ் நாட்டிலே தோன்றிய அரும் பெரும் புலவர்கள் அளவிறந்தவர். தமிழ் மக்கள் இயற்கையிலேயே பாடுந்திறமை அமையப் பெற்றவரென்பது அந்நாட்டிலே கடல்போன்று பரந்து வழங்கும் பழமொழிகளாலும் செய்யுட்களாலும் இனிது விளங்கும். இக்கருத்தை மேனாட்டுப் புலவரான (Revd. Lazarus) லாஸரஸ் பாதிரியாரும் எடுத்துக் காட்டியிருக்கின்றார். தமிழ்ச்சங்கங்கள் இருந்த காலத்தில் பல நூல்கள் வெளிப்பட்டன. அந்நூல்களெல்லாம் அகப்பொருள் புறப்பொருளென்னும் இருவகை ஒழுக்கங்களையும் சித்திரிக்காமல் உள்ளது உள்ளவாறே கிளந்துரைக்கும் பெற்றியன. சங்கங்களுக்குப் பின் தோன்றிய நூல்களுள் பெரும்பான்மையன மதவைராக்கியம், தத்துவஞானம் முதலியவற்றை மிகுத்துரைப்பனவாகவும், புனைந்துரை மிக்கனவாகவும் காணப்படுகின்றன. சிந்தாமணி முதலிய காப்பியங்களையும், கம்பராமாயண முதலிய இதிகாசங்களையும் இதற்கு உதாரணமாகக் காண்க. சமயகுரவரும், ஆழ்வார்களும் தோன்றிப் பக்திரசம்பொருந்திய திருப்பாடல்களை அருளிச்செய்து, மக்களுக்கு மெய்யுணர்வைப் புகட்டினார். அன்றியும் திருஞானசம்பந்தர் முதலியோர் தாம் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாசுரங்களுக்குப் பண்ணடைவு அமைத்து, இசை இலக்கணத்தை இயற்றமிழோடு புகட்டி மனப்புலனுக்கே யன்றிச் செவிப்புலனுக்கும் இன்பமூட்டினர். அத்

தகைய இன்பத்தில் ஈடுபட்டிருந்த தமிழ்நாடா, மன அறிவோடு செவிச்செல்வத்தையும் பெற்று களிதுளும்பினா. அதனால், அக்காலத்திலே தோன்றிய நூல்களெல்லாம் பொதுவாகவோ சிறப்பாகவோ இசை, ஒழுக்கம், தத்துவப் பொருள் முதலியன அமைந்து, சமயப்பற்றுடையனவாய்த் திகழ்ந்தன இக்குணங்கள் மேன்மேலும் வளர்ந்து ஓங்கி வருங்காலத்தில் சமயநூல்களுக்கேயன்றிப் பிற நூல்களுக்கு அவ்வளவு பெருமை இல்லை அதனால் புலவர்கள், சிவபெருமான், திருமால் முதலியோரையே தலைவர்களாக அமைத்து அந்தாதி, கலம்பகம், கோவை முதலிய பிரபந்தங்களைப் பாடியும் தலபுராணங்களை இயற்றியும் நின்றார்கள். சைவநூல்களில் திருமுறைக்கு இணையான வேறு நூல் தோன்றுதலியலாது வைணவ நூல்களுள் திவ்யப் பிரபந்தத்திற்கு நிகராக வேறு நூல் எழப்படமுடியாது. எத்தகைய புலமையோரும் அவர் பாடும் பாட்டுக்களெல்லாம் இந்நூல்களுக்குக் கீழ்ப்பட்டனவேயாகும் இத்தகைய காலத்தில் செவ்வி பொருந்தத் தோன்றியது நம் அருணகிரிநாதர் இயற்றியருளிய திருப்புகழ் நூல் திருப்புகழ் ஒரு புத்தம் புதுச்சுவையைத் தமிழிலே பிறப்பித்தது அதைச் சிறப்பிக்கலாயிற்று கற்றோர்க்கும் மற்றோர்க்கும் உண்ண உண்ண உவட்டா அமிழ்தாய் ஐம்புலன்களும் மனமென்னும் ஆறாவது புலனோடு ஒருமையுறும்படி அருமை ஒலிகளைப் பெற்று மிளிர்கின்றது. பொருள் தெரியாதவர்களும் திருப்புகழைக் கேட்டுக் களிக்க விழைகின்றனர். நாடக

அரங்கங்களிலும் பாகவதப் பிரசங்க மேடைகளிலும் திருப் புகழ்ப் பாக்களை மகாஜனங்கள் கேட்கின்றார்கள். கணிகையர் கச்சேரிகளிலும் திருப்புகழை விரும்புகின்றனர். திருப்புகழை மட்டும் தனியே ஓதும் நியமத்தைக் கொண்டிருக்கும் சங்கங்களும் சென்னைமாநகரில் தோன்றி யிருக்கின்றன. இவை அனைத்தையும் சற்று உற்றுப்பார்க்கில், அருணகிரி நாதருடைய பெருமையும் அவர் தமிழர் மனத்தைக் கவர்ந்துள்ள தன்மையும் நன்கு விளங்கும். இத்தகைய பெரியார் எந்நாட்டிலே எந்நகரிலே யாருக்கு எப்போது பிறந்தாரென்றும், எங்ஙனம் கல்வி பயின்றாரென்றும், எங்ஙனம் வாழ்க்கையைச் செலுத்தினாரென்றும் எங்ஙனம் ஆறுமுகப்பெருமான் அருளைப் பெற்றாரென்றும், ஒவ்வொருவரும் அறிய அவாவுகின்றார். அவற்றைக் குறித்து எமக்கெட்டிய வரையில் சிலவற்றைக் கூறுவோம்.

## ஆராய்ச்சி

நம் நாட்டுப் புலவர் வரலாறு ஒன்றேனும் சரியாகக் கிடைக்கவில்லை. அதற்குக் காரணம் சில உள. அவைகளுள் முக்கியமான காரணம் நம்மவர்கள், பெரியோர்கள் சரித்திரத்தையன்றி, மற்றவர் சரித்திரத்தை விரும்பாமையேயாகும். எவற்றைக் கூறினும் அவர், முனைப்பின்றியே கூறுதல் வழக்கம். அவ்வழக்கத்தையே பெருமக்களும் விரும்பி வந்தனர். தற்புகழ்ச்சி என்னும் குற்றத்திற்குப் பயந்தும், அநித்தமான பொருளை விரும்பலாகாதென்னும் தத்துவ ஞானத்திற்குக் கட்டுப்பட்டும், நான் எனது என்னும் அகங்

காரமமகாரஙகளைக காட்டலாகாதெனனும் அவையோர் சொலலுககு அடஙகியும் இருந்தாராதலின, அவாகளியற் றிய நூலகளில தம்மைபபற்றிய குறிபபு யாதொனறும் பொருவாயக காணபபடுவதிலலை. அவாகள கடவுளர் மேலேறறி வீராமேலும் பாடுதல செயயார. அஙஙனம் செயய நேரினும் மககட்டனமைககு மேலும் ஒரு தெயவத் தன்மையை ஏற்றியே யாதும சொலலத் துணிவர. இதை விளககக் காணபரம்பரையாக வழஙகி வரும ஒரு சிறிய நிகழசசியை யெடுததுக கூறுவோம அதிவீராமபாணடி யா எனனும் கவிஞா, நைடதமென்னும நவரசமபொருந் திய காவியத்தைப பதது அழகும் பொருநதபபாடி முடிக் தத தம தநதையாராகிய குலசேகர வழுதியி னிடத்துச் சென்று காட்ட, அவா அதனைத திருபபிக கூட பாராது, 'அழிந்துபோகும நமமைபபோனற ஒரு மனனவனையா பாடினாய்? அழியாத இறைவனை யனறோ பாடலவேணடும' என்று புகழசசி கேட்க வநத மைநதனை இகழ்ச்சிசெயது அவன மகிழசசியைககொனறார எனபதும், அதனபினனா அதிவீராமபாணடியா தமதநதையாரை மகிழ்விககவேண் டித் திருககருவைப பதிறறுப பதகந்தாதியை அனபுச சுவை பொருந்தப பாடி முடிததுத தந்தைககுக காட்ட அவா அதனை இறைவன்மேல பாடபபட்ட நூலெனறு அறிநது மகிழ்சசி பொஙகிக கையிலேநதிக கண்ணி லொற றிக்கொண்டு தம் புதலவாபா லளித்துப படிக்கச செயது கேட்டுககொணடு வருகையில,

உரகா பரணத் திருமார்பும்
　　உமையொப் பனையாள் இடப்புறமும்
சிரமா லிகையும் புரிசடையும்
　　செய்ய வாயும் கறைமிடறும்
வரதா பயமும் மழுமானும்
　　வயங்கு கரமும் மலரடியும்
கருவா புரியான் வெளிப்படுத்திக்
　　காட்சி கொடுத்து நின்றனனே.

என்னும் பாட்டை மைந்தர் படித்தபொழுது தம் வசமற்றுப் பரவசப்பட்டுத் தமது மைந்தரை இருகரத்தாலும் தழுவி மார்போடணைத்துக் கொண்டாரென்றும், அதன் பின்னர் அதிவீரராமபாண்டியர் கூர்மபுராணம் முதலிய சிவநூல்களையன்றி வேறு நூல்களைப் பாடாதொழிந்தனர் என்றும் கூறுவர்.

இனிப் புலவர் சரித்திரத்தை ஆராயப் புகுவோர்க்கு இடையூறு புரிவோர் பலர். அவர்களுள் காலத்தை நீட்டித்துச் சொல்லுவதால் சிறப்பு அதிகமென மயங்க உணர்ந்து, ஆழ்வார்கள் காலத்தைக் கிருதயுகத்திற்கு இழுத்துச் செல்லுகின்றவர்களும் 'இவருக்குமுன் அவர்' அவருக்கு முன் இவர்' என்று முதலிலே தெரிந்துகொண்ட பொருளையே உண்மை எனக்கொண்டு ஆராய்ச்சியால் ஏற்படும் உண்மைகள் தம் கொள்கைகளுக்கு முரண்பட்டிருந்தால் அவற்றைக் கேளாது மகத்துச் சனியாக முற்றும் வெறுப்பவர்களும், சாதி, சமயம் முதலிய படுகுழியி லமிழ்ந்து ஆராய்ச்சிக்கரை யேறினால், குலத்திற்குக் குறை வருமோ?

சமயத்திற்குச் சங்கடம் நேருமோ? என்று அஞ்சி ஒதுங்குகின்றவர்களும், அவையே காரணமாக இல்லதை புனைந்தும் உள்ளதை மறைத்தும் எழுதி, உண்மையை மறைக்கின்றவர்களும் எனப் பலர் தந்தருளார். இவற்றையெல்லாம் ஒருங்குவைத்து உண்மையைக் கொழித்துச் சொல்லுவது கல்லில் நார் உரிப்பதுபோலத் தோன்றும். இது மெய், இது பொய், இது புனைந்துரை, இது உயர்வு நவிற்சி என்று நுணுகி அறிதல் சாலவும் அரிதெனினும் அருணகிரிநாதர் வரலாற்றைக் கர்ண பரம்பரையை ஒட்டியும் ஆராய்ச்சி முறையைப்பற்றியும் ஒருவாறு எடுத்துக் கூறுவாம்.

## அருணகிரிநாதரும் பட்டினத்துப் பிள்ளையாரும்

அருணகிரிநாதர் இப்போது வட ஆர்க்காடு ஜில்லாவைச் சார்ந்த திருவண்ணாமலை என்னும் சிவநகரிலே அவதரித்தவர். இவர் குலம் தேவகணிகையர் குலம் என்று சொல்லப்பட்டுள்ளது. இவருடன் ஓட்டுடன் பற்றின்றி உலக போகத்தைத் துறந்த பட்டினத்துப் பிள்ளையார் திருக்குமாரரென்று சிலர் கூறுவர். அது பொருந்தாது. ஏனெனில் பட்டினத்துப் பிள்ளையார் இருந்தகாலம் வரகுண பாண்டியனுக்குப் பிற்பட்டதாகவும் நம்பி ஆண்டார் நம்பிக்கு முற்பட்டதாகவும் தெரிதலால் ஏறக்குறைய ஆயிரம் ஆண்டிற்கு முற்பட்டது என்பது தெளிவாம். அருணகிரிநாதர் காலம், பிரபுட தேவராயனென்னும் அரசனுடைய காலமென்பது வெளிப்படை. அவன் ஏறக்குறைய நானூற்றைம்பது ஆண்டுகளுக்குமுன் இருந்தான் இங்ஙனமிருத்தலின்,

அருணகிரிநாதர் பட்டினத்துப் பிள்ளையாருக்குப் புதல்வராதல் எங்ஙனம் பொருந்தும்? அன்றியும், 'பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்போல் ஆரும் துறக்கை யரிதரிது' என்று தாயுமானவராலும் பிறராலும் பாராட்டப்படும் பெருந் துறவையுடைய பட்டினத்தார் ஒரு கணிகைமாதைக் கண்டு அறிவு மயங்கினாரென்றும், உலக இயலுக்கு மாறாக அவர் வீரியத்தை உண்டதனால் குழந்தை பிறந்தது என்று கூறுதலும் அசம்பாவிதமாம் ஆதலின், அருணகிரிநாதர் பட்டினத்தார் புதல்வரல்லர் என்பது கடைப்பிடிக்க.

## அருணகிரியார் கல்வித்திறம்

அருணகிரியார் கல்வி கற்ற வரலாற்றைப்பற்றியும் இளம்பருவச் செயல்களைப்பற்றியும் நமக்கு யாதும் தெரியவில்லை. ஆனால், அவர் அருளிச்செய்த நூல்களை ஆராய்ந்து பார்க்குமிடத்து அவர் செந்தமிழ்ப் புலமையே யன்றி வடமொழிப் புலமையும் வாய்ந்தவரென்பது தெளிவாகப் புலப்படும். வடமொழியைக் கல்லாதவரும் சில வடசொற்களைப் பயிற்சி வசத்தால் தம் நூலில் பெய்துரைக்கலாமாதலின், அதுபற்றி அருணகிரியார் வடமொழியில் வல்லுனர் என்பது பொருந்தாது எனின். அற்றன்று; புலமையினாலேயன்றிப் பயிற்சி ஒன்றால் மட்டும் எடுத்துக் கூறமுடியாத வடமொழிச் சொற்களும் தொடர்களும் திருப்புகழில் நிறைந்திருக்கிறபடியால் அவருக்கு வடமொழிப் புலமை இருந்தே தீரவேண்டும் என்பது துணியப்படும்.

## உலகவாழ்வில் வெறுப்புற்றமை

இவரைப் பெற்ற அன்னை இவர் இளம் பருவத்திலேயே உயிர் துறந்தார். இவர்பால் பேரன்பு வைத்து இவரை ஆதரித்து வந்தவர் இவரது தமக்கையார். அவ்வம்மையார் அருணகிரிநாதருக்கு வேண்டும் உணவு, உடை முதலிய எல்லாத் துப்புரவுகளையும் குறைவறக் கொடுத்து வந்தனர். அவற்றைப் பெற்று இனிது வாழ்ந்தும், கல்விச் செருக்கால் கவிபாடியும், கணிகையர் மரபிலே தோன்றினமையால், இயற்கையாக ஏற்படும் இசை வுணர்ச்சியாலும் செயற்கையாய்த் தெரிந்துகொண்ட இசை ஞானத்தாலும் வாலிபப்பருவத்தாலும் சிற்றின்பப் பிரியராய் விளங்கினர். அதனால் கணிகையர் வீடே இவருக்கு உறைவிடமாயிற்று அவர்களும் இவரிடம் அன்பு பாராட்டுவார்போல் அபிநயித்து வந்தனர். அழகு, கல்வி, இசை, இன்குரல் முதலிய எல்லாம் கணிகையர் வீட்டில் சிறப்படையா. பொருள் ஒன்றே அங்குப் புகழைக் கொடுப்பது ஆதலின், கல்வி முதலியவற்றால் சிறந்திருந்த அருணகிரியார் கணிகையர்க்கு அவ்வப்போது பொருள் வழங்க வேண்டியதாயிற்று. அவர் விரும்பியபடி எல்லாம் அவர் அன்பிற் சிறந்த தமக்கையார் மனங்கோணாதபடி தம்பியாருக்கு அளித்து வந்தார். இவ்வாறு தமக்கிருந்த பொருளையும், தம் தமக்கையாருக்கிருந்த பொருளையும் அழித்தனர். பொருள் முட்டுப்படவே வேசையர் இவருக்குக் கட்டுப்படாராயினர். முன்னரே இவரிடத்தில் தொகை தொகையாகப் பொருள் பெற்ற

வரும், இவர் உண்ட மிச்சிலை உண்டவரும், உம்மைப் பிரிந்து வாழேமென்று விண்டவரும் எல்லாரும் முகங் கொடுத்துப் பேசாது கடுகடுத்து நின்றனர். அப்பொழுதும் அவர்பால் வைத்த பாசத்தால் அவர் தம் செய்கைகளுக் கெல்லாம் ஒவ்வோர் வழியாகக் கருத்தை அமைத்து, எவ்வாறேனும் தம் தமக்கையாரை வருத்திச் சிறிது பொருள் பெற்றுக் கணிகையர் வீடு சென்று மீள்வர். இவ் வாறு சிறிது காலம் நடைபெற்று வந்தது. தமக்கையார் அணிகலங்களும் ஒழிந்தன. வீடும் வெறும் வீடாயிற்று. அந்நிலையில் ஒருநாள் அருணகிரியார் கணிகையார்களுக்குக் கொடுக்கப் பொருளில்லாது இளைத்து அல்லலுற்றுத் தமக்கையாரிடஞ் சென்று 'அம்மையே எனக்குப் பொருள் வழங்குக; நான் கணிகை இல்லத்துக்குச் செல்லல் வேண்டும்' என வற்புறுத்தினர். அவ்வம்மையார், தம்மிடம் பொருளில்லாமையை எவ்வளவு எடுத்துக் கூறியும் இசைந்திலர். அதன்மேல் அச்செல்வி மனம் உளைந்து சகோதரனை நோக்கி, 'நீ தாசி வீட்டிற்குச் சென்று அநுபவிக்கும் சுகத்தை என்னிடம் அநுபவிப்பாயாக. நானும் பெண் பாலே. உனக்கும் எனக்கும் தாய் ஒருத்தியேயாயினும், தந்தையர் வெவ்வேறவர். ஆதலின், அதனால் குறையில்லை உன்னுடைய துன்பத்தை இவ்வாறு நீக்கிக் கொள்வதில் யாதும் தடையில்லை' எனக் கூறினார். இங்ஙனம் அவ் வம்மை வெறுத்துக் கூறிய அச்சுடுகோல் இடி இடித்தாற் போல அருணகிரியார் செவியில் பட்டு அம்புபோல் உடம்

பில பட்டுருவியது. உடனே இரண்டு செவிகளையும் பொத்திக்கொண்டு 'இத்தகைய தகாத கொடுமொழிகளை என்னைப் பெற்ற தாயினும் பெரிய தாயாகிய தமக்கை சொல்வதற்குக் காரணமாக விருந்தது என்னுடைய அறிவற்ற செயலன்றோ? இதனால் நான் பழிக்கும் பாவத்திற்கும் ஆளானேன். இத்தகைய பெரும்பாவி உயிர் தரித்திருத்தல் உலகமாதாவுக்குப் பெரும் பாரமே. ஆதலின், உடனே உயிர் மாய்த்துக் குற்றத்தை ஒழித்தலே எனக்குக் கருமமும் தருமமுமாகும். இன்றேல் என்னைப்போலும் இவ்வுலகத்தில் பாவிகள் யார் உளர்? என்று துணிந்து அவ்விடம் விட்டுத் துண்ணென அகன்றார்.

## உபதேசம் பெற்றது

தம் இன்னுயிரை மாய்த்துக் கொள்ள வேண்டுமென எண்ணிய அருணகிரிநாதர் வல்லாள மன்னனால் முன்னாக் கட்டப்பட்டுச் சிறந்திருக்கும் கோபுரத்தின் மீதேறித் தலைகீழாக விழுந்தார். இங்ஙனம் விழுந்தவரை முனிவரொருவர் தமது திருக்கரத்தில் தாங்கிக்கொண்டனர். அருணகிரியார் முனிவர் பெருந்தகையை நோக்கி, 'அறுமுகப்பெருமானே ஓர் உருவெடுத்தாற்போலத் தோன்றிய ஐயனே! நான் ஒரு பெரும்பாவி, என்னைத் தேவரீர் புனிதமான திருக்கரத்தில் தீண்டலும் தகாது. நான் செய்த கொடுஞ்செயல்களை எண்ணுந்தோறும் என்னுடைய உடலைச் சித்திரவதை செய்து தீயிலிட்டாலும் சாலாது எனத் தோன்றுகிறது. ஆதலின், இக்கோபுரத்தின் மீதேறிக் குப்புறவிழுந்து, உடலைச் சிதைக்க

கத துணிந்தேன, அத்தகைய நாயினுங்கடைபபட்ட புழுத் தலைச சிறியேனை அடிகளாகிய தேவரீா காத்தது பாம்புக குப பாலூட்டி வளாபபதுபோலாகும. ஆகவே, அருள செயது எனககு விடை கொடுங்கள்; நான சென்று என னுயிரை மாயததுப பூபாரததை யொழிபபேன' என்று வேணடி நின்றனா மானிடக்கோலந் தாஙகி வநத அறு முக ப்பெருமான அதுகேட்டு புன்னகைசெயது, 'கணமணி! மனம் வருநதவேண்டா, உன குறறததை நீ உணாந்ததே உனககுத தகக தணடனையாகும, இனிப புனிதனுவாய; கணிகையா உறவிலே மிகக விருபபுடையவனுய்த திரிந துழன்றுயேனும முருகனிடததில உணமையன்புபொருந்தி யிருந்தனை; அவனை பிடைவிடாது சிந்தித்தாய், வநதிந தாய, வணஙகினுய. ஆதலின, நீ என்றும் இருத்தறகு உரியை, இறததறகு உரியையலலை. இன்றுதொட்டு முரு கபபெருமானை வாயாரபபாடுந திருததொண்டைக கைக கொளவாயாக' என்று அருள சுரநது, அவா நெறறியிலே திருநீறிடடுத திருமநதிரததைச செவியிலோதி, ஜபமாலை யொன்றைக கையிலே தநது, 'சுமமா விரு' என்னும் மௌனநிலையையும் யுணா ததித திருவுருககரந்தனா.

அருணகிரியாா தம்மைக காததருளித தமககு ஞானோபதேசம புரிந்தவன அருநதவராலும் காணுதற கரிய அருட்பெருங கடலாகிய அறுமுகசசெலவனே யென றுணாந்து, 'ஆந்தோ! என்னுயிரினும இனிய என்னப்பனை யென்று காண்பேன? என் கண்களால இன்னும் சிறிது

நேரம் அவனழகைப் பார்த்துக் களியாது ஒழிந்தேனே! அவன் திருவடிமலரைச் சிரோபூஷணமா யணியாதொழிந்தேனே! அவன் அன்பு ததும்பும் இன்பவதனத்தை அழகு தவழும் புன்னகையோடும் என்னுள்ளத்தில் கொள்ளை கொள்ளாது ஒழிந்தேனே!'' என்று பலவாறாகக் கூறியரற்றி மெய்யெலாம் மயிர்க்குச்செறியக் கண்களில் அருவி பொழிய, வாய்குழற, நாத் தழுதழுப்பத் தஞ்செயலற்று அவ்வாசிரியமூர்த்தி மறைந்த திக்கை நோக்கி நோக்கி அழுவாராயினார். அவர் தோன்றியவிடத்தைச் சுற்றிச் சுற்றி வலம் வந்தார். அம்மையே! என்னையாட்கொண்ட அமுதே! அப்பனே! ஒப்பிலாப் பெருந்தகையே! நாயேன் உன்னை யொழிய ஒருவரையும் நம்பேன், நீயே பெம்மானை யாளுடையா னென்று சொல்லிக் கோபுரவாயிலையே தமக்குறைவிடமாகக் கொண்டு அங்கேயே தங்கி நிஷ்டைகூடி நின்றார். அவரைப் பற்றியிருந்த தொழுநோயும் அவரைத் தொழுநோயாய் விட்டு விலகியது. அவர் முகத்தில் அன்பு மிளிர்ந்தது, கண்களில் அருள் வழிந்தது; உடம்பு தூய்மையடைந்து ஒளிர்ந்தது.

அருணகிரியாரின் அன்புள்ள தமக்கையார் தமது தம்பியாருடைய வரவு காணாராய் உளம் வருந்தித் தாம் சொன்ன சொல்லை நினைந்து அவரைத் தேடிக்கொண்டு தாசிகள் வீடுதோறுஞ் சென்றார். அவரை எங்குங் காணாராய்க் கோயிலுக்குச் செல்ல, அவர் அங்கே யிருத்தலைக் கண்டு அவரைக் குறுகினார். அப்போது அருணகிரியார்

எழுந்து அவரது அடிகளில் விழுந்து, வணங்கி, 'அன்னை யினும் பன்மடங்கு அன்புடைய தமக்கையே! உம்மா லன்றோ இன்று நான் நற்கதி யடைந்தேன், இனித் துறவி யாகவே காலங் கழிப்பேன், யாதுக்கும் வருந்தாது நீர் வீடு சென்று நம் முருகவேள் திருவடியில் அன்பைப் பதித்துத் துதித்து வருவீராக' என்று சொல்லி அவரைத் தேற்றி யனுப்பினர். அவ்வம்மையாரும் அவருடைய நிலைமையைக் கண்டு மகிழ்ந்து முருகன் திருவருளைப் புகழ்ந்து வீடு சென்றனர்.

## திருப்புகழ் பாடியது

அருணகிரிநாதர் குருமணியாக எழுந்தருளிய குமர வேள் தமக்குக் கட்டளையிட்டவாறே அவருடைய புகழைப் பாடுதற்கு விரும்பி எவ்வாறு பாடுவேனென்று நினைந்திருக் கையில் குருமணியினது புன்னகை மனத்திலே முனைந்துத் தோன்ற, 'முத்தைத்தரு பத்தித் திருநகை' என அடி யெடுத்துப் பாடுவாராயினர். அன்றுமுதல் திருப்புகழ் பாடுதலையே தமது திருப்பணியாகக் கொண்டார். அருணை யைச் சுட்டிப் பல சந்தக்கவிகளை இயற்றியதோடு அமை யாது, பல திவ்ய ஸ்தலங்களுக்குஞ் சென்று திருப்புகழ் பாடத் தொடங்கினர். இங்ஙனம் திருப்பரங்குன்றம், மதுரை, திருச்செந்தூர், திருவாவினன்குடி, திருவேரகம், திருப்போரூர், திருத்தணிகை, சீகாளத்தி முதலிய பல க்ஷேத்திரங்களுக்குஞ் சென்று, பாடிக்கொண்டு வருவா ராயினர். அங்ஙனம் வருவார்க்கு வயலூரில் முருகவேள்

தரிசனந் தந்தருளினார். அதனாலவர் அப்பதியைக் குறித்துப் பலவிடங்களிலும் மிகுதியாகப் பாடுவாராயினர். அப்பதியில் தங்கியிருந்தபோது அவரைச் செவ்வேள் விராலி மலைக்கு வாவெனப் பணித்தனர். அவ்வாறே அருணகிரியார் விராலிமலைக்குச் சென்று முருகனைத் தொழுதனர்.

ஈழநாட்டிற்குச் சென்று கதிர்காமம் முதலிய க்ஷேத்திரங்களையுந் தரிசித்துப் பாடிப் பெரும்புகழ் பெற்றுப் பாவலரும் நாவலரும் வணங்குமாறு பரஞான திலகராய் விளங்கியிருந்தார்.

### வில்லிபுத்தூரார்

அருணகிரிநாதர் இவ்வாறு வாழ்ந்துவருங்கால் வில்லிபுத்தூரரென்னும் புலவர் அண்ணாமலையை யடைந்தனர். அவர் திருமுனைப்பாடி நாட்டிலுள்ள சனியூரிலே வீரராகவாசாரியருக்குப் புதல்வராகப் பிறந்தவர்; கொங்கர் குலபதியாகிய வக்கபாகை நாட்டரசன் வரபதியாட்கொண்டான் சமஸ்தான புலவர், வடமொழியிலும் தென்மொழியிலும் வல்லவர், பாவன்மை மிக்கவர். அவர் பலவிடங்களுக்குஞ் சென்று அவ்வவ் விடங்கடோறுமுள்ள செந்தமிழ்ப் புலவர்களோடு எதிர்த்து வாதுபுரிந்து கடுவினாக்களை யெழுப்பி விடை பிறக்க இயலாதாருடைய செவிகளைக் குறடுகொண்டு அறுத்தல் வழக்கம். அத்தகையார் திருவண்ணாமலைக்கு வந்ததும் அங்குள்ள சிறந்த புலவர் யாரென வினவினார். அனைவரும் ஒரேபடியாக அருணகிரிநாதரே அண்ணாமலைக்கு உண்ணமுதாய் விளங்கும் உத்தமப் புலவர் என

இசைத்தனர். அதைக்கேட்ட வில்லிபுத்தூரர் அருணகிரியார் பாடிய சில பாக்களைக் கேட்டு அவைகளுக்குக் குற்றங் கூறத் தொடங்கினர் அன்றியும் அருணகிரியாரோடு தமக்கு வாதுபுரிய விருப்பமுள்ளதாகவும் அறிவித்தனர். அதுகேட்ட பெரியோர் சிலர் வில்லிபுத்தூரர் செருக்கு மொழிகளைச் செவிசுடக் கேட்டு அருணகிரியாரபால் சென்று வில்லிபுத்தூரர் இறுமாப்பை யடக்கவேண்டு மெனக் குறையிரந்து வேண்டிக்கொண்டனர் அவரும் அதற்கு இசைய இருவரும் ஒரு மன்றத்திற் றங்கி வாது செய்யத் தொடங்கினர் அப்போது அருணகிரிநாதர் வில்லி புத்தூரரை நோக்கித் தாம் பாடும் ஒரு செய்யுளுக்கு உரை கூறிவிட்டால் தாம் தோற்றுவிட்டதாக ஒப்புக் கொள்ளலா மென்று கூறினர். வில்லிபுத்தூரர் அதற்குடன்பட்டு அருணகிரியாரை அப்பாட்டை விரைந்து கூறும்படி கேட்ட னர். அருணகிரிநாதர் கந்தரந்தாதி யென்னும் பெயரை யுடைய தமது நூலிலேவரும் ஐம்பத்து நான்காவது செய்யு ளாகிய,

'திதத்ததத்த் திதத்த திதிதாதை தாததுத திதத்ததிதா
திதத்தத்தத திதத திதித்தித்த தேதுத்து தித்திதத்தா
திதத்தத்தத் திதத்தை தாததி தேதுதை தாதத்து
திதத்தத்தத திதிதிதி தீதீ திதிதுதி தீதொத்ததே'

என்னும் பாட்டை எடுத்து இயம்பினர் அதற்குப் பொருள் கூற இயலாது வில்லி மயங்கினர் உடனே அருணகிரியார் வில்லி செருக்கடங்கி ஓடுங்கிநிற்றலைக் கண்டு, புலவரே!

கவி யொருவர் பங்கன்று; ஏற்றமும் தன்மையால் என்சாண யென்பதை உணராநது இனியேனும் இத்தகாத செயல்களை விடுத்தொழிவீராக என்று அறிவு புகட்டினர். வில்லிபுத்தூராரும், அருணகிரியாருடைய பரந்த புலமையும் விரிந்த உள்ளத்தையும் கண்டு கழி மகிழ் வெய்தி அவருடன் அளவளாவி அவர் பாடிய திருப்புகழ்ப் பாக்களில் பொருந்தியுள்ள சந்தப்பொலிவையும் சொல்நயம் பொருள் நயங்களையும் பாராட்டிச் சென்றனர்.

இந்நிகழ்ச்சிக்கு ஆதாரமாக இரண்டு கவிகளைக் காட்டுவர். அவை வருமாறு:

'குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டிய னிங்கில்லை
குறும்பியளவாகக் காதைக் குடைந்து தோண்டி
எட்டினமட் டறுப்பதற்கோ வில்லி யில்லை
இரண்டொன்றாய் முடிந்து தலையிறங்கப் போட்டு
வெட்டுதற்கோ கவியொட்டக் கூத்தனில்லை
விளையாட்டாகக் கவிதைதனை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ அறிவில்லாத் துரைகளுண்டு
தேசமெங்கும் புலவரெனத் திரியலாமே'

'காசுக்குக் கம்பன் கருணைக் கருணகிரி
ஆசுக்குக் காளமுகி லாவனே—தேசுபெறு
மூழுக்குக் கூத்த னுவக்கப் புகழேந்தி
கூழுக்கிங் கௌவையெனக் கூறு.'

முதற்கவி உலகவியலுக்கு முரண்பட்டிருத்தலாலும் தகுதிக்குப் பொருந்தாமையாலும் அவ்வாறே ஒப்புக்கொள்ளத்தக்கதாகக் காணப்படவில்லை.

இனி, வில்லிபுத்தூரார் திருவண்ணாமலை ஆலயத்தின் வழியாகச் செல்லுபவர் அதனைத் தரிசிக்கலாகாதென்னும் கருத்தால் திரையிட்டுச் சென்றனரென்றும், அதனை அறிந்த அருணகிரியார்,

'புரத்தைத்தர சிங்கத்தைப் போர்ப்பாகக் கூற்றை
எரித்தவாக்குத் தாசனெதிரே—விரைத்தபுகழ்
தேனகாட்டுஞ் சோணகிரித் தேசிகனைப் போற்றாமல்
ஏன்கெட்டுப் போறானிவன்.'

என்னும் பாடலைக் கூறினரென்றும், அதனால் வில்லி கண்ணிழந்தனரென்றும், இழந்த கண்களை அருணகிரியார் அருள் செய்தமையால் மீண்டும் பெற்றனரென்றும் அதன் பிறகே வில்லிபுத்தூரார் சிவஸ்துதி விரவிவர மகாபாரதம் பாடினாரென்றும் கூறுவர். இவற்றுக்கெல்லாம் தக்க ஆதாரமில்லை.

## சம்பந்தாண்டான்

சம்பந்தாண்டான் என்னும் பெயருடைய தேவி உபாசகன் ஒருவன், அக்காலத்தில் திருவண்ணாமலையில் வாழ்ந்திருந்தான். அவன் செந்தமிழ்ப்புலமையு முடையவன்; தன்னினும் சிறந்தார் யாருமிலரெனத் தருக்கித் திரிபவன்; அரசன் அபிமானமும் பெற்றவன். அவனுக்கு அருணகிரியார் புகழிலும் நன்மதிப்பிலும் அழுக்காறுண்டாயிற்று. எங்ஙனமேனும் அவருடைய பெருமையைக் குறைக்கவேண்டுமென அவன் அரசன்பாற் சென்று,

அருணகிரிநாதா முருகவேளை அரசாககுத தரிசனஞ் செய் விகக வேண்டுமென்றும் கூறினன. மனனனுகிய பிரபுட தேவன இவவிருவருடைய பகைமை தலைககீடாகவேனும் முருகவேளைத தரிசிககலாமென ஆவலகொண்டு அந நிகழசசிகளை அருணகிரியாருககு அறிவிததான. அருண கிரியாரும் அதறகு உடனபட்டாா நாள ஒனறு குறிககப பட்டது. குறிககபபட்ட இடததை வேநதனும அடைநத வன் முனனா அருணகிரியாா முருகவேள காட்சியை அரசனுககு அளிததறகாகத தாா செயயவேண்டிய சடஙகுகள எலலாவறறையும முடிதது அறுமுகபபெரு மான அருள்நோககி நினறனா. முருகவேளோ காட்சி தரவிலலை அவவாறு தாராமைககுக காரணம சம்பந்தாண் டான வேண்டுகோளால தேவியாா முருகவேளைத தமமடிமீ திருத்தி விளையாட்டயாநததேயாம எனபதை உணாநது உடனே மயிலை பபாடுவாராயினா பாடலும மயிலானது தேவியாா முனநின்று நடனம புரிநதது அககாட்சியில அம்மை யீடுபட்டு இருபபக குமரன அம்மை மடியினின் றுந தாவி மயிலினமீது ஏறுதலும மயில பறநதுசெனறு முருகனுடன் அருணகிரியாரிடம செனறது. அரசனும் முருகன் காட்சி பெறறான

பின்னாச சமபந்தாணடான் வேணடுகோளால் அர சன அருணகிரியாரைத தேவலோகததுப் பாரிசாத மல ரைக கொணாந்து கொடுககுமபடி வேண்டிக்கொண்டான். அபபெருந்தகையாரும அதறகு ஒருபபட்டுத் தம்முடைய

உடலத்தை மலையில் ஓரிடத்தில் அடக்கம்செய்து கிளி உருக்கொண்டு தேவலோகம் சென்று இந்திரனிடம் பாரிசாத மலரைப் பெற்றுக்கொண்டு திரும்பினர். இதற்கிடையில் சம்பந்தாண்டான் அருணகிரியார் தற்கொலை புரிந்து கொண்டாரென அரசற்குணர்த்தி அவர் உடலைச் சோதிக்குமாறு தூண்டி அதனைக் கொளுத்திவிடும்படி செய்தான். மீண்டு வந்த அருணகிரியார் தமது உடலைக் காணாது திருவருளை யெண்ணி அரசனைக்கண்டு, தமது நிலையை உணரும்படி செய்து அந்நிலையிலேயே குமரவேள் தியானத்தமர்ந்து, பரனுள் நிட்டைகூடி நின்று அவன் திருவடிகளில் இரண்டறக் கலக்கும் சுத்தாத்துவித முத்திப்பேற்றை எய்தினர்.

இனி முருகன்காட்சி பேரொளியுடைத்தாயிருந்தமையான், அரசன் கண்ணிழந்தானென்றும் அக்கண்ணை மீண்டும் பெறவே, பாரிசாதமலரை விரும்பினனென்றும் கிளியுருப்பெற்ற அருணகிரியார் அவ்வடிவத்துடன் தேவி திருக்கரத்தில் தங்கினரென்றும் பலவேறு வகையாகக் கூறுவாருமுளர். இவை யனைத்தும் கர்ணபரம்பரைச் செய்திகளேயன்றி வேறல்ல. இவற்றிற்கு ஆதாரமாகச் சிலர் எடுத்துக்காட்டும் அகச்சான்றுகளுக்குக் கருத்து வேறாதலும் பிறசான்றுகள் கர்ணபரம்பரைச் செய்திகளையே யொட்டியனவாதலும் நுண்ணுணர்வான் அறிந்து கொள்க. அருணகிரியார் தமக்கையாரும் சிறிதுகாலஞ் சென்றதும் இறைவன் திருவடி நிழலை எய்தினர். விரிக்கிற் பெருகும்.

## அருணகிரிநாதர் பெருமை

அருணகிரியார் பெருஞ்சிறப்பிற்கு முக்கிய காரணமாயுள்ளது அவர் தமிழிலே புதுவதாக ஏற்படுத்திய சந்தமேயாம். இவருக்கு முன் தொல்காப்பியத்தின் கண்ணே கூறப்பட்ட நூறு வண்ணங்கள் பொருந்திய தமிழ்ப்பாடல்கள் இருந்தனவேயன்றி இவர் உண்டாக்கிய தத்த, தந்தன, தய்ய முதலிய வண்ணங்கள் இருந்தில. பாட்டுக்களுக்கு உயிராகவுள்ளது ஒலியென்பதும், அவ்வொலிகளின் அமைப்பே செவிக்கும் அந்தக்கரணங்களுக்கும் பயன்பட்டு உள்ளுணர்ச்சியைத் தட்டி யெழுப்பும் என்பதும் சான்றோர் கொள்கை. இதனாலன்றே வேதம் ஓதுதலில் சிறிதும் பிழைவருதலாகாதென்றும் அங்ஙனம் வரின் ஓதுவோர்க்கும் ஓதுவிப்போர்க்கும் தீங்குகள் நேரிடுமென்றும் நியதி பிறந்திருக்கின்றது. இவருக்குப் பின் இவரைப்போன்று சந்தமமைத்து ஆயிரக்கணக்கான பாடல்களைப் பாடினவர் திருப்புகழ்சாமியென்னும் தண்டபாணிசாமிகள் அவர் பாட்டுகள் வடமொழிக் கலப்பு பெரும்பான்மையும் இன்றியிருத்தலின் வடமொழிக் கலப்பின்றிச் சந்தமமையாது என்பார் கூற்றை மறுப்பதற்குத் தக்க ஆதாரமாய் இலங்குகின்றது. ஆயினும் அவர் பாட்டுகளுக்கும் அருணகிரியார் பாட்டுகளுக்கும் உள்ள வேற்றுமை நோக்கின் அஜகஜாந்தரமாகும். ஆதலின் அருணகிரியாரைப் போலப் பல சந்தங்களை அமைத்துப் பாடிய புலவர் ஒருவருமிலர் என்பது

துணிபு இதுவே இவருக்கு உரிய தனிச்சிறப்பு. இவர் சந்தங்கள் ஏறக்குறைய நூற்றுக்குமேல் வேற்றுமையுள்ளன.

இரண்டாவதாக இவருக்கு உள்ள பெருமை இவரடைந்த ஞானநிலையேயாம். இவர் ஞானநிலையைக் குறித்தே சிவானுபவப் பெருஞ்செல்வராகிய தாயுமான சுவாமிகள் தம் நூலிலே ஆறு இடங்களில் விதந்தோதி யிருக்கின்றார். அவர் பாடியருளிய 'சும்மாவிருசொல்லற' எனும் அருமபொருளைப் பலவிடங்களிலே தாயுமானவர் 'சும்மாவிருக்கச் சுகமுதயமாகுமே' என்றும், 'சும்மா விருக்கும் சுகம்' என்று கூறியருளினார். சும்மா விருக்கும் மௌன நிலையை அருணகிரியாருக்கு முன் வடமொழியில் சில சிறு உபநிடதங்களும் கூறியிருப்பினும் இவரைப்போல அதனை வற்புறுத்திப் பறையறைந்தவர் வேறொருவருமிலர். இவ்வுண்மை கடைப்பிடித்தே தாயுமானச்செல்வர்,

'ஐயா அருணகிரி அப்பா உனைப்போல
மெய்யாக ஓர்சொல் விளம்பினர் யார்—வையகத்தோர்
சாற்றரிதென் றேசற்றார் தன்னனையாய் முக்கணெந்தை
நாற்றிசைக்கும் கைகாட்டினான்.'

என்னும் திருப்பாட்டை அருளிச் செய்வாராயினர். அன்றியும்,

'அறிவை யறிவதுவே யாகும் பொருளென்
றுறுதிசொன்ன வுண்மையினை யோருநா ளெந்நாளோ.'

என்னும் கண்ணியினால் அவர் உரையின் திடத்தைப் புலப்படுத்தினார். இவர் வாக்கின் பெருமையை,

'வாக்கிற் கருணகிரி வாதவூ ரர்கனிவில்
தாக்கிற் றிருஞான சம்பந்தர் — நோக்கிற்கு
நக்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரனார்
சொற்குறுதிக் கப்பரெனச் சொல்'

என்னும் பழம்பாடல் இனிது விளக்கும். இவர் முதலிடை கடைச்சங்கங்களைக் குறித்தும், பிரபுடதேவராஜா முதலிய மன்னர்களைக் குறித்தும், சுந்தரமூர்த்திசுவாமிகள் திருஞானசம்பந்தர் முதலிய அடியார்களைக்குறித்தும், மனுநீதிசோழனைக்குறித்தும், ஆங்காங்குக் கூறியிருக்கின்றார். அன்றியும் க்ஷேத்திரங்களைப்பற்றிக் கூறுமிடங்களில் அந்தந்த க்ஷேத்திர வரலாறுகளையும் எடுத்திசைப்பார். இவ்வா முதலின இவர் பரந்த புலமை உடையவரென்பது நன்கு புலப்படும்.

## கொள்கைகள்

திருஞானசம்பந்தர் முருகப்பெருமானுடைய அவதாரமென்பது இவருடைய கொள்கை. அதை இவர் பலவிடங்களில் விரித்துக் கூறியிருக்கின்றார். இராமாயணக் கதையைக் கூறுமிடத்து அனுமான் ருத்திரமூர்த்தி அம்சமென்று கூறியிருக்கின்றார். முப்பத்தாறு தத்துவங்களை ஒப்புக்கொண்டிருக்கின்றார். சுத்தாத்துவித முத்தியைக் குறித்து விளக்கமாகச் சொல்லியிருக்கின்றார். ஆதலால், இவர் சைவசித்தாந்தியென்பது நன்றாகப் புலப்படும். மயிலை மந்திரரூபமிலை யென்று உணர்த்தி யிருக்கின்றார். முருகப்

பெருமானை யன்றி வேறொருவரையும் முதற்கடவுளாகக் கூறாராயினும், சிவபெருமான், உமாதேவியார், கணபதி, திருமால் முதலிய தேவர்களைக் குறித்து ஆங்காங்கு வாயாரப் புகழ்ந்து பாடியிருக்கின்றார். இவர் கௌமார சமயத்தைச் சேர்ந்தவரென்றும், சைவசித்தாந்தி யல்லரென்றும் சிலர் கூறுவர். அது பொருந்தாது. சிவபெருமானே முருகவேளாகத் தோன்றினார் என்பதும் சைவசித்தாந்தத்தைத் தவிர்த்து, கௌமாரதரிசனம் என ஒன்று இன்மையாலும் என்பது.

## பிறகுறிப்புக்கள்

இவர் சிற்றின்பப் பிரியராய்ப் பரத்தையர் இடத்திலே பழகி, அவர் வஞ்சனை முதலியவைகளை நன்கு அறிந்து இருந்ததலின் மிக அழகாக அப்பகுதிகளை எடுத்துக் கூறுகிறார். ஆங்காங்குச் சிலேடையணிகளும் வருணனைகளும் கற்பனை அலங்காரங்களும் இவர் பாடல்களில் காணப்படுகின்றன. இவர் உடலின் இழிவையும் நோய்களின் தொகையையும் உலகவாழ்வின் நிலையாமையையும் மிக விரித்துக் கூறியிருக்கின்றார்.

## அருணகிரியார் அருளிச்செய்த நூல்கள்

திருப்புகழ் —இதுவே இவர் செய்த நூல்களின் முதன்மையானது. முருகன் திருப்புகழைப்பற்றிச் சொல்லுவதால் இந்நூல் இப்பெயர் பெற்றது. இதன் தொகை பதினாயிரம் என்று மார்க்கசகாயதேவரும் பிறரும் கூறுவர்

'அருணகிரி நாதர் பதினாறாயிரமென்
றுரைசெய் திருப்புகழை யோதிற்--பாதத்திற்கே
தேணி யருட்கடலுக் கேறுமனத் தளர்ச்சிக்
காணிப் பிறவிக் காடு'

ஆனால் இப்பொழுது கிடைத்துள்ள பாடல்கள் இரண்டாயிரத்துக்கு மேற்பட்டவையல்ல. இவற்றுள்ளும் பல பாடல்களும் பல அடிகளும் இடைச் செருகலாகத் தோன்றுகின்றன.

கந்தரந்தாதி —இது பக்திரசம் பொருந்திய அரிய நூல் இதைப்பற்றி 'கந்தரந்தாதியைப் பாராதே, கழுகுக் குன்றத்துப் பாலையைப் பிணையாதே' என்று ஒரு பழமொழியும் வழங்குகின்றது. இதில் தானே தகரவர்க்கத்தாலாகிய பாட்டும் அமைந்துள்ளது

கந்தரநுபூதி —அருணகிரியார் நூல்களில் ஞானம் மிகுந்ததும் பலராலும் பாராட்டப்படுவதும் இதுவே.

'கந்தரநு பூதிபெற்றுக் கந்தரநு பூதிசொற்ற
எந்தை யருணகிரி யிருக்குநா ளெந்நாளோ.'

என்னும் தாயுமானார் திருவாக்கையும் காண்க

கந்தரலங்காரம், திருவகுப்பு முதலியனவும் இவர் பாடியனவே.

உடற்கூற்று வண்ணம்,—பட்டினத்தார் பாடியருளியது என்று சிலரும், இவர் பாடியதென்று பலரும் கூறுவர்.

---

# திருப்புகழ்

திருப்புகழ் என்பது திரு+புகழ் எனனும் இரண்டு சொற்களாலாகிய ஒரு தொடர். திரு என்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம், எனவே அழகு என்பது பொருள்படும். இச்சொல் கடவுளர், முனிவர், பெரியோர் முதலியோர்களைக் குறித்து வழங்கும்போதும் அவர்கள் செயல்களைக் குறித்து வழங்கும்போதும் சேர்த்துச் சொல்லப்படும். தூய்மை, பெருமை, சிறப்பு முதலிய பொருள்களையும் பெறும். புகழ் என்பது புகழினாலாகிய நூலைக் குறிக்கும். ஆதலின் அஃது ஆகுபெயராம். எனவே திருப்புகழ் என்பது அடையடுத்த ஆகுபெயராம். ஈண்டுப் புகழ் என்றது முருகப்பெருமானுடைய புகழ், சில வாழ்நாள் பல்பிணிச் சிற்றறிவுடைய மக்கட் புகழும் ஏனைய கடவுளர் புகழும்போலன்றி என்றும் நிலைபெறுவ தொன்றாதலின் அவன் புகழே புகழெனப்படும் என்பது விளங்கத் திரு என்னும் அடைமொழி புணர்க்கப்பட்டது. திருவாசகம் திருக்கோயில், திருவடி முதலியவற்றுள்ளும் திரு என்பது சேர்க்கப்பட்டிருத்தல் காண்க. இது தொல்காப்பியத்திற் கூறப்பட்ட தேவபாடாண்டிணையின் பாற்படும்.

---

# தல அகராதி


பாடல்

1 கதிர்காமம், 86.
2 குமரகோட்டம், 48.
3 குருகிரி (சுவாமிமலை), 68, 69
4 குன்றுதோறாடல், 21.
5 சிதம்பரம், 60, 61, 62.
6 ஸ்ரீபுருடமங்கை, 29.
7 சுப்பிரமணியர் துதி, 2.
8 சுவாமிமலை, 65
9 சோணசைலம் (திருவருணை), 63, 64
10 சோலைமலை, 28, 49, 54.
11 திருக்கற்குடி, 33.
12 திருக்கரபுரம், 99.
13 திருக்குராவடி. 93.
14 திருக்குறட்டி, 89.
15 திரிசிராமலை, 23.
15 திருச்செங்கோடு, 26.
17 திருச்செந்தில், 9, 10, 11, 12, 13, 14, 44, 47
18 திருத்தணிகை, 46, 66.
19 திருப்பரங்குன்றம். 82.
20 திருப்பரங்கிரி. 3, 4, 5 6, 7, 8
21 திருப்பழனிமலை, (திருவாவினன்குடி), 15, 16, 17, 39, 40, 41, 42, 43.
22 திருப்புலியூர், 87.

பாடல்

23 திருப்போரூர், 24, 25
24 திருமயிலை, 34.
25 திருவருணை, 35, 53, 77, 78, 83. 95.
26 திருவண்ணாமலை, 73, 79.
27 திருவாரூர், 70
28 திருவாலங்காடு, 91.
29 திருவானைக்கா, 32
30 திருவிடைமருதூர், 98
31 திருவேங்கடம், 31
32 திருவேரகம், (சுவாமிமலை) 18, 19, 20, 85
33 தென்கடம்பந்துறை, 22.
34 நிம்பபுரம், 75, 76,
35 பழமுதிர் சோலை, 27.
36 பழனி, 30,59,71,72,92
37 பெரும்பற்றப்புலியூர் (சிதம்பரம்) 56.
38 பொது, 36, 38, 45, 50, 51, 55, 57, 58, 67, 74, 80, 81. 88, 90 94, 97.
39 யாழ்ப்பாணம், 37
40 விநாயகர் துதி, 1
41 விநாயகமலை, 100.
42 விராலிமலை 84, 96.
43 வேளூர் (வைத்தீசுவரன் கோயில்) 52.

உ

முருகன் துணை

# சிறப்புப்பாயிரம்

## நூற்சிறப்பு

நேரிசை வெண்பா

எல்லாரு ஞானத் தெளிஞரே கேளீர்சொல்
கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ—பொல்லாக்
கருப்புகழைக் கேட்குமோ கானமயில் வீரன்
திருப்புகழைக் கேட்குஞ் செவி. 1

வேதம்வேண் டாஞ்சகல வித்தைவேண் டாங்கீத
நாதம்வேண் டாஞான நூல்வேண்டாம்—ஆதி
குருப்புகழை மேவுகின்ற கொற்றவன்றன் பொற்றாள்
திருப்புகழைக் கேளீர் தினம். 2

## நூற்பயன்

ஞானம் பெறலாம் நலம்பெறலாம் எந்நாளும்
வானம் அரசாள வரம்பெறலாம்—மோனவீ
டேறலாம் யானைக் கிளையான் திருப்புகழைக்
கூறினார்க் காமேயிக் கூறு. 3

ஆறுமுகந் தோன்றும் அழகிய வேல் தோன்றுமவன்
ஏறுமயில் தோன்றுமெழில் தோன்றும்—சீறிவரு
சூரன் முடியைத் துணித்தோன் திருப்புகழைப்
பாரில் வழுத்தினோர் பால். 4

## கலி விருத்தம்

பொருப்பது பொடிப்பட விடுத்திடு கைவேலா
இருப்பிட முனக்கெது எனக்கரு ளியம்பாய்
உருக்கநல விழுக்குல வொழுக்கமில ரேனும்
திருப்புகழ் படிப்பவர் மனத்தினி லிருப்பாம். 5

திருப்புகழ் படிக்குமவர் சிந்தைவலு வாலே
ஒருத்தரை மதிப்பதிலை யுன்றனரு ளாலே
பொருப்பினை மிகப்பொருது வென்றமயில் மீதே
தரித்தொரு திருத்தணியில் நின்றபெரு மாளே. 6

## வெண்பா

ஓராறு மாமுகமுடைய பரசிதமெய்ஞ் ஞானகுகன
பேரா லருணகிரி பெருமானில்—சீராரும
தோத்திரமா தாக்கத் துதிக்குந் திருப்புகழை
ஏத்தினவ ரீடேறு வார். 7

அருணகிரி நாதர்பதி னாறா யிரமென
றுரைசெய் திருப்புகழை யோதீர்—பரகதிக்கஞ்
சேணி யருட்கடலுக் கேற மனத்தளர்ச்சிக
காணி பிறவிக் கரம். 8

திருப்புகழைக் கற்கத் திருப்புகழைக் கேட்கத்
திருப்புகழை நித்தஞ் செபிக்க—திருப்புகழை
அர்ச்சிக்க முத்தியெளி தாகுமே கூற்றைவென்று
கெர்ச்சிக்க லாமே கெடீ. 9

---

ஓம்

குமாராய நமஃ

# திருப்புகழ்

## விருத்தியுரை.

## சிறப்புப்பாயிரம்

நேரிசை வெண்பா

1 எல்லாரு ஞானத் தெளிஞரே கேளீர்சொல்
கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ — பொல்லாக்
கருப்புகழைக் கேட்குமோ கானமயில் வீரன்
திருப்புகழைக் கேட்குஞ் செவி.

(இதன்பொருள்) ஞானம் தெளிஞரே - மெய்யறிவின் தெளிவை உடையவர்களே!, எல்லாரும் கேளீர் - இங்குச் சொல்லப்படுவதை யாவரும் கேளுங்கள், சொல் - சொல்லப்படும், கல் - கற்கள், எல்லாம் - யாவும், மாணிக்கக்கல் ஆமோ - (கல் என்னும் பெயரளவில் ஒத்திருப்பினும்) மாணிக்க ரத்தினத்துக்கு ஒப்பாகுமோ? (ஆகாது) (அதுபோல்) கானம் - காட்டில் வாழும், மயில் - மயிலை ஊர்தியாகவுடைய, வீரன் - வீரம்பொருந்திய முருகப்பெருமானது, திரு - மேன்மை பொருந்திய, புகழை - சிறப்பை, (அஃதாவது திருப்புகழ் என்னும் இந்நூலை) கேட்கும் - கேட்கின்ற, செவி - காதுகள், பொல்லாத - (பிறவிக்கு ஏதுவாக விருக்கும்) கொடிய, கருப்புகழை - இழிந்த மானுடர் புகழை, கேட்குமோ - கேட்க மாட்டா என்றவாறு.

(விருத்தியுரை) ஞானம்-வடமொழித்திரிபு, இஃது அத்துச் சாரியை பெற்ச் சாரியையின் அகரம் 'அத்தின்கரம் அகரமுனையில்லை' (நன்-சூ 252) என்னும் விதியின்படி கெட்டது தெளிந்தார் என்பதில் ஞகரம் பெயரிடைநிலை எல்லாம்-முழுவதும் என்னும் பொருள்படுவதோர் உரிச்சொல் என்பர் **பேராசிரியர்** பொல்லார் - றுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் கருமை - கொடுமை; இழிவு ஓகாரங்கள் இரண்டும் எதிர்மறை பொல்லாக் கருப்புகழ் என்பது று கெட்ட எதிர்மறைப் பெயரெச்சத் தொடராதலின் வலிமிக்கது, இதனை **'செய்யிய என்னும் வினையெச்சம்'** என்னும் சூத்திரத்தின் (நன்-சூ. 167) இலேசான் முடிக்க. மயில் குறிஞ்சிநிலக் கருப்பொருளாதலின் 'கானமயில்' என்றார்; ஆயிரத்தெட்டண்டங்களையும் நூற்றெட்டு யுகம்வரை அரசு புரிந்த சூரனை வென்றவனாதலின் 'வீரன்' என்றார். கேளீர்-ஈர் ஏவற்பன்மை வினைமுற்று விகுதி. ஞானம்-பரோக்ஷம், அபரோக்ஷம், என்றும், பரம், அபரம் என்றும், பதி ஞானம், பசு ஞானம், பாச ஞானம், என்றும் பலதிறத்தாற் கூறப்படும் ஞானங்கள்.

மாணிக்க ரத்தினம் 'கல்' என்று வழங்கப்படுவதனாலேயே உலகத்திலுள்ள கற்களுக்கு ஒப்பாகுமோ? அதுபோலப் புகழ் என்று சொல்லப்படுவதனாலேயே பிறந்து இருந்து இறந்துபோகும் மானுடர் புகழ், பேரின்பப் பெருவாழ்வாகிய மோக்ஷ சாம்ராஜ்யத்தைத் தரும் முருகப் பெருமானது 'திருப்புகழ்' நூலுக்கு இணையாகுமோ? ஆகாது என்றபடி.

அரிச்சந்திரன், நளன் முதலியோர் புகழ்களைக் கூறும் அவ்வவர் புராணங்களையும் தாய்வழக்கு, காமம் முதலியவற்றைக் கூறும் பாரதம், இராமாயணம் முதலிய இதிகாசங்களையுங் கேளார், முருகன் திருப்புகழைக் கேட்டோர் என்பார், 'பொல்லாக் கருப்புகழைக் கேட்குமோ கானமயில் வீரன் திருப்புகழைக் கேட்கும் செவி' என்றார். இதுபற்றியே சிவப்பிரகாச சுவாமிகளும் **பிரபுலிங்கலீலையில்**,

'கன்றிய வைரிகள் காதுங் காதையும்
வன்றுயர் மதனநோய் வளர்க்கு மாற்றமும்
புன்றொழி லினர்வறும் பொழுது போக்கலும்
அன்றரு ளல்லமன் அமல லீலையே.'

என்று கூறியது காண்க.

'கேட்கும் செவி' என எதிர்காலத்தாற் கூறியது எக்காலத்தும் முருகன் புகழ் கேட்பதே செவிக்குரிய இலக்கணம் என்பது உணர்த்தற்கெனக்

'கேட்குஞ் செவி' என்று செவியையே கூறினாரேனும் 'ஒருமொழியொழி தன்னினங் கொளற் குரித்தே' என்னும் (நன்-சூ. 358) விதியினால் திருப்புகழைக் கூறும் நாவும் வேறொரு கருப்புகழைக் கூறாது என்பதும் கொள்க. இப்பாட்டுத் திருப்புகழின் சிறப்பைக் கூறுகின்றது. இஃது **அபியுக்தர்** ஒருவரால் பாடப்பட்டது.

**கலிவிருத்தம்**

2 திருப்புகழ் படிக்குமவர் சிந்தை வலுவாலே
ஒருத்தரை மதிப்பதிலை யுன்றனரு ளாலே

பொருப்பரை மிகப்பொருது வென்றுமயின் மீதே
தரித்தொரு திருத்தணிகை நின்றபெரு மாளே

(இ-ள்) பொருப்பரை - (வள்ளிநாச்சியாரை உடன் கொண்டு போகும்பொருட்டு) குறிஞ்சிநிலத்தே வாழும் வேடுவருடன், மிக பொருது - மிகவும் சண்டைசெய்து, வென்று - அவர்களை வெற்றிகொண்டு, மயில்மீது - மயில்வாகனத்தின்மேல், தரித்து - அமர்ந்து, ஒரு - ஒப்பற்ற, திருத்தணிகை - திருத்தணிகை என்னும் திருப்பதியில், நின்ற - நிலைபெற்ற, பெருமாளே - முருகக்கடவுளே!, திருப்புகழ் - திருப்புகழ் என்னும் நூலை, படிக்கும் அவர் - அன்போடு படிக்கின்றவர்கள், உற்ற அருளால் - தேவரீரது கருணையினால், சிந்தை வலியால் - (தங்கட்குண்டாகும்) மனோபலத்தால், ஒருத்தரை - ஒருவரையும், மதிப்பது இலை - மதிக்கமாட்டார்கள் எ-று.

(வி-ரை) பெருமாள் - பெருமையையுடையவன், னகரம் ளகரமாகத் திரிந்தது. பெருமாள் என்ற சொல் பெருமாள்கோயில் என வழக்கிடத்தும் வருதல் காண்க. சுந்தரப் பெருமாள் நாயனாரெனப் பிறவிடத்தும் வந்துள்ளது. 'பெருமணக் கோலப் பெருமாள் மறைப் பெருமாள் எமது குலதெய்வமாம் மால்' என்று காஞ்சிப்புராணத்துள் சிவஞானமுனிவர் சுந்தரமூர்த்தி சுவாமிகளைக் கூறுவதும் காண்க. பெருமாளே என்பதிலுள்ள ஏகாரம் விளிவேற்றுமை யுருபு ஏனைய மூன்றும் அசைநிலைகள். சிந்தை-வடசொல்லின் திரிபு ஒருத்தர் - ஒன்று என்பதன் திரிபாகிய

ஒரு என்பதனுடன் அத்துச்சாரியையும் பலபால விகுதி யும் சேர்ந்து முடிந்தது இலை - தொகுத்தல் விகாரம். பொருப்பு-மலை பொருதல்-சண்டைசெய்தல் அருளால்- ஆல், மூன்றும் வேற்றுமைக் கருவிப்பொருள்

திருப்புகழைப் படிப்போர் முருகப்பெருமானது திரு வருளைப் பெற்று மனோபல முடையவராய் விளங்குவாராத லின் அவர் 'ஒருத்தரை மதிப்பதிலை' என்றார். திருவருட் செல்வத்தைப் பெற்றோர் அரசரையும் மதியார். **வாகீச மூர்த்திகள்** பாடலிபுரத்தரசனாகிய பல்லவர்கோன் ஏவலர் வந்து, அவன் கட்டளையைத் தம்பால் கூறியபோது,

'நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்
இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச் சேவடியிணையே குறுகி னோமே.'

என்று அருளிச் செய்ததூஉங் காண்க

முருகவேள் வள்ளிநாயகியாரைக் களவாக அழைத்துக் கொண்டு செல்லுகையில் வேடர் எதிர்க்க, அவர்கள் அனைவரையும் வென்று தமது உண்மைவடிவத்தைக் காட்டி, மயிலின் மீதேறித் திருத்தணிகை சென்றமர்ந்தனர் ஆத லின், 'பொருப்பரை .....பெருமாளே' எனக் கூறினர். திருத்தணிகை - தொண்டைநாட்டிலுள்ள சுப்பிரமணிய

ஸ்தலம், அஃது அரக்கோணத்துக்கு எட்டுக்கல் தூரத்தி லுள்ளது.

திருப்புகழ் படிப்போர் மனத்தில் முருகப்பெருமான் அருள் முற்றுகி வளருமாதலின் 'உன்றனருளாலே' என்றார். அருளையுடையாருக்கு அருமையான காரியம் ஒன்றுமில்லை.

இதுவும் திருப்புகழ் படிப்போர் பெருமையைப் பிற காலத்துச் சான்றோர் ஒருவர் பாடியது (2)

ஆசிரியச் சந்தவிருத்தம்

3 ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
யீசனுடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுக மொன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
ஆதியரு ணாசலம் அமர்ந்த பெருமாளே.

(இ-ள்) ஆதி-புராதன க்ஷேத்திரமாகிய, அருணாசலம்-திருவண்ணாமலையினகண், அமர்ந்த-எழுந்தருளியிருக்கின்ற, பெருமாளே-முருகப்பெருமானே!, ஏறுமயில் - ஆண்மயில் மேல், ஏறி-ஆரோகணித்து, விளையாடும்-(குன்றுதோறும்) விளையாடுகின்ற, முகம் ஒன்று-திருமுகம் ஒன்றும், ஈசனுடன் - சிவபெருமானுடன், ஞானம் மொழி - பிரணவச் சொல்லை, பேசும் முகம் ஒன்று-கூறும் திருமுகம் ஒன்றும், கூறும்-தன்புகழை எடுத்துச்சொல்லும், அடியார்கள் வினை-

தொண்டர்களுடைய தீவினைகளை, நீக்கும் - ஒழிக்கின்ற, முகம் ஒன்று - திருமுகம் ஒன்றும், குன்று உருவ - கிரௌஞ்சகிரி பிளக்கும்படி, வேல்வாங்கி-வேற்படையைச் செலுத்தி, நின்ற முகம் ஒன்று-நிலைபெற்ற திருமுகம் ஒன்றும், மாறுபடு-தன்னைப் பகைத்த, சூரரை-சூரபத்மன் சிங்கமுகன் முதலிய சூரர்களை வதைத்த - கொன்ற, முகம் ஒன்று-திருமுகம் ஒன்றும், வள்ளியை-வள்ளி நாயகியாரை, மணம் புணர-திருமணஞ் செய்யும்படி, வந்த முகம்-ஏற்பட்ட திருமுகம் ஒன்றுமாக, ஆறுமுகம் ஆன-ஆறு திருமுகங்களையுடைய, பொருள் மெய்ப்பொருளாகிய நீ, அருளல் வேண்டும்-அடியேனுக்குத் திருவருள் செய்யவேண்டும் எ-று

(வி-ரை) ஏறுமயில்-ஆண்மயில் 'ஏற்றையும்' என்னும் பொதுச் சூத்திரத்தான் முடிக்க (தொல்-மரபியல்-558) ஏறுமயில் என்பதனை வினைத்தொகையாக்கியும் பொருளுரைப்பர் ஈசன் என்னும் வடமொழிக்கு எல்லா மேன்மையுமுடையவன் என்பது பொருள் அடியார்கள்-அடிமைத்திறத்தையுடையவர்கள் குன்று-கிரௌஞ்சகிரி. வேல்-வெல்வது என்னுங் காரணப்பொருட்டு மாறுபடுதல்-பகைத்தல்

பொருள்-செம்பொருள், உண்மைப் பொருள், சித்துப் பொருள்

அருணாசலம்-சிவப்பு மலை, அருணம் + அசலம் என்னும் வடமொழி முடிபு

முருகப்பெருமான் மயிலேறிக் குன்று தோறும் அருள் விளையாடலைப் புரிந்து வருகின்றார் ஆதலின் 'ஏறு மயிலேறி' ஒன்றே என்றார். சிவபெருமானே தமக்குள்ள ஈசானம், தற்புருஷம், வாமனம், அகோரம், சத்தியோ சாதம் என்னும் ஐந்து திருமுகங்களும் அமையாதெனத் திருவுளங்கொண்டு ஆறு திருமுகங்களோடு முருகப்பெரு மானாகத் தோன்றினார் என்று கந்தபுராணங் கூறுதல் காண்க.

விளையாடுதல் என்பதற்குப் பஞ்சகிருத்தியங்களை லீலாமாத்திரமாய்ச் செய்தல் என்றேனும் பாரமின்றி இலேசாய்ச் செய்தல் என்றேனும் கொள்க.

இவ்வாறு, 'குவலயமும் எல்லாமும் காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி' என மாணிக்கவாசகஸ்வாமிகள் அருளிச் செய்ததூஉம் காண்க.

பிரணவத்தின் பொருளை அறியாது பிரமன் தியங்கி நிற்றலைக் கண்டு, அவனைத் தலையில் குட்டிச் சிறைப்படுத்திப் பின்னர்ச் சிவபெருமான் தமக்குப் பிரணவப்பொருளைக் கூறுமாறு முருகவேளைக் கேட்ப, அவர் பிரணவோபதேசஞ் செய்தனராதலின், 'ஈசனுடன் ஞானமொழி பேசுமுகம் ஒன்றே' என்றனர்.

உலகமெல்லாம் உய்யும்பொருட்டு வள்ளிநாயகியாரை மணந்தனராதலின் 'வள்ளியை ஒன்றே' என்றார். இறைவன் ஆன்மாக்கள் போகந் துய்க்கும்பொருட்டுப் போக கோலமும், யோகானுபவம் மிகுந்து வீட்டின்பம் அடை-

தற்பொருட்டு யோககோலமும் கொள்வர் என்பது சாஸ்திர சம்மதமாதலின், 'ஞானமொழி பேசுமுக' மென் யோககோலத்தையும் 'வள்ளியை மணம்புணர வந்தமுகம்' என்ப போககோலத்தையும் கூறினார்.

'போகியா யிருந்து உயிர்க்குப் போகத்தை அளித்த லோரார்
யோகியாய் யோக முத்தி யுதவுத லதுவு மோரார்'

எனவரும் **சிவஞானசித்தியார்** வாக்கியங்களைக் காண்க.

வள்ளி நாயகியார் முருகனுக்கு இச்சாசத்தி ஆதலி னாலும் அவ்வம்மையாரைப் பெரிதும் காதலித்ததினாலும் அவரைக் கூறினார் இதனை,

'பம்ரமடுப்பக் கடாமெடுத்த தூற்றுமோர் பகடு நடத்திப் புலோமசைச் சூற்புயல் பருகியிடக் கற்பகக்காடவிபாற் பொலி பாவையிடைப் பம்பாதெனத் தோற்றிய, குமரி யிருக்கக் கலாமயிற் கூத்தயர் குளிர்புன மொய்த்திட்ட சாரலிற் போயச் சிறு குறவர் மகட்குச் சலாமிட்டுச் சேக்கறு குமரனை முத்துக்குமாரனைப் போற்றுதும்.'

எனவரும் **குமரகுருபரர்** வாக்கானும் உணர்க. முருக வேளுக்குக் கிரியாசத்தி தெய்வயானையார். வேல் ஞான சத்தி துஷ்ட நிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்வோராதலின், 'சூரரை வதைத்த முகம்' என்றும், 'குன்றுருவ வேல் வாங்கி நின்ற முகம்' என்றும், 'அடியார்கள் வினைதீர்க்கு முகம்' என்றும் அருளிச் செய்வாராயினர்

ஆன்மாக்கள், உலகமெல்லாம் இறைவனாலே காரியப் பட்டு வரும் உண்மை உணர்ந்து, அவன் திருவடி ஞானத்

தைப் பெறுவதற்குப் பிரணவத்தின் பொருளைத் தெளிந்து, தமது பிராரத்துவத்தை ஒழித்து, பதிஞானத்தால் ஆணவ மலத்தை அகற்றி, அவ்விறைவனோடு ஒன்றுபட்டு முத்தி யடைதலே முடிவென்பார் இங்ஙனம் அருளிச்செய்தார் என்க.

முருகப்பெருமான் திருமுகங்கள் ஆறன் தொழிலுக்கும் பொருந்தப் பன்னிரண்டு திருத் தோள்களும் அமைந் துள்ளன என்பதைப் பின்வரும் திருமுருகாற்றுப்படை அடிகளால் அறிக.

"மாயிருண் ஞாலம் மறுவின்றி விளங்கப்
பலகதிர் விரிந்தன் றொருமுகம் ஒருமுகம்
ஆர்வலர் ஏத்த அமர்ந்தினி தொழுகிக்
காதலி னுவந்து வரங்கொடுத் தன்றே யொருமுகம்
மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வி யோர்க்குமே யொருமுகம்
எஞ்சிய பொருள்களை யேமுற நாடித்
திங்கள் போலத் திசைவிளக் குமே யொருமுகம்
செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக்
கறுவுகொள் நெஞ்சமொடு களம்வேட் டன்றே யொருமுகம்
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே ஆங்கம்
மூவிரு முகனும் முறைநவின் றொழுகலின்
ஆரந் தாழ்ந்த அம்பகட்டு மார்பிற்
செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடுபு
வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்
விண்செலன் மரபின் ஐயர்க் கேந்திய தொருகை

உககஞ் சோத்திய தொருகை
நலமபெறு கலிஙகததுக குறஙகின்மிசை
அசைஇய தொருகை
அஙகுசங கடாவ வொருகை யிருகை
ஐயிரு வட்டமொடு எஃகு வலநதிரிபப வொருகை
மாாபொடு விளஙக வொருகை
தாரொடு பொலிய வொருகை
கீழவீழ் தொடியொடு மீமிசைக கொடப வொருகை
பாடின படுமணி யிரடட வொருகை
நீனிற விசுமபின மலிதுளி பொழிய வொருகை
வானர மகளிாககு வதுவை சூடட ஆஙகப
பனனிரு கையும பாறபட வியறறி (3)

---

## விநாயகர் துதி

1 தததன தனதன தததன தனதன
தததன தனதன-தானதான

கைததல நிறைகனி அபபமொ டவலபொரி
கபபிய கரிமுகன அடிபேணிக்
கறறிடும அடியவா புததியி லுறைபவ
கறபக எனவினை கடிதேகும
மததமு மதியமும வைததிடும அரனமகன
மறபொரு திரளபுய மதயானை
மததள வயிறனை உததமி புதலவனை
மடடவிழ் மலாகொடு பணிவேனை
முததமி ழடைவினை முறபடு கிரிதனில
முறபட எழுதிய முதலவோனே

முப்புரம் எரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா
அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை இபமாகி
அக்குற மகளுட னச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே.

(இ-ள்) கைத்தலம்-திருக்கரத்தில், நிறை-நிறைந்த, கனி-பழங்களையும், அவல்-அவலையும், பொரி-பொரியையும், அப்பமொடு-அப்பத்தோடு, கப்பிய - உண்கிற, கரிமுகன்-யானை முகத்தையுடைய விநாயகப்பெருமானுடைய, அடி-திருவடிகளை, பேணி-துதித்து, கற்றிடும் அடியவர்-தனது அடிமையைத் தேர்ந்து தெளிந்த தொண்டர்களது, புத்தியில்-மனத்தில், உறைபவ - தங்கியிருப்பவரே!, கற்பக - தன்னை அடைந்தவருக்கு விரும்பிய பொருள்களைக் கொடுக்கும் கற்பக விருட்சத்தை ஒத்தவரே, என-என்று துதிசெய்ய, வினை-சஞ்சித பிராரத்துவ கன்மங்கள், கடிது ஏகும்-விரைவில் ஒழியும், முத்தமிழ் அடைவினை - மூன்றாகிய தமிழ் நூலின் முறையினை, முற்படுகிரிதனில்-மலைகளுக்கெல்லாம் முதன்மைபெற்ற மேருமலையின்கண், முற்பட-முற்காலத்தில், எழுதிய-ஒரு கோட்டால் எழுதிய, முதல்வோனே-முதற் கடவுளே! முப்புரம்-திரிபுரங்களை, எரிசெய்த-எரித்த, அச்சிவன்-அப்பெருமையுடையசிவபெருமான், உறைரதம்-எழுந்தருளிய இரதத்தினது, அச்சு அது-அச்சை, பொடி செய்த முறியும்படி செய்த, அதிதீரா-மிகவும் தைரியமுடையவரே!, அத்துயர் அது கொடு - (வள்ளிநாயகியாரை

மணந்துகொள்ள விரும்பியகாலத்து எவ்வாறு மயக்கலா மென்று) அத்துன்பத்துடன் சுப்பிரமணியப் பெருமான் போயிருந்த, அப்புனமதனிடை-அந்தத் தினைப்புனத் திலே, இபம் ஆகி-வெள்ளையானை வடிவங்கொண்டு, அக்குற மகளுடன்-அந்தக் குறப்பெண்ணாகிய வள்ளியுடனே, அச் சிறு முருகனை - அந்த இளமையாகிய முருகவேளை, அக் கணம்-அந்த நேரத்திலேயே, மணம் அருள-மணம் புரியும் படி திருவருள் புரிந்த, பெருமாளே-பெருமானே! (எனத் துதிசெய்து), மத்தமும் மதியமும் - ஊமத்தமலரையும் பிறைச்சந்திரனையும், வைத்திடும்-சடாமகுடத்தின்கண் அழ குறச் சூடுகின்ற, அரன் மகன்-சிவபெருமான் திருக்குமா ராகிய, மல்பொரு - மல்யுத்தம் செய்கின்ற, திரள் புயம்- திரண்ட தோள்களையுடைய, மதம் யானை - மும்மதங்களை யுடைய யானைமுகத்தை யுடையவனை, மத்தளம் வயிறனை- மத்தளம்போலும் திருவயிற்றை உடையவனை, உத்தமி புதல்வனை-உமாதேவியார் மகனை, மட்டு அவிழ்-தேன் விரி ந்த, மலர்கொடு-பூக்களைக்கொண்டு, பணிவேன் - வணங்கு வேன், ஏ-ஈற்றசை எ-று

(வி-ரை) கைத்தலம் - கையாகிய இடம், ஸ்தலம் என்னும் வடமொழி தலம் என்றாயிற்று, பண்புத்தொகை அம்பம்-மோதகம், 'மோதக ஹஸ்தன்' என்பதும் நா கப்புதல்-உண்ணுதல். கரி-யானை, கரத்தையுடையது, கரம்-துதிக்கை, கருமையுடையதென்பப் பொருள் கூறுதல், வடமொழியாத லின் பொருந்தாது.

அடி என்பது கிரியாசத்தி ஞானசத்திகளை. பேணுதல்-தொழுதல், 'கடம்படம்பேணி' என வரும் குறிஞ்சிப்பாட்டுரையில் நச்சினார்க்கினியர் இவ்வாறே பொருளுரைத்தார். கற்றிடும் அடியவர்-கல்வி, இரண்டு இறைவன் இயல்பை அறியும் கல்வி கற்றவர் உள்ளத்தில் எக்காலத்தும் நீங்காது இறைவன் உறைவான் ஆதலின் 'கற்றிடும் அடியவர் புத்தியி லுறைபவ' என்றார். 'கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியை' என்று பெரியார் நம் பணித்தார். 'கல்லார் நெஞ்சில் நில்லான் ஈசன்' என்றதும் இக்கருத்தே பற்றியாதல் காண்க. புத்தி-புந்தி-வலித்தல் விகாரம் சந்தம் நோக்கி வந்தது. கற்பகம்-உவமையாகு பெயர். கற்பகம் போன்று தன்னைச் சேர்ந்தார்க்கு அளிக்கத்தக்கவராதலின் இதனை, 'வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்' என்னும் திருநாவுக்கரசுசுவாமிகள் திருவாக்கானும், 'வேண்டத்தக்க தறிவோய் நீ வேண்ட முழுதும் தருவோய் நீ' என்ற மணிவாசகர் திருவாக்கானும் உணர்க. வினை சஞ்சிதம், பிராரத்துவம், ஆகாமியம் என்னும் வினைகள்.

தன்னை ஏத்தும் மெய்யடியாரது வினைகளைக் கட்டறுக்க வல்லான் ஆதலின், 'மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித் தீராத வல்வினை நோய் தீர்த்தருள வல்லான்' என்ற பெரியார் திருவாக்கின்படி, 'வினை கடிதேகும்' என்றார்.

தக்கன் சாபத்தால் கலை குறைந்த சந்திரனைச் சடையின்கண் தரித்துக் காத்தமையான் 'மதியமும் வைத்திடு மரன்' என்றார். தான் வாலறிவன் என்னும் உண்மையைத்

தெரித்தற்பொருட்டுச் சிவபெருமான் சந்திரனைத் தரித்தார் என்னுங் கருத்தைப் **பட்டினத்தடிகள்**, 'தூமதி சடைமிசைச் சூடுதல் தூநெறி ஆமதி யானென அமைத்தவாறே' எனக் கூறுமாற்றான் அறிக. அரன்-வடமொழித்திரிபு, இச்சொல் முடிவில் எல்லாவற்றையும் அழிப்பவன், மலத்தினை அழிப்பவன், உயிர்களை உயர்ந்த நிலையிற் போகச் செய்வோன் எனப் பல பொருள்படும். பொருதல் - சண்டை செய்தல். மதம்-கன்னம், கும்பம், பீஜம் என்னும் மூன்று மதங்கள். மதத்தை யானைக்கு அடையாக்குக. இன்றேல் விநாயகருக் கேற்றின் விநாயகருக்கு முகம் ஒன்றே யானை வடிவமாதலின் இருமதமாகக் கொள்க. இனி இச்சை, ஞானம், கிரியை என்ற மூன்றையும் மும்மதமாக விநாயகருக்கேற்றிக் கூறுவாருமுளர். இதன்விரிவை **சிவஞானசித்தியாரில்** 'ஒருகோட்டன் இருசெவியன்' என்னுஞ் செய்யுளுக்குச் சிவஞான முனிவர் எழுதிய உரையில் காண்க. விநாயகருக்கு இரு மதத்தையே எடுத்துக் கூறினார். **ஞானாமிர்த** நூலார்; பிறரும் இவ்வாறு கூறினார் உளர். உலகம் எல்லாம் தன்னகத்தில் அடங்கி இருத்தலின் 'மதத்தளவயிற்றினை' என்றனர். உத்தமி- மேன்மையுடைய பெண். மலர்-மலர்தலையுடையது; காரணக் குறி. முத்தமிழ் - இயல், இசை, நாடகம் என்னும் மூன்று கூற்றையுடைய தமிழ். விநாயகர் தமிழுடையினை மேருமலையில் எழுதினதாகக் கூறியதால் அத்தகைய வரலாறு ஒன்றுண்டு என்பது துணியப்படும். அருள்மேலீட்டால் தாமே தமது அருமைக்கொம்பை ஒடித்து நூலை எழுதிய பெரு

மான நான எடுத்துககொண்ட நூலை இடையூறினறி முடிப பன எனபது கூறவேணடுவதிலலை எனபார 'எழுதிய முதலை வோனே' எனறார முதலவோன்-எலலாருககும முதறகட வுள, எலலாக காரியததுககும முதலில வணஙகபபடுபவா ஒவவொருவரும தாம் எடுததுககொணட காரியம இனிது முடிதறபொருட்டு விநாயகரையே முதலில தொழுதல வேணடும் எனனும வரததைச சிவபெருமானே அளிதத னா பினனாத தாம திரிபுரதகனம செயயத தொடஙகுகை யில விநாயகரைப பூசிகக மறநதமையால சிவபிரான ஏறி வநத தேரின அசசு முறியுமபடி விநாயகா செயதனா. ஆத லின, 'முபபுர .தீரா' எனறா அசசது, துயரது என புறி அது இரணடும பகுதிபபொருள விகுதி, அகரமபண டறி சுட்டு அழகாலும இளமையாலும செலவததாலும சிறநத தெயவயானை பககததே இருபபவும், குறமகளுககாக இததுணைப பெருநதுனப மெயதினனை, சிறுவிளையாட்டுடை யான எனபது தோனற, 'அககுற மக . ..முருகனே' எனறு அருளிசசெயதாா

இது விநாயககடவுள் வாழதது, ஆனறோ ரொழுக கததைப பாதுகாததற பொருட்டும், மாணுக்கர்ககு அறி வுறுததறபொருட்டும் எடுத்துககொணட நூல் இடையூறு தீாந்தினிது முடிதறபொருட்டும விநாயகவணககம கூறி னூர். வளளிநாயகியாரை முருகன் மணகக அருள்புரிந்தவா அவன புகழைக கூறும் நூலுககும உதவி புரிவார எனபார 'அககண......பெருமாளே' எனறார. (1)

## சுப்பிரமணியர் துதி

2 தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன-தனதான

முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபர எனவோதும்

முக்கட்பர மற்குச் சுருதியின்
முற்பட்டது கற்பித் திருவரும்
முப்பத்துமு வர்க்கத் தமரரும் அடிபேணப்

பத்துத்தலை தத்தக் கணைதொடு
ஒற்றைக்கிரி மத்தைப் பொருதொரு
பட்டப்பகல் வட்டத் திகிரியில் இரவாகப்

பத்தற்கிர தத்தைக் கடவிய
பச்சைப்புயல் மெச்சத் தகுபொருள்
பட்சத்துடன் ரட்சித் தருள்வ தொருநாளே

தித்தித்தெய ஒத்தப் பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப் பயிரவி
திக்கொட்கந டிக்கக் கழுகொடு கழுதாட

திக்குப்பரி அட்டப் பயிரவர்
தொக்குத்தொகு தொக்குத் தொகுதொகு
சித்ரப்பவு ரிக்குத் திரிகட கெனவோதக்

கொத்துப்பறை கொட்டக் களமிசை
குக்குக்குகு குக்குக் குகுகுகு
குத்திப்புதை புக்குப் பிடியென முதுகூகை

கொட்புற் றெழ நட்பற் றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக் குலகிரி
குத்துப்பட ஒத்துப் பொரவல பெருமாளே.

(இ-ள்) முத்தைத் தரு-முத்தை ஒத்த, பத்தித் திரு நகை-வரிசையாகிய அழகிய பற்களையுடைய அத்திக்கு-தெய்வயானை அம்மையாருக்கு, இறை-தலைவனே', சத்தி-வேற்படையைத் தாங்கிய, சரவண-முருகனே', முத்திக்கு-மோக்ஷத்துக்கு, ஒரு வித்து-ஒப்பற்ற வித்தைப் போன்றவனே', குருபர-குருபரனே, என ஓதும்-என்று கூறுகின்ற, முக்கண் பரமற்கு-மூன்று திருக்கண்களையுடைய சிவபெருமானுக்கு, சுருதியின்-வேதத்திலே, முற்பட்டது-முதன்மையாகச் சொல்லப்பட்டதாகிய பிரணவ மந்திரத்தை, கற்பித்து-புகட்டி, இருவரும்-பிரம விஷ்ணுக்களாகிய இருவரும், முப்பத்து முவர்க்கத்து அமரரும்-முப்பத்து முக்கோடி தேவர்களும், அடிபேண-திருவடிகளைத் தொழவும், தித்தித் தெய ஒத்த-தித்தித்தெய என்னும் ஒலிக்கு, இசைந்த பரிபுரம்-சிலம்புகளணிந்த, நிர்த்தப் பதம்-நடனம் செய்கின்ற திருவடிகளை, வைத்து-அடியிட்டு, பயிரவி-பைரவி என்னும் இராகம், திக்கொட்க-திசைகளில் பொருந்த, நடிக்க-தாண்டவம் செய்யவும், கழுதொடு கழுது ஆட-கழுகுகளோடு பேய்கள் சேர்ந்து ஆடவும், திக்கு-திசைகளிலுள்ள, பரி அட்டப் பயிரவர்-உலகத்தைத் தாங்கும் அட்டப்பயிரவர்கள், சித்ரப் பவுரிக்கு-அழகிய கூத்துக்கு, தொக்குத் தொகு தொக்குத் திரிகட்க என ஓத-தொக்குத் தொகு தொக்குத் திரிகடக என்னும் இவ்வோசையைக்

கூறவும், கொத்து பறை-பற்பல பறைகள், கொட்ட-அடிக்கவும், களம் மிசை-போர்க்களத்தில், குகுகுக குகு குக்குக் குகுகுகு குகு என்னும் இவ்வோசையோடு, முதுகூகை-முதிர்ந்த கோட்டான், குத்திப்புதை புகுகு பிடி என-குத்திப்புதை புகுகுப்பிடி என்று குழறவும், கொட்பு உற்று-சுழன்று மேலே தாக்க, நட்பு அற்ற அவுணரை-பகைவர்களாகிய அசுரர்களை, வெட்டி-கொன்று, பலி இட்டு-பலியாக இட்டு, குலம் கிரி-மேன்மை பொருந்திய கிரௌஞ்ச மலையானது, குத்துப்பட்ட-குத்துப்படும்படி, ஒத்து பொரவல-பொருந்தச் சண்டை செய்ய வல்ல, பெருமாளே—, பத்து தலை தத்த-பத்து தலைகளும் சிதற, கணை தொடு-அம்பைச்செலுத்தி, ஒற்றை கிரி-மந்தரமலையாகிய, மத்தைப் பொருது-மத்தால் திருப்பாற்கடலைக் கடைந்து, ஒரு பட்டப் பகல்-நல்ல பகற்பொழுது, வட்டம் திகிரியில்-உருண்டை வடிவாகிய தனது சக்கரத்தினால், இரவு ஆக-இரவு ஆகும்படி செய்து, பத்தற்கு - அன்புடையவனாகிய அருச்சுனனுக்கு, இரதத்தை கடவிய - இரதத்தைச் செலுத்திய, பச்சை புயல் - பசுமையான மேக நிறம் பொருந்திய திருமால், மெச்சத்தகுபொருள் - விரும்பத்தக்க பொருளாய உள்ளவனே, பட்சத்துடன் - அன்புடனே, ரட்சித்தருளுவது-எம்மைக்காப்பாற்றியருள்வதாகிய, ஒருநாள்-ஒருநாளும் உண்டாகுமோ? எ-று

(வி-ரை) முத்தைத்தரு என்பதில் 'தரு' உவமவாசகம். அத்தி-யானை; ஈண்டு தெய்வயானை அம்மையார். சத்தி-

வேற்றுமை, முருகப்பெருமான் திருவடியை அடைந்தார் முத்தி அடைதல் எளிதெனபார், 'முத்திக் கொருவித்து' என்றார் முக்கண்-சோமசூரியாக்கினிகள் சுருதியின் முப்பட்டது, பிரணவம் இருவர்-பிரம விஷ்ணுக்கள். திகிரி-சக்கரம் பத்தன் அருச்சுனன். பச்சைப் புயல்-பசுமையான மேகம், மேகம் போன்ற மேகநிறமுடைய திருமாலைக் குறித்தது கழுது-பேய். கொட்பு-சுற்றசி. அவுணர்-அசுரர்

இறை-இயல்புவிளி சரவண-அண்மைவிளி முற்பட்டது-வினையாலணையும் பெயர் பிரணவம் எல்லாவற்றிற்கும் முற்பட்டதாகலானும் அதினின்றே எல்லா உலகங்களும் தோன்றின ஆதலானும் 'முற்பட்டது' என்ப பிரணவத்தைக் கூறினார் இருவரும் அமரரும் என்புழி உம்மைகள் முற்றுப்பொருளன 'பத்துத் தலை கணைதொடு' என்றது இராமாவதாரத்தில் இராவணனைக் கொன்றதைக் குறித்தது. காத்தற் கடவுளாகிய திருமால், தாம் அரியரின் அரியராகியும், அடியவனாகிய அருச்சுனன் பொருட்டு எளியரின் எளியராகிச் சிறுதொழிலையுடைய பாகனாகவும் இருந்தார் என்பார், 'பத்தற் கிரதத்தைக் கடவிய பச்சைப்புயல்' என்றார்.

சிவபெருமானுக்குப் பிரணவுபதேசஞ் செய்ததும், திருமால், பிரமன் முதலிய தேவர்கள் வணங்குமாறு பெருமைபெற்றவனாதலின் முருகப் பெருமானே அனைவரினும் மேம்பட்டவனென்ன அவனது மாட்சியைப் புலப்படுத்தினார் எனக

அவுணரை அழித்தது அவனுடைய மறக்கருணையே அன்றி வேறில்லை என்க. இறைவனுக்கு அருளே திருமேனியாகலின் அவன் ஒருவருக்கும் இன்னல் இயற்றான், அங்ஙனம் இன்னல் போல நமக்குக் காணப்படுஞ் செய்கைகளெல்லாம் கூர்ந்து நோக்கின் அருட்செயலேயாகும் என்பதைப் பின்வரும் **சிவஞான சித்தித் திருவிருத்தத்தானும்** அறிக.

'தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்கள் தஞ்சொலாற்றின்
வந்திடா **விடினுறுக்கி** வளாரினால் அடித்துத் தீய
பந்தமும் இடுவர் எல்லாம் பார்த்திடின் அருளே ஆகும்
இந்நீர் முறைமை அன்றோ ஈசனார் முனிவும் என்றும்' (2)

## திருப்பரங்கிரி

3 தனத்த னந்தன தனதன தனதன
தனத்த னந்தன தனதன தனதன
தனத்த னந்தன தனதன தனதன-தனதான.

அருக்கு மங்கையர் மலரடி வருடியு
கருத்த றிந்தபின் அரைதனி லுடைதனை
யவிழ்த்தும் அங்குள அரசிலை தடவியும் இருதோளுற்

றணைத்து மங்கையின் அடிதொறு நகமெழ
உதட்டை மென்றுப லிடுகுறி களுமிட
அடிக்க ளந்தனின் மயிலகுயில புறவென மிகவாய்விட்

டுருக்கு மங்கியின் மெழுகென வுருகிய
சிரத்தை மிஞ்சிடு மனுபவ முறுபலம்
உறக்கை யின்கனி நிகரென இலகிய முலைமேல்வீழ்ந்

துருக்க லங்கிமெ யுருகிட அமுதுகு
பெருத்த வுந்தியின் முழுகிமெ யுணர்வற
வுழைத்தி டுங்கன கலவியை மகிழ்வது தவிர்வேனோ

இருக்கு மந்திர மொழிவகை முனிபெற
உரைத்த சம்பிரம சரவண பவகுக
இதத்த இங்கித மிலகிய அறுமுக எழில்வேளென

றிலக்க ணங்களு மியலிசை களுமிக
விரிக்கு மம்பல மதுரித கவிதனை
யியற்று செந்தமிழ் விதமொடு புயமிசை புனைவோனே

செருக்கு மம்பல மிசைதனி லசைவுற
நடித்த சங்கரர் வழிவழி அடியவர்
திருக்கு ருந்தடி அருள்பெற அருளிய குருநாதா

திருக்கு ழந்தையு மெனவவர் வழிபடு
குருக்க ளின்திற மெனவரு பெரியவ
திருப்ப ரங்கிரி யுறைபவ சரவண பெருமாளே.

(இ-ள்) இருக்கு மந்திரம்-இருக்கு வேதமாகிய மந்திரங்களின், மொழிவகை-சொல்லின் வகையை, முனிபெற-அகத்திய முனிவர் அடையும்படி, உரைத்த-உபதேசித்தருளிய, சம்பிரம-வேகத்தையுடைய, சரவணபவ-சரவணப் பொய்கையில் அவதரித்தவனே!, குக-குகன் என்னும் திருநாமம் வாய்ந்தவனே!, இதத்த-நன்மையையுடையவனே!, இங்கிதம்-கருத்து, இலகிய-விளங்கிய, அறுமுக-ஆறுதிருமுகங்களுடையவனே!' எழில் வேள் என்று-அழகுபொருந்திய முருகவேளே என்று, இலக்கணங்களும் இயல் இசைகளும்-இலக்கணங்களும் இயற்றமிழ் இசைத்

தமிழ்களும், மிக விரிக்கும் மிக விரிந்த உரைகளும், அம் பல-
அழகிய பலவகைப்பட்ட, மதுரிதம் இனிமையான, கவி
தனை பாட்டை, இயற்-செய்கின்ற, செந்தமிழ் விதமொடு-
செந்தமிழ் நூல்களை விருப்பமாக, புயமிசை-திருந்த
தோள்களின்மேல், புனைவோனே-தரித்துக்கொண்டிருப்ப
வனே!, செருக்கும்-மேம்பாடுடைய அம்பலம் மிசை-
பொன்னம்பலமாகிய ஞான சபையின்கண், அசைவுற-பிர
பஞ்ச பஞ்சகிருத்தியம் நிகழும்படி, நடித்த சங்கரர்-நடனம்
செய்தருளிய நடேசப்பெருமானது, வழி வழி அடியவர்-
பாரம்பரியமாக வந்த அடியார், திருக்குருந்தம்-மேன்மை
பொருந்திய குருந்தமரத்தடியிலே, அருள்பெற-திருவரு
ளைப்பெறும்படி, அருளிய - அருள் புரிந்த, குருநாத-
குருநாதனே!, திரு குழந்தையும் என-அழகிய குழந்தை
யென்றும், அவர் வழிபடு சிவபெருமான் வழிபடுகின்ற,
குருக்களின் திறம் என - ஆசாரியக் கூறும் உடையவனெ
னவும், வரு-வருகின்ற, பெரியவ - பெரியவனே!, திருப்
பரங்கிரி - திருப்பரங்கிரி என்னும் திவ்விய க்ஷேத்திரத்
தில், உறைபவ - வசிக்கின்றவனே!, சரவணப் பெரு
மாளே-முருகப் பெருமாளே!, அருக்கும - அருமையான,
மங்கையர் -மங்கைப்பருவமுடைய பெண்களுடைய, மலர்
அடி-தாமரை மலர்போன்ற திருவடிகளை, வருடியும்-தடவி
யும், கருத்து அறிந்தபின் - உள்ளக்கருத்தைத் தெரிந்த
பிறகு, அரைதனில் - இடுப்பிற் கட்டியுள்ள, உடைதனை
அவிழ்த்தும்- சேலையினை அவிழ்த்தும், அங்குஉள - அங்கே

இருக்கின்ற, அரசு இலை தடவியும்-அரசிலைபோன்ற அல்குலைத் தடவியும், இருதோள் உற்று - இரண்டு தோள்களைப் பொருந்தி, அணைத்தும் - அணைத்துக்கொண்டும், அங்கையின்-அழகிய கையினால், அடிதொறும்-ஒவ்வொரு இடத்திலும், நகம் எழ-நகக்குறி தோன்றவும், உதட்டை மென்று-உதட்டைக் கடித்து, பல் இடு குறிகளும் இட-பல்லால் செய்யப்படும் அடையாளங்களையும் செய்ய, அடிகளம் தனில்-கழுத்தின் கீழ்ப்பாகத்தில், மயில் குயில் புறவு என-மயில் குயில் புறா என்று சொல்லும்படி, வாய்விட்டு-வாயை விட்டு ஒலிசெய்ய, உருக்கும் அங்கியின்-உருக்குகின்ற நெருப்பிலே, மெழுகு என உருகிய - மெழுகைப்போல் நெகிழ்ந்த, சிரத்தை மிஞ்சிடும்-விருப்பம் மிகுந்த, அநுபவம் உறுபலம்-சுகாநுபவத்தின் மிக்க பலமானது, உற-மிகும்படி, கையின்-கைகளிலே, கனிநிகர் என-பழத்துக்கு ஒப்பென்று சொல்லும்படி, இலகிய-விளங்கிய, முலைமேல் வீழ்ந்து-முலைகளின்மேலே விழுந்து, உருகலங்கி-உடம்பு கலக்கமடைந்து, மெய் உருகிட-அறிவு உருக, அமுது உகு-அமிர்தம் சொரிகின்ற, பெருத்த உந்தியின்-பெரிய உந்தியாகிய பூந்தடத்தில், முழுகி-அழுந்தி, மெய் உணர்வு அற-மெய்யுணர்ச்சி ஒழிய(பரவசமாக), உழைத்திடும்-வருந்தும், கனகலவியை-மிக்கபுணர்ச்சியில், மகிழ்வது-விருப்பங்கொள்வதை, தவிர்வேனோ-நீங்குவேனோ.

(வி-ரை) அருக்குதல் - அருமையாதல். வருடல் - தடவல். அரசிலை, இங்கு அதுபோன்ற அவயத்தைக்

குறித்தலால உவமையாகு பெயர். மங்கை-இங்குப் பருவத்தைக் குறித்தது. அகத்தியமுனிவருக்கு உபதேசஞ்செய்த வராதலின், 'இருக்கு மந்திரமொழிவகை முனிபெற உரைத்த சம்பாம சரவணபவ' என்றார் இருக்கு மந்திர வடிவமாக இருத்தலின், 'இருக்கு மந்திரம' என்றார் சிவ பெருமான ஆன்மாக்களுக்கு ஐந்தொழில இயற்றும் பொருட்டு அம்பலத்தே நடனஞ் செய்கின்றார் ஆதலின், 'அம்பலமிசைகளில நடித்த சங்கரர்' என்றார் இக்கருத்தே பற்றி அருணந்திசிவனாரும,

உலகமே யுருவமாக யோனிகள உறுப்ப தாக
இலகுபேர் இச்சா ஞானக் கிரியை உட் கரண மாக
அலகிலா உயிர்ப்புலனகட் கறிவினை யாக்கி ஐந்து
நலமிகு தொழில்க ளோடு நாடகம நடிப்பன நாதன.

என்றருளிச் செய்ததூஉம் காண்க

மாணிக்கவாசகருக்குத் திருப்பெருந்துறையிலே திருக்குருந்த மரத்தின அடியிலே இறைவன சிவஞானபோத வுண்மையை உபதேசித்தருளினமையின, 'அடியவர் திருக்குருந்தடி அருள்பெற அருளிய குருநாதா' என்றார்.

மாணிக்கவாசகர் அன்பின பெருக்கைத் தெரிப்பார், 'வழி வழி அடியவர்' என அவரைச் சுட்டினார்

திருப்பரங்கிரி-திருப்பரங்குன்றம்; மதுரைக்கு மூன்று கல்லில உள்ள முருகன திருப்பதி

முருகப் பெருமான அகத்தியருக்கு உபதேசித்தமையின 'அகத்தியனுக்கு ஒத்துரைக்கும குருவே' என்று பெரியாரும் கூறியது காண்க.

மாணிககவாசகா தாம உபதேசம பெறறமையைத தாமே தமது திருவாசகததில,

> கிளிவநத மொழியாள கேழகிளரும பாதியனை
> வெளிவநத மாலயனுங காணபரிய விநதகனைத
> தெளிவநத தேறலைச சீரார பெருநதுறையில
> எளிவநத திருநதிரஙகி யெணணரிய இனனருளால
> ஒளிவநதென னுளளததின உளளே ஒளிதிகழ
> அளிவநத அநதணனைப பாடுதுஙகாண அமமானாய

என்று அருளிச செயதிருததல அறிக (3)

4 தனததனநதன தனதன தனதன
தனததனநதன தனதன தனதன
தனததனநதன தனதன தனதன-தனதான

கறுககு மஞசன விழியிணை அயிலகொடு
நெருக்கி நெஞசுற எறிதரு பொழுதொரு
கனிககு ளினசுவை அமுதுகு மொழிசிறு நகையாலே

களககொ டுஙகலி வலைகொடு விசிறியெம
மனைககெ ழுநதிரு மெனமன முருகவொா
கவறசி கொண்டிட மனைதனி லழைகொடு கொடுபோகி

நறைதத பஞசணை மிசைதனின மனமுற
வளைதத னநதலி னிணைமுலை யெதிபொர
நகதத ழுநதிட வழுதிகழ பருகிய மிடறாலே

நடிததெ ழுஙகுரல குழுகுழு குழுவென
இசைதது நண்பொடு மனமது மறுகிட
நழுபபு நஞசன சிறுமிகள் துயரற அருளவாயே

நிறைத்த தெண்டிரை மொகுமொகு மொகுவென
உரத்த கஞ்சுகி முடிநெறு நெறுவென
நிரைத்த அண்டமு கடுகிடு கிடுவென வரைபோலும்
நிவத்த திண்கழ னிசிசர ருரமொடு
சிரங்கொ டுங்குவை மலைபுரை தரவிழ
நிணக்கு ழம்பொடு குருதிகள் சொரிதர அடுதீரா
திறற்க ருங்குழ லுமையவ ளருளுறு
புழைக்கை மும்மத கயமுக மிகவுள
சிவக்கொ ழுந்தென கணபதி யுடன்வரும் இளையோனே
சினத்தொ டுஞ்சம னுதைபட நிறுவிய
பாற்கு ளன்புறு புதல்வநன் மணியுரு
திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண பெருமாளே.

(இ-ள்) நிறைத்த தெண்திரை - வரிசையாகிய தெளிந்த அலைகள், மொகுமொகுமொகு என - மொகுமொகு எனனும் ஓசையைச் செய்யவும், உரத்த கஞ்சுகி - மார்பால் ஊர்ந்து செல்லும் பாம்பாகிய ஆதிசேடனது, முடி - கிரீடமானது, நெறுநெறு என - நெறுநெறுவென்று முறியவும், நிரைத்த அண்டமும் - வரிசையாகிய உலகங்களும், கிடுகிடுகிடு என - கிடுகிடுவென்று நடுங்கவும், வரை போலும் - மலையைப் போலும், நிவந்த - ஓங்கிய, திண்கழல் - உறுதியையுடைய வீரக்கெண்டை யணிந்த, நிசிசரர் - அசுரர்களுடைய, உரமொடு - மார்போடு, சிரம்கொடும் குவை - தலைகளாகிய கொடிய கூட்டம், மலை புரை தர - மலைபோலக் குவிந்திருப்ப, இரு நிணம் குழம்பொடு - பெரிய கொழுப்பின் குழம்புடனே, குருதிகள் - மிக்க இரத்தம், சொரி தர -

சொரியவும், அடுதீரப் போரைச் செய்யும் தைரியமுடைய வனே, திரள்-வலிமைபொருந்திய, கருகுழல் உமையவள்-கரிய கூந்தலையுடைய உமாதேவியாரது, அருள் உறு-கருணையைப் பெற்ற, புழைக்கை-துளையையுடைய துதிக்கையையும், மும்மதம்-மூன்று மதங்களையுமுடைய, கயமுகம்-யானைமுகமானது, மிக உள-சிறக்க உண்டாகிய, கணபதியுடன்-விநாயக மூர்த்தியோடு, சிவகொழுந்து என-சிவக்கொழுந்தென்று சொல்லும்படி, வரும் இளையோனே - வருகின்ற இளையவனே, சினத்தொடும்-கோபத்தோடும், சமன் உதைபட - யமனானவன் உதைபடும்படி, நிறுவிய பாதம் - திருவடிகளைத் தூக்கியருளிய சிவபெருமானுக்கு, உள அன்புஉறு-உள்ளன்பு பொருந்திய, புதல்வ-புதல்வனே, நவமணி உகு நலை இரத்தினங்களைச் சொரிகின்ற, திருப்பரங்கிரிதனில்-திருப்பரங்கிரி என்னும் திவ்விய ஸ்தலத்தில்; உறை சரவணபெருமாளே-வாழ்கின்ற சரவணப் பொய்கையில் உதித்த பெருமானே, கறுக்கும் அஞ்சனம்-கருமையான மை தீட்டிய, விழி இணை-இரண்டு கண்களாகிய, அயில்கொடு-வேற்படையைக்கொண்டு, நெருக்கி நெஞ்சு உற-அழுத்தி சென்று மனத்தில் பொருந்த, எறிதரு பொழுது-வீசுகின்ற காலத்தில், ஒரு கனிக்குள்-ஒப்பற்ற கோவைப்பழத்தை ஒத்த இதழில், இன்சுவை-இனிய சுவை பொருந்திய, அமுது உகு-அதராமிர்தத்தைச் சொரிகின்ற, ஒரு சிறு நகையால் - ஒப்பற்ற புன்னகையினால், கொடும் களம் கலி-வளைந்த கழுத்தின்கண் தோன்றுகின்ற ஓசை

யாகிய, வலைகொடு-வலையைக்கொண்டு, விசிறி-வீசி, எம்ம னைக்கு எழுந்திரும்-எமது வீட்டிற்கு எழுந்து வருவீர், என-என்று, மனம் உருக-மனம் நெகிழும்படியாகவும். ஓர் கவசிகொண்டிட்ட ஒரு கவலையை அடையவும், மனைதனில்-வீட்டிற்கு, அழகொடு-அழகாக, கொடுபோகி - அழைத்துக் கொண்டுபோய் நறை தத-வாசனை பொருந்திய, பஞ்சு அணை மிசைதனில்-பஞ்சணையாகிய படுக்கையின்மேல், மனம் உற-ஆசை மிகும்படி, வளர்த்த-கழுத்தைக் கட்டி வளர்த்து, ஆனந்தவில- போகசெருக்கில், துணைபுலை இரண்டு தனங்களும், எதிர்பொர-ஆடவாது மார்பின் எதிரில் பொருந்த, நகத்து அழுந்திட நகத்தில் அழுந்த, இதழ் அமுது பருகிய-அதரபானஞ் செய்த, பட்டு ஊடி-கழுத்தினகண், நடத்து எழும் குரல்-பாவையோடு உண்டாகும் குரல், குமு குமு குமு வென- குமு குமு என்று, இசைத்து-ஒலி யைச் செய்ய, நன்கொடு-நன்றாக, மனம் அது மறுகி-மனம் சுழற்சி அடைய, நமுட்பு-வஞ்சிக்கும், நஞ்சு அன-நஞ்சை ஒத்த, சிறுமிகள் துயர் அற-இளைய பெண்களது துன்பமானது எனக்கு நீங்கும்படி, அருள்வாய-அடியே னுக்கு அருள் புரிவாயாக எ-று

(வி-ரை) தெண்டிரை மொகுமொகுவென ...கஞ் சுகி முடி நெறுநெறுவென அண்ட முகடு கிடுகிடு வென ..புரைதர சொரிதர ..அடுதீரா என வினைமுடிவு செய்க. கடல் ஆர்ப்பரிக்கவும் ஆதிசேடன் கிரீடம் நறுங்க வும் உலகங்கள் நடுங்கவும் அசுரர்களுடைய மார்புகளும

தலைசுற்றும் மலைபோலக் குவியவும் இரத்தம் சொரியவும் போர் செய்கின்ற தீரனென்றபடி. நிறைத்த என்றதில் இடையின ரகரம் எதுகை நோக்கி வல்லின றகரமாயிற்று; 'அரையில் மாட்டங்கும் மடப்பிள்ளைகள் தறையிற் கிறிடிற் றசைந்து காயவரோ' என்புழிப்போல. திரை-மடிந்து வருதலையுடையது என அலைக்குக் காரணப் பெயர். பாம்பு மார்பில் ஊர்ந்து செல்லுவதாகலின் 'ஊரத்த கஞ்சுகி' என்றார். கஞ்சுகி-பாம்பு. கஞ்சுளி என்னும் பாடத்திற்கு உரையின்மை அறிக. வரை-மலை, இருமடியாகு பெயர். வரை-கணு, அது கணுவையுடைய மூங்கிலை யுணர்த்திப் பின்னர் மூங்கில் வளர்ந்த மலையை உணர்த்திற்றாகலின். வரை போலும் நிசிசரர் எனக்கூட்டுக, மலைபோலத் தோற்றஞ் சிறந்த அசுரர். நிவத்தல்-உயர்தல், நிவந்த என்றபாலது நிவத்த என்றானது விகாரம். நிசிசரர்-இரவில் சஞ்சரிப்போர், அரக்கர். புரைதரல்-ஒத்தல்; ஒரு சொன்னீர்மைத்து. குருதிகள் என்று பன்மையிற் கூறினார் பல வேறுபட்ட இரத்தங்கள் உள்ளவாதல்பற்றி. திறல் என்பதை உடையவளுக்குக் கூட்டுக, ஆக்கல், காத்தல், அழித்தல் முதலிய எத்தொழிலுஞ் சத்தியின்றி அமையாதாகலின் திறலுடையவள் என்றார். 'சிவமெனும் பொருளுமாதி சத்தியுடன் கூடின் எத்தொழிலும் வல்லதாம்' என்று பெரியோர் கூறியதூஉங் காண்க. 'அவளால் வந்த ஆக்கம் இவ்வாழ்க்கை எல்லாம்' என்றார் **அருணந்திசிவமும்**. கொழுந்து-தளிர், மரத்திற்குத் தளிர்போலச் சிவத்துக்குச் சுப்பிர

மணியா. கணபதி-கணங்களுக்குத் தலைவா. யமன் என்பது ஞமன் என்றாகி அது சமன் என்றாயிற்று. தன்னை உள்ளன்போடு அடைந்த மெய்யடியார்களுக்கு இறப்பைத் தவிர்த்து வீட்டை அருள்பவன் சிவபெருமான் ஆதலின், யமனை உதைத்து மார்க்கண்டரைக் காத்தனர். அத்தகைய பேராற்றலும் பேரருளுமுடைய பெருமான் மகனாதலின், நீயும் அக்குணங்களுடையை என்பார், 'சமனுதைபட நிறுவிய பரமகுளன்புறு புதல்வ' என்றார். மலைகளில் பாம்புகள் இரத்தினம் உமிழ்வதாலும், யானை, பன்றி முதலியன முத்தை ஈனுவதாலும் 'நன்மணியுகு திருப்பரங்கிரி' என்றார். சரவணன் - சரவணப்பொய்கையில் அவதரித்தவன். சரவணபவன் என்பதன் மரூஉ. கறுக்கும் என்பதில் கறு-பகுதி, கோபி, கறு என் ஏவல் 'கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள' 'நிறத்துரு வுணர்த்தற்கு முரியவென்ப' என்னும் **தொல்காப்பியச் சூத்திரங்களால்** கறுப்பு வெகுளியையும் கருமை நிறத்தையும் உணர்த்தல் காண்க. கண் கூரியதாக இருத்தலினாலும் சாரார்தம்மைத் துன்புறுத்துவலும் வேலுக்கு உவமையாயிற்று, உவமம் வடிவமும் தொழிலும் பற்றி வந்தது, இவ்வாறு வருதலுக்கு விதி 'விரவியும் வரூஉம் மரபின என்ப' என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தைக் காண்க. மைதீட்டிய வேல்போன்ற கண்களால் நோக்கியும், மனத்தின்கண் காமக் குறிப்பாகிய இனிய சுவை தோன்றும்படி தேவாமிர்தத்தை உண்டாலொத்த இன்பத்தைத் தருகின்ற ஒப்பற்ற புன்னகையினாலும் கண

ட்டதொனியினாலும் மயக்கி, ஆடவரைத் தம் வீட்டிற்கு அழைத்துச் சென்று பரபல லீலைகளால் மயக்குகின்ற இளம்பெண்களைக் கூடுதற்கு எண்ணும் துன்பம் நீங்கும்படி எனக்கு அருள்செய்வாயாக என்பது கருத்து. 'திணிய நெஞ்சப் பறவை சிக்கக் குழற்காட்டிற் கண்ணிவைப்போர் மாயங் கடக்கும் நாள் எந்நாளோ' என்றார் **தாயுமானசுவாமி**களும்.

*கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்*
*ஒருங்கிய சாயல் நெருங்கியுள் மதர்த்துக்*
*கச்சற நிமிர்ந்து கதிர்த்துமுன் பணைத்து*
*எய்த்திடை வருந்த எழுந்து புடைபரந்து*
*ஈர்க்கிடை போகா இளமுலை மாதர்தம்*
*கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்*

என **மணிவாசகர்** அருளிச் செய்ததூஉங் காண்க.

புட்குரல் காட்டல், அதரபானஞ் செய்தல், நகக்குறி வைத்தல் முதலியன கலவிக்குறிப்புகளாம். (4)

5 தனதந்தன தந்தன தந்தன
தனதந்தன தந்தன தந்தன
தனதந்தன தந்தன தந்தன-தனதான.

சருவும்படி வந்தன னிங்கித
மதனின்றிட அம்புலி யுஞ்சுடு
தழல்கொண்டிட மங்கையர் கண்களில் வசமாகி
சயிலங்கொளு மன்றல்பொ ருந்திய
பொழிலின்பயில் தென்றலு மொன்றிய
தடவஞ்சுனை துன்றி யெழுந்திடு திறமான

இரவும்பக லந்தியு நினைந்திடு
குயிலவந் திசைதந் தனவென் றிட
விருகண்கள் துயின்றிட லின்றியும் மயலான
விடனெஞ்சு பதன்பத னென்றிடு
மயல்கொண்டு வருந்திய வஞ்சக
னினியுன்றன் மலர்ந்தில கும்பத மடைவேனோ
திருவொன்றி விளங்கிய அண்டர்கள்
மனையின்த யிருண்டவ னெண்டிசை
திகழும்புகழ் கொண்டவன் வண்டமிழ் பயில்வோர்பின்
திரிகின்றவன் மஞ்சுநி றம்புனை
பவன்மிஞ்சுதி றங்கொள வென்றடல்
செயதுங்க முகுந்தன் மகிழ்ந்தருள் மருகோனே
மருவுங்கட றுந்துமி யுங்குட
முழவங்கள்கு மின்குமி னென்றிட
வயமொன்றிய செந்திலில் வந்தருள் முருகோனே
மதியுங்க திரும்புய லுந்தின
மறுகும்படி யண்டமி லங்கிட
வளர்கின்ற பரங்கிரி வந்தருள் பெருமாளே.

(இ-ள்) திரு ஒன்றிய-செல்வம் பொருந்திய, அண்டர்கள்-இடையர்களது, மனையின் தயிர் உண்டவன்-மனையிலே தயிரை உண்டவனும், எண் திசை-எட்டுத் திக்குகளிலும், திகழும் புகழ் கொண்டவன் - விளங்கும் புகழ்கொண்டவனும், வண் தமிழ்-வளவிய தமிழ் மொழியை, பயில்வோர் பின்-மேன்மேலுங் கற்பவர்களின் பின்னே, திரிகின்றவன்-திரிகின்றவனும், மஞ்சு நிறம் புனைபவன் - மேகத்தின் நிறத்தைப் பெற்றவனும், மிஞ்சு திறம் கொள - மிகுந்த வெற்றித

திரம் தனக்குண்டாக, அடல் வென்று - போரில் பகைவர்களை அழித்து, செயத்துங்க முகுந்தன்-வெற்றியின் உயர்ச்சியைக் கொண்டவனுமாகிய திருமால், மகிழ்ந்தருள் மருகோனே-மகிழ்கின்ற மருகனே!, மருவும் கடல்-ஓசைபொருந்திய கடலைப்போல, துந்துமியும்-பேரிப்பறையும், குடமுழவங்கள் - குடம்போன்ற வடிவையுடைய மத்தளங்களும், குமின் குமின் என்றிட - குமின் குமின் என்ற ஓசையைச் செய்ய, வளம் ஒன்றிய-செழுமை பொருந்திய, செந்திலில்-திருச்செந்தூர் என்னுந் திவ்விய க்ஷேத்திரத்தில், வந்து அருள் முருகோனே-வந்து வாழ்கின்ற முருகனே!, மதியும்-சந்திரனும், கதிரும்-சூரியனும், புயலும்-மேகமும், தினம் மறுகும்படி-நாடோறும் மயங்கும்படி, அண்டம் இலங்கிட-ஆகாயம் வரையில் விளங்கும்படி, வளர்கின்ற-ஓங்கியுயர்ந்த, பரங்கிரி - திருப்பரங்கிரி என்னுந் திருத்தலத்தில், வந்து அருள் பெருமாளே - வந்து வாழ்கின்ற பெருமானே!, சருவும்படி-தழுவுவதற்கு, வந்தனன் - வந்து, இங்கிதம் மதன் நின்றிட-மனக்குறிப்பைப் புலப்படுத்தும் மன்மதன் இடையில் நிற்க, அம்புலியும் சுடுதழல் கொண்டிட - சந்திரனும் மிக்க நெருப்பைப்போலும் வெம்மையைக்கொள்ள, மங்கையர் - மங்கைப்பருவமுடைய பெண்களது, கண்களின் வசம் ஆகி-கண்களிலே வசப்பட்டு, சயிலங்கொளும்-பொதிய மலையிலுள்ள, மன்றல் பொருந்திய-வாசனை பொருந்திய, பொழிலின் பயில்-சோலைகளிலே வீசுகின்ற, தென்றலும்-தென்றற் காற்றும், ஒன்றிய-குளிர்ச்சி பொருந்திய, தடம் சுனைதனை-

அகன்ற அழகிய கணகளிலே, துனறி எழுநதிட-நெருஙகி வர, திமம ஆன - கூறுபாடடையுடைய, இரவு பகல அநதியும - இரவிலும பகலிலும அநதிபபொழுதிலும, நினறிடு குயில-நிலைபெறறுள்ள குயில, வநது இசை - வநது குரலை, தநதன எனறிட-தநதன எனறுகூவ, இருகணகள -இரணடு கண்களும், துயினறிடல இனறியும-தூஙகுவதிலலாமலும், மயல ஆன இவன - காமமபககததைககொணட எனது, நெஞசு-மனம, பதனபதன எனறிட-பதைபதைகக, உடல் கொணடு வருநதிய வஞசகன - உடலைபபெறறு வருநதிய வஞசகச செயலுடையவனாகிய நான, இனி உனறன-இனி மேல தேவரீருடைய, மலாநது இலகும-தாமரை மலரைப போல விரிநது விளஙகும், பதம அடைவேனே - திருவடிகளைப பெறுவேனோ எ-று

(வி-ரை) மயல கொணடவாகளுககுச சநதிரன காய்தலும, தெனறல வீசுதலும, குயில கூவுதலும அமமயலைப் பெருககித் துனபஞ செயயுமாதலின 'சருவுமபடி குயில் வநதிசை தநதன வெனறிட' என்று கூறினா. ஆனமாககளுககுக காமததை விளைபபவன மனமதன எனபது புலவர் மரபு. சநதிரனைச சுடுகினறானெனறு கூறல காமமிகுதி நோககி,

'செபபிளங கொஙகைமீா திஙகட சுடாபபட்டுக
கொபபுளங கொண்ட குளிர்வானை—இப்பொழுதும்
மீன்பொதிந்து நின்ற விசும்பெனபது எனகொலோ
தேன பொதிந்த வாயால தெரிநது.'

எனறு புகழேந்திப்புலவர் கூறியதூஉம காண்க.

கொள்ளை கொள்ளக் கொதித்தெழும் பாற்கடல்
பள்ள வெள்ள மெனப்பட ருந்நிலா
உள்ள முள்ளுற றுயிரைத் தொடருமால்
வெள்ளை வண்ண விடமுமுண் டாங்கொலோ

கொடியை யலலைநீ யாரையுங் கொலகிலாய்
வடுவி லின்னமு தததொடும வநதனை
பிடியின மென்னடைப பெண்ணொடென் றுலெனச
சுடுதி யோகடல தோன்றிய திங்களே

என்னும் இராமாயணச் செய்யுட்களாலும் இக்கருத்தைச் செவ்விதின் அறிக

தென்றல் பொதியமலையிற் பிறந்ததாகலான் அங்கே யுள்ள சந்தனமரங்களின் மணத்திலே தோய்ந்து, பொழில்களிற் சென்று ஆங்குள்ள நறுமலர்களின் மணங்களையும் நுகர்ந்து அழகிய சுனைகளில் படிந்து, குளிர்ந்து வந்து வீசி மையலை மிகுக்கும் என்பார் 'சயிலங்கொளும் . எழுந்திடும்' என்றார்

'மலயத் துதித்து மதுரையில் வளர்ந்து
புலவர் நாவில் பொருந்திய தென்றல்'

என்றார் இளங்கோவடிகளார்,

குயில் இசைத்தல் காமம் விளைத்தலை,

'ஊடினீரெல்லாம் உருவிலான் றன்னை
கூடினீரென்று குயில் சாற்ற'

என்னுஞ் சிலப்பதிகாரச் செய்யுளாலும் அறிக

திருவடி அடைதலே வீடென்பார் 'பதமடைவேனோ' என்று கூறினார் 'சேவடி படருஞ் செம்மல் உள்ளம்' என்ற

திருமுருகாற்றுப்படை. அடிகளுக்கு நச்சினார்க்கினியர் இவ்வாறே உரைகூறி,

‘கேட்டாயோ தோழி கிறிசெய்த வாறொருவன்
தீட்டார் மதில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டித்
தாட்டா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி
நாட்டார் நகைசெய்ய நாமேலை வீடெய்த
ஆட்டான் கொண்டாண்டவா பாடுதுங்காண் அம்மானாய்’

என்னும் **மணிவாசகப் பெருமான்** திருவாசகத்தை எடுத்துக் காட்டியதூஉம் காண்க. திருவொன்றிய அண்டர்கள் என்றது, தமக்குக் கண்ணபிரான் தம்மிடத்தே யுள்ள புல்லிய தயிரை உண்டு விளையாடுதற்குரிய நல்வினையையுடைய இடையர் என்று பொருளுரைத்தலுமாம். நீலமேனியையுடையவன் ஆதலின், ‘மஞ்சுநிறம் புனைபவன்’ என்றார். முகுந்தன்—முத்தி கொடுப்பவன்.

‘வண்டமிழ் பயில்வோர் பின் திரிகின்றவன்’ என்றது திருக்கச்சித் தலங்களுள் ஒன்றாகிய திருவெஃகாவில் திருமழிசை ஆழ்வார் யோகஞ் செய்திருந்தனர். அக்காலை அவரைக் கணிகண்ணர் என்பவர் வழிபட்டுவந்தார். அப்போது வயது சென்ற பரத்தை ஒருத்தி ஆழ்வார் திருவுள முவப்பப் பணிவிடைகள்புரிந்து, அவர் கருணையினால் மீண்டும் இளமை அடைந்து அழகிற் சிறந்து விளங்கினாள். அவளது பொலிவைக் கண்டு, பல்லவராயன் என்னும் அரசன் மையல் கொண்டு அவளுடன்கூடி வாழ்ந்து வந்தான். அவ

னுக்கு மூபபுபபருவம் எயதியது அபபோது அவன பரதனதை வாயிலாக அவளுககு இளமைவந்த வரலாறறை உணாநது, கணிகணணரை ஆழவாரைத தன்னிடம அழைதது வருமபடி கூறினன அவா ஆழவாா ஒரிடத் திற்கும எழுநதருளமாடடாா எனறனா. அஙஙனமாயின 'நீரேனும் நான இளமை பெறுமபடி எனமீது ஒருகவி பாடுக' என்று கேடக, அவா தாம் நரஸ்துதி செயவதிலலே யென மறுத்தனா அதுகேடடு அரசன கோபமடைநது, 'நீா நம ஊரை விட்டுப போவீராக' எனறன அவரும அதனே ஆழவாருககு விணணபபிததனா, ஆழவாா பெருமா ளிடததில இதனை விணணபபஞ செயது,

'கணிகணணன போகின்றுன காமரு பூங கசசி
மணிவண்ணு நீயிங கிராதே—துணிவுடனே
செநநாப புலவனியான செலகினறேன நீயுமுன்றன்
பைந்நாகப பாயசுருடடிக கொள'

என்ற பாடடை அருளிச செயதாா. இதனைககேட்ட பெருமாள் ஆழ்வாா சொனனவணணமே அவரைப் பின தொடாநது சென்றுா கசசிநகரம பொலிவழிந்தது. அது கண்டு அரசன கணிகணணரைப் பிராாததிகக, அவா ஆழ வாரைப பிராாததிகக ஆழ்வாா,

'கணிகண்ணன் போகமொழிநதான காமருபூங கசசி
மணிவண்ணு நீயிங கிருக்க—துணிவுடனே
செநநாப புலவனியான் செலமொழிநதேன நீயுமுன
பைநநாகப பாயபடுததுக கொள்' [றன

என்று பாடி யருளினா. அதுபோன்றே திருமால் அததலத் தில சயனத திருககோலமாக எழுந்தருளினர் எனபது

இதனால் பெருமாளுக்குச் சொன்னவண்ணஞ் செய்த பெருமாள் என்று ஒரு பெயர் வழங்குகின்றது. வடமொழியாளர் 'யதோக்தகாரி' என்பர். இதனைக் குமரகுருபர சுவாமிகள், 'பணிகொண்ட துத்திப் பட்டப் பாயற் சுருட்டுப் பணைத்தோ ளெருத்தலைப்பப் பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டலே' என்று அருளிச் செய்தனர்.

6 தனத்தனந் தனத்தான
தனத்தனந் தனத்தான
தனத்தனந் தனத்தான - தனதான

வரைத்தடங் கொங்கையாலும்
வளைப்படுஞ் செங்கையாலும்
மதர்த்திடுங் கெண்டையாலும் அனைவோரும்
வடுப்படுந் தொண்டையாலும்
விரைத்திடுங் கொண்டையாலும்
மருட்டிடுஞ் சிந்தைமாதர் வசமாகி
எரிப்படும் பஞ்சுபோல
மிகக்கெடுந் தொண்டனேனும்
இனற்படுந் தொந்தவாரி கரையேற
இசைத்திடுஞ் சந்தபேதம்
மொலித்திடுந் தண்டைசூழும்
இணைப்பதம் புண்டரீகம் அருள்வாயே
சுரர்க்குவஞ் சஞ்செய்சூரன்
இளக்கிரௌஞ் சந்தனோடு
துளக்கெழுந் தண்டகோளம் அளவாகத்

துரத்தியன் றிந்த்ரலோகம்
அழித்தவன் சம்பிரதாயம்
சுடப்பிர சண்டவேலை விடுவோனே

செருக்கெழுந் தும்பர்சேனை
துளக்கவென் றண்டமூடு
தொனித்திடுஞ் சங்கபாணி மருகோனே

தினைப்புனஞ் சென்றுலாவு
குறத்தியின் அன்பராகும்
திருப்பரங் குன்றமேவு பெருமாளே.

(இ-ள்) சுரர்க்கு - தேவர்களுக்கு, வஞ்சம் செய் - கொடுமைசெய்கின்ற, சூரன் இளைக்க கிரௌஞ்சன் தனோடு - பதுமாசுரன் தன் தம்பியாகிய கிரவுஞ்சனோடு, துளக்க எழுந்து - அசையும்படி எழுந்து, அண்டகோளம் அளவு ஆக - ஆகாயம் வரையில், துரத்தி அன்று - துரத்திக்கொண்டு சென்ற அக்காலத்தில், இந்த்ரலோகம் அழித்தவன் - இந்திரலோகத்தை அழித்தவனாகிய அவனது, சம்பிரதாயம் - பரம்பரையை, சுட - கொளுத்த, பிரசண்ட வேலை - பெரிய மிக்க வலிவுடைய வேலை, விடுவோனே - விடுபவனே!, உம்பர் சேனை - தேவர்களுடைய சேனையானது, செருக்கு எழுந்து - களிப்படைந்து, துளக்க என்று - ஊக்கங் கொண்டு அசையவேண்டி, அண்டம் ஊடு - ஆகாயத்தைப் பரவும்படி, தொனித்திடும் - ஒலிக்கின்ற, சங்கபாணி - பாஞ்சசன்னியம் என்னுஞ் சங்கைக் கையிலே தரித்த திருமாலுக்கு, மருகோனே - மருகனே!,

தினை புனம்-தினைக் கொல்லையிலே, சென்று உலாவு-போய்த் திரிகின்ற, குறத்தியின்-வள்ளி நாயகியின், அன்பர் ஆகும்-காதலராகவுள்ள, திருப்பரம் குன்றம்-திருப்பரங் குன்றத்தில், மேவும்-வாசஞ்செய்யும், பெருமாளே-பெருமானே',
வரை - மலைபோலும், தடம் கொங்கையாலும் - பருத்த தனங்களாலும், வளைபடும் - வளையல்களைத் தரித்த, செம் கையாலும்-சிவந்த கைகளாலும், மதர்த்திடும் கெண்டையாலும்-மகிழ்ச்சியையுடைய கெண்டைமீனை யொத்த கண்களாலும், அனைவோரும்-எல்லோரும், வடு செயும்-வடுவைச் செய்கின்ற, தொண்டையாலும் - கொவ்வைக் கனியை யொத்த இதழாலும், விரைத்திடும் கொண்டையாலும்-மணம் வீசுகின்ற கொண்டையினாலும், மருட்டிடும்-மயக்குகின்ற, சிந்தை மாதர்-பலவகைப்பட்ட எண்ணத்தை யுடைய மாதர்களின், வசம் ஆகி-வசப்பட்டு, எரிப்படும் பஞ்சுபோல-நெருப்பிற் பட்ட பஞ்சைப்போல, மிக கெடும் தொண்டனேனும்-பெரிதும் கெடுகின்ற அடியேனும், இன்னல்படும் தொந்தவாரி - துன்பமடையும் ஆசையாகிய தொடர்ச்சியையுடைய பிறவிக்கடலினின்றும், கரை ஏற-முத்தியாகிய கரையைச் சேர, இசைத்திடும் சந்தபேதம்-புகழ்ந்து பேசப்படும் சந்த வேற்றுமைகளை, ஒலித்திடும்-ஒலிக்கின்ற, தண்டைசூழும்-தண்டைகளால் சூழப்பட்ட, இணைபதம்-இரண்டு திருவடிகளாகிய, புண்டரீகம்-தாமரை மலர்களை, அருள்வாய்-அருள் செய்வாயாக எ-று. ஏ-அசைநிலை.

(வி-ரை) மாதர்கள் தமது அழகிற் சிறந்த அவயவங்களால் காமத்தை ஊட்ட மதிமயங்கி ஆசையுட்பட்டுப் பல வகைப்பட்ட தொடர்புண்டு பிறவியாகிய கடலிற் கிடந்துழலும் அடியேன் வீடாகிய கரையிற் சேர்வதற்கு உன் திருவடிகளாகிய புணையை அருள் செய்யவேண்டும் என்பது கருத்து. வரை தனங்களுக்கு வடிவத்தால் உவமை. மதர்த்தல்-களித்தல். கெண்டை-கெண்டைமீன், கெண்டைமீன் வடிவத்தாலும் பிறழ்ச்சியாலும் கண்களுக் குவமை. கோவைப் பழத்தைப் பிளந்தாலொத்த செம்மையையுடைய இதழ் என்பார் 'வடுப்படுந் தொண்டை' என்றார். சிந்தை மாதர் என்றது மாதர் பலரிற் பட்ட எண்ணமுடையவர் ஆதலையும் அவரது எண்ணம் அறியக்கூடாத தன்மையுடைத்தாதலையும் குறித்தற் கென்க.

'அத்தி மலருமருங் காக்கை வெண்ணிறமுங்
கத்துபுனல் மீன்பதமுங் கண்டாலும்—பித்தரே
காணாதெரியற் கடவுளருங் காண்பரோ
மாணார் விழியார் மனம்'

என்றார் ஆன்றோர் வாக்கையும் நோக்குக.

'எரிப்படும் பஞ்சு' எவ்வாறு தனக்கும் பிறர்க்கும் பயனின்றி அழியுமோ அதுபோல மாதர்களின் தொடர்பால் தனக்கும் பிறர்க்கும் பயனின்றி ஒழிந்தேனென்பார் 'எரிப்படும் பஞ்சுபோல மிகக் கெடுந் தொண்டன்' என்றார்

'தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார் மற்றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு' என்றார் **வள்ளுவனாரும்.**

காரணகாரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருத லின் பிறவியைத் 'தொந்தவாரி' என்றார். பிறவியாகிய கடலைக் கடத்தல் இறைவனுடைய திருவடி இன்றியமையா தென்பார்,

'இணைப்பதப் புண்டரீகம் அருள்வாயே' என்றார்.

'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேரா தவர்' என்ற திருக்குறளையுங் காண்க.

இவ்வாறே **மணிவாசகரும்,**

தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையா லெற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயா ரென்னுங் காலாற்
கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்
டினியென்னே யுய்யுமா றென்றென் றெண்ணி
அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை
முனைவனே முதலந்த மில்லா மல்லற்
கரைகாட்டி யாட்கொண்டாய் மூர்க்க னேற்கே

என்றருளிச் செய்ததூஉங் காண்க.

வஞ்சம்-கொடுமை (பிங்கல நிகண்டு) அண்டகோளம்-அண்டமாகிய உருண்டை

திருமாலின் சங்கின் பெயர் பாஞ்சசன்னியம், இப்பி யாயிரஞ் சூழ்ந்தது இடம்புரி; இடம்புரி ஆயிரம் சூழ்ந்தது வலம்புரி; வலம்புரி ஆயிரம் சூழ்ந்தது சலஞ்சலம்; சலஞ் சலம் ஆயிரம் சூழ்ந்தது பாஞ்ச சன்னியம். (6)

7. தனனதந்த தத்தத்த தந்த
தனனதந்த தத்தத்த தந்த
தனனதந்த தத்தத்த தந்த-தனதான

கருவடைந்து பத்துற்ற திங்கள்
வயிறிருந்து முற்றிப் பயின்று
கடையில் வந்து தித்திக்கு மந்தை வடிவாகி
கழுவியங்கெ டுத்துச் சுரந்த
முலையருந்து விக்கக் கிடந்து
கதறியங்கை கொட்டித் தவழ்ந்து நடமாடி
அரைவடங்கள் கட்டிச் சதங்கை
யிடுகுதம்பை பொற்சுட் டிதண்டை
யவையணிந்து முற்றிக் கிளர்ந்து வயதேறி
அரியபெண்கள் நட்பைப் புணர்ந்து
பிணியுழன்று சுற்றித் திரிந்த
தமையுமுன்க்ரு பைச்சித்த மென்று பெறுவேனோ
இரவியிந்த்ரன் வெற்றிக் குரங்கின்
அரசரென்றும் ஒப்பற்ற வுந்தி
யிறைவனெண்கி னக்கர்த்த னென்றும் நெடுநீலன்
எரியதென்றும் ருத்ரற் சிறந்த
அனுமனென்றும் ஒப்பற்ற அண்டர்
எவருமிந்த வர்க்கத்தில் வந்து புனமேவ
அரியதன்ப டைக்கர்த்த ரென்று
அசுரர்தங்கி ளைக்கட்டை வென்ற
அரிமுகுந்தன் மெய்ச்சுற்ற பண்பின் மருகோனே
அயனையும் புடைத்துச்சி னந்து
வுலகமும்ப டைத்துப் பரிந்து
அருள்பரங்கி ரிக்குட்சி றந்த பெருமாளே.

(இ-ள்) இரவி இந்திரன-சூரியனும் இந்திரனும், வெற்றி குரங்கின-வெற்றிபொருந்திய குரங்குகளுக்கு, அரசா என்றும்-அரசராகிய வாலி சுக்கிரீவா என்றும், உந்தி இறைவன்-பிரமன், எண்கு இனம காதகன என்றும்- கரடி முகச சேனைகளுக்குத தலைவனாகிய சாம்பவன் என்றும், எரி அது-அக்கினிதேவன, நெடு நீலன என்றும்-நெடிய நீலன என்னும் சேனாபதி என்றும், உருத்திரன - உருத்திர மூர்த்தி, சிறந்த அனுமன என்றும-சிறப்புப பொருந்திய அனுமான என்றும், ஒப்பற்ற அணடா எவரும-உவமையில்லாத தேவாகள எல்லாரும, இந்த வாக்கத்தில வந்து-இந்த வானரக கூட்டத்தில வந்து, புனம் மேவ-பூலோகத்தை அடைய, அரிய தனபடை-அவாகளைத தன்னுடைய அருமையான படைகட்கு, காத்தா என்று - தலைவரென்று கொண்டு, அசுராதம-இராக்கதாகளுடைய, கிளை கட்டை வென்ற-சுற்றமாகிய கூட்டத்தை வெற்றிகொண்ட, அரி முகுந்தன்-விஷ்ணுமூர்த்தி, மெச்சுற்ற-புகழ்ந்து கொண்டாடிய, பணபின - தனமையையுடைய, மருகோனே - மருகனே!, அயனையும-பிரமனையும, புடைத்து - குட்டி, சினந்து - கோபித்து, உலகமும படைதது - உலகத்தையும சிருட்டித்து, பரிந்து-அதனைக காத்து, அருள பரங்கிரிக்குள - அருளையுடைய திருப்பரங்கிரி என்னுந் திவ்வியஸ்தலத்தில, சிறந்த - சிறப்போடு வீற்றிருக்கும, பெருமாளே-பெருமானே!, கரு அடைந்து-கருப்பத்தைப பொருந்தி, பத்து உற்ற திங்கள-பத்துமாதம் வரையிலும,

வயிறு இருந்து வயிற்றில் தங்கி, முற்றி பயின்று-முதிர்ந்து அங்கே வசித்து, கடையில் வந்து உதித்து - பத்துமாதமும் முடிந்தபின் வந்து தோன்றி, குழந்தை வடிவு ஆகி-குழந்தை வடிவத்தைப்பெற்று, கழுவி அங்கு எடுத்து-அதனைக்கழுவி அங்கே கையிலேந்தி, சுரந்தமுலை - பாலசுரந்த தனங்களை, அருந்துவிக்க-உண்பிக்க, கிடந்து-தரையின்மேற் கிடந்து, கதறி - அழுது, அங்கைகொட்டி - உள்ளங்கையைத்தட்டி, தவழ்ந்து நடம் ஆடி - தவழ்ந்து நடந்து, அரைவடங்கள்- அரையில் கட்டும் கயிறுகளை, கட்டி-அணிவித்து, சதங்கை இடு குதம்பை - சதங்கையையும் இடப்பட்ட குதம்பையையும், பொன் சுட்டி-பொன்னாலாகிய சுட்டியையும், தண்டை அவை அணிந்து-தண்டையையும் தரித்து, முற்றி கிளர்ந்து- முதிர்ந்து மேலோங்கி, வயது ஏறி - வயதடைந்து, அரிய பெண்கள்-விட்டுநீங்குதற்கு அருமையான பெண்களுடைய, நட்பை புணர்ந்து - நட்பிற் சேர்ந்து, பிணி உழன்று - காம நோயால் வருந்தி, சுற்றித் திரிந்தது - ஒரு நிலையின்றிச் சுற்றித் திரிந்தது, அமையும் - அடியேனுக்குப்போதும், உன் கிருபைச் சித்தம் - தேவரீருடைய திருவுள்ளக் கருணையை, என்று பெறுவேனோ-எக்காலத்தில் அடைவேனோ என்-று.

(வி-ரை) தாயின் வயிற்றில் பத்துத் திங்களும் தங்கிப் பல துன்பங்களை நுகர்ந்தும், குழந்தைப்பருவத்திலும் வாலிபப்பருவத்திலும் துன்பங்களை அனுபவித்தும் வருகின்றேன்; இனியேனும் உன் திருவருளைப் பெறுவேனோ என்றார். கருவில்தோன்றிய நாள்தொடங்கி உயிர்போகும்வரை

பில துன்பமே என்பார், 'சுற்றித் திரிந்து அமையும்' என்றார்.

'வேதநூற் பிராயம் நூறு மனிசர்தாம் புகுவ ரேனும்
பாதியு முறங்கிப் போகும் நின்றதில் பதினை யாண்டு
பேதைபா லகன தாகும் பிணிபசி மூப்புத் துன்பம்
ஆதலாற் பிறவி வேண்டேன் அரங்கமா நகரு ளானே'

என்ற ஆழ்வார் கருத்து மீது

தாய் வயிற்றில் உயிர் பத்துத் திங்களும் படும் துன்பத்தை மாதா உதரத்து,

'ஈனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்
ஒருமதித் தான்றியி னிருமையிற் பிழைத்தும்
இருமதி விளைவி னொருமையிற் பிழைத்தும்
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்
ஈரிரு திங்களிற் பேரிருள் பிழைத்தும்
அஞ்சு திங்களின் உய்ஞ்சுதல் பிழைத்தும்
ஆறு திங்களின் ஊறலர் பிழைத்தும்
ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்
எட்டுத் திங்களில் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்துந்
தக்க தசமதி தாயொடு தான்படுந்
துக்கசாரத் துயரிடைப் பிழைத்தும்'

என வரூஉம் **மாணிக்கவாசக சுவாமிகள்** திருவாக்கான் அறிக.

பத்துற்ற திங்கள்-பத்து என்னும் எண்ணைப்பொருந்திய திங்கள்; பத்துமாதம் பயின்று-பயில்பகுதி. குழந்தை-இளமைப்பொருளுணர்த்தும் குழவு என்னும் உரியடியாகப்

பிறந்த பெயர். 'மழவுங் குழவு மிளமைப்பொருள்' என்பது **தொல்காப்பியம்.**

அருந்தவி-பிறவினை அரைவடங்கள்-இடையில தரிக்கும் மாலைகள் முதலியன. சதங்கை-சிறுமணி; முகுந்தன-முத்தி கொடுப்பவன என்பது சொறபொருள

சூரியன் வாலியாகவும் இநதிரன சுககிரீவனுகவும் பிரமன சாம்புவானுகவும அககினிதேவன் நீலனுகவும உருத்திரன் அனுமானுகவும தோனறி இராமபிரானுககு இராவணனை அழிககத துணையாயினராதலின, 'இரவி ... வநது' என்றருளிச செயதார. முருகன பிரணவததின பொருளை அறியாத பிரமன சிரததில குட்டி. அவன படைபபுத தொழிலையும தாமே செயதருளும பேராறறல உடையாராதலின 'அயனையும பெருமாளே' என்றனா அயனையும் எனபதிலுளள உமமை உயாவு சிறபபு (7)

8 தநதனந தநததன தநதனந தநததன
தநதனந தநததன-தனதான.

மன்றலங கொநதுமிசை தெநதனந தெநதெதன
வணடினங கண்டுதொடா குழலமாதா

மண்டிடுந் தொணடையமு துணடுகொண டனபுமிக
வம்பிடுங கும்பகன தனமாாபில்

ஒனறஅம பொன்றுவிழி கன்றஅங கங்குழைய
உநதியென கின்றமடு விழுவேனை

உன்சிலம புங்கனக தணடையுங கிண்கிணியும்
ஒணகடம பும்பனையும அடிசேராய்

பன்றியங் கொம்புகமடம் புயங்கஞ் சுரர்கள்
பண்டையென் பங்கமணி பவர்சேயே
பஞ்சரங் கொஞ்சுகிளி வந்துவந் தைந்துகர
பண்டிதன் தம்பியெனும் வயலூரா
சென்றுமுன் குன்றவர்கள் தந்தபெண் கொண்டுவளர்
செண்பகம் பைம்பொன்மலர் செறிசோலை
திங்களுஞ் செங்கதிரு மங்குலுந் தங்குமுயர்
தென்பரங் குன்றிலுறை பெருமாளே.

(இ-ள்) பன்றி-பன்றியினுடைய, அம்-அழகிய, கொம்பு-கொம்பையும், கமடம் ஆமையோட்டையும், புயங்கம்-பாம்பையும், சுரர்கள்-தேவர்களுடைய, பண்டை என்பு-பழமையாகிய எலும்பையும், அங்கம் அணிபவர் - திருமேனியில் தரிக்கின்றவராகிய சிவபெருமானுக்கு, சேயே-திருக்குமாரனே!, பஞ்சரம்-கூட்டில், கொஞ்சு கிளி-கொஞ்சிப் பேசுங் கிளிகள், வந்துவந்து-அடிக்கடி வந்து, ஐந்துகர பண்டிதன்-ஐந்து கரங்களையுடைய விநாயகமூர்த்தியின், தம்பி எனும்-தம்பியென்று கூறும், வயலூரா-வயலூர் என்னுந் திவ்விய க்ஷேத்திரத்தை உடையவனே!, சென்று-தினைப்புனத்துக்குப் போய், முன் குன்றவர்கள்-முற்காலத்தே குறவர்கள், தந்த பெண்-மணஞ் செய்துகொடுத்த வள்ளியம்மையாரை, கொண்டு-மனைவியாக ஏற்றுக்கொண்டருளி, வளர் ஓங்கி வளர்கின்ற, செண்பகம்-செண்பகச்செடியில், பைம்பொன்-பசுமையான பொன்னை யொத்த மலர்பூக்கின்ற, செறி சோலை-மரங்கள் அடர்ந்த சோலையையுடைய, திங்களும்-சந்திரனும், செங்கதிரும்-சூரியனும், மங்குலும்-மேகமும்,

தயங்கும்-தயங்குகின்ற, உயர்-உயர்ந்த, தென்பரங்குன்றில் - தென்னாட்டிலுள்ள திருப்பரங்குன்றிலே, உறை பெருமாளே- வாழ்கின்ற பெருமானே!, மணமலி-வாசனைபொருந்திய, கொந்தார்மிசை-பூங்கொத்தின்மேல், தெந்தனந் தெந்தனென- தெந்தனமென்னும் ஒலியுடன், வண்டு இனம்-வண்டின் கூட்டம், கண்டு தொடர்-பார்த்துத் தொடர்கின்ற, குழல் மாதர்-கூந்தலையுடையபெண்கள் மண்டிடும்-நெருங்கியுள்ள, தொண்டை அமுது உண்டு-இதழ்களாகிய கோவைக் கனியின் அமிர்தத்தை உட்கொண்டு, அன்புமிக-ஆசை அதிகரிக்க, கம்பு இடும்-கச்சை அணிகின்ற, கும்பம்-யானைமத்தகத்தை ஒத்த, கனதன மார்பில்-பாரமான தனங்களுள்ள மார்பில், ஒன்ற-பொருந்தவும், அம்பு ஒன்றுவிழி-அம்பையொத்த கண்கள், கன்ற-பொலிவழியவும், அங்கம் குழைய- உடல் சோர்வை யடையவும், உந்தி என்கின்ற மடுவிழுவேனை-தேர்த்தட்டை ஒத்த அல்குல் என்னும் மடுவில் விழுகின்றவனாகிய அடியேனை, சிலம்பும்-சிலம்புகளையும், கனக தண்டையும்-பொன்னாலாகிய தண்டைகளையும், கிண்கிணியும்-கிண்கிணியென்னும் ஆபரணத்தையும், ஒண் கடம்பும்-ஒளி பொருந்திய கடப்பமாலையையும், புனையும்-தரித்துள்ள, உன் அடிசேர-தேவரீரது திருவடிகளிலே சேர்த்தருளுவாயாக.

(வி-ரை) மணமலம் என்பதில், அம்சாரியை. கொத்து கொந்தென மெலித்தல் விகாரம் பெற்றது. 'மாதர் காதல்' என்னுஞ் சூத்திரத்தால் மாதர் காதலுடையவர் என்பது போதரும். மண்டுதல்-நெருங்குதல், மிக்குச் செல்லுதல்.

தொண்டை அமுது-அதரபானம். 'பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி, வாலெயி றூறிய நீர்' என அதரபானத் தின் சுவை மிகுதியைத் திருவள்ளுவ நாயனாரும் சிறப்பித் துக் கூறியது காண்க. கும்பம்-குடமெனினும் அமையும். யானைமத்தகம் தனங்களுக்கு வடிவால் ஒப்புவமை. அம்பு-கண்ணுக்குக் கூர்மையால் உவமை. கலவியிலே கண் முத லிய உறுப்புக்கள் மாறுதல் இயற்கை ஆதலின், 'விழி கன்று அங்கம் குழைய' என்றார். 'வாயிற் சிவப்பை விழிவாங்கக் கண்ணின் வெளுப்பை வாய் வாங்கத், தோய்க் கலவி யமு தளிப்பீர் சுடர்ப்பொற் கபாடந் திறமினோ' என்று **கலிங்கத் துப்பரணி யாசிரியரும்** உந்தி-தேர்த்தட்டு அஃது இங்கே அதனை யொத்த அல்குலை உணர்த்திற்று.

> 'கொங்கை இளநீரால் குளிர்ந்த இளஞ் சொற்கரும்பால்
> பொங்கு சுழியென்னும் பூந்தடத்தில்—மங்கைதன்
> கொய்தாம வாசக் குழல்நிழற்கீழ் ஆறினோ
> வெய்தாம் காம விடாய்,'

என்று **புகழேந்திப் புலவர்** வெண்பாவில் சுழி என வருதலும் காண்க.

உம்மைகள் எண்ணுப் பொருளன. பன்றியின் கொம்பு ஆமையோடு, பாம்பு, எலும்பு முதலியவற்றைச் சிவபெருமான் அணிபவர் ஆதலின், 'பன்றி .. ..... ... அணிபவர்' என் றார். இதனை 'செத்தார்தம் எலும்பணிந்து சேவேறித் திரி வீர்' என்றார். என்றும் 'நங்காயிதென்ன தவம் நரம்போ டெலும்பணிந்து கங்காளந் தோள்மேலே காதலித்தான்

காணேடி' என்றும் 'கங்கையும் மதியும் பாம்பும் கடுக்கையும் முடிமேல் வைத்த' என்றும், 'என்பணியாரம் பூண்ட இறைவன்' என்றும் வரும் திருவாக்குகளான் அறிக- செறி சோலை- மரங்களடர்ந்த சோலை 'வெயிலுழை பறியாக் குயிலுழை பொதும்பர்' என்றார் மதுரைக்காஞ்சியிலும். தென்-அழகெனலுமாம் (8)

## திருச்செந்தில்

9 தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன-தனதான.

கமலமாதுடன் இந்திரை யுஞ்சரி
சொல்வொணாதம டந்தையர் சந்தன
களப சீதள கொங்கையில் அங்கையில் இருபோதேய

களவுநூல்தெரி வஞ்சனை யஞ்சன
விழியில் மோகித கந்தசு கந்தரு
கரிய வோதியில் இந்துமு கந்தனில் . மருளாதே

அமல மாகிய சிந்தைய டைந்தகல
தொலைவி லாதஅ றம்பொரு ளின்பமும்
அடைய வோதியு ணர்ந்து வணங்கபின் அருள்தானே

அறியு மாறுபெ றும்படி யன்பினின்
இனிய நாதசி லம்பு புலம்பிடும்
அருண ஆடக கிண்கிணி தங்கிய அடிதாராய்

குமரி காளிப யங்கரி சங்கரி
கவுரி நீலிப ரம்பரை யம்பிகை
குடிலை மோகினி சண்டினி குண்டலி எமதாயி

குறைவி லாளுமை மந்தரி யந்தரி
வெகுவி தாகம சுந்தரி தந்தருள்
குமர மூஷிக முந்திய ஐங்கர கணராயன்
மமவி நாயகன் நஞ்சுமிழ் கஞ்சுகி
யணிக சானன விம்பனே ரம்புலி
மவுலி யானுறு சிந்தையு கந்தருள் இளையோனே
வளரும் வாழையு மஞ்சளு மிஞ்சியும்
இடைவி டாதுநெ ருங்கிய மங்கல
மகிமை மாநகர் செந்திலில் வந்துறை பெருமாளே.

(இ-ள்) குமரி-அழியாத தன்மையுடையவளும், காளி-கறுப்பு நிறமுடையவளும், பயங்கரி - தீமை செய்பவர்களுக்கு அச்சத்தைச் செய்பவளும், சங்கரி-ஆன்மாக்களுக்குச் சுகத்தை ஊட்டுகின்றவளும், கவுரி-பசுமைநிறமுடையவளும், நீலி-துர்க்கையும், பரம்பரை-தேவியும், அம்பிகை-உலகத்துக்குத் தாயும், குடிலை-பிரணவமந்திரமாயிருப்பவளும், யோகினி-யோகத்தைச் செய்பவளும், சண்டினி-பாபத்தின்மேல் கோபமுள்ளவளும், குண்டலி-குண்டலிசத்தியாயுள்ளவளும், எமது ஆயி-எம்முடைய தாயாக உள்ளவளும், குறைவிலாள்-எக்குறைபாடுமில்லாதவளும், உமை-உமையென்ற திருநாமந்தரித்தவளும், மந்தரி-மந்தமான இசையுடையவளும், அந்தரி-ஆகாயத்திலுள்ளவளும், வெகுவித ஆகம சுந்தரி-பலவகைப்பட்ட ஆகமங்களில் பிரதிபாதிக்கப்பட்ட அழகுடையவளுமாகிய உமாதேவியார், தந்து அருள் - பெற்றருளிய, குமர - திருக்குமாரனே, மூஷிகம் - பெருச்சாளியை, உந்திய-செலுத்திய, ஐங்கரம் - ஐந்து கரங்களை

யுடைய, கணராயன-கணராஜனும், மமவிநாயகன்-நமது விநாயகப பெருமானும, கஜானன விம்பன - அழகிய யானை முகததை யுடையவருமாகிய கணேசப பெருமானுககும, நஞசு உமிழ 'கஞசுகி - விஷததைக ககுகின்ற பாமபை அணிநதவனுமாகிய, ஒா அம்புலி மவுலியான - சநதிரனை அணிநத சடையுடையவராகிய சிவ பெருமானும, உறு சிநதை உகநது அருள-மிக்க தமது மனததில விருமபியருளிய, இளையோனே-முருகனே!, வளரும வாழையும-வளாகின்ற வாழைமரமும, மஞசளும்-மஞசட்செடியும், இஞசியும - இஞசிசசெடியும, இடைவிடாது நெருஙகிய - இடைவிடாமல நெருஙகியுளள, மஙகலம - பொலிவுபெறற, மகிமை-பெருமையுடைய, மா நகா-சிறநத நகரமாகிய, செநதிலில - திருசசெநதூரில, வநது உறை - வநது தஙகிய, பெருமாளே - பெருமானே!, கமல மாது உடன் - செநதாமரை மலரில வசிககும திருமகளும, இநதிரையும-இநதிராணியும, சரிசொல ஒணு-ஒபபுசசொல்லமுடியாத, மடநதையா-பெணகளது, சநதனம களபம-சநதனததையும கலவைச சாநதையும பூசிய, சீதள கொஙகையில-குளிாசசிபொருநதிய ஸதனஙகளிலும, அமகையில-அழகிய கைகளிலும, இருபோது எய - இரணடு குவளைமலாகளை ஒதத, களவு நூல தெரி-களவைபபறறிச சொலலும சாத்திரததைத தெரிநத, வஞசனை-பொயயையுடைய, அஞசன விழியில-மைதீட்டிய கணகளில், மோகித-மயக்கததைததருகினற, கநத சுகம் தரு - வாசனையாகிய சுகத்தைக் கொடுக

கின்ற, கரிய ஓதியில் - கருநிறம் பொருந்திய கூந்தலினும், இந்து முகமதனில்-சந்திரனை ஒத்த முகத்திலும், மருளாது-மயங்காமல், அமலம் ஆகிய - பரிசுத்தமான, சிந்தை அடைந்து-மனத்தைப் பெற்று, அகல-அகன்று, தொலைவு இலாத - முடிவில்லாத, அறம் பொருள் இன்பமும் - தாமார்த்த காமமும், அடைய-அடைவதற்கு, ஓதி உணர்ந்து-கற்றுத் தெரிந்து, தணந்தபின்-முடிந்தபிறகு, அருள்-திருவருளை, அறியும் ஆறு - அறியும் ஞானத்தை, பெறும்படி-அடையும்படி, அன்பினின்-அன்பினாலே, இனிய நாத-இனிமையான ஒலியையுடைய, சிலம்பு புலம்பிடும் - சிலம்புகள் ஒலிக்கின்ற, அருண ஆடக-சிவந்த பொன்னாலாகிய, கிணி கிணி தங்கிய-கிணகிணி பொருந்தியுள்ள, அடி தாராய்-திருவடிகளை அருள்செய்வாயாக என்று.

(வி-ரை) திருமகளும் இந்திராணியும் அழகாற் சிறந்தவர்களாதலின் அவர்களினும் மிக்க அழகுடையார் என்பார் 'கமல மாது மடந்தையர்' என்றனர்.

களபம்-கலவைச்சாந்து. ஆடவர்க்கு ஆசையை விளைத்துத் துன்பஞ்செய்யும் உறுப்புக்களிற் கொங்கைகளே முதன்மையுடையனவாதலின் அவைகளையே முற்கூறினார், 'கடாஅக் களிற்றின்மேற் கட்படாம் மாதர், படாஅ முலைமேற் றுகில்' என்று **திருவள்ளுவருங்** கூறுதல்காண்க. இக்கருத்தே பற்றி 'திருவளர் தாமரை' என்னுந் **திருக்கோவையார்** செய்யுள் உரையில், 'மகளிர்க்கு உறுப்பிற் சிறந்த உறுப்பாகிய முலைக்குவமையாகப் புணர்க்கப்பட்ட கோங்கிற்கு அடை-

கொடுக்கக் கடவதன்றோ வெனின், அடை கொடுப்பிற் பிற வுறுப்புக்களுடன் இதனையும் ஒப்பித்ததாம் ஆகலான் இதற்கடை கொடாமையே முலைக்கேற்றத்தை விளக்கி நின்றது' என்று **பேராசிரியர்** உரைத்தார். பெண்கள் தமது கண்களின் இயக்கத்தாலே தமது உட்கருத்துக்களை அவ்வப்போது வெளிப்படுத்தும் பேராற்றல் வாய்ந்தவராதல் பற்றியும் அக்கண்களின் பார்வை சமயத்துக்கேற்றபடி அமிழ்தம் போலவும் நஞ்சுபோலவும் தோன்றி இன்பத்துன்பங்களை ஆக்கலானும் அவற்றின் பிறழ்ச்சியால் ஆடவர் மனப்பிணிக்கப்படுதலானும் 'கள்வு நாலத் தெரி வஞ்சனை அஞ்சனவிழி' என்றார். இவ்வுண்மையினை, 'நாட்டம் இரண்டும் மதிப்புடம் படுத்தற்குக் கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்', என வரும் **தொல்காப்பிய** சூத்திரத்தானும், 'கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள் என்ன பயனுமில' 'கண்களவு கொள்ளுஞ் சிறு நோக்கங் காமத்திற் செம்பாகம் அன்று பெரிது' எனவரும் **திருக்குறட்களானும்** 'பிணியுமதற்கு மருந்தும் பிறழப் பிறழ மின்னும், பணியும்புரை மருங்குற் பெருந்தோளி யுடைக் கண்களே' எனவரும் **திருக்கோவைச்** செய்யுளின் அடிகளானும் உணர்க. ஓதி-கூந்தல். இந்துமுகம்-சந்திரனை ஒத்தமுகம் அமலமாகிய சிந்தை-பரிசுத்தமான மனம். அறத்தின் பாகுபாடு அளவிறந்தன என்பார், 'அகல்தொலைவிலாத அறம்' என்றார். அறம் பொருளின்பங்களைக் கூறும் நூல்களை முறைப்படி மரபு நிலை திரியாத் தொல்லாணை நல்லாசிரியர்பால் கற்றுணர்ந்து

அறிவு நிரம்பிய பின்னரே இறைவன் அருளின் உண்மை இனிது விளங்குமாதலின் 'அறம் பொருள் .. . பெறும்படி' என்றருளிச்செய்தார். புலம்புதல்-ஒலித்தல். குடிலை என்றது பிரணவ மந்திரத்திற்கு உரியவளாய் இருத்தலின், யோகினி என்றார். 'எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்' என்றபடி இறைவன் யோகவடிவங் கொள்ளுங்கால் தானும் யோகவடிவங்கொண்டு ஆன்மாக்களுக்கு யோகஞானத்தை உணர்த்துதலான். குண்டலி-பாம்புபோல மண்டலித்திருக்கும் சத்தி, இதுவே படைப்பைச் செய்வது. உலகத்துக்கெல்லாந் தாயாதலின் 'எமது ஆயி' என்றார். 'சந்ததம் எனக்கு மகிழ் தந்தை நீயுண்டு நின் தன்னிடத்து ஏமவல்லி தாயுண்டு' என்றார் பிற்காலத்தாராகிய **இராமலிங்கசுவாமி**களும். உமை என்பதற்குத் தவத்தினின்று தடுக்கப்பட்டவள் என்று பொருள், (மா-பெண்ணே, உ-வேண்டாம்) விநாயகன்-வி-இன்மை, நாயகன்-தலைவன், தனக்கொரு தலைவனில்லாதவன் என்பது பொருள்.

தக்கன் சாபத்தால் கலை குறையப்பட்ட சந்திரன் சிவபெருமானிடத்தே அடைக்கலம் புகுத, அவனைக் காப்பாற்றுநிமித்தம் சடையின்கண்ணே தரித்தாராதலின், 'அம்புலிமவுலியான்' என்று சிவபெருமானைக் குறித்தார். இறைவன் ஞானவடிவமான சந்திரனைச் சூடுதல் தமது பேரறிவுடைமையை விளக்கும் என்பதனை, 'தூமதி சடைமிசைச் சூடுதல் தூநெறி ஆமதி யானென அமைத்தவாறே' என்னும் **பட்டினத்தார்** திருவாக்கான் அறிக. (9)

10 தன்னதன தந்த தந்தன
தன்னதன தந்த தந்தன
தன்னதன தந்த தந்தன-தனதான

இருகுழையெ றிந்த கெண்டைகள்
ஒருகுமிழ டர்ந்து வந்திட
இணைசிலைநெ ரிந்தெ ழுந்திட அணைமீதே
இருளளக பந்தி வஞ்சியின்
இருகலையு டன்கு லைந்திட
விதழமுத ருந்து சிங்கியின் மனமாய
முருகொடுக லந்த சந்தன
அளறுபடு குங்கு மங்கமழ்
முலைமுகடு கொண்டெ ழுந்தொறு முருகார
முழுமதிபு ரிந்த சிந்துர
அரிவைய ருடன்க லந்திடும்
அறிவிலன லம்பி ரிந்திட அருள்வாயே
எரிவிடநி மிர்ந்த குஞ்சியின்
நிலவொடுமி லைந்த கங்கையும்
இதழியொ டணிந்த சங்கரர் களிகூரும்
இமவரைத ருங்க ருங்குயில்
மரகதநி றந்த ருங்கிளி
யெனதுயிரெ னுந்தரி யம்பிகை பெருவாழ்வே
அரைவடம லம்பு கிண்கிணி
பரிபுரநெ ருங்கு தண்டைகள்
அணிமணிச தங்கை கொஞ்சிட மயில்மீதே
அகமகிழ்வு கொண்டு சந்ததம்
வருகுமர முன்றி லின்புற
அலைபொருத செந்தில் தங்கிய பெருமாளே

(இ-ள்) எரிவிடம் - எரிகின்ற விஷமானது, நிமிர்ந்த குஞ்சியின் - ஓங்கியசடையில், நிலவொடு எழுந்த கங்கையும் - சந்திரப்பிறையுடனே ஆரவாரத்தோடு வந்த கங்கையையும், இதழியொடு அணிந்த சங்கரர் - கொன்றைமாலையுடனே தரித்துக்கொண்ட சிவபெருமான், களிகூரும் - மகிழ்ச்சி மிக்ககொள்ளும், இமவரை தரும் கரும் குயில் - இமயமலை அரசன் பெற்ற கரிய குயில்போன்றவரும், மரகத நிற தரும் கிளி - பசுமை நிறத்தையுடைய கிளிபோன்றவரும், எனது உயிர் எனும் திரியம்பகி - என்னுடைய உயிரென்று சொல்லப்படும் மூன்று திருக்கண்களுடையவளுமாகிய உமா தேவியாரது, பெருவாழ்வே - பெரிய வாழ்வுபோன்ற திருக் குமாரனே!, அரை வடம் - அரையிலே அணியும் மாலையும், அலம்பு கிண்கிணி-சப்திக்கும் கிண்கிணியும், பரிபுரம்-சிலம்பும், நெருங்கு தண்டைகள் - நெருங்கிய தண்டைகளும், அணிமணி சதங்கை - அழகிய மணியாலாகிய சதங்கையும், கொஞ்சிட-மிழற்ற, மயில்மீது மயிலின்மேல், அகம் மகிழ்வு கொண்டு - மன மகிழ்ச்சியோடு, சந்ததம் - எப்போதும், வரு குமர - வருகின்ற முருகனே!, முன்றிலின் புறம் - திருக்கோயிலின் முற்றத்தில், அலை பொருத - அலைமோதுகின்ற, செந்தில் தங்கிய - திருச்செந்தூரென்னும் திவ்விய தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற, பெருமாளே - பெருமானே!, இருகுழை-இரண்டு குண்டலங்களையும், எறிந்த கெண்டைகள் - தாக்கிய கெண்டைபோன்ற விழிகள், ஒரு குமிழ் அடர்ந்து வந்திட-ஒரு குமிழ்போன்ற மூக்கை

நெருங்கி வரவும், இணைசிலை - இரண்டு வில்லையொத்த புருவங்களும், நெரிந்து எழுந்திட - நெரிப்புக்கொண்டு விளங்கவும், அணைமீது - படுக்கையின்மேல், இருள் அளகபந்தி - இருண்ட கூந்தலின் ஒழுங்கு, வஞ்சியின் - வஞ்சிக்கொடி போன்ற இடையிலே, இருகலையுடன் - தரித்த ஆடையுடனே, குலைந்திட - அவிழ்ந்துவிழவும், இதழ் அமுது - இதழினது அமிர்தத்தை, அருந்து சிங்குவை - பருகுகின்ற நாவினால், மனம் மாய - நெஞ்சு அழியவும், முருகொடு - பரிமளத்தோடு, கலந்த சந்தனம் - சேர்ந்த சந்தனமும், அளறுபட - சேறாக உள்ள, குங்குமம் கமழ் - குங்குமம் மணக்கின்ற, முலை முகடு கொண்டு - முலையாகிய உச்சியைப்பற்றி, எழுந்தொறும் - எழும்போதெல்லாம், முருகு ஆர வாசனையை நுகர, முழுமதி - பூரண சந்திரனையொத்த முகத்திலே, சிந்தூரம் புரிந்த - சிந்தூரப்பொட்டை விருப்பத்துடன் அணிந்த, அரிவையருடன் - பெண்களுடன், கலந்திடும் - கூடி வாழ்கின்ற, அறிவிலன் - அறிவில்லாதவனாகிய அடியேனுக்கு, நலம் பிறந்திட - நன்மை உண்டாக, அருள்வாய் - திருவருள் செய்வாயாக.

(வி-ரை) குமிழ் என்றது குமிழ்போன்ற மூக்கை; உபமான வாசகத்தால் உபமேயம் சொல்லப்பட்டதால் இஃது உருவக உயர்வு நவிற்சியணி. கண்களின் நீட்சியையும் விரைந்து பாயும் நோக்கத்தையும் கூறுவார் 'குழை எறிந்த கெண்டைகள் குமிழடர்ந்து ஏந்திட' என்றார். இவ்வாறே அதிவீரராம பாண்டியரும்,

குமிழ்மிசை மறிந்து குழையெதிர் நடந்து
கொலைத்தொழில் மரலியைப் பயிற்றி
அமிழ்தினின் விளைந்துள நஞ்சினிற் கருகி
மையரிசி தறிமை தோய்ந்து
கமலமென மலரை வனம்புகுந் தியவேற
கண்ணிணை மானம ருஞெக்கந
தமதெனக் கவர்ந்து கொண்டவோ மடமான
தடங்கணின செயல கவர்ந்தனவோ,

என்று கூறியது காண்க. சிங்குவ-நாக்கு முருகு-பரிமளம். அரிவை என்றது ஈண்டுப் பருவப்பெயரன்று பகீரதன வேண்டுகோளால் பூமியின்மேல் வந்த கங்கை செருக்குற்று உயிர்களை அழிக்கத் தலைப்படுகையில், சிவபெருமான் தமது சடையின்கண் அடைத்து ஒரு திவலையாக அடங்கச்செய்தனர். இதனை,

மலைமகளை ஒருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி
சலமுகத்தால் அவன்தலையில் சாருமது என்னேடீ
சலமுகத்தால் அவன்தலையில் சாராளேல் உலகமெல்லாம்
பிலமுகத்தால் உகப்பாய்ந்து பெருங்கேடாஞ் சாழலோ.

என்னும் **மணிவாசகப் பெருமான்** திருவாக்கான் உணர்க. இதழி-கொன்றை. கொன்றைமாலையை இறைவன் சூடுதலை, 'கண்ணிகார் நறுங்கொன்றை, காமர் வண்ண மார்பிற் றாருங்கொன்றை' என்று **பெருந்தேவனார்** கூறுமாற்றான் அறிக. சிவபெருமானுக்குக் கொன்றை அடையாளப்பூ; அது பிரணவத்தின் வடிவமாய் இருத்தலின், அதனைச் சூடுவோர் பிரணவத்தால் அறியப்படும் பரம்பொருளாவார்

என்பது தோன்றுதல் காண்க. சங்கரர் ஆன்மாக்களுக்கு இன்பத்தைச் செய்பவர், சங்கார கருத்தர் எனினுமாம். சங்கார காரணனாகிய இறைவனை இன்பஞ்செய்பவன் என்று கூறுதல் பொருந்துமோ எனின்? பொருந்தும் என்னை? படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழிலுக்கும் இறைவர் இவரே ஆதலினாலும்; அயன், அரி முதலினோர் இவர் ஏவலினாலே படைத்தல் காத்தல்களைப் புரிவதன்றித் தாமே ஒரு தொழிலை இயற்றுதற்கு ஆற்றலிலராதலினாலும், அழித்தல் தொழில் ஆன்மாக்களுக்கு இளைப்பாறுதலேயன்றி வேறன்மையானும் இவ்வைந்து தொழில்களும் அருளாலே செய்யப்படுவனவேயன்றிப் பிறிதின்மையானும் என்பது. இக்கருத்துப்பற்றி **உமாபதி சிவாசாரிய சுவாமிகள்** சிவப்பிரகாசத்தில்,

'ஆற்றவினை அரனருளின் திருவிளையாட்டாக இயம்புவர்
அணுக்கள் இடர்க்கடனின்று மெடுத்தே [கள்
ஏற்றமிக அருள்புரிதலேதுவாக உரைசெய்வர்
ஒடுக்கம் இளைப்பொழித்தல் மறைத்த
தோற்றமல பாகமவரக் காத்தல் போகந் துய்ப்பித்தல்
திரோதாயி நிறுத்தலாகும்
போற்றலரும் அருளருளே யன்றி மற்றுப் புகன்றவையும்
அருளொழியப் புகலொண்ணாதே'

என்று திருவாய்மலர்ந்தருளினர்.

'இமையவர் தருங்கருங்குயில்' என்று பாடமோதித் தெய்வயானை என்று கூறுவார் கூற்று, தெய்வயானையம்மையாருக்குப் பசுநிறமின்மையானும் மூன்று விழிகளின்மை

யானும், 'சங்கராகளிகூரும' எனபதனேடு இயையாமையா னும், பொருநதாமை காணக திரியம்பகி-மூனறு கணகளே யுடையவள 'தமபொருள எனப தமமககள' ஆதலின் 'திரியமபகி பெருவாழ்வே' எனருா (10)

11 தநத தானன தானன தநத தானன தானன
தநத தானன தானன-தனதான.

வெஞச ரோருக மோகடு நஞச மோகய லோநெடு
விஜபசாகர மோவடு வகிரோமுன்
வெநதுபோனபு ராதன சமபராரிபு ராரியை
வென்ற சாயக மோகரு விளேயோகண
நஞச மோயம தூதுவா நெஞச மோவெனு மாமத
சஙக மாதாப யோதர மிகமூழகி
சஙகையோவிரு கூதள கநத மாலிகை தோயதரு
தணடை சோகழ லீவதும ஒருநாளே
பஞச பாதக தாருக தணட னீறெழ வானவா
பணடு போலம ராபதி குடியேறப
பஙக யாசனா கேசவ பஞச லேயென மாலவரை
பஙக நீறெழ வேலவிடும இளேயோனே
செஞச டாடவி மீமிசை கஙகை மாமதி தாதகி
திஙகள சூடிய நாயகா பெருவாழ்வே
செணப காடவி நீடிய துஙக மாமதில சூழதரு
செநதில மாநகா மேவிய பெருமாளே.

(இ-ள) பஞச பாதக தாருக தணடன் நீறு எழ-பஞசமகா பாதகஙகளேச செயது வநத தாருகாசுரனைவன் அழியவும், வானவா - தேவாகள, பண்டுபோல - முன்போ

லவே, அமராவதி குடி ஏற-தெய்வலோகத்திற்குக் குடிபுக வும், பங்கயாசனா-தாமரை மலரை இருக்கையாகவுடைய பிரமதேவனும், கேசவா-திருமாலும், அஞ்சல என-அஞ்ச மென்று கூறிக் குறையிரப்பவும், மாலவரை - பெரிய கிரௌஞ்சகிரியை, பங்கம் நீறு எழ-தோல்வியடைந்து சாம் பராகவும், வேல்விடும்-வேற்படையைச் செலுத்தும், இளை யோனே-இளையவனே! செம்சடாவி மீமிசை-சிவந்த சடை யாகிய காட்டின்மேல், கங்கை-கங்கையையும், மாமதி-சிறந்த சந்திரனையும், தாதகி-ஆத்தி மலரையும், திங்கள்-சந்திரனை யும், சூடிய- தரித்துள்ள, நாயகா-சிவபெருமானது, பெரு வாழ்வே-பெரிய செல்வமே!, செண்பகாடவி - செண்பகக் காடு, நீடிய- சிறந்த, துங்கம் மாமதில்-உயர்ந்த பெரிய மதில் கள், சூழ்தரு-சூழ்ந்துள்ள, செந்தில் மாநகர்-திருச்செந்தூர் என்னும் திவ்விய தலத்தில், மேவிய-எழுந்தருளியுள்ள, பெருமாளே-பெருமானே!, வெம் சரோருகமோ-விரும்பத் தக்க தாமரை மலரோ, கடுநஞ்சமோ-மிக்க ஆலகால விஷமோ, கயலோ - கயல்மீனோ, நெடு இன்ப சாகரமோ - சிறந்த இன்பக்கடலோ, வடு வகிரோ-மாம்பிஞ்சின் பிளவோ முனவெந்துபோன-முன்னொருகால் வெந்தழிந்த, புராதன- பழைய, சம்பராரியை-மன்மதனை, புராரி - சிவபெருமான், வென்ற - வெற்றிகொண்ட, சாயகமோ- அம்போ, கரு விளையோ - கருவிளைமலரோ, கண்-கண்கள், யமதூதுவர் நெஞ்சமோ-யமதூதருடைய மனமோ, எனும் மாமத - என்று சொல்லும் மிக்க மதத்தையுடைய, சங்க மாதர் -

சங்கு வளையல்களைத் தரித்த பெண்களுடைய, பயோதரம் அதில்-ஸ்தனங்களில், மூழ்கு-முழுகுகின்ற, சங்கை-அச்சம், ஒவ-நீங்க, இருகூந்தல் கந்த மாலிகை-பெரிய கூந்தல் மலராகிய வாசனை பொருந்திய மாலை, தோய்தரு-அணிந்துள்ள, தண்டைசேர்-பரிசை தரித்த, கழல் ஈவது-திருவடிகளை எனக்கு தருவது, ஒரு நாள்-எந்நாளோ?

(வி-ரை) வெம்மை-விருப்பம் 'வெம்மை வேண்டல்' என்பது **தொல்காப்பிய சூத்திரம்** விரி கூடுங் குறிப்பை உணர்ந்தாரு சிறப்பு நோக்கத்தால் ஆடவருக்குப் பேரின்பம் பயத்தல் பற்றி அதனை 'இன்பசாகரம்' என்றார் மாமயிஞ் சினப்பிளவு கண்ணை ஒத்திருத்தலின் அதனை கணையோடு ஒப்பித்தார் கண் போது நோக்கத்தான் நோக்கப்பட்டாருக்குச் செய்யும் துன்ப மிகுதியினால் அதன் கொடுமையைச் சிறப்பிக்கக் கருதி அம்பென்று வாளாகூறாது 'வெந்து போன புராதன சம்பராரிபுராரியை வென்ற சாயகமோ' என்றார் மன்மதனைச் சிவபெருமான் நெற்றிக் கண்ணால் எரித்தாரென்பது உண்மையாயினும் அம்பால் எரித்தாரென்றுகூறியது எடுத்துக்கொண்டபொருளைச்சிறப்பிக்கும் பொருட்டுக் கூறும் கவிமரபு புராரி-திரிபுரங்களை எரித்தவர். இரண்டனுருபைப் பிரித்துக் கூட்டுக இங்ஙனம் பிரித்துக் கூட்டுவதற்கு விதி **பிரயோக விவேகத்திற்** காண்க. 'மாதர் யமனும் அவர் தம்மைவிழியே வங்கபாசம், பீநிதரும் அல்குற் பெருநரகம்' என்றார் **சிதம்பரசுவாமிகளும்**. 'மாதர் பயோதரம் என்றதற்குக் காதலை விளைவிக்கும் தனங்கள்

என்றுரைப்பினுமமையும் முழுகுதல்-மனஞ் செலுத்தி; பிறிதொன்றை நினையாதிருத்தல் சங்கை-அச்சம் கழல்-ஆகுபெயரான திருவடியை உணர்த்திற்று கழல் - வீரக்கொண்டை, பஞ்சபாதகம்-பொய் சொல்லல், கள்ளுண்டல், களவுசெய்தல், கொலை செய்தல், காமங் கொள்ளல். அமராவதி-இந்திரலோகம் பங்கயம் ஆசனர் - பங்கயாசனர். கேசவ -கேசி என்னும் அசுரனைக் கொன்றவர், அழகிய மயிரை உடையவர், சடாடவி, வடமொழிச்சந்தி. தாதகி- ஆத்தி, வார்த்தூரடிகள் புராணம் காண்க. (11)

12 தன்ன தனதன தனதன தனதன
தன்ன தனதன தனதன தனதன
தன்ன தனதன தனதன தனதன-தனதான.

களப மொழுகிய புளகித முலையினர்
கடிவு மமிர்தமும் விரவிய விழியினர்
கழுவு சரியமு கொழுகிய குழலினர் எவரோடும்

கலக மிடுகய லெறிகுழை விரகியர்
பொருளி லிளைஞரை வழிபடு மொழிகொடு
தளர விடுபவர் தெருவினி லெவரையும் நகையாடிப்

பிளவு பெறிலதி லளவள வொழுகியர்
நடையி லுடையினி லழகொடு திரிபவர் [வோடே
பெருகு பொருள்பெறி லமளியி லிதமொடு குழை

பிணமு மணைபவர் வெறிதரு புனலுணும்
அவச வனிதையர் முடுகொடு மணைபவர்
பெருமை யுடையவர் உறவினை விடவருள் புரிவாயே

அளையி லுறைபுலி பெறுமக வயிறரு
பசுவி னிரைமுலை யமுதுண நிரைமகள
வசவ னொடுபுலி முலையுண மலையுடன உருகாநீள
அடவி தனிலுள உலவைகள் தளிர்விட
மருள மதமொடு களிறுகள பிடியுடன
அகலவெளியுயர் பறவைக ணிலம்வர விரலசேரேழ்
தொளைகள விடுகழை விரலமுறை தடவிய
இசைகள பலபல தொனிதரு கருமுகில
சுருதி யுடையவ னெடியவன மனமகிழ மருகோனே
துணைவ குணதர சரவண பவநம
முருக குருபர வளரறு முகக்குக
துறையி லலையெறி திருநக ருறைதரு பெருமாளே.

(இ-ள்) அளையில-குகையில, உறைபுலி பெறுமகவு-வசிக்கின்ற புலி ஈன்ற குட்டி, அயிறருதரு பசுவின-நீருண்ணும பசுவினுடைய, முலை அமுது உண-முலையினின்று பொழியும் பாலைக குடிகக, நிரைமகள-பசுவின பெண் கன்று, வசவனொடு-ஆண்கன்றுடன, புலிமுலைஉண-புலியின் முலையை ஊட்ட, மலையுடன உருகா-மலையுடனே உருகுகின்ற, நீளஅடவிதனிலஉளஉலவைகள-நீணடகாடடினகண் உள்ள மரஙகள, தளிர்விட-தளிரகக, களிறுகள பிடியுடன் மதமொடு மருள - ஆண்யானைகள பெண்யானைகளுடன் மதஙகொண்டு மருட்சி அடைய, அகலவெளி உயிர பறவைகள-அகன்ற ஆகாயததே உயரபபறககின்ற பறவைகள், நிலம் வர-பூமியில வர, விரலசேர-விரலைச சேர்க்கின்ற, ஏழ் துளைகள் விடுகழை-எழுதுளைகள் விட்ட புல்லாஙகுழலை,

விரல்முறை தடவிய-விரலால் முறையே தடவின, இசைகள் பலபட-பலவகைப்பட்ட இராகங்கள், தொனிதரு-சப்திக்கின்ற, கருமுகில்-கரிய மேகம் போன்ற திருமேனியை யுடையவனும், சுருதி உடையவன்-வேதங்களால் துதிக்கப் பட்டவனும், நெடியவன்-உலகமெல்லாம் நீண்டவனுமாகிய திருமால், மனம் மகிழ மருகோனே-மனமகிழ்ச்சி அடைகின்ற மருமகனே!, துணைவ-எல்லோருக்கும் துணையா யிருப்பவனே!, குணதர - எண்குணங்களை உடையவனே!, சரவணபவ-சரவணப் பொய்கையில் அவதரித்தவனே!, நம முருக-வணங்கத்தக்க இளையவனே!, குருபர - மேன்மை பொருந்திய குருவாக இருப்பவனே!, வளர் அறுமுக-ஊழி தோறும் வளர்கின்ற ஆறு திருமுகங்களை உடையவனே!, குக-அடியார் மனக்குகையில் எழுந்தருளி யிருப்பவனே!, துறையில் அலை எறிதரு நகர் உறைதரு பெருமாளே-துறையிலே அலைகளை வீசுகின்ற அழகிய திருச்செந்தூர் என்னும் நகரத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமானே!, களபம் ஒழுகிய புளகித முலையினர்-கலவைச்சாந்து பூசிய குமிழ்ப்பை யுடைய முலைகளையும், கடுவும் அமிர்தமும் விரவிய விழியினர்-விஷமும் அமிர்தமும் கலந்த கண்களை யுடையவரும், கழுவு சரி புழுகு ஒழுகிய குழலினர்-தூய்மையான நல்ல மயிர்ச்சாந்து தடவிய கூந்தலை யுடையவரும், எவரோடும்-யாவரோடும், கலகமிடு கயல் எறி குழை விரகியர் -காமப் போரைச் செய்யும் கயல்மீனை வீசப்பட்ட குண்டலங்களை அணிந்த தந்திர முடையவர்களும், பொருளில் இளைஞரை-பொருளில்லாத வாலிபர்களை, வழிகொடு மொழிகொடு

தளர விடுபவர்-மொழியைக்கொண்டு பல சொற்களைப் பேசித் தளருமபடி விடுபவரும, தெருவினில எவரையும நகையாடி-தெருவிலே எல்லாரையும் புன்னகை செயது, பிளவு பெறில-அந்நங்கையில மைந்தா மனம வேறுபடுமாயின, அதில அளவு அளவு ஒழுகியா-அவாகள ஆசையின அளவுக்கு ஏற்றபடி நடபபவாகளும, நடையினில உடையினில - நடையாலும் உடையாலும, அழகொடு திரிபவா-அழகுடனே உலாவுபவருமை, பெருகு பொருள பெறில-மிகக பொருளைப பெறுல, அமளியில-படுக்கையில, இதமொடு குழைவோடு-மேன்மையுடனும் உருக்கததுடனும, பிணமும அணைபவா-பிணத்தை யும தழுவுகின்றவாகளும, எறிதரும புனல உணும அவச வனிதையா-உமிழகின்ற எச்சிலை உண்கின்ற தன்வசமற்ற வருமாகிய விலைமகளிரை, முடிகொடும அணைபவா-வீழ்ந்து சோகின்றவாகளாகிய, பெருமை உடையவா-இகழச்சியுடைய வாகளது, உறவினை-நட்பை, விட அருளபுரிவாய-கைவிடும் படி அருள செயவாயாக எ-று.

(வி-ரை) தம்மால விரும்பப்பட்ட ஆடவாகளுக்கு இன்பத்தையும் விரும்பபபடாதவருக்குத துன்பத்தையும் விளைத்தலபற்றி விழிகளை 'கடுவு மமிர்தமும விரவிய விழி யினா' என்றார். அன்பிப் பொதுநோக்கால கடுவையும் சிறப்பு நோக்கால அமிர்தத்தையும் ஒத்திருத்தலின், இவ் விரண்டு பொருள்களின் தன்மையும் கலந்தன விழிகள் என்றுரைப்பினும் அமையும் கடு-விஷம இக்கருத்தே பற்றித் திருத்தக்கதேவர்,

'சேலனைய சில்லரிய கண்டசிவந்து கருமணியம்
பாலகத்துட் பதித்தன்ன படியவாய் முனிவரையும்
மாலுறப்ப மகிழ்செய்வ மாண்பினஞ்சு மமிர்தமுமே [வே'
போலுணர்த்த பொருகயற்கண் செவியுறப்ப போந்தகன்றன

என்றருளிச் செய்வாராயினார் கண்களின் நீட்சியைச் சிறப்பிப்பார் 'கயலெறிகுழை' என்றார். பொருள் அளிப்பவர் யாவராயினும் அவருக்குப் பொய்யன்பு காட்டி, அவரது அறிவை மயக்கிக் கூடிப் பின் பொருளற்றவுடன் துரத்துவோராதலின், 'உர் வினை விடவருள் புரிவாயே' என்றனர். இத்தன்மையை,

இழிபவர் உயர்ந்தோர் மூத்தோர் இளையவர் கழியர் நோயர்
கழிபவர் யாவரேனுங் கண்வலைப்பட்டு நெஞ்சம் [துகாட்டிப்
அழிபவர் பொருள்கொண் டெள்ளுக்கெண்ணெய்போ லளந்
பழிபடும் போகம் விற்பார் ஆவணப் பண்பு சொல்வாம்

என வரூஉம் **திருவிளையாடற்புராணச்** செய்யுளானு மறிக. பெருமை, ஈண்டுச் சிறுமையைக் குறிப்பால் உணர்த்திற்று. குழலோசையின் இனிமையால் உருகித் தீயவிலங்குகளும் தம் பொல்லாங்கு ஒழிந்தன ஆதலின், 'புலிபெறு மக வயிற்றுப் பசுவினிறை முலையமுதுண' என்றார். மரங்கள் தளிர்த்தன என்றும் வானிற் செல்லும் பறவைகள் நிலத்தை நாடி வந்தன என்றும் கூறியது இசையின் சுவைமிகுதியை உணர்த்தற்பொருட்டெனக. களிறு - ஆண் யானை; மதக் களிப்பை யுடையது என்பது தாதுப்பொருள். பிடி-பெண் யானை. கருமுகில்-கரிய மேகம்போன்ற நிறத்தையுடைய திருமால்; அன்மொழித்தொகை. சரவணபவன்-சரவணம்

பவன்-நாணற்புல்லடர்ந்த காட்டில் அவதரித்தவன் என்பது பொருள். குகன்-அடியார் மனக்குகையில் தங்குபவன்; 'ஆருயிர்க் குகைதொறும் நிற்றலாற் குகன்' என்பதூஉம் காண்க. மலைக்குகையில் உறைபவன், குறிஞ்சிநிலக் கடவுளாதலின் குகன் என்றார். (12)

13 தந்ததன தான தந்ததன தான
தந்ததன தான-தனதான.

கன்றிவரு நீல குங்கும படீர
கஞ்சமலர் மேவு முலைகாட்டிக்
கந்தல்செறி கேச நின்றுகுலை யாமை
கண்களைகடை காட்டி விலைகாட்டி
நன்றுபொருள் ஈது வென்றுவிலை பேசி
நம்பிவிடு மாத ருடனாட
நெஞ்சுபுகு தேனை யங்கமது வாக
நைந்துவிடு மெய்கொண் டருள்வாயே
குன்றிமணி போல செங்கண் வரிநாகங்
கொண்டபடம் வீசு மணிகூர்வாய்
கொண்டமயி லேறிக் குன்றியடி மோதிச்
சென்றவடி வேலைக் கொடுபோர்செய்
மன்றலகமழ் பூகந் தெங்குதிரள் சோலை
மண்டுபட வாவி புடைசூழும்
மந்திரட மாடஞ் செந்திலநகர் மேவு
மந்தசுர காலப் பெருமாளே.

(இ-ள்.) குன்றிமணிபோல-குன்றிமணியின் நிறத்தை ஒத்த, செங்கண் வரிநாகம்-சிவந்த கண்களையும் வரிகளையுமுடைய பாம்பு, கொண்ட படம் வீசும் - பெற்றுள்ள

படத்தை ஆட்டுகின்ற, மணிகூர்வாய-அழகிய கூர்மையான வாயை, கொண்ட மயில் ஏறி-உடைய மயிலின்மேல் ஆரோகணித்து, குன்று இடிய மோதி-மலைகள் இடிந்து சரியும்படி தாக்கி, சென்ற வடிவேலை-குற்றம் நீங்கிய வடித்த வேற் படையை, கொடுபோர் செய-கொண்டு சண்டை செய்கின்ற, மன்றல் கமழ்-வாசனை மணக்கின்ற, பூகம் தெங்கு திரள் சோலை-பாக்கு மரங்களும் தென்னமரங்களும் திரண்ட சோலைகளும், வண்டுபடு வாவி புடைசூழ-வண்டுகள் தங்குகின்ற குளங்களும் நான்குபக்கங்களும் சூழ்ந்திருக்க, மந்தி நடமாடும் செந்தில் நகர்-குரங்குகள் கூத்தாடுகின்ற திருச்செந்தூர்த் தலத்தில், அந்த அசுரர்கால பெருமாளே-அந்த அசுரர்களுக்கு எமன்போன்ற பெருமாளே!, கன்றிவரும் நீலம்-மிக்க நீலநிறத்தையுடைய, குங்கும படீரம்-குங்குமமும் சந்தனமும் பூசிய, கஞ்சமலர் மேவும்-தாமரைமலரை ஒத்த, முலை காட்டி-ஸ்தனங்களைக் காட்டி, கங்குல் செறி கேசம்-இருட்டை ஒத்த கூந்தல், நின்று குலையாமை-நிலை பெற்று முடி குலையாதபடி, கண்கள் கடைகாட்டி-கண்களின் கடைகளைக் காட்டி, வில்காட்டி-வில்லை எடுத்துக் காட்டி, பொருள் நன்று தீது என்று விலை பேசி-இப்பொருள் நல்லது இப்பொருள் தீது என்று சொல்லி விலைபேசி, நம்பி விடும் மாதர் உடன்-விரும்பும் பெண்களுடனே, நாட்டம் நஞ்சுபுரி - அவர்கள் கண்களிலுள்ள விடம் போன்ற காமத்தை விரும்பி, தேரை அங்கம் அது ஆக-தேரையின் உடம்புபோலஉடம்புமெலிவடைந்து, நைந்து விடுவேனுக்கு

அருள்வாய்-வருந்துபவனாகிய அடியேனுக்குத் திருவருள் புரிவாய் எ-று.

(வி-ரை) மானைக் கன்றையும் வெல்லத்தக்க விழியாலும், தாமரை அரும்பை ஒத்த தனங்களாலும், மேகத்தை ஒத்த செறிந்த கூந்தலாலும் அறிவை மயக்கும் மாதரை நம்பி அவரது புல்லிய நலத்தை விரும்பிப் பாம்பின்வாய்த் தேரை போல வருந்துமென்னை அருள் புரிந்து ஆண்டருள்வாய் என்பது கருத்து. கன்று-மரபுப்பெயர். கங்குல்-இருள். மங்குல்-மேகம். குலையாமை-வினையெச்சம். குலை, யாமை மலர் சூடுமதனால்' என்றார், தம்மைப் புணைவதில் மிக்க வன்மையுடையார் என்பது தோன்ற. 'நன்று பெரிதாகும்' என்பது **தொல்காப்பியம்**. அறத்தையும் இன்பத்தையும் பயக்குஞ் சிறப்பிற்றென்பார், 'நன்று பொருள்' என்றார். இக்கருத்தே பற்றி, 'வடுவிலா வையத்து மன்னிய மூன்றன், நடுவண தெய்தின் இருதலையு மெய்தும்' என்ற சான்றோர் செய்யுளையுங் காண்க. குமரேச-குமரனாகிய ஈசனே, **அண்**மைவிளி. பூகம்-பாக்குமரம். 'வண்டு படுவாவி' என்றது மலர்கள் நிறைந்திருத்தல் பற்றி. நீலம், சிலீமுகத்தை உணர்த்திற்று. மனக்குறிப்பை உணர்த்துவதில் உடம்பினும் முகமும் முகத்தினும் கண்களும் கண்களினும் கடைக்கண்களும் சிறந்திருத்தலின், 'கண்கள் கடைகாட்டி' என்றார். இக்கருத்துப்பற்றியே **அருணந்திசிவனும்** 'ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே இடைக்கே எறிவிழியின் படுகடைக்கே' என்றார். (13)

14 தனத்தந் தானன தானன தானன
தனத்தந் தானன தானன தானன
தனத்தந் தானன தானன தானன-தனதான.

அனிச்சங் கார்முகம் வீசிட மாசறு
துவட்டபஞ் சானத டாகமவி டாமட
அனத்தின் தூவிகு யாவிய சீறடி மடமானார்

அருக்கன் போலொளி வீசிய மாமர
கதப்பைம் பூணணி வார்முலை மேல்முகம்
அழுத்தும் பாவியை ஆவியி டேறிட நெறிதாராய்

வினைச்சண் டாளனை வீணனை நீணிதி
தனைக்கண் டானவ மானநி மூடனை
விடக்கன் பாயநுகர் பாழனை யோமொழி பகராதே

விகற்பங் கூறிடு மோக விகாரனை
அறத்தின் பாலொழு காதமு தேவியை
விளித்துன் பாதுகை நீதர நானருள் பெறுவேனோ

முனைச்சங் கோலிடு நீல மகோததி
அடைத்தஞ் சாத இராவண னீளபல
முடிக்கன் றோர்கணை யேவுமி ராகவன் மருகோனே

முளைக்குஞ் சீதநி லாவொட ராவிரி
திரைக்கங் காநதி தாதகி கூவிள
முடிக்குஞ் சேகரர் பேரரு ளாலவரு முருகோனே

தினைச்செங் கானக வேடுவ ரானவர்
திகைத்தந் தோவென வேசணி யாகிய
திறற்கந் தாவளி நாயகி காமுறும் எழில்வேலா

சிறக்குந் தாமரை யோடையின் மேடையில்
நிறக்குஞ் சூலவளை பாலமணி வீசிய
திருச்செந் தூவரு சேவக னேசுரர் பெருமாளே.

(இ-ள்) முனை சங்கு ஒலிடும்-முகத்தையுடைய சங்கு
கள் சப்திக்கின்ற, நீலம் மகோததி அடைத்து-நீலநிறம்
பொருந்திய பெரிய சமுத்திரத்தைக் கட்டி, அஞ்சாத
இராவணனை-யாருக்கும்பயப்படாத இராவணனுடைய, நீள
பலம் முடிக்கு-மிக்க வலிமையுடைய முடியைக் கொய்யும்
பொருட்டு, ஓர் கணை ஏவும்-ஒப்பற்ற அம்பைச் செலுத்தும்,
இராகவன் மருகோனே-இராமபிரானுடைய மருமகனே!,
முளைக்கும் சீத நிலாவொடு-தோன்றுகின்ற குளிர்ந்த பிறை
யுடனே, அராவிரி-பாம்புகளையும், விரிதிரை கங்காநதி-
விரிந்த அலைகளையுடைய கங்கையாற்றையும், தாதகி கூவி
ளம்-ஆத்திமலரையும் வில்வத்தையும், முடிக்கும் சேகர-
முடிக்கின்ற சிவபெருமானது, பேர் அருளால் வரு முரு
கோனே-மிக்க கருணையினாலே தோன்றின முருகனே, தினை
செம் கானகம் வேடுவர் ஆனவர்-தினை விளைகின்ற சிவந்த
காட்டிலே வாழும் வேடர்கள், திகைத்து அந்தோ என-
மயங்கி ஐயோ என்று சொல்ல, கணி ஆகிய திரள் கந்தா-
வேங்கைமரமாகிய கந்தனே!, வளிநாயகி காமுறும் எழில்
வேலா-வள்ளிநாயகி விரும்பும் அழகையுடைய வேலனே!
சிறக்கும் தாமரை ஓடையில்-பூக்களில் உயர்ந்த தாமரை
பூத்த ஓடைகளிலும், மேடையில்-மேட்டு நிலங்களிலும்,
நிறக்கும் சூலவளை-நிறம் பொருந்திய கருவுற்ற சங்குகள்,
பால்மணி வீசிய-வெள்ளிய முத்துக்களை வீசும், திருச்செந்
தூர் வருசேவகனே-திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும்
தொழிலையுடையவனே!, சுரர் பெருமானே-தேவர்களுக்கு

நாயகனே', அனிச்சம்-அனிச்சமலரின் மேலும், காமுகம் வீசிட-பஞ்சு கொட்டும் வில்லால் அடித்ததனால், மாசு அறு துகள் பஞ்சு-குற்றம் நீங்கிய தூளாகிய பஞ்சினமேலும், அனம் தடாகம் விட்ட-குளிர்ச்சியாகிய குளத்தைவிட்டு அகலாத, மட அனத்தின் தூவி-இளமை பொருந்திய அன்னத்தின் இறகினமேலும், குலவிய சிறு அடி - விளங்குகின்ற சிறிய அடியையுடைய, மடம் மாதர்-மடப்பம் பொருந்திய பெண்களுடைய, அருக்கன்போல் ஒளி வீசிய-சூரியனைப் போல ஒளி வீசுகின்ற, மா மரகதம் பைம்பூண்-சிறந்த மரகதத்தாலாகிய பசுமையான ஆபரணம் விளங்குகின்ற, வார் முலை மேல்-கச்சணிந்த முலையின்மேல், முகம் அழுத்தும் பாவியை-முகத்தை அழுத்துகின்ற பாபச் செயலுடையவனும், ஆவி ஈடேறிட நெறி பாரா-உயிர் கடைத்தேறும் வழியைக் கவனியாத, வினை சண்டாளனை-தீவினையுடையவனாகிய சண்டாளனும், வீணனை-பயனற்றவனும், நீள் நிதிதனை கண்டு-மிகுந்த செல்வத்தைப் பார்த்து, ஆணவம் ஆன மூடனை-அகங்காரம்கொண்ட பெரிய மூடனும், விடக்கு அன்பாய நுகர் பாழனை - பிற உயிர்களின் இறைச்சியை அன்புடனே உண்ணும் பாழானவனும், ஓர் மொழி பகராது-ஒரு வார்த்தையும் எதிர் சொல்லாமல், விகற்பம் கூறிடு மோக விகாரனை - மன மாறுதலைச் சொல்லும் மோகவிகாரமுடையவனும், அறத்தினால் ஒழுகாத மூதேவியை - தருமத்தின் வகையில் நடவாத மூதேவியுமாகிய அடியேனை, நீவிளித்து தேவரீர் அழைத்து, உன் பாதுகைதர-உனது மிதியடியைக்கொடுக்க, நான் அருள்பெறுவேனோ-நான் அருளை அடைவேனோ? எ-று.

(வி-ரை) மாதர் அடியின் மென்மையை உணர்த்தும் பொருட்டு 'அனிச்சம் சீறடி' என்றார். 'அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம்' என்றார் **திருவள்ளுவனாரும்**, 'தடாகம் விடா மடவனம்' என்றது அன்னத்தின் சிறப்பை உணர்த்தற்பொருட்டு என்க. சிறுமை + அடி = சீறடி எனப் புணர்ந்தது, பண்பின் ஈறு கெட்டு ஆதி நீண்டது 'ஈறுபோதல் இடையுகரம் இய்யாதல்' எனுஞ் சூத்திரம் காண்க. மாதர்-பெண்கள். மாதர் உறுப்புக்கள் பலவற்றுள்ளும் முன்னர்த் தோன்றிக் கண்களை மயக்குவன ஆதலப்பற்றி, 'பூணணிவார் முலைமேல முகம் அழுத்தும் பாவியை' என்றனர். இதனை **மணிவாசகப் பெருமான்**,

'பூணிற் பொலிகொங்கை யாவியை
யோவியப் பொற்கொழுந்தைக்
காணிற் கழறலை கண்டிலை
மென்றோட் கரும்பினையே' என்றும்,

'நீங்கரும் பொற்கழற் சிற்றம்பலவர் நெடுவிசும்பும்
வாங்கிருந் தெண்கடல் வையமு மெய்தினும் யான்மறவேன்
தீங்கரும்பும் மமிழ்துஞ் செழுந்தேனும் பொதிந்து செப்புங்
கோங்கரும்புந் தொலைத் தென்னையுமாட் கொண்ட கொங்
[கைகளே'

என்றும் அருளிச் செய்தமையாலும், 'விசும்பும் நிலனும் ஒருங்குபெறுவரினும் இக்கொங்கைகளை மறந்து அந்நலங்கண் முயங்குமா றில்லையென்னத் தன்னின்றி யமையாமை கூறியவாறாயிற்று' என்று **பேராசிரியர்** கூறிய உரையாலும்

உணர்க. இட்டேறிட-விகாரம், ஈட்டேறிட. வினைச்சண்டாளன்-தீவினைசெய்பவர். வீணன்-பொய்யின்பம் விரும்பி அறம் பொருளின்பம் வீடு என்னும் உறுதிப்பொருள்களை அடையாது கழிப்பவன்.

'தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார் மற்றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு'

என்று **திருவள்ளுவரும்** அருளிச் செய்தார்.

மிக்க செல்வம் உண்டாயவழி அறிவு மயங்குதல் இயல்பாதலின், 'நீனிதிதன்னைக் கண்டாணவமான நிர்மூடன்' என்று கூறினர். இக்கருத்தே பற்றி, 'செல்வமென்னும் அல்லலிற் பிழைத்தும்' என்றும், 'வாழ்வெனு மையல்' என்றும், 'செல்வம் வந்துற்றகாலைத் தெய்வமுஞ் சிறிது பேணார்' என்றும் பெரியோர் பலரும் கூறினர். 'விடக்கு அன்பாய் நுகர்பாழனை' என்றார், ஓருயிரின் இறைச்சியை உண்போர் இறைவன் அருளை இழத்தலின்

'தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்
எங்ஙன மாளு மருள்'

என்று **திருவள்ளுவ நாயனார்** திருவாய் மலர்ந்தருளியது காண்க. மூதேவி-மூதேவி என்பதன் விகாரம். மகோததி-கடல், மகா உததி-வடமொழிச்சந்தி. இராகவன்-இரகுவம்சத்தில் தோன்றினவன்; தத்திதாந்த நாமம். முளைக்குஞ் சீத நிலா-இளம்பிறை.

'முளைக்குஞ் ....சேகரர்'—சிவபெருமான். கூவிளம்-வில்வம்; 'கங்கையு மதியும் பாம்புங் கடுக்கையும் முடிமேல

வைத்த அங்கணா' என்பதனாலும் பிறவற்றாலும் அறிக. சிவ பெருமான் தக்கன் சாபத்தால் கலைகுறைந்த சந்திரனைத் தம் சடைமுடியில் சூடிக்கொண்டு அருள்செய்தார் என்பது புராணவரலாறு. பிறையைச் சூடுதல் ஞானசொரூபன் என்னும் உண்மையை விளக்கும்பொருட்டு என்பர் பட்டினத் தடிகளார்.

'தூமதி சடைமிசைச் சூடுதல் தூநெறி
ஆமதி யானென வமைத்த வாறே'

கங்கையின் செருக்கை யடக்கி உயிர்களைக் காக்கும் பொருட்டு அதனை ஒரு சிறு திவலையாக்கிச் சடையி லணிந் தார். இதனை,

'மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி
சலமுகத்தா லவன்சடையிற் பாயுமது வென்னேடி
சலமுகத்தா லவன்சடையிற் பாயாளே லுலகெல்லாம்
பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாஞ் சாழலோ'

என வரூஉம் திருவாசகத்தானும் அறிக.

கணி-வேங்கைமரம். கந்தன்-ஸ்கந்தன் என்னும் வட சொற்றிரிபு; வளி-வள்ளி, இடைக்குறை.

நிறக்கும்-நிறம் என்னும் பெயரடியாகப் பிறந்த பெய ரெச்சம். சுரா-சுராபானமுடையோர். (14)

## திருப்பழநிமலை. (திருவாவினன்குடி)

15 தனனதன தான தந்த தனனதன தான தந்த
தனனதன தான தந்த-தனதான.

கருவினுரு வாகி வந்து வயதளவி லேவ ளர்ந்து
கலைகள்பல வேதெ ரிந்து மதனாலே

கரியகுழன் மாதா தங்கள் அடிசுவடுமார் புதைந்து
கவலைபெரி தாகி நொந்து மிகவாடி
அரகரசி வாய வென்று தினமுநினை யாம லின்று
அறுசமய நீதியொன் றும் அறியாமல்
அசனமிடு வார்கள் தங்கள் மனைகடலை வாசல் நின்று
அனுதினமு நாண மின்றி யழிவேனோ
உரகபட மேல்வ ளர்ந்த பெரியபெரு மாள ரங்கர்
உலகளவு மால்ம கிழ்ந்த மருகோனே
உபயகுல தீப துங்க விருதுகவி ராஜ சிங்க
உறைபுகலி யூரி லன்று வருவோனே
பரவைமனை மீதி லன்று இருபொழுது தூது சென்ற
பரமனரு ளால்வ ளர்ந்த குமரேசா
பகையசுரர் சேனை கொன்று அமரர்சிறை மீளவென்று
பழநிமலை மீதி னின்ற பெருமாளே

(இ-ள்) உரக படம் மேல் - ஆதிசேஷனது படத்தின் மேல், வளர்ந்த-திருக்கண்வளரும், பெரிய பெருமாள் அரங்கர்-பெரியபெருமாளாகிய அரங்கநாதப்பெருமானும், உலகு அளவு மால் - மூவுலகங்களையும் இரண்டு திருவடிகளால் அளந்தருளியவருமாகிய திருமால், மகிழ்ந்த-மகிழும், மருகோனே-மருகனே!, உபயகுல தீப-இரண்டு குலங்களுக்கும் விளக்குப்போன்ற, விருதுகவி ராஜ சிங்க-விருதைப்பெற்ற கவிராஜசிங்கம் என்பவர், உறை புகலியூரில்-வசித்த சீகாழியிலே, அன்று வருவோனே-அக்காலத்தில் ஞானசம்பந்தராக அவதரித்தவனே!, பரவை மனைமீதில் அன்று-பரவை நாச்சியாருடைய திருமாளிகையில் அக்காலத்தில், இரு

பொழுது - இரண்டுமுறை, தூதுசென்ற - சுந்தரமூர்த்தி சுவாமிகளின் பொருட்டுத் தூதாகச்சென்ற, பரமன் அருளால்-சிவபெருமான் திருவருளால், வளர்ந்த குமரேசா-வளர்ந்த குமரேசனே, பகை அசுரர்-பகைவர்களாகிய அசுரர்களுடைய, சேனை கொன்று-சேனைகளை அழித்து, அமரர் சிறைமீள-தேவர்கள் சிறையினின்று மீளும்படி, வென்று-வெற்றிகொண்டு, பழநிமலை மீதில் - பழநிமலைமேல், நின்ற பெருமாளே-நிலைபெற்றுத் தங்கிய பெருமாளே, கருவின் உருவாகி வந்து-தாயின் வயிற்றில் உருவத்தைப் பெற்று வெளிவந்து, வயது அளவிலே வளர்ந்து-வயது ஏறும் அளவிலே வளர்ந்து, கலைகள் பல தெரிந்து-கலைஞானங்கள் பலவற்றை உணர்ந்து, மதனூலே-மன்மதனூலே, கரிய குழல் மாதர்-கருமையான கூந்தலையுடைய பெண்கள், தங்கள் அடிசுவடு-தங்களது அடியினது தழும்பு, மார்பு உதைந்து-மார்பிற் பொருந்தப்பெற்று, கவலை பெரிது ஆகி-வருத்தம் மிகுந்து, நொந்து-மனமழிந்து, மிகவாடி-அதிகமும் வாட்டமுற்று, அரகர சிவாய என்று-அரகர சிவாய என்று வாயாற் சொல்லி, தினமும் நினையாமல் நின்றும்-ஒருநாளும் எண்ணுதொழிந்தும், ஆறுசமய நீதி - ஆறுசமயங்களின் ஒழுக்கங்கள், ஒன்றும் அறியாமல்-ஒன்றும் தெரிந்துகொள்ளாமல், அசனம் இடுவார்கள் தங்கள் - சோறுதருவோருடைய, மனைகள்-வீடுகளின், தலைவாசல் நின்று-வாயில்களில் நின்றுகொண்டு, அனுதினமும்-நாடோறும், நாணம்இன்றி-வெட்கமில்லாமல், அழிவேனோ-அழிந்துபோவேனோ எ-று.

(வி-ரை) 'மாதர் தங்கள் அடிசுவடு மார்புதைந்து' என்றது ஊடல் காலத்து நிகழ்ச்சியை, ஊடுதல் இன்பத்தை மிகுத்தலின் மகளிர் ஊடுதல் இயல்பு. அஃதின்றேல் காமம் சிறவாது இது பற்றியே 'துனியும் புலவியு மில்லாயிற் காமங் கனியுங் கருக்காயு மற்று' என்றார் திருவள்ளுவரும். அறுசமயம்-ஆறுவகைப்பட்ட சமயங்கள் அவை அகச்சமயம் சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம் என்பன புறச்சமயம், உலோகாயதம், பௌத்தம், ஆருகதம், மீமாஞ்சம், மாயாவாதம், பாஞ்சராத்திரம் என்பன.

உரகபடமேல் வளர்ந்த பெரியபெருமாள்-ஆதிசேஷன் மீது அறிதுயில் கொள்ளும் திருமால். வளர்ந்த - கண் வளர்ந்த, இறந்தகாலத்தாற் கூறியது வழுவமைதி. நீயே திருஞான சம்பந்தராக அவதரித்தனை என்பார் 'விருதுகவி ராஜசிங்கம உரைபுகலி யூரிலன்று வருவோனே' என்றுரைத்தனர். பரவையின் ஊடல் தீர்க்கச் சிவபெருமான் தூது சென்ற வரலாற்றைப் பெரிய புராணத்துள் காண்க. அடியார் பொருட்டுச் செய்யத்தகாத செயலையும் செய்த பெருமான் மகனாதலின், 'கருணை மிகவுடையை' என்பார், 'பரமனருளால் வளர்ந்த குமரேசா' என்றார். சிவபெருமான் தூது நடந்தமையை,

'நள்ளிருள் யாமத்து நாவலர் பெருமான்
தள்ளாக் காதல் தள்ளுறக் கம்ம
ஒருகா லல்ல திருகால் நடந்தும்
எளியர்க் கெளிய ராயினர்.'

எனவரூஉம் **குமரகுருபர சுவாமிகள்** திருவாக்கான் உணர்க.

பழநி என்பது பொதினி என்பதன் மரூஉ (15)

16 தனதன தத்த தானன தனதன தத்த தானன
தனதன தத்த தானன—தனதான.

கதிரைபவி லக்கு மாதர்கள் புதியவி ரதன பூஷண
கனதன வெற்பு மேலமிகு மயலான
கவலைம னத்த னாகினு முனதுபா சித்த மாகிய
கனதன மொத்த மேனியு முகமாறும்
அதிபல வஜ்ர வாகுவும் அயிலுநின் வெற்றி வேலதும்
அரவுபி டித்த தோகையு முலகேழும்
அதிரவ ரற்று கோழியு மடியர்வ ழுத்தி வாழ்வுறும்
அபிநவ பத்ம பாதமும் மறவேனே
இரவிகு லத்தி ராசத மருவியெ திர்த்து வீழ்கடு
ரணமுக சுத்த வீரிய குணமான
இளையவ னுக்கு நீண்முடி அரசது பெற்று வாழ்வுற
இதமொ டளித்த ராகவன் மருகோனே
பதினொரு ருத்தி ராதிகள் தபனம விளக்கு மாளிகை
பரிவொடு நிற்கு மீசுர சுரலோக
பரிமள கற்ப காடவி அரியளி சுற்று பூவுதிர்
பழநிம லைக்குள் மேவிய பெருமாளே.

(இ-ள்) இரவி குலத்து-சூரிய குலத்துக்குரிய, இராசதம் மருவி-இராசத குணத்தைப் பொருந்தி, எதிர்த்து வீழ்கடு இரணமுக - பகைவரை எதிர்த்து விரும்புகின்ற மிக்க போர்முனையில், சுத்த வீரிய குணம் ஆன - சுத்த வீரிய

குணத்தைக் கொண்ட, இளையவனுக்கு-இளையவனாகிய பரதனுக்கு, நீண் முடி-நீண்ட முடியையும், அரசு அது - அரசாட்சியையும், பெற்று வாழ்வு உற-பெற்று வாழும்படி, இதமொடு அளித்த-அன்புடன் கொடுத்த, ராகவன்-இராமபிரானுடைய, மருகோனே-மருமகனே!, பதினொரு உருத்திரர்கள்-பதினொரு உருத்திரர்களது, தபனம் விளங்கும் மாளிகை-பிரகாசம் விளங்குகின்ற கோவிலில், பரிவொடு நிற்கும் அசுரர் - அன்போடு நின்றருளும் தலைவனே!, சுரர் லோகம்-தெய்வலோகத்தில், பரிமள கற்பக அடவி-வாசனை பொருந்திய கற்பகச்சோலையிலுள்ள, அரி அளி-வரிபொருந்திய வண்டுகள், சுற்று பூ உதிர - சூழ்கின்ற மலர்கள் சொரிகின்ற, பழநிமலைக்குள் மேவிய பெருமாளே - பழநிமலையில் பொருந்திய பெருமாளே!, கதியைவிலக்கும்-மோக்ஷத்தைத் தடுக்கின்ற, மாதர்கள்-பெண்களது, புதிய - புதுமையான, இரத்ந பூஷண - இரத்தின ஆபரணங்கள் அணியப்பட்ட, கனத்தன வெற்பு மேல்-பெரிய முலையாகிய மலைகளின்மேல், மிகு பயலான-மிக்க ஆசை மயக்கங்கொண்ட, கவலை மனத்தன் ஆகிலும் - கவலையையுடைய நெஞ்சையுடையேனாலும், உனது பிரசித்தமாகிய-தேவரீருடைய கீர்த்திபெற்ற, கனத்தனம்-மாற்றுயர்ந்த பொன்னை, ஒத்த மேனியும் - ஒத்திருக்கும் திருமேனியையும், முகம் ஆறும்-ஆறு திருமுகங்களையும், அதிபலம்-மிக்க வன்மையையுடைய, வஜ்ரவாகுவும்-வயிரமணிபோன்ற தோள்களையும், அயில் நுனை-கூரிய முனையையுடைய, வெற்றிவேல் உம்-வெற்றிவேலையும், அரவு

பிடித்த-பாம்பைப்பற்றிய, தோகையும - மயிலையும், உலகு ஏழும்-ஏழுலகங்களும், அதிர-அதிரும்படி, அரற்று கோழியும்-ஒலிக்கின்ற சேவலையும், அடியார் வழுத்தி-அடியார்கள் துதித்து, வாழ்வுறும்-தங்கள் வாழ்வை அடைகின்ற, அபிநவம் பத்மபாதமும்-புதிய தாமரைமலரையொத்த திருவடிகளையும், மறவேன் ஒருகாலத்தும் மறக்கமாட்டேன் எ-று.

(வி-ரை) ஆடவரைத் தம்மயலில் அகப்படுத்தி, வீட்டைவதற்குரிய நல்வினைகளைச் செய்யவொட்டாமல் தடுத்து, அவர் பெறுதற்குரிய நற்கதியை இழக்கும்படி செய்வோர் மகளிராதலின், 'கதியை விலக்கு மாதர்கள்' என்றார்.

இது குறித்தே கலவியிற் பெரிய நபர்,

தாமகேது புலிக்கொன்று தோன்றிய
காம மேகலை மங்கைய ரால்வரும்
காம மில்லை யெனிற்கடுங் கேடெனும்
நாம மில்லை நரகமு மில்லையே.

என்று கூறுவாராயினர்.

கனதன வெறுப்பு-மலைகளை யொத்த பாரமான ஸ்தனங்கள். கனதன மொத்த மேனி - மேன்மையான பொன்னை யொத்த மேனி. வஜ்ரவாகு - வைரம்போல உறுதியான தோள்கள். வேலதும் என்பதில் அது, பகுதிப் பொருள் விகுதி. தோகை-மயிலுக்கு ஆகுபெயர். அபிநவபத்மபாதம்-பார்க்குந்தோறும் புதுமையான அழகுடன் விளங்கும் தாமரைபோன்ற திருவடி. அன்றி அபிநவம் என்பதைத் தாமரைக்காக்கி அன்று பூத்த தாமரை எனலுமாம். 'பெறு

தறகரிய அரசபோகத்தை இளமையிலே தன தம்பியாகிய பரதனுககு மிகக மகிழசசியுடன தநதவன என்பார், 'இளையவனுககு நீணமுடி அரசதுபெறறு வாழவுற இதமொடளிதத ராகவன்' என்றா

கறபக + அடவி = கறபகாடவி எனறுயது வடமொழித தீரககசநதி. 'கறபகாடவிபா பொலிபதமமாதெனத தோறறிய குமரி' எனக குமரகுருபரசுவாமிகள கூறியதூஉஙகாணக. அரசது எனபுழியும அது பகுதிபபொருள விகுதி (16)

17 *தானனந தனனத தானனந தனனத
தானனந தனனத-தனதான

காரணிந தவரைய பாரடைந துவினைக
காதனெஞ் சயாத தடுமாறி
கானரம புதிரத தோலவழும புறபொயக
காயமொன றுபெறத தடியேனுந்
தாரணங குகுழற கூரணிந தவிழிச
சாபமொன றுநதற கொடியாதம்
தாளபணிநதவா றேளவிநம் பிமிகத
தானமெலிந துவிடத தருமோதான
சூரர்துண் டுபடப போாகடந துதொழத்
தோயமுஞ சுவறப பொருவேலா
தூய்மைகொண டகுரத தோகைநின றபுனச
சூழபெருங் கிரியிற றிரிவோனே
ஆரணன கருடத் தாரணன் புகழ்தற
காலமுண் டவருக குரியோனே
ஆலையம் பழனச சோலையின புடைசுற்
றுவிநன் குடியிற் பெருமாளே.

(இ-ள்) சூரர் துண்டுபட-சூரர்கள் வெட்டுப்பட, போர் கடந்து-சண்டையில் வென்று, தொழ-அனைவரும் வணங்க, தோயமும் சுவற-கடலும் வற்றும்படி, பொரு வேல்-போர் செய்யும் வேற் படையை யுடையவனே', தூய்மைகொண்ட-பரிசுத்தம் வாய்ந்த, குறக்கோதை - குறப் பெண்ணாகிய வள்ளியம்மையார், நின்ற புனம்-வாழ்ந்திருந்த தினைப்புனம், சூழ்பெருங் கிரியில்-சூழ்ந்த பெரிய மலையில், திரிவோனே-திரிபவனே', ஆரணன்-பிரமனும், கருடத்தாரான் - கருடனைக் கொடியாகத் தரித்தவனாகிய திருமாலும், புகழ்தற்கு-தனைப் புகழும்பொருட்டு, ஆலம் உண்டவருக்கு-விஷத்தை உட்கொண்டவராகிய சிவபெருமானுக்கு, உரியோனே - உரிய திருக்குமாரனே', ஆலயம் கோயில், பழனம் சோலையின் புடை-வயல்களையுடைய சோலையின் பக்கத்தை, சுற்று-சுற்றிக்கொண்டிருக்கின்ற, ஆவினன் குடியில் - திருவாவினன்குடி என்னும் திருத்தலத்தே வீற்றிருக்கும், பெருமாளே-பெருமாளே', கார் அணிந்த-மேகத்தைத் தரித்த, வரை-மலைகளையுடைய, பார் அடைந்து-பூமியில் தோன்றி, வினை காதல்-இருவினையால் ஏற்பட்ட ஆசையினால், நெஞ்சு அயர் தடுமாறி-மனம் தளர்ந்து தடுமாற்றம் அடைய, கால் நரம்பு-காலையும் நரம்பையும், உதிரம் தோல் - இரத்தத்தையும் தோலையும், வழும்பு உற-நிணத்தையும் பொருந்த, பொய்காயம் ஒன்று-பொய்யான உடம்பு ஒன்றை, பொறுத்து-சுமந்து, அடியேனும்-அடியவனாகிய யானும், தார் இணங்கு குழல்-பூமாலை பொருந்திய கூந்தலையும், கூர் அணிந்த விழி - கூர்

மையை அழகாகப் பெற்ற கண்களையும், சாபம் ஒன்று நுதல் - வில்லையொத்த நெற்றியையும் உடைய, கொடியார் - பூங்கொடியை ஒத்த பெண்களுடைய, தாள்பணிந்து - பாதங்களை வணங்கி, பொன் தோள் விரும்பி - அழகிய தோள்களை விரும்பி, மிக மெலிந்துவிட - மிகவும் மெலிவடைவது, தகுமோ - பொருந்துமோ என்று.

(வி-ரை) 'கானரம் புதிரத் தோல் வழும்புறு பொய்க் காயம்' என்றார் தனித்தனியே பார்த்தால் அருவருக்கத் தக்க நரம்பு உதிரம் தோல் முதலியவற்றால் ஆக்கப்பட்டுச் சின்னுடைகளில் அழிவதாதலின், இதனைத் தாங்குதல் மிக்க துன்பம் என்பார், 'பொறுத்து' என்றார். இதனை,

குடருங் கொழுவுங் குருதியு மென்பும்
தொடரு நரம்பொடு தோலும் — இடையிடையே
வைத்த தடியும் வழும்புமா மற்றிவற்றுள்
எத்திறத்தா ளீர்ங்கோதை யாள்

என்னும் நாலடிச் செய்யுளானும்,

'ஆறுலாமிந்த உடம்பொடிருத்தல் மிக்க வருவருப்பே' எனவரும் பட்டினத்தார் திருவாக்கானும்,

'மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை'

என்னுந் திருவள்ளுவர் திருவாக்கானும் உணர்க.

இக்கருத்தே பற்றியன்றே தாயுமானவரும்,

'காகமொடு கழுகலகை நாய்நரிகள் சுற்றுசோறிடு
துருத்தியைக்

காலிரண்டு நவவாசல் பெற்றுவளர் காமவேள்
நடன சாலையை
மோகவாசை முறியிட்ட பெட்டியை மூலமலமிகுந்
தொழுகு கேணியை
மொய்த்து வெங்கிருமி தத்துகும்பியை முடங்கலார்
கிடைசரக்கினை
மாகவிந்தை தனு மின்னை யொத்திலக வேதமோதிய
குலாலனார்
வனைய வெய்யதடி காரனார் யமன் வந்தடிக்குமொரு
மட்கலத்
தேகமான பொய்யை மெய்யெனக் கருதியைய வைய
மிசை வாடவோ
தெரிவதற்கரிய பிரமமே அமல சிற்சுகோதய
விலாசமே’

என்று அருளிச்செய்வாராயினர்.

கொடியார் என்றசொல் பூங்கொடிபோல மென்மை யாகிய இயல்புடையவர் என்றும் கொடிய குணங்களையுடை யார் என்றும் இருபொருள் படுமாறு காண்க. தாள் பணி தல்-அவர் தம்பால் அன்பு கொண்டு அவர் விரும்பிய எவற்றையும் தமக்குத் தீது நோக்காது செய்தல். பொற்றோள்- அழகிய தோள்; பொன்போலும் அருமையான தோள், பொன்னைப்போலக் கட்கினிதாய மனத்தைக் கவரத்தக்க தோள் எனப் பலவழியாலும் பொருள் கொள்க. தருமோ என்பதிலுள்ள ஓகாரம் எதிர்மறைப்பொருட்டு. ‘தோய முஞ்சுவறப் பொரும்வேலா’ என்றது சூரபதுமன் முருக வேளுடன் போர்செய்ய மாட்டாது கடல்வடிவந் தாங்கி

நின்றபோது, அதனைத் தன் சத்தி வடிவினதாகிய வேலை ஏவிச் சுவறச்செய்தனர் என்றநிகழ்ச்சியை உட்கொண்டது.

மனமொழி மெய்களான தூய்மை யுடையவர் வள்ளி நாயகியாராதலின் 'தூய்மை கொண்ட குறத்தோகை' என்றருளிச் செய்தனர். தூயமனத்துடன் தம்பால் பேரன்பைச் செலுத்திநின்ற அம்மைக்கு அருள் செய்யவேண்டி அவர் வாழ்ந்திருந்த தினைப்புனத்தே பலகாலுஞ் சென்றுழன்று, தாம் அன்பு கனிந்த அடியவருக்கு எளியரின் எளியராதலை உணர்த்தினனென்பார், 'தோகைநின்ற புனச்சூழ் பெருங் கிரியிற் றிரிவோனே' என்றார். ஆரணன் - பிரமன், வேதங்களை யுணர்ந்தவன். கருடத்தாரணன் - கருடக் கொடியை யுடைய திருமால்

தேவர்களும் அசுரர்களும் கூடி ஒருகாலத்தில் திருப்பாற்கடலைக் கடைய அமிர்தமும் விஷமும் பிறந்தன. விடம் மேலோங்கித் தேவர்களை அழிக்கத் தலைப்பட்டதை உணர்ந்த தேவர்கள் அஞ்சி நடுங்கிச் சிவபெருமான் திருவடிகளில் விழுந்து பணிந்துநிற்க, அவர் அவ்விஷத்தை உடனே எடுத்து விழுங்கித் தேவர் துயரந் தீர்த்தனர். அது கண்ட பிரமன் திருமால் முதலிய அனைவரும் அவரது அளவிலாற்றலைப் புகழ்ந்து வாழ்த்தினர் என்பதாம். இதனை,

கோலால மாகிக் குரைகடல்வா யன்றெழுந்த
ஆலால முண்டா னவன்சதுர்தா னென்னேடீ
ஆலால முண்டிலனே லன்றயன்மா லுள்ளிட்ட
மேலாய தேவரெல்லாம் வீடுவர்காண் சாழலோ.

என்னும் மணிவாசகர் அமுதவாக்கானும் அறிக. திருவாவினன்குடி பழனி. (17)

## திருவேரகம். (சுவாமிமலை)

18 தனனதன தனனதன தனனா தனத்ததன
தனனதன தனனதன தனனா தனத்ததன
தனனதன தனனதன தனனா தனத்ததன - தனதான

குமரகுரு பரமுருக குகனே குறச்சிறுமி
கணவசர வணநிருதா கலகா பிறைச்சடையா
குருவெனவு முரையுதவு மயிலா வெனத்தினமு முருகாதே

குயின்மொழிநன மடவியர்கள் விழியா லுருக்குபவர்
தெருவிலன வரதமன மெனவே நடப்பவர்கை [வேறுருக
கொளுமவர்க ளுடைமை மனமுடனே பறிப்பவர்க ளனை

தமதுவச முறவசிய முகமே மினுக்கியர்கள்
முலையிலுறு துகிலசரிய நடுவீதி நிற்பவர்கள்
தனமிலியர் மனமுறிய நழுவா வுழப்பியர்கண் வலையாலே

சதிசெய்தவ ரவாமகிழ அணைமீது ருக்கியர்கள்
வசமொழுகி யவரடிமை யெனமாத ரிட்டதொழில்
தனிலுழலு மசடனையு னடியேவழுத்தவரு டருவாயே

சமரமொடு மசுரர்படை களரீ தெதிர்த்தபொழு
தொருநொடியி லவர்களபடை கெடவே லெடுத்தவனி
தனினிருதர் சிரமுருள ரணதூள் படுத்திவிடு செருமீதே

தவனமொடு மலகைநட மிடவீர பத்திரர்கள்
அதிரநிண மொடுகுருதி குடிகாளி கொக்கரிசெய [கோடி
தசையுணவு தனினமகிழ விடுபேய நிரைத்திரைகள் பல

திமிதமிட நரிகொடிகள கழுகா டரத்தவெறி
வயிரவர்கள் சுழலவொரு தனியா யுதத்தைவிடு
திமிரதின கரவமரா பதிவாழ்வு பெற்றுலவு குருகோனே

திருமருவு புயனயனொ டயிராவ தக்குரிசில
அடிபரவு பழநிமலை கதிகாம மு ருவளா
சிவசமய அறுமுகவ திருவே ரகததிலுறை பெருமாளே.

(இ-ள) அசுரா படை சமரமொடு களமீது எதிாதத பொழுது-அசுராகளுடைய சேனை போாககளததிலே எதிர்ததபோது, ஒரு நொடியில அவாகள படைகெட - ஒருகணப பொழுதில அவாகளுடைய சேனை அழியவும, வேல எடுதது - வேறபடையை எடுதது, அவனி தனில-பூமியில, நிருதா சிரம உருள-அவுணாகளுடைய தலைகள உருணடு விழவும, ரணதூள படுததிவிடு செருமீது-சணடைக களததில தூளாககும போாமீது, தவனமொடு-தாகததோடு, அலகை நடமிட-பேயகள கூததாடவும, வீர புததிராகள அதிர-வாள வீராகள அதிரும்படி, கொககரி செய-கொககரிககினற, நிணமொடு குருதி குடிகாளி-கொழுபபுடனே இரததததைக குடிககினற காளியானவள, தசை உணவுதனில மகிழ-இறைசசியாகிய ஆகாரததில மகிழ்சசி அடைய, விடுபேய நிரைதிரள்கள-விடுகினற பேயின் கூட்டஙகள, பலகோடி-பலகோடிகள், திமிதமிட-கூததாட, நரி கொடிகள கழுகு ஆட-நரிகளும் காகஙகளும் கழுகுகளும மாமிசததைத தினறு ஆட, ரத்தவெறி வயிரவாகள சுழல-இரததவெறிகொணடு வயிரவாகள சுழற்சியடைய, ஒரு தனி ஆயுததைவிடு-ஓா ஒபபறற ஆயுதத்தைச செலுத்தும, திமிரம் தினகர-ஆன்மாக்களது அக இருளை ஒழிக்கும் சூரியனே! அமரர்பதி-தேவேந்திரன்,

வாழ்வு பெற்று உலவும் முருகோனே-வாழ்வடையும்படி விளங்குகின்ற முருகனே!, திரு மருவு புயன்-திருமகளைச் சேரும் தோள்களையுடைய விஷ்ணுமூர்த்தியும், அயனொடு-பிரமதேவனுடன், அயிராவதம் தரிசில-ஐராவதம் என்னும் பட்டத்து யானையையுடைய இந்திரனும், அடிபரவு-திருவடிகளை வணங்குகின்ற, பழநிமலை கதிர்காமம் உற்று-பழநிமலையிலும் கதிர்காமத்திலும் பொருந்தி, வளர் சிவசமய-வளர்கின்ற சைவசமயத்துத் தலைவனே!, அறுமுகவ-ஆறு திருமுகங்களை யுடையவனே!, திருவேரகத்தில் உறை பெருமாளே-திருவேரகத்தில் தங்குகின்ற பெருமானே!, குமர குருபர - குமரனே குருபரனே!, குகனே - குகனே!, குறசிறுமி கணவ - வள்ளிநாயகனே!, சரவண - சரவணனே!, நிருதர் கலகா - அசுரர்களுக்குத் துன்பஞ் செய்பவனே!, பிறை சடையர் - பிறையைத் தரித்த சிவபெருமான், குரு என - குரு என்று, நல உரை உதவும் மயிலா - நல்ல புகழ்ச்சி வார்த்தையைக் கூறும் மயில் வாகனனே!, என தினமும் உருகாது-என்று ஒவ்வொருநாளும் மனமுருகாமல், குயில் மொழி நன்மடவியர்கள்-குயிலைப்போன்ற இனிய மொழியையும் நல்ல மடப்பத்தையும் உடையவர்களும், விழியால் உருக்குபவர்-கண்களால் நெஞ்சைக் கரைப்பவர்களும், தெருவில் அனவரதம் அனம் என நடப்பர்-தெருவில் எப்பொழுதும் அன்னம் போல நடப்பவர்களும், நகைகொளும் அவர்கள் உடைமை-சிரிக்கின்ற ஆடவர்களுடைய பொருளை, உடனே பறிப்பவர்

கள்-உடனே அபகரிப்பவர்களும், அனைவோரும-எத்தனை யோரும, தமது வசம உற-தம வசப்படும்படி, வசிய முகம் மினுக்கியார்கள்-வசீகரத்தையுடைய முகமினுக்கை யுடையவர்களும், முலையில் உறு துகில் சரிய-தனத்தின்மேல தரித்திருக்கும ஆடைவிழும்படி, நடுவீதி நிற்பவர்கள்-நடுத்தெருவில் நிற்பவர்களும, தனம இலியர்-பொருளில்லாதவர்களுடைய, மனம முறிய-மனம முறியும்படி, நழுவர் உழப்பியர்-நழுவவிட்டு உழப்புவர்களும, கணவலையால்-கணநேரத்திலேயே அகப்படுத்தும் வலையினால். சதி செய்து அவர் அவர் மகிழ-வஞ்சனை செய்து அவரவர் மகிழும்படி, அணைமீது உருக்கியர்கள்-பஞ்சணையின்மேல் உருக்குபவர்களுமாகிய விலைமாதர்களுடைய, வசம ஒழுகி-வசத்தில் ஒழுகி, அவர் அடிமை என-அவர் அடிமை யென்று சொல்லும்படி, மாதர் இட்ட தொழில் தனில் உழலும-பெண்கள் இட்ட தொழிலில் உழலகின்ற, அசடனை-வீணனை, உன அடிவழுத்த அருள் தாராய-உன அடியை வாழ்த்த அருள் செய்வாய் எ-று.

(வி-ரை) முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானுக்குப் பிரணவோபதேசஞ் செய்த பெருமையுடையராதல் பற்றி, 'பிறைச்சடையர் குருவென நலுரையுதவு மயிலர்' என்றருளிச் செய்தனர்.

அவ்வரலாறு முருகப்பெருமான் பிரமதேவனைப் பிரணவத்தின் பொருளைச் சொல்லும்படி கேட்க, அவன் அது தெரியாது மயங்கினன். அப்போது அவன் தலையில் குட்டி அவனைச் சிறைவைத்தனர். இதனை யறிந்த சிவ

பெருமான் தம்மகனாரை வருவித்து, 'பிரணவப்பொருளை எனக்குத் தெளியச் சொல்வாயாக' எனப் பெருமானைக் கேட்டனர். அதற்கு அவர், 'பிரணவம் குரு சீடக் கிரமத்தில்தான் உபதேசிக்கப்படல் வேண்டும், அவ்வாறு நீரும் மாணவராக இருப்பின், நாம் ஆசிரியனாகி உபதேசிப்போம்' என மொழிந்தனர். அதற்குச் சிவனார் உடன்பட்டு அங்ஙனே பிரணவப்பொருளைக் கேட்டனர்.

குயில்மொழி நன் மடவியர்கள்-குயில்போலும் இனிய குரலையுடைய இலக்கண மமைந்த இளமாதர். கண்களின் அழகாலும் பிறழ்ச்சியாலும் ஆடவருடைய மனத்தை உருக்குதலினாலும், கண்களைப்போல உடம்பாட்டுக் குறிப்பை உணர்த்துவன வேறின்மையானும் அறிவு விளங்கித் தோன்றும் சிவந்த உறுப்பாதலினாலும் கண்களே மனத்தை உருக்கும் தன்மையன ஆதலின், 'விழியா லுருக்குபவர்' என்று கூறினர் இக்கருத்துக்களை, 'நாட்ட மிரண்டும் அறிவுடம் படுத்தற்குக் கூட்டி யுரைக்குங் குறிப் புரையாகும்' என்று **தொல்காப்பியனாரும்**, 'கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள் என்ன பயனுமில' என்று **திருவள்ளுவரும்**,

ஈசற்கியான்வைத்த அன்பினகன்றவன் வாங்கியவென்
பாசத்திற்காரென்றவன் தில்லையினொளி போன்றவன்தோ
பூசத் திருநீறென வெளுத்தாங்கவன் பூங்கழல்யாம் [ள்
பேசத் திருவார்த்தையிற் பெருநீளம் பெருங்கண்களே.

என்று **மாணிக்கவாசக சுவாமிகளும்** அருளிச்செய்த வாற்றான் அறிக.

திருமருவு புயன்-திருமால். ஐராவதக் குரிசில் - இந்திரன். கதிர்காமம், இலங்கையின்கண்ணுள்ள ஒரு சுப்பிரமணிய தலம். திருவேரகம்-சுவாமிமலை. (18)

**19** தனன தனத்த தனன தனத்த
தனன தனத்த-தனதான.

மருவே செறித்த குழலார் மயக்கி
மதனு கமத்தின விரகாலே
மயலே யெழுப்பி யிதமே யருத்த
மலைநேர் முலைக்கு ளுறவாகி
பெருகாத லுற்ற தமியேனை நித்தல
பிரியாது பட்ச மறவாதே
பிழையே பொறுத்து னிருதாளி லுற்ற
பெருவாழ்வு பற்ற அருள்வாயே
குருவா யரற்கு முபதேசம் வைத்த
குகனே குறத்தி மணவாளா
குளிர்கான மிகுத்த வளர்பூக மெத்து
குடகா விரிக்கு வடபால்வாழ்
திருமால் தனக்கு மருகா உமைக்கொர்
சிறுவா கரிக்கும் இளையோனே
திருவே ரகத்தி லுறைவா யரக்கர்
சிரமே துணித்த பெருமாளே.

(இ-ள்) குருவாய - ஆசாரிய மூர்த்தியாய, அரற்கும்-சிவபெருமானுக்கும, உபதேசமவைத்த குகனே-உபதேசஞ் செயதருளிய முருகனே', குறத்திமணவாளா-வள்ளியம்மையாரின கணவனே', குடகாவிரிக்கு-மேற்கே யிருந்துவரும் காவேரி யாற்றுக்கு, வடபால வாழ - வடதிசையிலே வாழ்கின்ற, திருமால தனக்கு மருகா - விஷ்ணுமூர்த்தியின மருகனே', உமைக்கு ஓர சிறுவா-உமாதேவியாருக்கு ஒரு புதலவனே', கரிக்கும இளையோனே யானை முகவராகிய விநாயகருக்கு இளையவனே', திருவேரகத்தில உறைவாய-திருவேரகம் என்னும் ஊரில வசிப்பவனே', அரக்கர சிரம துணித்த-அசுரர்கள தலைகளை வெட்டிய, பெருமாளே-பெருமானே', மருவே செறித்த- வாசனை மிகுந்த, குழலார-கூந்தலையுடைய பெணகள, மயக்கின-காம மயக்கத்தால, மதன ஆகமத்தின-மனமதனுக்குரிய நூலின, விரகாலே-தந்திரத்தாலே, மயல எழுப்பி-ஆசையை உண்டாக்கி, இதழ வாய் அருந்தி-நன்மையுடனே இதழமுதத்தை ஊட்ட, மலைநோ-மலைபோன்ற, முலைக்குள-ஸ்தனங்களுக்குள, உறவு ஆகி-பொருந்தி, பெருகாதல உற்ற-பெரிய ஆசையைக் கொண்ட, தமியேனை-தனியவனாகிய என்னை, நித்தல-தினந்தோறும், பிரியாத பட்சமுடனே-நீஙகாத விருப்பத்தோடு, என பிழை பொறுத்து-எனது குற்றங்களைப பொறுத்தருளி, இருதாளின உற்ற-இரண்டு திருவடிகளிலும பொருந்திய, பெருவாழவு பெற-பெரிய வாழ்வை அடைவதற்கு, அருள்வாய-அருள செய்வாயாக எ-று.

(வி-ரை) மதனாகமம் - இன்பநூல். இதழுறுத்தல் - அதரபானஞ் செய்வித்தல். மலை, தனங்களுக்கு வடிவால் உவமை. பெருங்காதல் என்பாலது பெருகாதல் என ஆயிற்று எதுகை நோக்கி. குளிர்கா - குளிர்ச்சி பொருந்திய சோலை. குடகாவிரி - மேற்றிசையிலுள்ள காவிரியாறு. மாதர்பால் வைத்த ஆசையை ஒழித்து, உன் திருவடி வாழ்வைப் பெறுதற்கு அருள்புரிவாய் என்பார், 'பிழையே பொறுத்து இரு தாளிலுற்ற பெருவாழ்வு பற்ற அருள்வாய்' என்றார். இரு தாளிலுற்ற பெருவாழ்வு - திருவடியில் இரண்டறக் கலத்தலாகிய பேரின்பப் பெருவாழ்வு. கரி-யானை, ஈண்டு யானை முகத்தையுடைய விநாயகரைக் குறித்தது, ஆகுபெயர்.

திருமால் மருகன் என்றது முருகப்பெருமான் தேவிமாராகிய தெய்வயானையாரும் வள்ளிநாயகியாரும் திருமாலின் புதல்வியாராதலைப் பற்றி, இதனைப் பின்வரும் **தணிகைப்புராணச்** செய்யுளானும் அறிக.

செந்திரு மணந்த கேள்வ னுயிர்த்தரு டெய்வக் கற்பிற்
சுந்தரி யமுத வல்லி யென்பவர் சுடர்வேற் செங்கை
மைந்தனை மணப்ப வுன்னி மலர்விரி சரவணத்து
முந்துருந் தவங்க ளாற்ற முருகனுங் கணமிக் கூறும் (19)

20 தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன-தனதான

கோமள வெற்பினை யொத்த தனத்தியர்
காமனை யொப்பவர் சித்தமு ருக்கிகள்
கோவை யிதழ்க்கனி நித்தமும் விற்பவர் மயில்காடை

கோகில நூபுர வத்திடு குக்குட
    ஆரணி யப்புளவ கைக்குரல கப்புவார்
    கோலவி ழிக்கடை யிட்டும ருட்டிகள் விரகாலே

தூம மலர்ப்பளி மெத்தைப டுப்பவர்
    யாரையு மெத்தி மனைக்கு ளழைப்பவர்
    சோலைவ னக்கிளி யொத்தமொ ழிச்சியர் நெறிகூடா

தூசுநெ கிழ்த்தரை சுற்றியு டுப்பவர்
    காசுப றிக்கம றித்துமு யக்கிகள்
    தோதக வித்தைப டித்துந டிப்பவ ருறவாமோ

மாமர மொத்துவ ரிக்கு ணெருக்கிய
    சூரனை வெட்டிநி ணக்குட லைக்கொடி
    வாரண மெச்சவ ளித்த அயிற்குக கதிர்காம

மாமலை யிற்பழ நிப்பதி யிற்றணி
    மாகிரி யிற்றணி கைக்கிரி யிற்பரி
    மாகிரி யிற்கிரி சுற்றிவ ளைத்திடு மலைவாயில்

ஏமவெ யிற்பல வெற்பினி னற்பதி
    ஞாலுல கத்தினி லுற்றுறு பத்தர்கள்
    ஏத்துநி னைத்தது மெத்தவ ளித்தரு ளிளையோனே

ஏரக வெற்பெனு மற்புத மிக்கசு
    வாமிம லைப்பதி மெச்சிய சித்தஇ
    ராசத லட்சண வுத்தமி பெற்றருள் பெருமாளே.

(இ-ள்) மாமரம் ஒத்து - மாமரத்தை ஒத்த வடிவங் கொண்டு, உவரிக்குள் - கடலினுள் ஒளித்தது, நெருக்கிய சூரனை - துன்பப்படுத்திய சூரனை, வெட்டி நிணம் குடலை-

வெட்டிக் கொழுப்பு வாய்ந்த குடலை, கொடி வாரணம் மெச்சும் - கொடியாகிய கோழி பாராட்டும்படி, அளித்த அயில் குக-கொடுத்தருளிய வேற்படையையுடைய குகனே!, கதிர்காம மாமலையில - கதிர்காமத்தின் சிறந்த மலையிலும், பழநி பதியில-பழனித்தலத்திலுள்ள, தனி மா கிரியில-ஒப்பற்ற பெரிய மலையிலும், தணிகை கிரியில-தணிகை மலையின் மேலும், பரமா கிரியில - திருப்பரங்குன்றத்திலும், திரை சுற்றி வளைத்திடும் அலைவாயில-அலைகள்சுற்றிச் சூழ்ந்துள்ள திருச்செந்தூரிலும், ஏமம் எயில பல வெற்பினில - பாது காவலையுடைய மதில்கள் பல சூழ்ந்த மலைகளின்மேலும், நல பதினாலு உலகத்தினில-நல்ல பதினான்கு உலகங்களிலும், உற்று உறு பத்தர்கள் - பொருந்தி வாழும் அடியார்கள், நினைத்தது எதும் - எண்ணிய எல்லாவற்றையும், மெத்த அளித்தருள இளையோனே-மிகவும் கொடுத்தருளும் இளையவனே!, ஏரகம வெற்பு எனும் - திருவேரகமலை யென்று சிறப்பித்துச் சொல்லப்படும், அற்புதமிக்க சுவாமிமலை பதி-வியப்பு மிகுந்த சுவாமிமலை எனனும் க்ஷேத்திரத்தை, மெச்சிய-விரும்பிய, சித்த - திருவுள முடையவனே!, இராசத லக்ஷண உத்தமி பெற்றருள் பெருமாளே-இராஜ லக்ஷணங் களையுடைய உமாதேவியார் பயந்தருளிய பெருமாளே!, கோமளம் வெற்பினை ஒத்த தனத்தியர் - இளைய குன்றை யொத்த ஸ்தனங்களை யுடையவரும், காமனை ஒப்பவர் சித்தம் உருக்கிகள் - மன்மதனை ஒத்த அழகுடைய ஆடவர்களின் மனத்தை உருக்கிறவர்களும், கோவை இதழ்கனி

நித்தமும் விற்பவர்-கோவைப்பழத்தை நிகர்த்த அதரத்தை ஒவ்வொரு நாளும் விற்பவர்களும், கோகிலம்-குயிலும், நல்ல புறவு தொடு-நல்ல புறவும், குக்குடம்-கோழியும், ஆரணியப்புள்-காட்டிலுள்ள பறவைகளும் ஆகிய இவற்றின், வகை குரல் - வகைப்பட்ட குரல்களை, கற்பவர் - கற்றவர்களும், கோலம் விழி கடையிட்டு மருட்டிகள்-அழகிய கடை விழியினால் மயக்குகின்றவர்களும், மா விரகால் - தந்திரச் செயலால், தூமம் மலர் பளி மெத்தை படுப்பவர்-வாசனைப் புகையூட்டிய மலர்கள் பரப்பிய படுக்கையாகிய மெத்தையில் படுப்பவரும், யாரையும் எத்தி மனைக்குள் அழைப்பவர்-எப்படிப்பட்டவர்களையும் ஏமாற்றி வீட்டுக்குள் அழைப்பவர்களும், சோலை வனம் கிளி ஒத்த மொழிச்சியர்-சோலையிலே வாழும் அழகிய கிளியையொத்த சொல்லையுடையவர்களும், நெறிகூடா தூசு நெகிழ்த்து-செவ்வையாகக் கட்டப்படாத ஆடையைத் தளர்த்தி, அரை சுற்றி உடுப்பவர்-இடுப்பைச் சுற்றிக் கட்டுபவரும், காசு பறிக்க மறித்து முயக்கிகள்-பொருளை அபகரிக்க மீண்டு மீண்டும் அணைப்பவர்களும், தோதகம் வித்தை படித்து நடிப்பவர் உறவு ஆமோ - வஞ்சகத்தை ஒரு வித்தையாகக் கற்றுப் பழகி நடிக்கின்றவர்களுமாகிய விலைமாதரது சம்பந்தம் ஆகுமோ? (ஆகாது) எ-று.

(வி-ரை) கோமளம் - இளமை. காமனை ஒப்பவர் என்றது அவனைப்போலக் கண், முகம், நகை முதலியவற்றால் நெஞ்சத்தை உருக்கி மயலை யூட்டுபவர் ஆதலின் என்க. கோவை இதழ்க் கனி - கோவைக் கனிபோன்ற இதழ்;

கோவைப் பழம் செந்நிறத்தால் இதழுக்குவமை; ஆதலின் வண்ணவுவமை 'வினைபயன் மெய்யுரு' என்ற நான்கினை உருவின்கண் அடங்கும். ஒவ்வொருநாளும் ஒவ்வொருவருக்கு விற்று மீண்டும் தம்முடையதாகக் கொள்பவராதலின், 'நித்தமும் விற்பவர்' என்றார். புட்குரல் எழுப்பல் கலவிக் குறிப்பென இன்னூலார் கூறுதலின், 'மயிலகாடை . . . . ஆரணியப் புள்வகைக் குரல் கற்று' தோந்தனர் எனக. தூம மலர்ப் பளி மெத்தை - வாசனைப் புகையூட்டி மலர்தழப் பரப்பிய படுக்கை, அதிலும் பொருள் வருவாய் இருந்தாலன்றிப் படுத்துக் கண்ணுறங்குதலுஞ் செய்யார் என்பது தொனிக்கப் 'படுப்பவர்' என்றார்.

'சோலையனக் கிளியொத்த மொழிச்சியர்'என்றார் கிளி போலும் இனிய சொற்களைப் பேசுவதாலும், கிளி சொற்கள் கற்றுப் பேசுதல்போல மரபுக் கேற்றபடி சொற்களைக் கற்றுச் சொல்லுவதாலும், கிளியின் மொழிகள் பொருள் பயவாது உள்ளீடில்லாவாறு அவை மெய்ம்மையில்லாத பொய்யுரையாதலானுமெனக. கொடி-காகம். அடியார்கள் நினைந்த வடிவோடு விரைந்து சோந்து, அவர் வேண்டுவனவற்றை வேண்டியவாறு அளித்தருளும்பொருட்டுப் பல மலைகளிலும் எழுந்தருளி யிருப்பவராதலின், 'கதிர்காம மாமலையில் . . . அளித்தருள் இளையோனே' என்றார்.

இராசத லக்ஷண உத்தமி - இரஜோகுண வடிவான சத்தி என்னலுமாம்; சூரனை யழிக்கும்பொருட்டு அசசத்திற்கு மகனைத் தோன்றினர் என்க. (20)

## குன்றுதோருடல்

21 தநதன தானதான தநதன தானதான
தநதன தானதான-தனதான

வஞசக லோபமூடா தமபொரு ளூாகளதேடி
மஞ்சரி கோவைதூது பலபாவின
வணபுகழ பாரிகாரி யெனறிசை வாதுகூறி
வநதியா போலவீணி லழியாதே
செஞசர ணாதகீத கிணகிணி நீலமாலை
திணடிறல் வேலமயூர முகமாறும்
செநதமிழ நாளுமோதி யுயநதிட ஞானமூறு
செஙகனி வாயிலோாசொ லருளவாயே
பஞசவ னீடுகூனு மொனறிடு தாபமோட
பைநதமிழ வாதுகூற சமணமூகர்
பணபறு பீலியோடு வெஙகழு வேறவோது
பணடித ஞானநீறு தருவோனே
குஞ்சர சாலமேவு பைமபுன மீதுலாவு
குனறவா சாதிகூடி வெறியாடி
குமபிடு நாடுவாழவு தநதவ ரோடுவீறு
குனறுதொ றாடனமேவு பெருமாளே.

(இ-ள்) பஞசவன-பாணடியனது, நீடு கூனும-நீணட முதுகின வளைவும, ஒனறிடு தாபம-பொருநதிய சுரபபிணியும், ஓட-ஒழியவும, வாதுகூற-வாதஞ செயகினற, சமண் மூகா - சமணாகளாகிய ஊமைகள, பண்பு அறு-குணமற்று, பீலியோடு மயிலிறகோடு, வெம்கழு ஏற-கொடியகழுவிலே ஏறவும், பைநதமிழ - செழுமையான தமிழப பாசுரஙகளை,

ஓத பண்டித-திருவாயமலர்ந்தருளிய பழுத்த புலமையுடையவனே!, நீறு தருவோனே - திருவெண்ணீற்றைத் தருபவனே!, குஞ்சரம் சாலை மேவும் - யானைகள் வாழும் சாலைகள் கூடிய, பைம்புனம் மீது - பசுமையான கொல்லை நிலங்களில், உலாவு குன்றவர் சாதி - திரிகின்ற வேடர் கூட்டங்கள், கூடி வெறி ஆடி - சேர்ந்து வெறியாட்டம் ஆடி, கும்பிடும்-வணங்க, நாடு வாழ்வு தந்து-உலகவாழ்வை அளித்து, அவரோடு-அவர்களுடன், வீறு - பெருமையாற் சிறக்கும், குன்று தோறு ஆடல் மேவும்-மலைகளிலெல்லாம் திருவிளையாட்டைச் செய்யும், பெருமாளே-பெருமானே!, வஞ்சகம் லோபம் மூடர்-வஞ்சகமும் கொடாமையும் உடைய, மூடர்-மூடர்களுடைய, பொருள்-பொருளுக்காக, ஊர்கள் தேடி-ஊர்களைத் தேடி மஞ்சரி கோவை தூது - மஞ்சரி கோவை தூது என்னும் பிரபந்தங்களை, பலபாவின-பலவகைப்பட்ட பாட்டுக்களினால், வண்புகழ்-வளவிய புகழையுடைய, பாரி காரி என்று-பாரியென்றும் காரியென்றும், இசைவாதுகூறி-புகழை வாதித்துச் சொல்லி, வந்தியர் போல - புகழ் பாடுவோர்போல, வீணில - வீணாக, அழியாது - அழியாமல், செம் சரண்-சிவந்த திருவடிகளையும், நாத கீத கிண்கிணி-ஓசையையுடைய கிண்கிணியையும், நீல மாலை - நீலோற்பல மாலையையும், திண் திறல் வேல்-உறுதியும் வலிமையுடைய வேலையும், மயூரம்-மயிலையும், முகம்-ஆறும்-ஆறு திருமுகங்களையும், செந்தமிழ்-செழுமையான தமிழ்ப்பாட்டுக்களால், நாளும்-ஒவ்வொரு நாளும், ஓதி உய்ந்திட பாடிப் பிழைக்க,

ஞானம் ஊற-மெய்யுணர்வு சுரக்கும், செங்கனி வாயில்-சிவந்த கோவைக் கனியை ஒத்த திருவாயால், ஓர் சொல்-ஒரு சொல்லை, அருள்வாய்-அருளிச் செய்வாயாக. எ-று.

(வி-ரை) மஞ்சரி-மாலை. ஒரு தலைவனைக் குறித்து ஒழுங்காகப் பாடப்படும் ஒரு வகை நூல். கோவை-அகப் பொருட் டுறைகளை யுடைத்தாய பல கிளவிக் கொத்துக் களுடன் நானூறு கட்டளைக் கலித்துறைச் செய்யுட்களால் ஒரு தலைவன்மேல் பாடப்படும் ஒருவகை நூல். தூது-தூதுரைப்பதாக அன்னம், நாரை, கிளி முதலியவற்றை முன்னிலைப் படுத்திப் பாடப்படுவது. வண்புகழ்-வளவிய புகழ்; மிக்க புகழ் என்றபடி, பாரி-கடையெழுவள்ளல்களில் ஒருவன்; வள்ளல்-வரையாது கொடுப்பவன், வள்ளலியல்பு இன்ன தென்பதை பின்வரும் **கல்லாடத்தானு** முணர்க

'வாட்ட மில் அருளுங் கேட்டமில் குணனும்
அசையா நிலையும் நசையா மனனும்
வெகுளாப் பண்பும் விடாப்பே ரன்புஞ்
செவ்வியின் மீஇ யெவ்வெவர் எவ்வகை
வேட்டனர் அவ்வகை விருப்பொடு குறிப்பின்
வரையா தீதல் வள்ளல் தன்மை'

பாரி கொடையின் பெருமையினை,

'நல்லவுந் தீயவு மல்ல குவியிணர்ப்
புல்லிலை யெருக்க மாயினு முடையவை
கடவுள் பேணே மென்னா வாங்கு
மடவர் மெல்லியர் செல்லினுங்
கடவன் பாரி கைவண் மையே' என்ற **கபிலர்** பாட்டானும்,

'பாரியே என்று கூறினுங் கொடுப்பாரிலை' என்ற சுந்தரமூர்த்தி நாயனார் திருவாக்கானும் உணர்க.

காரி-கடையெழு வள்ளல்களில் ஒருவன். இவன் ஔவையார்பால் பேரன்பு வாய்ந்தவன். இவன் புகழை,

'கடல் கொளப்படா அடலுநர் ஊக்கார்
கழல்புனை திருந்தடிக் காரிநின் னாடே
அழல் புறந்தரூஉ மந்தணர் தவ்வே
வீயாத் திருவின் விறல்கெழு தானை
மூவரு ளொருவன் துப்பா கியரென
ஏத்தினர் தரூஉங் கூழே நுங்குடி
வாழ்த்தினர் வரூஉம் இரவலர் அதுவே
வடமீன் புரையுங் கற்பின் மடமொழி
அரிவை தோள் அளவு அல்லதை
நினதென இலைநீ பெருமி தத்தையே.'

என்ற கபிலர் திருவாக்கானும் அறிக.

## ஔவையார் பாடிய வெண்பா

பாரி பறித்த பறியும் பழையனூர்க்
காரி கொடுத்த கனைகட்டும்—சேரமான்
வாராயோ என்றழைத்த வாய்மையும் இம்மூன்றும்
நீலச்சிற் றாடைக்கு நேர்

வஞ்சகர், உலோபிகள், மூடர்கள் ஆகிய இவர்களிடம் சென்று அவர்களுக்கு இல்லாத குணங்களையும் உள்ளன வாகப் புனைந்தும், மிக்க புகழுடைய பாரியென்றும் காரி யென்றும் பொய்யாகப் புகழ்ந்து பஞ்சரி, கோவை, தூது என்னும் பலவகைப்பட்ட நூல்களைக் கூறியும் வீணே

யழிநது போகாதபடி நீா ஒரு சொலலருள செயவீராக எனறு வேண்டினுரெனக இம்மானுடரைப புகழநது இம்மைபபொருள் தானும இலலாமலும மறுமைபபயனு மிலலாது ஒழிவதினும் உன திருவடியை ஏததித தொழுவேனுயின இமமை மறுமை வீடு பேறுகளை அடைதல திணணமெனபாா 'வீணி லழியாதே .ஓா சொலலருளவாயே' எனறருளிச செயதாா அஙஙனம நான செயவத கு உன திருவருள இனறி யமையா தெனபாா 'ஓா சொலலருளவாய' என்ருா.

பாணடியன கூனுடன் சுரநோய தீாநதுயயவும சமணா கழுவேறவும் திருநீறறைத தநதருளும பெருமானே எனருா, திருஞான சமபநத சுவாமிகள முருகபபெருமான அவதாரமே எனபது உணாதநற பொருட டெனக. மதுரையில அரசு புரிநது வநத கூனபாணடியன சமணா சொலவலையிற சிககிச சைவசமயததை விடடுச சமணசமயம புகுநது அசசமய வொழுககததைக கைபபறறி வருவானுயினன் அது காணபபொருத கோபபெருநதேவி மஙகையாககரசியாா ஞானசம்பநதரை மநதிரி குலசசிறையாா வாயிலாக வருவித்தனா. அசசமபநதா அடியாா கூடடததுடன எழுநதருளியிருநத மடததில சமணா தீககொளுவினா அதுகண்ட சம்பந்தா,

'செய்யனே திருவாலவாய மேவிய
ஐயனே யஞ்சலென்றருள செய்யெனைப
பொய்யரா மமணா கொளுவுஞ சுடா
பையவே சென்று பாணடியறகாகவே.'

என்னும் தொடக்கத்தையுடைய ஒரு பதிகம் பாடி அத்தீப பாண்டியனைச் சுரநோயாகப் பற்றும்படி செய்தனர். பாண்டியன் சுரத்தின் வெம்மையை யாற்றாது சமணரை வருவித்து மணி மந்திர மருந்து வகைகளையும் பிரயோகிக்கச் செய்தனன். அப்போதும் அந்நோய் தீராமையால் தன் மனைவியார் சொற்படி ஞானசம்பந்தரை வருவித்து, அவர் அருளை வேண்டினன். அவர்,

மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்திலுள்ளது நீறு
செந்துவர்வாயுமை பங்கன் திருவாலவாயான் திருநீறே'

என்னும் முதற் செய்யுளையுடைய திருநீற்றுத் திருப்பதிகம் கட்டளையிட்டார். உடனே சுரநோய் ஒருபக்கம் தீர்ந்து பாண்டியன் இன்புற்றான். மற்றொருபக்கம் நோய் நீங்கும்படி சமணர் எத்தனைய பாடுபட்டும் முடியவில்லை. பின்னர் வேந்தன் வேண்டுகோட்கு இரங்கி மற்றொரு பக்கமும் நோய் நீங்கும்படி அருள் புரிந்தார். நோய் முற்றும் நீங்கப்பெற்றுப் பாண்டியன் இன்பமடைந்தான். பின் சமணர் சம்பந்தப்பெருமானுடன் வாதுபுரிந்து தோற்றுக் கழுவேறினர். இதன் விரிவைத் திருத்தொண்டர் புராணத்துட் காண்க.

வெறியாடுதல் வேடர்கள் ஒருங்கு கூடி முருகவேள் அருள் சுரக்கும்படி வழிபாடு செய்து, தெய்வம் வந்ததாக

ஆடுதல இதனை, 'வெறியயா வெஙகளதது வேனமகன்' என்ற தானும்'

'வேலனை றைஇய வெறியயா களனும' எனவரும திருமுருகாறறுப படையானும அறிக

அரிபிரமாதி தேவாகட்கும அரியவனாய இருநதும் இழிகுலமும் இழிதொழிலும உடையவராய வேடாகட்கும எளிவநது அருளபுரியும் பெருஙகருணையுடையன எனபாா

'குமபிடநாடிவாழவ தநதவரோடுவீற்று'

என்றனா.

குன்றுதோறாடல-மலைகளதோறும அருள விளையாட்டைப புரிதல. அருள விளையாட்டு-பஞசகிருததியம (21)

## தென்கடம்பன்றுறை

22 தனனதன தநதனந தநதனந தநதனந
தனனதன தநதனந தநதனந தநதனந
தனனதன தநதனந தநதனந தனதான

புணரியும ஙஙகனம் புஞசுரும புஙகருங
கயலினொடு கெண்டையுஞ சண்டனுங கஞசமும
புதுநிலவு ருநதியுந துஞசுநஞ சுமபொருப பெறிவேலும

பொருவெனவி கனறகன றஙகுமிங குஞசுழன
றிடந்தகடைசிவநதுவஞ சமபொதிந திஙகிதம
புவியினோா முனபயினறமபொனின் கமபிதக குழைமோதி

குணலையொடு மிந்தரியஞ சஞசலங கணடிடும
படியமாபு ரிநதருஞ சஙகடஞ சநததங [பால்
கொடுமைசெயது சங்கொடுஞ சிங்கிதங் குஙகடைககணினா

குலவுபல செந்தனந் தந்துதந் தின்புறுந்
தரிவிதர் அணங்களுங் கந்தநின் செம்பதங்
குறுகுமவ் வகைபந் தியுஞ் சந்தியுந் தொந்தமற் றமைவேனோ

துணர்விரிக் கடம்பமென் தொங்கலும் பம்புறும்
புழுகுமச் சம்பசுஞ் சந்தனங் குங்குமந் [ளுந்
தொகுகளப் புந்துதைந் தென்றுநன் கொன்றுபத் திருதோ

தொலைவில்சண் முகங்களுந் தந்த்ரமந் தரங்களும்
பழநிமலை யும்பரங் குன்றமுஞ் செந்திலுந் [வாய்
துதிசெயு மெய்யன்பர் தஞ்சிந்தையுஞ் சென்றுசெய்ப் பதிவாழ்

கணபண்பு யங்கமுங் கங்கையுந் திங்களுங்
குரவுமறு குங்குறுந் தும்பையுங் கொன்றையுங்
கமழ்சடிலச் சம்புவுங் கும்பிடும் பண்புடைக் குருநாதா

கனகுடகில் நின்றகுன் றந்தருஞ் சங்கரன்
குறுமுனிக மண்டலங் கொண்டுமுன் கண்டிடுங்
கதிசெயந் திவந்துறுந் தென்கடம் பந்துறைப் பெருமாளே

(இ-ள்) துணர்விரி - கொத்தாக விரிந்த, கடம்பம் மென் தொங்கலும் - மென்மையாகிய கடம்பமாலையும், பம்பு உறும் புழுகும் - நெருங்கியுள்ள புனுகும், அசலம் பசுமை சந்தனம் - பொதியமலையினின்று தரப்பட்ட சந்தனமும், குங்குமம் தொகு களபமும் - குங்குமமும் வாசனைப் பொருள்கள் பலவற்றின் தொகுதியையுடைய கலவைச்சாந்தும், துதைந்து - நெருங்கியுள்ள, நன்கு ஒன்று - நன்மை பொருந்திய, பத்து இருதோளும் - பன்னிரண்டு திருத்தோள்களையும், தொலைவு இல் சண்முகங்களும் - எக்காலத்தும் அழிவில்லாத ஆறு திருமுகங்களையும், தந்த்ரம மந்தரங்களும் - தந்திர மந்திரங்களை

யும், பழநிமலையும்-பழநிமலையிலும், பரங்குன்றமும் - திருப்பரங்கிரியையும், செந்திலும் - திருச்செந்தூரையும், துதி செயும் செய் அன்பர் தம் சிந்தையும் சென்று-தோத்திரஞ் செய்யும் உண்மை அடியார்களுடைய மனங்களில் அவருக்கு அருள்புரிவதற்குக் காட்சி கொடுத்து, செயப்பதி வாழ்வாய-வயலூரில் வாழ்பவனே!, கண் பண புயங்கமும் - திரண்ட படத்தையுடைய பாம்பையும், கங்கையும் திங்களும்-கங்கையையும் பிறைச்சந்திரனையும், குரவும் அறுகும் குறுதும்பையும் கொன்னையும்-குரவமலரும் அறுகம்புல்லும் சிறிய தும்பைமலரும் கொன்றைமலரும், கமழ் சடிலம் சம்புவும்-மணக்கின்ற சடையையுடைய சிவபெருமானும், கும்பிடும் பண்பு உடை குருநாதா-வணங்குகின்ற குணம் வாய்ந்த குருநாதனே!, கன குடகில் நின்ற-பெருமைபொருந்திய குடகு நாட்டில் நிலைபெற்ற, குன்றம் தரும்-குடகு மலையினின்றும் உற்பத்தியாகின்றதும், சங்கரன்-சிவபெருமானும், குறுமுனி கமண்டலம் கொண்டு முன் கண்டிடும்-அகத்தியமுனிவர் கமண்டலத்தால் முன்னே கண்டருளிய, கதிசெய நதி-வேகத்தையுடைய காவிரி நதி, வந்து உறும் தென்கடம்பந்துறைபெருமாளே! - வந்து பாயும் தென்கடம்பந்துறையில் தங்கும் பெருமானே!, புணரியும்-கடலும், அனங்கன் அம்பும்-மன்மதன் கணையாகிய குவளையும், கரும்பும்-வண்டும், கரும் கயலினொடு கெண்டையும் - கருமையாகிய கயல் மீனுடன் கெண்டைமீனும், கண்டனும்-இயமனும், கஞ்சமும்-தாமரை மலரும், புதுநிலவு அருந்தியும்-புதிய சக்கரவாகப்பறவை

யும், தஞ்சநஞ்சம்-தங்கியவிஷமும், பொருப்பு எறிவேலும், கிரௌஞ்சகிரியைப் பிளந்த வேற்படையும், பொரு என-ஒப்பென்று சொல்லும்படி, இகன்று-அவற்ருேடு போராடி, அங்கும் இங்கும் சுழன்று-அங்கும் இங்கும் பிறழ்ந்து, இடை கடை சிவந்து-நடுவிலும் கடைப்பாகத்துஞ் சிவப்பு நிறங்கொண்டு, வஞ்சம் பொதிந்து-வஞ்சகம் நிறைந்து, இங்கிதம் புவி இளைஞா முனப்பின்று-பலவகைக் குறிப்புக்களை இளையவருக்கு முன் பழகி, அம்பொனின் கம்பிதம் குழை மோதி-அழகிய பொன்னுற் செய்யப்பட்ட அசைவையுடைய குண்டலங்களுடன் தாக்கி, குணலையொடும் - கூத்துடன், இந்திரியம் சஞ்சலம் கணடிடும்படி-அறிவு வருந்தும்படி, அமர் புரிந்து சண்டையிட்டு, அரும் சங்கடம் சந்தம் கொடுமைசெய்து-மிக்க சங்கடத்தையும் கொடுமையையும் எப்போதும் செய்து, சங்கொடும் சிங்கி தங்கும்-வெண்மையுடனே விஷம் தங்குகின்ற, கடைக் கணிஞர்பால-கடைக் கணையுடைய பெண்களிடத்தில், குலவு பல செம் தனம் தந்துதந்து-விளங்குகின்ற பலசிவந்த பொனனைக்கொடுத்துக் கொடுத்து, இன்புறும்-இன்பமடைகின்ற, திரிவித கரணங்களும்-மனம், வாக்குக் காயமென்னும் மூவகைப்பட்ட கரணங்களும், மனம் வாக்குக் காயமென்னும் மூவகைப்பட்ட கரணங்களும், கந்த - கந்தனே[1], நின செம்பதம் குறுகும் வகை - தேவரீருடைய சிவந்த திருவடிகளை அடையும் விதத்தை, அந்தியும் சந்தியும்-மாலையிலும் சந்திவேளைகளிலும், தொந்தம் அற்று-உலகப்பற்று ஒழிந்து, அமைவேனே-பொருந்துவேனே? எ-று.

(வி-ரை) புணரி-கடல், புணர்தலையுடையது எனக் காரணக்குறி. புணரி முதலாயின கண்களுக்குவமை. அனங்கன்-மன்மதன்; அங்கமில்லாதவன். சண்டன்-யமன், யமனைப் போல நோக்கப்பட்டார் உயிரைக் கவருதலின் யமனை என்றார். இங்கிதம்-குறிப்பு. சிங்கி-விஷம், குழை-குண்டலம். தளிர் என்றதன் பெயர் பண்டைக்காலத்தே மாதர் தளிரைத் தங்கள் காதில் தரித்துக்கொள்வது இயல்பாகையால் காதில் தரித்துக்கொள்ளும் ஆபரணம் எல்லாவற்றிற்கும் பெயராயிற்று. திரிவிதகரணம்-மனம் வாக்கு காயங்கள். தொங்கல்-மாலை, தொங்குதலையுடைமையால் காரணப்பெயர். தந்திரம்-சாத்திரங்கள். செய்ப்பதி-வயலூர்.

கணபண புயங்கம்-திரண்ட படத்தையுடைய பாம்பு

சம்பு-சுகஞ்செய்பவன்

சங்கரன்-ஆன்மாக்களுக்கு இன்பத்தைச் செய்பவன்.

'குறுமுனி கமண்டலங் கொண்டு முன் கவிழ்த்திடுங் கதி செய் நதி' காவேரி. அதன்வரலாறு: அகத்தியமுனிவர் தமது கமண்டலத்திலிருந்த காவிரியைக் காந்தனென்னும் மன்னவன் வேண்டுகோளுக்கு இசைந்து நிலத்தில் பெருகியோடும்படி செய்தனர் என்பதாம். இதனை,

'கஞ்ச வேட்கையிற் காந்தமன் வேண்ட
அமர முனிவன் அகத்தியன் தனாது
கரகங் கவிழ்த்த காவிரிப் பாவை'

எனவரூஉம் **மணிமேகலை அடிகளாலும்** அறிக (22)

## திரிசிராமலை

23 தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன-தநததான.

தறையின மானிட ராசையி னானமட
லெழுது மாலருண மாதாகள தோதக
சரசமா யமல ரோதியி னாலிரு கொஙகையாலும்

தளாமி னேரிடை யாலுடை யானடை
யழகி னான மொழியால விழியாலமருள
சவலை நாயடி யேனமி கவாடிம யஙகலாமோ

பறவையானமெயஞ ஞானிகணமோனிக
ளணுகொணாகை நீடுமிராசிய
பவன பூரக யோகிகமாகிய விந்துநாதம்

பகரொ ணாதது சேரவொ ணாதது
நினையொ ணாதது வான தயாபர
பதிப தானச மாதிம னோலயம் வநததாராய்

சிறைவி டாதநி சாசரா சேனைகண
மடிப நீலக லாபம தேறிய
திறலவி னோதச மேள தயாபர அம்புராசி

திரைகள போலலை மோதிய சீதள
குடக காவிரி நீளலை சூடிய
திரிசிரா மலை மேலுறை வீரகு றிஞ்சிவாழும்

மறவர் நாயக ஆதிவிநாயகா
இளைய நாயக காவிரி நாயக
வடிவி னாயக வானைதன்னாயக எங்கண்மானின்

மகிழு நாயக தேவாக ணாயக
கவுரி நாயக ஞாகுரு நாயக
வடிவதாமலை யாவையு மேவிய தம்பிரானே.

(இ-ள்) சிறைவிடாத-சிறைக்களத்தை விட்டு நீங்காத, நிசாசரர் சேனைகள் - அசுரர்களுடைய சேனைகள், மடிய-இறக்கும்படி, நீலகலாபம் அது ஏறிய-நீலநிறம் பொருந்திய மயிலின்மேல் ஆரோகணித்த, திறல் விநோத சமேள- வல்லமையும் விநோதமும் பொருந்தியவரே, தயாபர-கருணையுடையவரே! அம்புராசி-கடலினது, திரைகள்போல-அலைகளைப்போல, அலை மோதிய-அலைகள் மோதுகின்ற, சீதள குடக்காவிரி - குளிர்ச்சி பொருந்திய குடகுமலையினின்று வரும் காவேரியாற்றின், நீள் அலை சூடிய-நீண்ட அலைகளைப் பொருந்திய, திரிசிராமலை மேல உறை வீர-திரிசிராமலையின் மேலே வசிக்கின்ற வீரரே! குறிஞ்சி வாழும-மலைப்பிரதேசத்தில் வாழ்கின்ற, மறவர் நாயக-வேடர்கள் தலைவனே!, ஆதி விநாயகர்-முதற் கடவுளாகிய விநாயகக்கடவுளுக்கு, இளைய நாயக-இளையனாகிய நாயகனே!, காவிரி நாயக-காவேரிக்குத் தலைவனே! வடிவின நாயக-அழகிய நாயகனே! ஆனைதன் நாயக-தெய்வயானை அம்மைக்குத் தலைவனே!, எங்கள் மானின மகிழும் நாயக-எங்களது தேவியாராகிய வள்ளியம்மையாரிடத்தில் மகிழ்ச்சி அடையுந் தலைவரே!, கவுரி நாயகனார்-உமாதேவியார் கணவராகிய சிவபெருமானுக்கு, குருநாயக-குருவான தலைவனே!, வடிவு அது ஆம்-அழகு பொருந்திய, மலையாவும் மேவிய-மலைகள் எல்லாவற்றையும விரும்பிய,

தம்பிரானே - தலைவனே!, தரையின் மானிடர் - பூமியில் வாழும் ஆடவர், ஆசையினால் மடல் எழுதும் - தம்மேல் கொண்ட ஆசையால் மடலேறுவதற்கு வடிவத்தை எழுதுகின்ற, மால் அருள் மாதர்கள் - மயக்கத்தைத் தருகின்ற பெண்களாகிய, தோதக சரசர் - வஞ்சகமான காமச் செயலுடையாரது, மா மலர் - சிறந்த பூக்களைச் சூடிய, ஓதியினால் - கூந்தலினாலும், இரு கொங்கையாலும் - இரண்டு ஸ்தனங்களாலும், தளர்மின்னேர் இடையால் - சோர்ந்த மின்னலையொத்த இடையாலும், உடையால் - ஆடையாலும், நடை அழகினால் - நடையின் அழகினால், மொழியால் - சொற்களாலும் விழியால் - கண்களாலும், மருள் சவலைநாயடியேன், மயங்குகின்ற பலவீனனாகிய நாயிற் கடைப்பட்ட அடியேன் மிக வாடி மயங்கல் ஆமோ மிகவும் வருத்த முற்று மயக்கமடைதல் கூடுமோ?, பரவையான மெய்ஞ்ஞானிகள் - ஓரிடத்தே தங்காது பறந்து பறவைபோலத் திரியும் உண்மை ஞானிகளும், மோனிகள் - மௌன விரதியரும், அணுக ஒணா வகை - சேர்வதற்கு முடியாதவண்ணம், நீடும் - மிக்க, இராசியம் - இரகசியமானதும், பவன பூரக ஏகிகம் - பிராண வாயுவை ஒடுக்கிச் செய்யும் யோகத்தில், ஆகிய விந்து நாதர் - ஒன்றுபட்ட விந்துநாதங்களால், பகர ஒணாதது - சொல்ல முடியாததும், சேர ஒணாதது - சேர முடியாததும், நினையொணாதது - நினைக்க முடியாததுமான, தயாபர பதியது ஆன - அருளோடு கூடிய, சமாதி மனோலயம் - மனம் இலயப்படுவதாகிய சமாதியை, வந்து தாராய் - எழுந்தருளி வந்து அடியேற்கு அளிப்பாய். எ-று

(வி-ரை) தறை-எதுகை நோக்கி வல்லின றகரம் பெற்றது. மடல் எழுதல்-பனைமடலிலே தாம் விரும்பிய மடவாருடைய வடிவத்தை எழுதுதல். பண்டைக்காலத்தே ஆடவர் தாம் விரும்பிய மடவாரை எய்துமபொருட்டு மடல் எழுதுதல் இயல்பு

இராசியம்-இரகசியம்.

சமாதி மனோலயம்-மனோலய சமாதி.

பறவையான மெய்ஞ்ஞானிகள் மோனிகள் அணுகொணுவகை நீடும் இராசியம்-ஓரிடமென்று நில்லாது பறந்து திரியும் பறவைபோலிருக்கின்ற பற்றற்ற உண்மைஞானிகளும் மௌனிகளும் கிட்டிக் கொள்ளாவண்ணம் மிக்க இரகசியமானதும்

அம்புராசி-கடல். குடக்காவிரி-குடகமலையில் தோன்றும் காவேரி. திரிசிராமலை-திரிசிராப்பள்ளியிலுள்ள மலை. வடிவதாம் மலை என்பதில் அது - பகுதிப் பொருள் விகுதி. (23)

## திருப்போரூர்

24 தனத்தா தானதந்த தனத்தா தானதந்த
தனத்தா தானதந்த தனதான.

உருக்கார் வாளிகண்கள் பொருப்பார் வாரதனங்க
ளுரைத்தேன் வாலசந்த்ர நுதனூலாம்

உருச்சேர் நீண்மருங்குல் பணைத்தோ ளோதிகொண்ட
லுவப்பா மேல்விழுந்து திரிவோர்கள்

அருக்கா மாதர்தங்கள் வரைக்கே யோடியினப
வலைக்கே பூணுநெஞ்சன அதிபாவி

அசட்டாகி மூடுகின்ற மயக்கால மாயுமிந்த
அவத்தா லீனமின்றி அருள்வாயே

எருக்கா தாளிதும்பை மருச்சேர் போதுகங்கை
புனைச்சூ டாதிநம்பர் புதல்வோனே

இருக்கா லேநினைந்து துதிப்பார் நாவினெஞ்சி
லிருப்பா யானைதங்கு மணிமார்பா

செருக்கா லேமிகுந்த கடற்சூர் மாளவென்ற
திறற்சேர் வேலைகொண்ட முருகோனே

தினைக்கோர் காவல்கொண்ட குறத்தேன மாதுபங்க
திருப்போ ரூரமர்ந்த பெருமாளே.

(இ-ள்.) எருக்கு ஆர் தாளி தும்பை-எருக்கு, ஆத்தி, கூதாளி, தும்பை என்னும் இவற்றின், மருச்சேர்-மணம் பொருந்திய, போது-மலர்களையும், கங்கையினை-கங்கையையும், சூடு ஆதி நம்பர்-சூடுகின்ற ஆதியாயுள்ள சிவபெருமானுக்கு, புதல்வோனே-குமாரனே', இருக்காலே-இருக்கு வேதத்தாலே, நினைந்து துதிப்பார்-எண்ணி வாழ்த்துவோர், நாவில் நெஞ்சில் இருப்பாய்-நாவிலும் மனத்திலும் இருப்பவனே', யானை தங்கும் மணிமார்பா-தெய்வயானை தங்குகின்ற அழகிய மார்பை உடையவனே', செருக்காலே மிகுந்த-அகங்காரம் அதிகரித்த, கடல் சூர்-கடல் வடிவங்

கொண்ட சூரன், மாள வென்-இறக்குமபடி வெற்றி கொண்ட, திறல் சேர் வேல-வலிமையுடைய வேலை, கைகொண்ட-திருககரததில் தாஙகிய, முருகோனே-முருகனே!, தினைக்கு ஓர் காவல கொண்ட-தினைபபுனததில காவலாக இருநத, குறததேன-குறவர் மகளாகிய, மாநயபக-வள்ளி நாயகியாரைப பககததில உடையவனே! திருப்போரூர் அமாநத பெருமானே-திருபபோரூர் என்னும் தலததில எழுந்தருளியிருககும பெருமானே!, உருககு ஆர்-உருககுதல பொருநதிய, வாளி-அமபை ஒதத, கண்கள்-கணகளாலும, பொருப்பு ஆர்-மலையை ஒநத, வார் தனஙகள்-கசசையணிநத முலைகளாலும, உரை தேன-சொலலும அமுது கொப்பளிககும, வால சநதிரன-பிறைசசநதிரனை ஒதத, நுதல-நெற்றியையும, நூல ஆம-நூலையொதத, உருசேர்-அழகு பொருநதிய, நீள மருங்குல-நீண்ட இடையையும, பணை தோள-மூஙகிலையொதத தோளையும், கொணடல ஒதி-மேகததை யொதத கூநதலையும் கொண்டு, உவபபா-மகிழசசியாக, மேல விழுநது-முறபட்டு வநது. திரிவோர்கள்-திரிகினறவர்களாகிய, அருககு ஆம்-அருமையையுடைய, மாதர் தஙகள்-பெண்களுடைய, வரைககு-இடததிற்கு, ஓடி இனப வலைககு ஓடிசசென்று இன்பமாகிய வலைககு, பூணும் நெஞசன-விரும்புகின்ற மனத்தையுடையவனும், அதிபாவி-மிகக பாவததைச செயபவனுமாகிய யான், அசட்டால-குற்றததாலும், மூடுகின்ற மயக்கால-மூடப்பட்ட மயககத்தாலும், மாயும்-அழி

யும், இந்த அவத்தால்-இந்தத் துன்பத்தால், ஈனம் இன்றி-குற்றமில்லாமல், அருள்வாய்-கருணை புரிவாயாக எ-று.

(வி-ரை) உரைத்தேன் பாலசந்திரன் என்பதற்கு உவப்பார் வாலசந்திரன் என்றும்பாடம். இதற்கு உயர்வுபொருந்திய பாலசந்திரன் என்று பொருள். இருக்கு என்றது ஈண்டு உபலக்கணத்தால் ஏனை யசுர், சாமம், அதர்வணம் என்னும் வேதங்களையும் குறிக்கும். இதற்கு விதி 'ஒரு மொழி யொழி தன்னினங் கொளற் குரித்தே' என்பது (நன்னூல் சூத்-358) இருக்காலே நினைப்பார் நெஞ்சிலும் துதிப்பார் நாவிலுமென எதிர் நிரனிறையாகக் கொள்க. யானை-தெய்வயானையார். கடற்சூர்-கடல் வடிவங் கொண்ட சூரன், குறத்தேன் வள்ளிநாயகி. திருப்போரூர்-செங்கற்பட்டு 24-மைல் தூரத்திலுள்ள ஒரு சுப்பிரமணிய ஸ்தலம். நம்பர்-சிவபெருமான், விரும்பப்படுபவர்.

சிவபெருமான் பஞ்சாக்கரத்தைச் செபித்துத் தோத்திரஞ் செய்வோர் மனத்திலும் நாவிலும் தங்கி யிருப்பான் என்பார்,

'இருக்காலே நினைந்து துதிப்பார் நாவில் நெஞ்சில் இருப்பார்' என்றருளிச்செய்தனர். இருக்கு-இருக்குவேதம், மந்திரம் என இரட்டுற மொழிந்து கொள்க. (24)

25 தான தானன தானன தான தானன தானன
தான தானன தானன-தனதான.

சீருலாவிய வோதிம மானமானடை மாமயில்
சேயசாயலக லாமதி முகமானார்

தேனுலாவிய மாமொழி மேருநேரிள மாமுலை
சேலுலாவிய கூர்விழி குமிழ்நாசி
தாருலாவிய நீள்குழல் வேயுலாவிய தோளியர்
சாயலிலே திரி வேனை நின் அருளாலே
சாமவேதியர் வானவ ரோதிநாண்மலர் தூவிய
தாளில்வீழ்நினைந்தருள் புரிவாயே
காருலாவிய நீள்புன வேடர்மால்வரை மீதுறை
காவல்மாதினொ டாவல்செய் தணைவோனே
காணவாகம வேதபு ராணநூல்பல வோதிய
காரணாகரு ணாகர முருகோனே
போருலாவிய சூரனை வாரிசேரொரு வேல்விடு
பூபசேவக மாமயில் மிசையோனே
போதன மாதவன் மாதுமை பாதியாதியு மேதொழு
போரிமா நகர் மேவிய பெருமாளே

(இ-ள்) கார் உலாவிய-மேகம் உலவுகின்ற, மால்வரை மீது உறை-பெரியமலையின்மேல் வசிக்கின்ற, வேடர்-வேடர்களது, நீள்புனம்-நீண்ட புனத்திலே, காவல் மாதினொடு-காவலைச் செய்த வள்ளி நாயகியாரோடு, ஆவல் செய்து-மிக்க விருப்பங்கொண்டு, அணைவோனே-தழுவுகின்றவனே!, காண-ஆன்மாக்கள் உண்மை ஞானத்தை அடையும்படி, வேத புராண நூல்-வேத புராணங்களாகிய சாத்திரங்கள், பல ஓதிய-பலவற்றைத் திருவாய்மலர்ந்தருளிய, காரணா-எல்லாவற்றிற்கும் காரணமானவனே!, கருணாகர - அருள் வடிவானவனே!, முருகோனே - முருகனே!, போர் உலா

விய - சண்டைமேற் சென்ற, சூரனை - சூரபதுமனை, வாரி சேறு எழ-கடலிலே சேறு எழும்படி, வேல விடு-வேலை விடுகின்ற, பூப-தலைவனே', சேவகம் மா மயில-அதிகாரத்தைச செய்யும சிறந்த மயிலின், மிசையோனே-மேலேஎழுந்தருளியிருப்பவனே', போதன்-பிரமனும, மாதவன-திருமாலும், மாது உமை - அழகிய உமதேவியாா, பாதி ஆதியும-பாதி வடிவமாகவுள்ள சிவபெருமானும, தொழு-வணஙகுகின்ற, போரிமாநகா-திருபபோரூா எனனுந் திவவியக்ஷேத்திரததில, மேவிய-திருககோயில கொணடருளிய, பெருமானே-பெருமானே', சீா உலாவிய-அழகு பொருநதிய, ஓதிமம ஆன-அனனத்தை ஓதத, மாநடை-சிறநத நடையினையும், மாமயில-சிறநத மயிலை, சேய-ஒதத, சாயல-மெனமையையும, கலாமதி-கலைகள்நிறைநத சநதிரனை ஒதத, முகம மாரை-முகத்தையு முடையவரும், தேன் உலாவிய-தேனை ஒத்த, மாமொழி-இனியசொலலையும், மேருநோ - மேருமலையைஒதத, இளமாமுலை-இளையபெருத்ததனஙகளையும், சேல உலாவிய கூாவிழி-சேறகெணடையை ஒதத கூாமையான கண்களையும், குமிழ் நாசி-குமிழம்பூபபோன்ற மூக்கையும, தார் உலாவிய-மாலையைததரிதத, நீளகுழல-நீண்ட கூந்தலையும் உடைய, வேய் அளாவிய தோளியா-மூஙகிலை ஒதத தோளையுடையவருமாகிய பெண்களுடைய, சாாபில்-பற்றுக கோட்டில, திரிவேனை-அலைகின்றவனாகிய அடியேனை, நின் அருளாலே- தேவரீருடைய திருவருளால, சாமவேதியா-சாமவேதததை ஓதும பிராமணர்களும், வானவர்-தேவர்க

னும், ஓதி-மந்திரங்களைச் சொல்லி, நாண்மலர்-புதிய பூக்களை, தூவிய-சிதறிய, தாளில்-திருவடிகளில், வீழ-வணங்கும்படி, நினது அருள் புரிவாய்-உன்னுடைய கருணையைச் செய்வாய் எ-று.

(வி-ரை.) ஓதிமம்-அன்னம். சாயல்-மென்மை. விஞ-அறிவு. காவல் மாது-காவல் காத்துவந்த வள்ளியம்மையார். சாமவேதியர்-சாமவேதங்களைப் பாடுபவர்.

ஆகமம்-சிவபெருமானால் அருளிச்செய்யப்பட்ட ஞான நூல்கள். அத்தகைய ஆகமங்கள் இருபத்தெட்டு. அவை சிவபெருமானையே சிறப்பாகக் கூறுதலின் சிறப்பு நூல்கள் எனப்படும். வேதம் எல்லாக் கடவுளரையுங் கூறுவதால் பொதுநூல் எனப்படும். வேதம்-அறிதற் கருவியாக உள்ளது என்பது காரணக்குறி.

புராணம்-பழமை. வேதாகம புராணாதிகளை இறைவன் அருளிச் செய்தா னென்றார் அவை எக்காலத்தும் உள்ளனவாதலினாலும் முதல் நடுவீறு காணமுடியாமையா லும் என்க. (25)

## திருச்செங்கோடு

26 தந்தா தனந்த தந்தா தனந்த
தந்தா தனந்த-தனதான.

பந்தாடி யங்கை நொந்தார் பரிந்து
பைந்தார் புனைந்த குழன்மீதே
பண்பார் சுரும்பு பண்பாடு கின்ற
பங்கேரு கங்கொள் முகமீதே

மந்தார மன்றல் சந்தார மென்மாறி
வந்தாத னுசெய் தனமீதே
மண்டாசை கொண்டு விண்டாவி நைந்து
மங்காம லுன்றன் அடிதாராய்
கந்தா அரன்றன் மைந்தா விளங்கு
கன்றூமு குந்தன் மருகோனே
கண்டோர் புகழ்ந்த நன்கார் மடந்தை
கந்தா வரம்பை மணவாளா
செந்தா தடர்ந்த கொந்தார் கடம்பு
திண்டோள் நிரம்ப அணிவோனே
திண்கோ டரங்கள் எண்கோ டுறங்கு
செங்கோ டமர்ந்த பெருமாளே

(இ-ள்) கந்தா அரன் தன் மைந்தா-கந்தனே! சிவ பெருமானுக்குத் திருக்குமாரனே!, விளங்கு கன்று ஆ முகுந்தன்-விளங்குகின்ற கன்றையுடைய பசுக்களைக் காத்த திருமாலுக்கு, மருகோனே-மருமகனே!, கண்டோர் புகழ்ந்த-பார்த்தோர் யாவரும் புகழும், நன்கு ஆர் மடந்தை-அழகு நிறைந்த தெய்வயானையாருக்கு, கந்தா - பற்றுக்கோடாக உள்ளவனே!, அரம்பை மணவாளா-அரம்பைபோல அழகு வாய்ந்த வள்ளிநாயகியாரின் கணவனே!, செம் தாது அடர்ந்த-சிவந்த மகரந்தப் பொடிகள் நெருங்கியுள்ள, கொத்து ஆர் கடம்பு - கொத்துக்கள் நிறைந்த கடப்ப மாலையை, திண்தோள் நிரம்ப அணிவோனே - உறுதியை யுடைய தோள்கள் நிரம்பும்படி தரிப்பவனே!, திண்கோட ரங்கள் வலிமையுடைய குரங்குகள், எண்கோடு உறங்கு-

கரடிகளுடன் தூங்குகின்ற, செங்கோடு - திருச்செங்கோடு என்னுந் திருப்பதியில், அமர்ந்த பெருமாளே-தங்கிய பெருமாளே!, பந்தாடி அங்கைநொந்தார்-பந்தாட்டமாடி அங்கை வருந்திய மாதர்கள், பரிந்து-விரும்பி, பைம் தார் புனைந்த-பசுமையான மாலையை அணிந்த, குழல்மீது-கூந்தலின் மேலும், பண்பு ஆர்-நன்மை நிறைந்த, சுரும்பு பண்பாடுகின்ற-வண்டுகள் இராகத்தைப் பாடுகின்ற, பங்கேருகம் கொள்முகம்மீது-தாமரையை ஒத்த முகத்தின் மேலும், மந்தாரம் மன்றல்-செவ்வரத்தையின் துவாசனையோடு, சாந்து ஆரம்-சந்தனமும் மாலையும், ஒன்றிய பொருந்திய, வன்பாதகம் செய் தனம் மீது கொடிய பாவங்களைச் செய்யும் முலைகளின் மேலும், மண்டு ஆசைகொண்டு-மிக்க விருப்பத்தைக் கொண்டு, ஆவி விண்டு நைந்து-உயிரைவிட்டு வருந்தி, மங்காமல் உன்றன் அடி தாராய்-அழியாமல் உன்னுடைய திருவடிகளைத் தருவாயாக என்று.

(வி-ரை) குழல்மீது, முகம்மீது, தனம்மீது என்புழி எண்ணும்மைகள் விகாரத்தால் தொக்கன. அகம் + கை = அங்கை என்றாயிற்று, 'அகமுனர்ச் செவிகை வரின் இடையன கெடும்' என்பது நன்னூல்.

பரிந்து-விரும்பி. பைந்தார்-பசுமையான மாலை, பசுமை என்பது ஈறுகெட்டு அடி அகரம் ஐயாயிற்று. ஈறுபோதல் என்னும் சூத்திரம் காண்க. சுரும்பு-வண்டு, சுரும்பின் ஒலியைப் பாடுதலாகக் கூறினார். பங்கேருகம்-தாமரை, வடசொல்; மலர்ச்சியினாலும், செந்நிறத்தாலும், அழகினாலும்

தாமரை முகத்துக்கு உவமை. தாமரை ஈண்டு செந்தாமரை. மணநல-வாசனை சந்து-சந்தனப்பூச்சு. ஆரம்-முத்துமாலை. சந்தனத் தேய்வையும் முத்துமாலையும் பொருந்தி வன்மையான பாவத்தொழிலாகிய காமத்தை யூட்டுகிற ஸ்தனங்கள் என்க. ஆடவருக்கு இயல்பாகவே மோகத்தை விளைவிக்கும் ஸ்தனங்கள் தட்பமான சந்தனத்தையும் ஒளிய முத்துமாலையையும் தரித்திருப்பின் மோகத்தை மிகுதியும் விளைவிக்கு மென்பார், 'சந்தாரமொன்றி வன்பாதகஞ் செய்தனம்' என்றார். கண்டாருக்கு உண்டாகும் மோகத்தைப் பொருள் செய்தனவாக உபசரித்துக் கூறினார். காமம் பாதகங்கள் எல்லாவற்றிலும் மிக்க கொடிதாதலபற்றி 'வன்பாதகம்' என்றார். இதனை,

'எரிதலைக் கொண்ட காமத்தினப் நீர்ப்புள்ளியற்ற
பிரிவின் கட்பிறந்த துன்பம் பெருங்கட லனையதொன்று
ஒருங்கினைந் துடம்பு நீங்கினிம் மையோடும்மை யின்றி
யிருதலைப் பயனுமெய்தா ரென்றியாங் கேட்டுமன்றே.'

என்னும் சீவகசிந்தாமணிச் செய்யுளாலும்,

'தீமையுள்ளன யாவையுந் தந்திடுஞ் சிறப்புந்
தோமில் செல்வமுங் கெடுக்குநல் லுணர்வினைத் தொலைக்கு
மேமநன்னெறி தடுத்திருளுய்த்திடு மிதனால்
காம மன்றியே யொருபகை யுண்டுகொல் கருதில.'

என்னுங் கச்சியப்ப சிவாசாரியர் கூற்றானும்,

'காமமே கொலைகட்கெல்லாங் காரணங் கண்ணோடாத
காமமே களவுக்கெல்லாங் காரணங் கூற்றமஞ்சுங்

காமமே களுண்டாகுங் காரண மாதலாலே
காமமே நரகபூமி காணியாகக் கொடுப்பதென்றான்.'

என்னும் பரஞ்சோதிமுனிவர் திருவாக்கானும்,

'தூமகேது புவிக்கெனத் தோன்றிய
வாமமேகலை மங்கையரால் வரும்
காமமில்லை யெனிற் கருங்கேடெனும்
நாமமில்லை நரகமு மில்லையே'

என்னும் கம்பர் உரையானும் உணர்க.

'ஆவிவிண்டு நைந்து' என விளக்க உன்னருளைப் பெறேனாயின் பிறப்பு இறப்புக்களை மீண்டும் மீண்டும் பெறுவேன், ஆதலின் நான் அத்தகைய பெருந் துன்பத்திற்கு ஆளாகாமல் உன் திருவருளை எனக்குத் தருவாய் என்றார். பிறப்பு துன்பந்தருதலையும் பிறவாமை இன்பந்தருதலையும், 'பிறந்தா ருறுவது பெருகிய துன்பம் பிறவா ருறுவது பெரும் பேரின்பம்' எனவரும் மணிமேகலை அடிகளால் அறிக. இறைவன் திருவருள் இன்றிப் பிறப்பு அறாது என்னுங் கருத்தை,

'உயிராவண மிருந்துற்று நோக்கியுள்ளக்
கிழியினுருவெழுதி
உயிராவணஞ் செய்திட்டுன் கைத்தந்தா லுணரப்
படுவாரோ டொட்டிவாழ்தி
அயிராவணமேறா தானே றேறியமரர் நாடாளாதே
யாரூராண்ட
அயிரா வணமே யென்னம்மானே நின்னருட்கண்ணா
னோக்காதாரல்லாதாரே.'

என்னும் **அப்பர்** அமுதவாக்கான் அறிக. கன்றா - கன்று ஆ - கன்றையுடைய பசு; வலித்தல் விகாரம் பெறாமல் நின்றது. கன்றா - கோபித்து; செய்யா எனும் வாய்பாட்டு வினையெச்சம். விலங்கல்-மலை, குறுக்கிட்டுக் கிடப்பது எனக் காரணக்குறி. கந்தா, மணவாளா என்ற இரண்டும் கணவனென்னும் பொருளில் வந்தன. கொந்து-மெலித்தல் விகாரம். திண்டோள்-திண்மை என்னும் பண்புப்பெயரின் ஈறு கெட்டு வருமொழி முதலில் தகரம் வர 'ணனவல்லினம் வரட்டறவும்' என்னும் விதியினால் வருமொழி தகரம் டகரமாகத் திரிந்தது. கடம்பு முருகனுக்குத் திருவடையாள மாலை. கோடரங்கள் - குரங்குகள் எணகு - கரடி, குரங்குகளும் கரடிகளும் தங்குகின்ற மலையாதலின் திண்கோடரங்கள் எணகோடுறங்கு செங்கோடென்றார். திருச்செங்கோடு என்னும் திவ்விய ஸ்தலம் சேலம் ஜில்லாவிலுள்ளது (26)

## பழமுதிர்சோலை

27 தனதன தானதான தனதன தானதான
தனதன தானதான-தனதான.

இலவிதழ் கோதி நேதி மதகலை யார வார
இளநகை யாட ஆடி மிகவாதுற்

றெதிரொரு கோர பார ம்ருகமத கோல கால
இணைமுலை மார்பி லேறி மதராசன்

கலவியி லோடி நீடு வெகுவித தாக போக
கரணபர தாப யாப மடமாதர்

கலவியின் மூழ்கி யாமு மறிதொழி லேனு மீது
கருதிய ஞான போத மடைவேனோ
கொலைபுரி காளி சூலி பயிரவி நீலி மோடி
குலிசகு டாரி யாயி மகமாயி
குமரிவ ராகி யோகி பகவதி யாதி சோதி
குணவதி யால வூணி யபிராமி
பலிகொள்க பாலி யோகி பரமகல யாணி லோலை
பதிவிரதை வேத ஞானி புதல்வோனே
படையொடு சூரன் மாள முடுகிய சூர தீர
பழமுதிர் சோலை மேவு பெருமாளே.

(இ-ள்) கொலை புரி காளி-மகிடாசுரனைக் கொன்ற காளியும், சூலி - திரிசூலப் படையுடையவளும், பயிரவி-பைரவியும், நீலி-நீலநிறமுடையவளும், மோடி-துர்க்கையும், குலிச குடாரி-வஜ்ஜிராயுதத்தையும் கோடரியையும் உடைய வளும், ஆயி மகமாயி-உலகமாதாவும் பெரிய மாயையுடைய வளும், குமரி வராகி யோகி-இளமையுடையவளும் வராகி யும் யோகினியும், பகவதி - ஐசுவரியம், செல்வம், புகழ், ஞானம், வீரியம், அழகு முதலிய குணங்களையுடையவளும், ஆதி-எல்லாவற்றிற்கும் முதலாக உள்ளவளும், சோதி சோதி சொரூபமானவளும், குணவதி-சிறந்த குணங்களை உடையவளும், ஆல ஊணி-விஷத்தை ஊணாகக் கொண்டவளும், அபிராமி-அழகுடையவளும், பலிகொள் கபாலி-பலியைக் கொள்ளும் கபாலியும், யோகி-தியானிக்கத்தக்கவளும், பரம கலியாணி-மிக்க கல்யாண குணங்களுடையவளும், லோலை - விளை

யாட்டை உடையவளும், பதிவிரதை-கற்புடையவளும், வேத
ஞானி-வேதத்தை அறிந்தவளுமாகிய உமாதேவியாருக்கு,
புதல்வோனே-திருக்குமாரனே, படையொடு-சேனைகளோடு
சூரன் மாள-பதுமாசுரன் இறக்கும்படி, முடுகிய சூர தீர-
மேவிச்சென்ற சூரனே தீரமுடையவனே, பழமுதிர் சோலை
மேவு பெருமாளே-பழமுதிர்சோலை என்னும் தலத்தில்
எழுந்தருளிய பெருமானே, இலவு இதழ் கோதி-இலவ
மலரை ஒத்த இதழைக் கோதி, நேதி மதகலை-நியதியை
யுடைய காமதந்திரங்களை, ஆர ஆய-மிகுதியும் செய்ய, இள
நகை ஆட ஆடி-புன்னகை செய்ய விளையாடி, மிக வாது
உற்று-மிகவும் வாதுசெய்து எதிர்பொரு-எதிரில் பொருவு
கின்ற, கோரம் பாரம்-கொடுமையை யுடைய பெரிய, மருக
மத கோலகால-கத்தூரி அணிந்த திரட்சிபொருந்திய காலத்
தில் தோன்றிய, இணைமுலை-ஒன்றுக்கொன்றொத்த இரண்டு
தனங்களும், மார்பில் ஏற-மார்பில் பொருந்த, மதராஜன
கலவியில் ஓடி-மன்மதனது போகத்தில் சென்று, நீடு வெகு
வித தாக போக-மிக்க பலவிதமான ஆசையைக்கொண்டு,
கரணம் பிரதாபம்-பற்பல செய்கை விகற்பங்களாகிய பெரு
மையையுடைய, பாபம் மடம் மாதர்-பாபச் செயலையுடைய
இளம்பெண்களுடைய, கலவியில் மூழ்கி-போகமாகிய கட
லில் மூழ்கி, ஆழும் இழிதொழிலேனும் - அழுந்துகின்ற
தாழ்ந்த செயலையுடைய அடியேனும், மீது கருதிய ஞானம்
போதம் அடைவேனோ-மேன்மையாக எண்ணப்பட்ட ஞான
போதனையைப் பெறுவேனோ. எ-று.

(வி-ரை) இலவிதழ்-இலவம்பூவை யொத்த இதழ், உவமைத் தொகையிலேத் தொடர். நேதி-நியதி. மதகலை-காம நூலிற் சொல்லிய பல கலவி நடம், ஆர் ஆர் என்ற அடுக்கு மிகுதிபற்றியது. இளநகை-மந்தகாசம், புன்சிரிப்பு. கோரம்-கொடுமை, வட்டில் என்ட பொருள் கூறிக்கொண்டு கிண்ணத்தை யொத்த ஸ்தனமென வுரைப்பினும் பொருந்தும். மிருகமதம்-கஸ்தூரி பிரதாபம்-புகழ் கரணம்-செயல், இதழ் கோதுதல்-உதட்டைத் தாமே கடித்தல், இது காமக் குறிப்பு. மாதர் போகத்தில் அழுந்திக் கிடப்போர்க்கு ஞானமுண்டாதல் அருமை என்பார், 'இழிதொழிலேனும் ஞானபோத மடைவேனோ' என்றார். ஆல உணி-நஞ்சை உணவாகக் கொண்டவள் என்றது, சிவபெருமானுக்கு உள்ள செயல்களையுஞ் சிறப்புக்களையும் உமாதேவியாருக்கும் ஏற்றிக் கூறுதல் புலவர் மரபு ஆதல்பற்றி என்க. பகவதி-பகவன் என்பதின் பெண்பால் பகவன் ஆறு குணங்களுடையவன். பகம்-ஆறு. ஆறு குணங்களாவன திரு, ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், வீரியம், புகழ். யோகி, என்பது தமிழில் பெண்பாலுக்காகி வந்தது. வடமொழியில் யோகினி என வரும்

பகவன் என்பதற்குக் கேவல ஞானமுள்ளவன் என உரை கூறினார் அடியார்க்கு நல்லார் (27).

## சோலைமலை

28 தானதன தநத தநத தானதன தநத தந்த
தானதன தந்த தந்த-தனதான.

வாரணமு கங்கிழிந்து வீழவும ரும்ப லர்ந்து
மாலவரைய சைந்த னங்கன் முடிசாய
வாளகிரி யண்ட ரண்ட கோளமுற நின்றெ ழுந்து
மாதவம றந்து றந்து நிலைபேர
பூரணகு டங்க டிந்து சீதகள பம்பு னைந்து
பூசலைவி ரும்பு கொங்கை மடவார்தம்
போகசய னந்த விர்ந்து ஞானப தம்ப ணிந்து
பூசனைசெய் தொண்டனென்ப தொருநாளே
ஆரணமு ழங்கு கின்ற வாயிர மடந்த வங்க
ளாகுதியி டங்கள் பொங்கு நிறைவீதி
ஆயிரமு கங்கள்கொண்ட நூபுரமி ரங்கு கங்கை
யாறமர வந்தலம்பு துறைசேர
தோரணம லங்கு துங்க கோபுரநெ ருங்குகின்ற
சூழ்மணிபொன் மண்டபங்கள் ரவிபோலச்
சோதியின்மி குந்த செம்பொன் மாளிகைவி ளங்குகின்ற
சோலைமலை வந்து கந்த பெருமாளே.

(இ-ள்) ஆரணம்முழங்குகின்ற-வேதங்கள் ஒலிக்கின்ற, ஆயிரம் மடம் தவங்கள்-ஆயிரக் கணக்கான மடங்களும், தவஞ் செய்யும் இடங்களும், ஆகுதி இடங்கள்-யாகஞ்செய்யும் இடங்களும், பொங்கும் நிறை வீதி-மிகுந்து நிறைந்த தெருக்களில், ஆயிரம் முகங்கள் கொண்ட ஆயிரம் முகங்களையுடைய, நூபுரம் இரங்கு - சிலம்பொலியைப்போல ஒலிக்கின்ற, கங்கை ஆறு-கங்கை நதியானது, அமர வந்து அலம்பு-பொருந்த வந்து ஒலிக்கின்ற, துறை சேர-துறைகளில் அடைய, தோரணம் அலங்கு-தோரணங்கள் அசை

கின்ற, துங்கம் கோபுரம்-உயர்ந்த கோபுரங்கள், நெருங்கு கின்ற சூழ்மணி-நெருங்குகின்ற இரத்தினங்களால் சூழப் பட்ட, பொன் மண்டபங்கள்-பொன்னாலாகிய மண்டபங் கள், ரவிபோல சூரியனைப்போல, சோதியில் மிகுந்த- ஒளி யினால் சிறந்துள்ள, செம்பொன் விளங்குகின்ற - சிவந்த பொன் விளங்கும், சோலைமலை வந்து உகந்த பெருமாளே- சோலைமலையிலே வந்து விரும்பி இருக்கும் பெருமானே, வாரணம் முகம கிழிந்து வீழவும-யானையின் மத்தகம் துண்டுபட்டு விழவும, அரும்பு அலர்ந்து-அரும்பும லரவும், மாலவரை அசைந்து-பெரியமலை அசையவும், அனங்கன முடி சாய-மன்மதன துகிரீடம சாயவும் அடையவும், வாளகிரி-சக் கரவாளகிரி, அண்டரண்டகோளம்-ஆகாயத்தினமேலாகாய மண்டலத்தில, உற நின்று எழுந்து-பொருந்துமபடி நிலை பெற்றுஓங்கவும், மாதவம அறம துறந்து நிலைபோ-சிறந்த தவ மும்தருமமும்நீங்கிசெலலவும்பூரண குடம்கடிந்து-நிறைந்த குடத்தைக்கோபித்து, சீதம் களபம் புனைந்து - குளிர்ச்சி பொருந்திய கலவைசசாந்தை அணிந்து, பூசலை விரும்பி- காமசசணடையை விரும்புகின்ற, கொங்கை மடவார் தம் - ஸ்தனங்களையுடைய பெண்கள் போக சயனம் தவிர்ந்து-போகசயனத்தினின்று நீங்கி, உன் ஆடகம் பதம் பணிந்து-உனது பொனபோன்ற சிறந்த திருவடிகளை வணங்கி, பூசனைசெய்தொண்டன என்பது-பூசைசெய்கின்ற அடியேன் என்று சொல்வதாகிய, ஒரு நாள்-ஒரு நாள் உண்டாகுமோ? எ-று.

(இ-ள்) ஆன நிரை நீத்து - பசுக்கூட்டங்களினின்று நீங்கி, மாநிலம் அளந்து - பெரிய உலகத்தை ஓரடியாலே அளந்து, ஓர் ஆல இலையில் - ஓர் ஆல இலையின்மேல், அன்று துயில் மாயன் - அந்நாளில் அறிதுயில் அமர்ந்த அதிசயச் செயலுடையவனும், ஆயர் மனை சென்று - இடையர்கள் வீடு தோறும் போய், பால் தயிர் அளைந்த - பாலையும் தயிரையும் குழைத்துண்ட, ஆரணம் முழந்தன - வேதங்களாலே புகழப் பட்டவனுமாகிய திருமாலுக்கு, மருகோனே - மருகனே!, வானவர் புகழ்ந்த - தேவர்களாலே புகழப்பட்ட, கானவர் பயந்த - வேடர்கள் பெற்ற, மானொடு விளங்கும் - வள்ளியம் மையாரோடு விளங்குகின்ற, மணி மார்ப - அழகிய மார்பை உடையவனே!, மாமறை முழங்கு - சிறந்த வேதங்கள் மிக்கு ஒலிக்கின்ற, சீபுருடமங்கை மாநகர் - சீபுருடமங்கை என்னும் திருப்பதியிலே, அமர்ந்த பெருமாளே - விரும்பி வசிக்கும் பெருமானே!, வேனில் மதன் - கோடைக்காலத்துக்குரிய மன்மதன், ஐந்து பாணம் விட நொந்து - ஐந்து பூவாலாகிய அம்புகளை விடுதலால் வருந்தி, வீதிதொறும் நின்று - தெருக் கள்தோறும் நின்று, மடவார் பால் - பெண்களிடத்தில், வேளை என வந்து - காமத்தைத் தீர்க்கும் சமயம் இதுவே என்று சொல்லிப்போய், தாளினில் விழுந்து - அவர் இசையும்படி கால்களின்மேல் விழுந்து, வேட்டை கெட - காமவெப்பம் ஒழிய, நண்பு பல பேசி - நட்புக்குரிய பல வார்த்தைகளைச்சொல்லி, தேனின் மணந்த - தேன்கலந்த, வாய் அமுது உண்டு - வாயி லேயுள்ள அமுதத்தைப்பருகி, சீதளம் தனங்களின் மூழ்கி-

குளிர்ச்சி பொருந்திய முலைகளில் முழுகி, தேடிய தனங்கள் பாழ்பட முயன்று-வருந்தித் தேடிய பொருள்களை பாழாகும் படி முயற்சி செய்து, சோகதி அது இன்றி உழலவேனோ- அடையத்தக்க நன்மை ஒன்றுமில்லாமல் துன்பமடைவேனோ? என்-று.

(வி-ரை) மன்மதன் செயலாகிய காம உணர்ச்சி மிகுதியும் விளைதற்கு உரிய காலம், வேனிற்காலமாதலின் 'வேனில் மதன்' என்றார் இப்பாடியே,

'ஆரமும் ஆரச் சேறும் அரும்பனி நீரும் பூவும்
ஈரவெண் மதி நிலாவும் இதம்புரி தென்றற் காலும்
ஓருயிர் இரண்டு மெய்யாய் உருகுவார் உருகுமவண்ணம்
மாரனை மகுடஞ் சூட்ட வந்தது வசந்த காலம்'

என வில்லிபுத்தூராரும்,

'மன்னன் மாரன் மகிழ்துணை யாகிய
வின்னிள வேனில் வந்த திவணென
விளங்கெழு பொதியின் மாமுனி பயந்த
விளங்கா றூத னிசைத்தன னாதலின்
மகர வெல்கொடி மைந்தன் சேனை
புகரறு கோலங் கொள்ளுமென் பதுபோல்
கொடிமிடைச் சோலைக் குயிலோ னென்னும்
படையுள் படுவோன் பணிமொழி கூற
மடலவிழ் கானற் கடல்விளை யாட்டினுட்
கோவல னாடல் கூடா தேகிய'

என இளங்கோவடிகளும் கூறுதல் காண்க

மன்மதன் பஞ்சபாணங்கள் முல்லை, அசோகு, குவளை, தாமரை, மாம்பூ இவற்றின் செயல் உன்மத்தம், மதனம், மோகம், சந்தாபம், வசீகரணம் எனப்படும்.

இவற்றிற்கு அவத்தை ஐந்து. அவை

சுபபிரயோகம்-பேச்சும் நினைவும், விப்ரயோகம்-பெருமூச்செறிந்து வருந்துதல், சோகம்-வெதும்பும் உணவுவெறுத்தலும், மோகம்-அழுதலும் பிதற்றலும், மரணம்-மயக்கமும் அயாசகியும், தேனினும் மணந்த வாயமுதுண்டு என்ற கருத்து 'பாலொடு தேன் கலந்தற்றே பணிமொழி வாலெயிறூறிய நீர்' என்ற திருக்குறளிலும் வந்திருத்தல் காண்க. இதன் சிறப்பை,

'வண்டுமொய்த்த தனைய கூந்தல் மதனபண் டார வல்லி
கெண்டையோடொத்தகண்ணாள் கிளிமொழிவாயினூறல்
கண்டுசர்க்கரையோ தேனோ கனியொடு கலந்த பாகோ
அண்டாமா முனிவர்க்கெல்லா மமுதென வளிக்கலாமே.'

என்புழியும் காண்க அது பகுதிப்பொருள் விகுதி. உழல்வேனோ என்புழி-ஓகாரம் எதிர்மறைப் பொருட்டு. ஆனிரை துறந்து என்பதனால் கிருஷ்ண அவதாரத்தையும், மாநில மளந்து என்பதனால் திரிவிக்கிரம அவதாரத்தையும் குறித்தார். ஆலிலையில் துயில்தல்-ஊழி முடிவில் உலகமெல்லாம் அழியத் தானமட்டும் நிலைபெற்று அறிதுயில் அமர்தல். இடையர் மனைதோறுஞ் சென்று பால் தயிர் திருடி உண்டானேனும் வேதங்களால் புகழப்படும் சிறப்புடையன் என்பார், 'ஆயர் மனைசென்று பால் தயிர் அளைந்த ஆரணமுகுந்தன்' என்றார். கானவர் பயந்தமான்-வள்ளிநாயகி. (29)

## பழனி

30 தனன தந்தன தநதனதன
தனன தந்தன தந்தனதன
தனன தந்தன தநதனதன-தநததான

கனககும்பமி ரண்டுநேர்மலை
யெனநெருங்குகு ருமபைமாமணி
கதிர்சிறந்தவ டங்குலாவிய முந்துகூடம

கடையினின்றுப ரந்துநாடொறு
மிளகிவிஞ்சியெ ழுந்தகோமள
களபகுங்கும கொங்கையானையை பிணைபாரக

யவைவருங்கொளு மெனறுமேலவிலை
யிடுமடந்தையா தஙகடோதகம்
அதின்மருண்டுதா வணடவாசையில மைந்துபாயல

அவசமங்கொளு மின்பசாகர
முழுகும்வஞ்சக நெஞ்சையேயொழி
தருபதங்கதி யெமபிரானருள தந்திடாமோ

தனனதந்தன தந்தனவென
டிகுகுடிங்குகு டிஙகுபேரிகை
தகுதிதிகதிது திந்ததோவென உந்துதாளந

தமரசஞ்சலி சஞசலாவென
முழவுடுண்டுடு டுண்டுடூவென
தருணகிண்கிணி கிணகிணாரமு ழங்குமோவர்த்தம

பணிபதங்கய வெண்டிசாமுக
கரியடங்கலு மண்டகோளகை
பதறிநின்றிட நினறதோதக வென்றதோகை

பவுரிகொண்டிட மண்டியேவரு
நிசிசரன்கிளை கொன்றவேலவ
பழனியங்கிரி யின்கண்மேவிய தம்பிரானே.

(இ-ள்) தனன தந்தன தந்தன என டிகுகு டிகுகு டிகுகு பேரிகை-இந்தவகைய ஓசையையுடைய பேரிகையும், தகுதி திந்திகு திந்திமி என உந்து தாளம்-இவ்வோசையுடன் அடிக்கும் தாளமும், தமர சஞ்சலி சஞ்சலா என-துளையையுடைய சஞ்சலி சஞ்சலா என ஓசையைச் செய்ய, முழவு-மத்தளம், டுண்டுடு டுண்டுடு என-இவ்வோசையைச் செய்ய, தருணம் கிணகிணி-சிறிய கிண் கிணி, கிணகிண் ஆரமும் கிணகிண ஓசையையுடைய மணிவடங்களும், முந்த ஓதும்-முன்பு துதிக்கின்ற, பணிபதம்-யாவரும் வணங்கத் தக்க பதவியும், கயம் எண்திசாமுக கரி அடங்கலும்-இளமைபொருந்திய எட்டுத்திக்கு யானைகளெல்லாம், அண்ட கோளகை பதறி நின்றிட-அண்டங்களெல்லாம் பதறி நிற்க, நின்று நிர்த்தக என்று-நின்று தொகுதியை உடையவனே என்று, தோகை பவுரி கொண்டிட-மயில் கூத்தாட, மண்டி வரு நிசிசரன்கிளை-நெருங்கிவந்த அவுணன் சுற்றத்தை, கொன்ற வேலவ-கொன்ற வேற்படையை உடையவனே', பழனி அம்கிரியின்கண் மேவிய தம்பிரானே-பழனியாகிய அழகிய மலையில் வசிக்கின்ற தம்பிரானே', கனகம் கும்பம் இரண்டும் நேர்-பொற்குடம் இரண்டும் ஒப்பாகுமென்றும், மலை என-வடிவத்தால் மலைகளுக்கு ஒப்பாகுமென்றும்' நெருங்கு குரும்பை - ஒன்றோடொன்று நெருங்கியுள்ள

தென்னம் பிஞ்சுகளென்றும் சொல்லப்படும், மாமணி கதிர் சிறந்த வடம்-சிறந்த முத்துக்களின் மிகுந்த மாலை, குலாவிய-விளங்கிய, முந்து சூதம்-அழகில் சிறந்த மாந்தளிர் போன்ற மேனியானது, பரந்து நாள்தொறும் இளகி-பரவிந் தினந்தோறும் மென்மையாகி, விஞ்சி எழுந்த-மேல்கொண்டு தோன்றிய, கோமளப களபம் குங்குமம் கொங்கையானை-இளைய கலவைச் சாந்தையும் குங்குமத்தையும் பூசிய ஸ்தனங்களாகிய யானைகளை, இடம் ஆக-இன்பம் பொருந்தும்படி, அணைவுரும் கொளும் என்று - எவரும் பொருளாக என்று, கடையில்-வாயிலில், நின்று விலையிடும் மடந்தையர்-தாங்கள் நின்றுகொண்டு விலைபேசும் பெண்களுடைய, தோதகம் அதில் மருண்டு-வஞ்சனையில் மயங்கி, நாவல் ஆசையில்-மனத்தளர்ச்சியடைந்த ஆசையினால், நைந்து-வருந்தி, பாயல் அவசம்கொளும்-படுக்கையில் பரவசப்படும், இன்பம் சாகரம் மூழ்கும்-இன்பமாகிய கடலில் முழுகும், வஞ்சகம் நெஞ்சை ஒழித்து-வஞ்சகமுடைய மனத்தை ஒழிக்கின்ற, பதம் கதி-மேல் பதவியாகிய மோக்ஷத்தை, எம்பிரான்-எம்பெருமானே!, அருள் தந்திடாயோ-அடியேனுக்கு அருள்செய்வாயோ எ-று.

(வி-ரை) கொங்கையை யானை என்றார்-பருமையாலும் பெருமிதத்தாலும் வினைமிகுதியும் கூறுதற்கு உரிய கவர்ச்சி உடைமையாலும் என்க. கொங்கைகளே மகளிர்க்குச் சிறந்த அவயவமாதலின் அவற்றான் வரும் மயக்கத்தையே மிகுத்துக் கூறினாரென உணர்க. பெண்கள்பால் வைத்த ஆசையை

ஒழிந்தது இறைவனிடத்தில் அவர்கள்மேல் வைத்த ஆசையில் ஒரு கூறு வைக்கினும் பெருங்கதி யடையலாமாதலின், ஆசிரியர் பாட்டுத்தோறும் இவ்வாறு அருளிச் செய்வாராயினார்

'தந்தையங்கணையார் தங்கள்மேல் வைத்த
தயாவை நூறாயிரங் கூறிட்டு
அத்திலங்கொரு கூறுன் னடிமலர் மிசைவைக்கின்
அமருல களிக்கும் நின்பெருமை
பித்தனென் றொருகால் பேசுவரேனும்
பிழைத்தவை பொறுத்தருள் செய்யும்
கைத்தல மடியேன் சென்னியில் வைத்த
கங்கைகொண்ட சோளேச சரத்தானே.'

என்னுந் திருவாசகானும்,

'மங்கையர்கள் யோனிமிசை வைத்திருக்கு மாசையினை
பங்குசெய்து நூற்றிலொரு பங்கெடுத்து—கங்கையணி
வேணியரன் பாதார விந்தத்தில் வைத்தக்கால்
காணலாங் காணுகதி'

என வருஉஞ் செய்யுளானு மறிக.

பெண்கள்பால் வைத்த பற்றை ஒழித்தற்கும் அதனை இறைவன் பாற் செலுத்துதற்கும், இறைவன் அருளே இன்றியமையாதென்பார், 'எம்பிரான் அருள் தந்திடாயோ' என்றார். இதனை "அவனருளாலே யவன்றாள் வணங்கி"

என்ற திருவாசகத்தானும்,

'மனமெனு மயமா என்வயப் படாமல்
மயங்குறும் ஐம்புலவீதி, மறிபடாதோடுகின்றது முறையோ

மறித்ததை நிறுத்தி யெனுணக்கு
நினையல தூதவுவா ரிலை'

எனனும் **சிவப்பிரகாச சுவாமிகள்** திருவாக்கானும் உணர்க.

எண் திசாமுக்கரி-அஷ்டதிக்கஜங்கள் தோகை - ஆகு பெயர். நிசிசரன-இரவில் சஞ்சரிப்பவன், அசுரன். எம்பிரான்-இயல்பு விளி. வேலவ-அண்மைவிளி. (30)

## திருவேங்கடம்

31 தனதாநதன தானன தானன
தனதாநதன தானன தானன
தனதாநதன தானன தானன-தனதான.

வரிசேர்ந்திடு சேலகய லோடெனு
முழைவார்ந்திடு வேலையு நீலமும
வடுவாங்கிடு வாளவிழி மாதர்கள் வலையாலே

வளர்கோங்கிள மாமுகை யாகிய
தனவாஞ்சையி லேமுக மாயையில
வளர்மாந்தளிர் போனிற மாகிய வடிவாலே

இருள்போன்றிடு வார்குழ லீழலில
மயல்சேர்ந்திடு பாயலின் மீதுற
இனிதாங்கனி வாயமு தூறல்கள் பருகாமே

எனதாந்தன தானவை போயற
மலமாங்கடு மோகவிகாரமும
இவைநீங்கிட வேயிரு தாளமல ரருள்வாயே

கரிவாம்பரி தேர்திரள் சேனையு
முடனாந்துரி யோதன னாதிகள்
களமாண்டிட வேயொரு பாரத மதிலேகிக்

கனபாண்டவர் தேர்தனி லேயெழு
பரிதூண்டிய சாரதி யாகிய
கதிரோங்கிய நேமிய னாமரி ரகுராமன்

திரைநீண்டிரை வாரியும் வாலியு
நெடிதோங்கும ராமர மேழொடு
தெசமாஞ்சிர ராவண னார்முடி பொடியாகச்

சிலைவாங்கிய நாரண னார்மரு
மகனாங்குக னேபொழில் சூழ்தரு
திருவேங்கட மாமலை மேவிய பெருமாளே.

(இ-ள்) கரி வாம்பரி தேர் திரள் சேனையும்-யானைப் படையும், தாவுகின்ற குதிரைப்படையும், தேர்ப்படையும் திரண்ட காலாட் படையும், உடன் ஆம் துரியோதனன் ஆதிகள்-ஒன்றாகப் பொலிந்த துரியோதனன்முதலியோர், களம் மாண்டிட - போர்க்களத்திலே இறந்தொழிய, ஒரு பாரதம் அதில் ஏகி-பாரதப்போரில் சென்று, கனம் பாண்டவர் தேர்தனில்-பெருமை தங்கிய பாண்டவர்கள் தேரிலே, எழுபரி தூண்டிய-கட்டப்பட்ட மேற்செல்லும் குதிரைகளைச் செலுத்திய, சாரதி ஆகிய-சாரதியான, கதிர் ஓங்கிய நேமியன்-ஒளிசிறந்த சுதரிசன மென்னும் சக்கரத்தையுடையவனும், அரி ரகுராமன்-அரியும் ரகுராமனும், திரை நீண்டு இரை-அலைகள் மிகுந்து ஒலிக்கின்ற, வாரியும்-கடலும், வாலியும்-வாலி என்னும் குரங்கரசனும், நெடிது ஓங்கு மராமரம் ஏழொடு-மிக்கு வளர்ந்த ஏழுமராமரங்களும், தெசமாம் சிர ராவணனார்-பத்துத் தலைகளையுடைய இராவ

ணையுடைய, முடி-கிரீடமும், பொடியாக-பொடிபடும்படி, விலை வாங்கிய-வில்லை வளைத்த, நாரணனார்-திருமாலுடைய, மருமகன் ஆம் குகனே-மருமகனாகிய முருகனே!, பொழில் சூழ்தரு-சோலைகள் சூழ்ந்த, திருவேங்கடம் மாமலைமேவிய-திருவேங்கடமாகிய சிறந்த மலையில் வாழ்கின்ற, பெருமாளே-பெருமானே!, வரி சேர்ந்திடு சேல-செவ்வரி படர்ந்த சேல் மீனோ, கயலோ எனும்-கயல்மீனோ என்று சொல்லப்படும், உழை-மானையும், வார்ந்திடு வேலையும்-வடித்துச் செய்யப் பட்ட வேலையும், நீலமும்-நீலோற்பல மலரையும், வடு-மாம் பிஞ்சினையும், வாங்கிடு வாள்-பகைவரை அழிக்கும் வாளை யும் ஒத்த, விழி மாதர்கள்-கண்களையுடைய பெண்கள், வலையால்-ஆடவர் மனத்தைக் கவரும்படி வீசும் மோகவலை யாலும், வளர் கோங்கு-வளர்கின்ற கோங்கினது, இளமா முகை ஆகிய தனம் வாஞ்சையில்-இளமை பொருந்திய சிறந்த அரும்பை ஒத்த ஸ்தனங்களின்மேல் வைத்த ஆசை யாலும், முகம் மாயையில்-முகத்தினது மயக்கத்தாலும், வளர் மாந் தளிர்போல்-செழுமையான மாமரத்தினது தளிரைப் போல, நிறம் ஆகிய வடிவால்-நிறம் பொருந்திய வடிவினா லும், இருள் போன்றிடு - இருளையொத்த, வார்குழல் நிழ லில்-நீண்ட கூந்தலின் நிழலிலே, மயல் சேர்ந்திடு பாயலின் மீது உற-மையல் கொண்ட படுக்கையின்மேல் பொருந்த, இனிது ஆம் - இனிமையுடையதாகிய, கனிவாய் அமுது ஊறல்கள் - கொவ்வைக் கனிபோன்ற வாயிலுள்ள தேவா மிர்தத்தை ஒத்த ஊறலை, பருகாமே - உண்ணாமல்,

எனது ஆம் தனது ஆனவை - என்னுடைய பற்றுக்களா னவை அகன்று நீங்க, மலம் ஆம் கடுமோக விகாரமும் - மலத்தாலே உண்டாகிய மிகுந்த மோகவிகாரமும், இவை நீங்கிட - ஆகிய இவைகள் நீங்க, இருதாள் மலர் அருள்வாய் - இரண்டு திருவடிகளாகிய தாமரை மலர்களை அருளிச்செய் வாய் எ-று.

(வி-ரை) மாதர் - அழகு, காதல் - அழகையுடையவரென் றேனும் காதலிக்கத் தக்கவரென்றேனும் கொள்க, 'மாதர் காதல்' **தொல்காப்பிய சூத்திரம்** வடு - மாம்பிஞ்சு. விழியை 'வலை' என்றார் ஆடவர் மனமாகிய பறவைகள் அகப்படுத் தப்படுதலின். உள்ளக்குறிப்பை யுணர்த்தும் சிறப்புடைய தாதல்பற்றி விழியை விதந்து கூறினார் இவ்வாறே,

'மண்ணிற் சிறந்த புகழ்த்தஞ்சை வாணன் மலயவெற்பில்
பெண்ணிற் சிறந்தவிப் பேதைதன் பார்வை பெருவினையேன்
உண்ணிற் சிறந்த இருநோய்தனக்கின் மருந்தாய
கண்ணிற் சிறந்த உறுப்பில்லை யாவதுங் காட்டியதே'

என்று **பொய்யாமொழிப் புலவரும்,**

'இருநோக்கு இவளுண்கண் உள்ளது ஒருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து'

'கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க
ளென்ன பயனு மில'

எனத் தெய்வப்புலமைத் **திருவள்ளுவ நாயனாரும்,**

'அணியும் அமிழ்தும் என்னாவி மாயவன் றில்லைச் சிந்தா
மணியும்பராரறியா மறையோனடி வாழ்த்தலரிற்
பிணியுமதற்கு மருந்தும் பிறழப் பிறழ மின்னும்
பணியும் புரை மருங்குற் பெருந்தோளிப்படைக்கண்களே'

என **மணிவாசகப் பெருமானும்** அருளிச் செய்தமை காண்க.

இளமைச் செவ்வியின் அருமை தோன்ற, 'வளர் கொங்கு இளமாமுகை' என்றார். முகமாலைய என்றார் மயக்குதலின்

'கொங்கை இளநீரால் குளிர்ந்த இளஞ் சொற்கரும்பால்
பொங்கு சுழியென்னும் பூந்தடத்தில்— மங்கைதன்
கொய்தாம வாசக் குழலின் நீழல் ஆறித் தீருமே
வெய்தாம் அக்காம விடாய்'

எனப் **புகழேந்திப் புலவரும்** கூறுதல் காண்க

• நிழல்-நீழல் என நீட்டல் விகாரம் பெற்றது.

மயல் சோர்ந்திடு பாயல் என்றார், மெல்லிய தூய மலர்கள் தெளிக்கப்பட்டு அன்னத்தின் தூவி முதலிய மென்மைப் பொருள்களிட்டுச் செய்யப்பட்ட அணை முதலியவற்றை யுடையதாய நோக்கினவளவில் காமத்தீயை விரைய மூட்டுதலின். ஊறல்கள் எனப் பன்மையாற் கூறியது. கலவி விகற்பத்தாற் பற்பல காலங்களில் உண்ணுமவற்றை யெல்லாம் குறித்தற்கென்க.

வாம்பரி-தாவுங் குதிரை, பெயரெச்சம் குறைந்தது. கரி கரத்தை யுடையது, யானை; கரம்-துதிக்கை, கருமை யுடையது என்பாருமுளர்; அது, வடசொல்லாதலின்

பொருந்தாத துரியோதனனாதிகள் - துரியோதனன் தம்பியர், கன்னன் சகுனி முதலியோர். பாரதம - இங்கு பரத வம்சத்தவராலே செய்யப்பட்ட யுத்தம். கன பாண்டவர்- பெருமை பொருந்திய பாண்டவர் அவருக்குப் பெருமையாவது,

'எல்லாம் ஒறுக்கும் மதுகை யுடையாளன்
பொறுக்கும் பொறையே பொறை.'

என்றபடி பொறுமையும், வாய்மை பிறழாமையும், ஒழுக்கம் முதலியனவுமாம். நேமியன-சக்கரப்படையை யுடையவன். ஆம் - அசை நீண்டு என்பதில் குறிப்புப்பெயரெச்சத்து அகரம் தொக்கது இரைவாரி-ஒலிக்கின்ற கடல்

இராமாவதாரத்தில் வாலியையும், ஏழு மராமரங்களையும் இராவணனையும் கோதண்டத்தால் கொலை செய்தவன் என்பார், 'திரை நீண்டிரை . ராவணனார்' என்றார். இராவணனார்-ஆர் உயர்வுப்பொருள் விகுதி. தசமாஞ்சிரம்-பத்துத்தலை வில்லின் தொழில் வன்மையைக் குறிப்பால் 'சிலைவாங்கிய' என்றார். திருவேங்கட மாமலை என்பது திருப்பதி; அது வட ஆர்க்காடு ஜில்லாவிலுள்ளது (31)

## திருவானைக்கா

32 தான தத்தன தத்தன தத்தன
தான தத்தன தத்தன தத்தன
தான தத்தன தத்தன தத்தன-தன தான

ஆலம் வைத்தவிழிச்சிகள் சித்தச
ஞாக மக்கலை கற்றச மாத்திக
ளார்ம னத்தையு மெத்திவ ளைப்பவர் தெருவூடே

யார வட்டமு லைகருவி லைபபண
மாயி ரக்கல மொட்டிய ளபபினு
மாசை யபபொரு ளொககந டிபபவ ருடனமாலாய்

மேலவி ளைபபுமு சிபபும வத்தையு
மாயெ டுத்தகு லைபபொடு பிதததமு
மேலகொ ளததலை யிட்டவி திபபடி யதனாலே

மேதி னிககுள பதத னெனபபல
பாடு பட்டுபு ழுக்கொள்ம லககுகை
வீடு கட்டியி ருக்குமெ னககுநி னருடாராய்

பீலி மிககம யிறறுர கததினி
லேறி முட்டவ ளைத்துவ குத்துடல
பீற லுறறவு யுத்த களத்திடை மடியாத

பேர ரககரெ திாத்தவ ரததனை
பேரை யுகரக ளபபலி யிட்டுயா
பேய்கை கொட்டிந டிபபம ணிககழு குடனாடே

ஏலம் வைத்தபு யத்தில ணைத்தருள்
வேலெ டுத்தச மாத்தை யுரைபபவா
ஏவ ருக்கும னத்தினி னைபபவை யருள்வோனே

ஏழி சைத்தமி ழிறபய னுறறவெ
னுவ லுற்றடி யிறபபி லுத்தம
னீசன் முக்கணி ருத்தன ளித்தருள் பெருமாளே.

(இ-ள்) பீலி மிக்க - தோகை மிகுந்த, மயில துரகத்தினில்-மயிலாகிய குதிரையின் மேல், ஏறி-ஊர்ந்து, முட்ட வளைத்து - முழுவதும் சுற்றி, வகுத்து-வியூகங்கள் வகுத்து, உடல்பீறல்உற்ற-உடம்புசிதைவுபட்ட, யுத்தகளத்திடை-

போர்க்களத்தில், மடியாத-இறவாத, பேர் அரக்கர் - பெருமையுடைய அரக்கர்களுள், எதிர்த்தவர் அத்தனை பேரை-எதிர்த்தவர்கள் அவ்வளவு பேரையும், உகரம் களம் பலி இட்டு - கோபம் மிகுந்த களத்துக்குப் பலியாக இட்டு, உயர் பேய் கை கொட்டி நடிப்ப - உயர்ந்த பேய்கள் கைகளைக் கொட்டிக் கூத்தாடவும், மணிகழுகு உடன் ஆட-மணி நிறம் பொருந்திய கழுகுகள் சேர்ந்து விளையாடவும், ஏலம் வைத்த புயத்தில்-சாந்து பூசிய தோளில், அணைத்தருள் - அணைத்தருள்கின்ற, வேல எடுத்த சமர்த்தை-வேற்படையைத் தாங்கிய சாமர்த்தியத்தை, உரைப்பவர் எவர்க்கும்-கூறுவோர் எல்லோருக்கும், மனத்தில் நினைப்பவை அருள்வோனே-அவ்வவர் மனத்தில் நினைக்கின்ற எல்லாவற்றையும் அருள் செய்பவனே, ஏழ் இசை தமிழில் பயன் உற்ற-ஏழிசையையுடைய தமிழ்ப் பாசுரங்களால் பயனைப்பொருந்திய, வெண் நாவல் உற்று அடியில் பயில்-வெண்ணாவல் மரத்தை விரும்பி அதனடியில் கோயில் கொண்டிருக்கும், உத்தமன் ஈசன்-நன்மையுடைய ஈசனும், முக்கண்-மூன்று திருக்கண்களை உடையவரும், நிருத்தன்-பஞ்சகிருத்திய நடனம் புரிபவருமாகிய சிவபெருமான், அளித்தருள் பெருமாளே-பெற்ற பெருமானே, ஆலம் வைத்த விழிச்சிகள்-விஷத்தையுடைய கண்களுடையவரும், சித்தசன் ஆகமம் கலைகற்ற சமர்த்திகள்-மன்மதனுடைய ஆகமத்தின் கலைகளில் கற்றுத்தேர்ந்த வன்மையுடையவர்களும், ஆர் மனதையும் - எப்படிப்பட்டவர்கள் நெஞ்சை

யும், எத்தி வளைப்பவர்-ஏமாற்றித் தங்களை செப்பப்படுத்து வோரும், தெரு ஊடு-தெருவின் நடுவில், ஆரம் வட்டம் முலைக்கு-முத்துமாலை தரித்த வட்டமான ஸ்தனங்களுக்கு, விலை பணம் ஆயிரம் கலம்-விலையாகப் பணத்தை ஆயிரக்கல மாக, கொட்டி அளப்பினும்-கொட்டி அளந்தாலும், ஆசை அப் பொருள் ஒக்க-ஆசையானது கொடுத்த அந்தப் பொரு ளின் தொகைக்குப் பொருந்த, நடிப்பவர் உடன் மாலாய- பொய்யாகக் காட்டுகின்றவர்களுமாகிய விலைமாதர்களோடு காம மயக்கங்கொண்டு, மேல இளைப்பும் முசிப்பும் அவத்தையு மாய-அதனால் இளைப்பும் முசிப்பும் அவத்தையும் உண் டாகி, எடுத்த குலைப்பொடு பித்தமும்-மிகுந்த இருமலும் பித்த மும், மேல்கொள-மிகுந்து, தலையிட்ட விதிப்படி அதனால- தலையில் எழுதிய விதியின்படி, மேதினிக்கு உள-பூமியில், பத்தன் என-அடியவனென்று, பல பாடு பட்டு-பலவகை யான துன்பங்களை அனுபவித்து, புழு கொள் மலம் குகை- புழுக்கள் செறிந்த மலக்கூடாகிய, வீடு கட்டி இருக்கும்- வீட்டைக் கட்டியிருக்கின்ற, எனக்கு-அடியேனுக்கு, நின அருள் தாராய-தேவரீருடைய அருளைத் தருவாய் எ-று.

(வி-ரை) ஆலமவைத்த விழிச்சிகள்-நஞ்சைத் தன்னகத்தேயுடைய கண்களையுடைய பெண்கள். காமத்தை மூட்டலின் இவ்வாறு கூறினார். "மாதர் யமனும் அவர்தம் மைவிழியே வன்பாசம்" என்று சிதம்பரசுவாமிகளும்,

"உருகி உடல்கருகி யுள்ளீரல் பற்றி
எரிவ தவியாதென செய்வேன்—வரியரவ

நஞ்சிலே தோய்ந்த நளினவிழிப் பெண்பெருமாள
நெஞ்சிலே யிட்ட நெருப்பு"

என்று அம்பிகாபதியும் கூறுதல் காண்க

சித்தசன் ஆகமம்-மதனநூல். பொருளின் அளவாக போகத்தைத் தருவோரெனபார, 'ஆசை அபபொருள் ஒக்க கடிப்பவர்' என்றார். இக்கருத்தே பற்றி ஆசிரியர் திருவள்ளுவநாயனார்,

"பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில பிணந்தழீஇ யற்று." என்றும

'இழிபவருபார்ந்தோர் முந்தோர் இளையவர் கழியர் நோயார்
கழிபவர் யாவரேனும் கண்வலைப் படுநெஞ்ச [நதுகாட்டிப
மழிபவர் பொருள்கொண் டெள்ளுக் கெண்ணெய்போ [லவர்
பழிபடு போகம் விற்பார் ராவணப் பண்பு சொல்வாம்"

என்று பரஞ்சோதி முனிவரும் கூறினார்.

"புழுக்கொள் மலக்கூடு வீடு" என்றது தேகத்தை; இதன் ஆபாசத்தை.

"கமனியக் கட்மேயாயினும் பலவீத் தங்குறின்
விழைந்ருரும் பற்று
ரமிழ்தமே யானுந் துய்ப்புறிற் பலவீ யாக்கு
மிவ்வுடற் புகாறிந்த
கிமிழ்தரப் பறவு மடவருக் குரைத்துமென்
பயன்றீர்ந்து மாடிடினு
முமிழ் முடையாக்கை சுசியுறு திறைவனுண்மை
தேர்ந்துயிர் சுத்தியுறுமே."

என்று தணிகைப்புராணம் கூறுமாற்றானுந் தெளிக.

இறைவன் அன்பர்கள் மனத்தில நினைத்த பொருள்களை அருள செய்பவன என்பார், 'வேலெடுத்த சமர்த்தை யுரைப்பவர் எவருககும் மனத்தில நினைபபவை அருள் வோனே' என்றருளிச செய்தார். 'வேண்டுவார் வேண்டு வதே யீவான கணடாய்' என அபபரும, 'வேண்டத்தக்க தறிவோய் நீ' 'வேணட முழுதும் தருவோய நீ' என மணி வாசகரும் அருளிச செயதது காண்க. வெணணுவலுற் றடி யிற பயிலுத்தம ஈசன-வெணநாவல மரத்தின்கீழ பொருந்தி வாழும் மேன்மையுடைய சிவபெருமான். திருவானைக்கா திருசசிராபபள்ளிக்கு சமீபததிலுள்ள ஒரு பெரிய சிவஸ்தலம். இங்கே அபபுலிங்கம் உள்ளது. நிருத்தன்-நடனஞ் செய்வோன், நடனம-பஞ்ச கிருத்தியம், இதனை.

வெண்பா

'தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைபபிற்
சாற்றியிடும் அங்கியிலே சஙகாரம்-ஊற்றமாம்
ஊன்று மலர்பபததே உற்றதிரோ தமமுத்தி
நான்ற மலாபபததே நாடு.'

என வரும் உண்மை விளக்கச செய்யுளால உணாக. (32)

## திருக்கற்குடி

33 தனத்தத் தனத்தத் தனத்தத் தனத்தத்
தனத்தத் தனத்தந-தனதான.

குடத்தைத தகர்த்துக களிறனைத் துரத்திக்
குவட்டைச் செறுத்துக் ககசாலக்

குலத்தைக் குமைத்துப் பகட்டிச் செருக்கிக்
குருத்தத் துவந்துத் தவாசோரப்
புடைத்துப் பணைத்துப் பெருக்கக் கதித்துப்
புரட்பட் டகச்சுத் தனமாதா
புணர்ச்சிச் சமுத்ரத் திளைப்பற் றிருக்கப்
புரிந்துப் பதத்தைத் தருவாயே
கடத்துப் புனத்துக் குறத்திக் குமெத்தக்
கருத்திச் சையுற்றுப் பரிவாகக்
கனக்கப் பரியப்பாட் டகப்பட் டுமைக்கட்
கடைப்பட் டுநிற்கைக் குரியோனே
தடத்துற் பவித்துச் சுவர்க்கத் தலத்தைத்
தழைப்பித் தகொற்றத் தனிவேலா
தமிழ்க்குக் கவிக்குப் புகழ்ச்செய் பதிக்குத்
தருக்கற் குடிக்குப் பெருமாளே.

(இ-ள்) கடத்து-காட்டிலுள்ள, புனத்து-கொல்லை நிலத்தில் ஆயலோட்டிக் கொண்டிருந்த, குறத்திக்கு-வள்ளி நாயகிக்கு, மெத்த கருத்து இச்சை உற்று-மிகவும் மனத்தில் ஆசைகொண்டு, பரிவு ஆக-அன்புடனே, கனக்க பிரியப்பட்டு-மேன்மேலும் மோகங்கொண்டு, மைக்கண் கடைப்பட்டு-மைதீட்டிய கட்கடையில் அகப்பட்டு, நிற்கைக்கு-ஏக்கற்று நிற்பதற்கு, உரியோனே-உரியவனே!, தடத்து - சரவணப் பொய்கையில், உற்பவித்து-தோன்றி, சுவர்க்கம் தலத்தை-வானுலகத்தை, தழைப்பித்த - தழையச் செய்தருளிய, கொற்றம் தனிவேலா-வெற்றியையுடைய ஒப்பற்ற வேலை

யுடையோனே?, தமிழ்க்கு - தமிழ் மொழிக்கும், கவிக்கு- பலவகைப்பட்ட பாடல்களுக்கும், புகழ் செய பதிக்கு- புகழ்ச்சியையுடைய வயலூருக்கும், தருகற்குடிக்கு-மரங்கள் ஓங்கிய கற்குடிக்கும், பெருமாளே - பெருமானே', குடத்தைத் தகர்த்து-குடத்தை அழித்தும், களிறு உறை தூரத்தி- ஆனையானையைத் துரத்தியும், குவட்டை செற்று-மலையின் சிகரத்தைக் கோபித்தும், சக்ராலம் குலத்தை குமைத்து-சக்ரவாகப் பறவைக் கூட்டத்தை அழித்தும், பகட்டி செருக்கி-மருட்டிக் களிப்புக்கொண்டு, குறுகத்த துவக்குத்தவா சோர-குரு உபதேசத்தின் உண்மைகடைப் பிடித்த முனிவரும் சோர்வடைய, புடைத்து பணைத்து- பக்கம் திரண்டு பருத்து, பெருக்கக் கதித்து - பெருத்து எழுந்து, புறப்பட்ட - வெளித்தோன்றிய, கச்சுத்தனம் மாதர்-கச்சைத் தரித்த ஸ்தனங்களையுடைய பெண்கள், புணர்ச்சி சமுத்திரத்து-போகமாகிய கடலில், திளைப்புஅற இருக்க- திளைப்பில்லாமல் வாழும்படி, புரிந்து - விரும்பி, பதத்தை-திருவடிகளை, தருவாய்-அளித்தருள்வாய் எ-று

(வி-ரை) முருகப்பெருமான் சரவணப் பொய்கையில் அவதரித்துச் சுவர்க்கலோகத்தைச் சூரன் துயரினின்று பாதுகாத்தருளினர் ஆதலின், 'தடத்துற்பவித்துச் சுவர்க்கத் தலத்தைத் தழைப்பித்த கொற்றத்தனிவேலா' என்றார். அகத்தியமுனிவருக்குத் தமிழ்ச்செவி யறிவுறுத்திய பெருமான் என்பார், 'தமிழ்க்குக் கவிக்குப் பெருமாளே' என்றார்; தமிழ் என்னும் சொல் இனிமை என்னும் பொருட்டு 'தமிழ்

தழீஇய சாயலவர்' எனச் **சிந்தாமணியினும்** 'பரிவண்டு தமிழ்ப்பாட்டிசைக்குந் தாமரையே' என **இராமாயணத்தினும்**, இச்சொல் இப்பொருளில் ஆளப்பட்டிருத்தல் காண்க; இவ்வாறன்றித் தமிழ் என்பது தனித்த ழகரப்பேற்றை யுடையதென்றும், திராவிடம் என்னும் வடசொல்லே திரிந்து தமிழென்றாயிற்றென்றும் பலவாறு கூறுவாருமுளர். அவர் கூற்றெல்லாம் பொருந்தாமையைத் **திராவிடப் பிரகாசிகை** முதலிய நூல்களால் உணர்க.

இனித் 'தமிழ்' என்னுஞ் சொல்லில் வல்லினம் மெல்லினம் இடையினம் என்னும் மூன்றும் பொருந்தி யிருத்தலையும், முதலில் அகரம் அமைந்திருத்தலையும், இடையிலே இம் என்னும் எழுத்துக்கள் இருத்தலையும், இது பிரித்துப் பார்க்குமிடத்து ஐந்தெழுத்தாதலையும், எடுத்துக் காட்டி, முதலிலே நின்ற தகரமெய் தகராலயமாகிய இருதய புண்டரீகத்தை உணர்த்துமென்றும் ஆதலின் தமிழ் தெய்வமொழியென்று கூறுவாருமுளர். (33)

## திருமயிலை

34 தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன-தனதான.

அநேக பாரம லைந்துகு லைந்திட
வதன சோர்வுது லங்கிற லங்கிட
அவச மோகம்வி ளைந்துத ளைந்திட — அணைமீதே

அருண வாயநகை சிந்திய சம்பரம
அடார காருதி பஙகவி தனுசெய்து
அதர பானம ருந்திம ருங்கிற — முலைமேலவீழ்ந்
துளமும வேறு படுமபடி யொன்றிடு
மகளிர தோதக இன்பின முயங்குதல
ஒழியு மாறுதெ ளிந்துள மன்பொடு — சிவயோகத்
துருகு ஞானப ரமபர தந்திர
அறிவி னோககரு தஙகொள சிலமபணி
யுபய சீதள பஙகய மெனகழல — தருவாயே
இளகி டாவளர சந்தன குஙகும
களப பூரண கொஙகை நலமபுனை
யிரதி வேளபணி தந்தையும அந்தணர — மறையோரும்
இனிது றுதெதி ரிந்திர னண்டரு
மரக ராசிவ சஙகர சஙகர
வெனமி காவரு நஞசினை யுண்டவ — ரருள்பாலா
வளரி சாசரர தஙகளசி ரமபொடி
படவி ரோதமி டுங்குல சம்பரம
மகர வாரிக டைந்தநெ டும்புயல — மருகோனே
வளரும வாழையு மிஞ்சியு மஞசளும
இடை விடாது நெருஙகிய பஙகள
மகிமை செந்திலில வந்துறை — பெருமாளே.

(இ-ள்.) இளகிடா-இளகி, வளர்-வளர்கின்ற, சந்தனம் குஙகுமம் களபம்-சந்தனத்தையும் குங்குமத்தையும் கல

லைச்சாந்தையும் பூசியுள்ள, பூரண கொங்கை நலம் புனை-நிறைந்த வசனங்களின் அழகு அலங்கரிக்கப் பேசப்படும், இரதவேள்-இரதி நாயகனாகிய மன்மதன், பணி-வணங்குகின்ற, தந்தையும - தந்தையாகிய திருமாலும், அந்தணன் மறையோனும - அழகிய கருணையுடையவனாகிய பிரமனும். இனி பீடுறுது-மகிழ்ச்சி இல்லாமல், எதிர் இந்திரன் அண்டரும பகைவரை எதிர்க்கின்ற இந்திரனும தேவர்களும், அரஹரா சிவசங்கர சங்கர-அரஹரா சிவசங்கரா சங்கரா'; என பிநாக முருந்தசிலை உடையவர் - என்று ஓலமிட மேலே ஓங்கிவிடும ஆலகால விஷத்தை உட்கொண்டருளிய சிவ பெருமான், அருள பாலா-அருள் திருக்குமாரனே', வளர் நிசாசரர்தங்கள்-வளர்கின்ற அரக்கர்களுடைய, சிரமபொடி பட-தலைகள் தூளாகும்படி, விரோதமிடும - பகைக்கின்ற, குலம சாமபிரமன-குலத்தின் பெருமையுடையவனும், மகரம வாரி கடைந்த - சுறாமீனையுடைய கடலைக்கடைந்த, நெடும் புயல்-திரிவிக்கிரம அவதாரம எடுத்த மேகமபோலும கருநிற முடைய விஷ்ணுமூர்த்திக்கு, மருகோனே - மருமகனே', வளரும வாழையும - செழுமையாக வளர்கின்ற வாழையும், மஞ்சளும் இஞ்சியும இடைவிடாது நெருங்கிய - மஞ்சட் கிழங்கும இஞ்சிக்கிழங்கும இடைவிடாமல்நெருங்கி வளர்ந்துள்ள, மங்களம மகிமை மாநகர்-மங்கலம்பொருந்தியபெருமையையுடைய சிறந்த நகரமாகிய, செந்திலில் வந்து உறை பெருமாளே - செந்தூர்ப் பதியில வந்து பொருந்தி வாழும பெருமானே', அளகம் பாரம் அலைந்து குலைந்திட-கூந்தலா

கிய பாரம் அலைந்து சரியவும், வதனம் வேர்வு துலங்கி நலங்கிட - முகத்தில் வேர்வை விளங்கி அழகு கெடவும், அவசம் மோகமவிளைந்து-பரவசமாகும் மோகம் உண்டாகி, தளர்ந்திட-கட்டுவிட, அணைமீது-படுக்கையின் மேல், அருணம் வாயநகை சிந்திய - சிவந்த வாயிலே நகையைச் செய்த, சமபிரமம்-வேகத்தையுடைய, அடாநக நுதிபங்கம் விதம செய்து-அடாத நகத்தின் நுனியால் குறிகள் அழுந்துமபடி பலவிதம் செய்து, அதரபானம் அருந்தி-இதழூறலை உண்டு, மருங்குஇற-இடை முறியும்படி, முலைமேலவீழ்ந்து-தனங்களின்மேல் விழுந்து, உளமும வேறுபடுமபடி-மனமும் வேறாக, ஒன்றிடு மகளிர்-சேரும பெண்களுடைய, தோதகம் இன்பில முயங்குதல் - வஞ்சகத்தையுடைய இன்பத்திலே பொருந்துதல், ஒழியும ஆறு-நீங்கும்படி, தெளிந்து உளம் அன்பொடு-தெளிவுற்று மனம அன்போடு, சிவயோகத்து உருகு ஞானம-சிவயோகத்திலே மனமுருகுகின்ற மெய்ஞ் ஞானத்தையுடைய, பரமபரம - மேன்மையான, தந்திரம் அறிவோர்-ஆகம சாத்திரங்களிலே சென்ற அறிவினையுடையவர்கள், கருது - தியானிக்கின்ற, அமகொள - அழகைக் கொண்ட, சிலம்பு அணி-சிலம்பைத் தரித்த, உபய சீதளம்-இரண்டாகிய குளிர்ச்சி பொருந்திய, பங்கயம்மென் கழல் தருவாய - தாமரைமலரை ஒத்த மென்மையான திருவடிகளைத் தந்தருளுவாய் எ-று.

(வி-ரை) அருணவாய-செவ்வாய். இரதி வேள் பணி தந்தை-திருமால். அந்தண மறையோன்-பிரமன். சிவம்

என்னும் சொல்லுக்கு மங்களம் என்று பொருள. எககாலத்தும் அழியாதவா சிவபெருமானே யாதலின அவருக்குச் சிவம் என்னும் பெயர் எயதியது. "சிவனெனுமப பெயர் தமககே யுடைய செம்மேனி யெமமான்" என அப்பர் அருளிச்செய்தது காண்க.

திருமால, அயன, இந்திரன முதலிய தேவாகள கடலில விஷம் பிறந்தகாலதது அதற்கு அஞ்சி யோடிச சிவபெருமானிடதது அபயம புக, அவா அதனை வாரி யுண்டு அவர்களுககு அருள புரிநதாா ஆகலின, "இளகிடாவளா ......... .. ... நஞ்சினை யுண்டவர்" எனறாா.

மகர வாரி கடைநத நெடும்புயல்-சுறாமீன வாழும் திருபபாற கடலைக கடைநத உலகளவும நீண்ட மேகம் போனற திருமேனியையுடைய திருமால.

ஒருகாலதது திருமால திருபபாறகடலை மநதரமலையை மத்தாகவும், வாசுகியை நாணாகவும் கொண்டு ஒருபுறம் அசுரரும், மறறொரு புறம சுரரும் இழுககக கடைவித்தார். அபபோது அதில அமுதம் பிறந்தது, அதனபின் ஆலகால விஷமும் பிறநதது. அவவிஷததுக்கு அஞ்சி ஓடிய தேவர்களுக்கு அபயமளித்துச சிவபெருமான் அவர்களைக காத்தருளினார். தேவர் அமுதமுண்டு பிணி மூபபுச சாக்காடு ஒழிந்தாா என்பது புராண வரலாறு. செந்தில்-திருசசெந்தூா. இதறகுச திருசசீரலைவாய் என்றும் பெயர் வழங்கும். (34)

## திருவருணை

35 தனன தனனத தனன தனனத
தனன தனனத-தனதான

அருமா மதனைப பொருவாள கயலைக்குத
தபிலா நயனக் — கொடியார்த

மருகார புளகப புழுகார சயிலத
தனையா வலிகெட் — டுடலதாழ

இருமா நடைபுக குறைபோ யுணர்வற்
றிளையா வுளமுக — குயிர்சோர

எரிவாய நரகிற புகுதா தபடிக
கிருபா தமெனக் — கருள்வாயே

ஒருமால வரையைச சிறுதூள படவிட
டுரமோ டெறிபொற — கதிர்வேலா

உமைமா னடவிக குறமா மகளுக்
குருகா விருபொற — புயவீரா

திருமால கமலப பிரமா விழியிற
றெரியா வரனுக — கரியோனே

செழுநீர வயலசூழ் தருணை புரியிற
றிருவீ தியினிற — பெருமாளே.

(இ-ள்) ஒரு மாலவரையை-ஒப்பற்ற பெரிய கிரவுஞ்ச மலையை, சிறுதூள்பட-சிறிய தூள்களாகும்படி, உரமோடு விட்டு எறி - மார்பினோடு விட்டு வீசுகின்ற, பொன் கதிர் வேலா-அழகிய ஒளிவீசும் வேற்படையை உடையவனே!, மான் உறை அடவி-மான்கள் வாழும் காட்டிலுள்ள, குறமா

மகளுக்கு-குறவருடைய மாமை நிறம் பொருந்திய பெண்ணாகிய வள்ளிநாச்சியாருடைய காதலுக்கு, உருகா-உருகுகின்ற, இருபொன் புயம வீரா-இரண்டு அழகிய தோள்களையுடைய வீரனே!, திருமால கமலம் பிரமா - திருமாலுக்கும் தாமரை மலரில தங்கும பிரமனுக்கும், விழியில தெரியா அரனுக்கு அரியோனே-கண்களில தெரியாத சிவபெருமானுக்கும அருமையானவனே!, செழுநீா வயலசூழ்-செழுமையான நீரையுடைய வயல்கள சூழ்ந்துள்ள, அருணைபுரியின திருவீதியினில பெருமாளே-திருவண்ணாமலையின் அழகிய தெருக்களில உலம் வரும பெருமானே!, அருமாமதனை-அருமையான சிறந்த மனமதனோடு, பொரு காமப் போரைச செயயும, வாள கயல குத்து அயில ஆர-வாளையும் கயல மீனையும குத்துகின்ற வேலையும் ஒத்த, நயனம கொடியார் தம்-கண்களையுடைய கொடிய பெண்களுடைய, அழகு ஆர-அழகு நிறைந்த, தனம நல புழுகு ஆர சயிலதது-ஸதனங்களாகிய நலல புழுகு நிறைந்த மலைகளில, அணையா வலிகெட்டு உடல தாழ-சோந்து வலிமை அழிந்து உடம்பு தாழ்வடைநது, இருமா - இருமி, நடைபுக்கு - தளளாடி நடந்து, உரை போய்-சொல ஒழிந்து, உணாவு அற்று-அறிவு அழிநது, இளையா-இளைதது, உளம் உக்கு உயிர் சோர-மனமுடைநது உயிா சோாவடைய, எரிவாய நரகில-நெருபபையுடைய நரகததில, புகுதாதபடிக்கு-சேராதபடி, இருடாதம்-இரண்டு திருவடிகளை, எனக்கு அருள்வாய்-அடியேனுக்குத் தருவாயாக எ-று.

(வி-ரை) அழகார புளக புழுகார சயிலம - அழகு பொருந்திய புளகத்தையுடைய புனுகு பூசப்பெற்ற மலை போன்ற ஸ்தனங்கள். சயிலம்-உவமையாகுபெயரால் ஸ்தனங்களை உணர்த்திற்று. அலையா-அலைந்து, செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். இருமா-இருமி. இறைவன் திருவடியை வழுத்தாது வாழ்நாளெல்லாம் ஆசை யுட்பட்டு மயங்கித் திரிகின்ற நான் பிணி மூப்புச் சாக்காட்டை யடைந்து மறுமையில் எரிவாய நரகுக்கு ஆளாவேன்; அவ்வாறு ஆளாகாதபடி உய்யவேண்டுமாயின் தேவரீரது இரண்டு திருவடிகள் இன்றியமையாதென என்பார், 'எரிவாய் நரகிற் புகுதாதபடி திருப்பாதமெனக் கருளவாயே' என்றார். மால் வரை-பெரிய மலை, கிரௌஞ்சகிரி. உரம்-மார்பு, உமைமான் என்பதை மான் போன்ற என இயைக்க. கமலப்பிரமா-தாமரை மலரில் தங்கும் பிரமதேவன். திருமால் விழியில் பிரமா விழியில் எனக் கூட்டுக. திருமாலானும் பிரமனாலும் அறியப்படாத சிவபெருமானுக்கும் அருமையுடையவன் ஆதலின், உனது பெருமை பேசற்பாலது அன்று என்னும் கருத்தால் 'திருமால் கமலப் பிரமா விழியில் தெரியா அரனுக் கரியோனே' என்றார். அருணை புரி-திருவண்ணாமலை. அருணம் - சிவப்பு. செழுநீர்வயல் சூழ் அருணைபுரியென இவ்வாசிரியர் கூறியதுபோல,

'அன்னவயல் சூழருணை அண்ணாமலையார் மேல
மன்னு கலம்பகப்பா மாலைக்கு—முன்னியசீர்
மொய்க்காட்டு மேருவெனும் வெள்ளேட்டினமீதெழுதும்
கைக்கோட்டு வாரணமே காப்பு.'

எனச் சைவ எல்லப்ப நாவலரும், கூறியது காண். (35)

## பொது

36 தனனதான தானான தனனதான தானான
தனனதான தானான-தனதான.

அதலசேட னாராட வகிலமேரு மீதாட
வபினகாளி தானாட வவளோடன்

றதிரவீசி வாதாடும் விடையிலேறு வாராட
வருகுபூத வேதாள மவையாட

மதுரவாணி தானாட மலரில்வேத னாராட
மருவுவானு ளோராட மதியாட

வனசமாமி யாராட நெடியமாம னாராட
மயிலுமாடி நீயாடி வரவேணும்

கதைவிடாத தோள்வீம னெதிர்கொள்வாளி யால்நீடு
கருதலார்கள் மாசேனை பொடியாகக்

கதறுகாலி போய்மீள விசயனேறு தேர்மீது
கனகவேத கோடூதி யலைமோது

முததிமீதி லேசாயு முலகமூடு சீர்பாத
வுவணமூர்தி மாமாயன் மருகோனே

யுதயதாம மார்பான ப்ரபுடதேவ மாராஜ
னுளமுமாட வாழ்தேவர் பெருமாளே.

(இ-ள்) அதலம்-பாதலத்திலே வாழும், சேடனார் ஆட-ஆதி சேஷன் ஆடவும், அகிலம்-பூமியும், மேரு - மேருமலையும், மீது ஆட-மேலே ஆடவும், அபினம் காளி தான் ஆட-வேற்றுமையில்லாத காளி ஆடவும், அவளோடு-அக்காளியுடன், அன்று-அந்நாளில், அதிர வீசி-அதிரும்படி திரு

வடியைத் தூக்கி, வாதாடும்-வாது செய்கின்ற, விடையில் ஏறுவார் ஆட-இடபவாகனத்தின்மேல் ஆரோகணிக்கும் சிவபெருமான் ஆடவும், அருகு அவர் அருகில், பூத-பூதங்களும், வேதாளம் அவை ஆட-வேதாளங்களும் ஆடவும், மதுரம் வாணி-இனிமையையுடைய சரஸ்வதியார், தான் ஆட-ஆடவும், மலரில் வேதனார் ஆட-தாமரை மலரிலே பிரமதேவர் ஆடவும், மருவு வானுளோர் ஆட-கூட்டமாகிய தேவர்கள் ஆடவும், மதி ஆட-சந்திரன் ஆடவும், வனசம் மாமியார் ஆட-செந்தாமரை மலரில் வசிக்கும் இலக்குமி அம்மை ஆடவும், நெடிய மாமனார் ஆட-மிக்க சிறப்புப் பொருந்திய திருமால் ஆடவும், உதயம் தாமம்-ஒளி பொருந்திய மாலையையுடைய, மார்பு ஆன-மார்பையுடைய, பிரபுட தேவமாராஜன்-திருவண்ணாமலையை ஆண்டுவந்த பிரபுட தேவன் என்னும் பேரரசனது, உளமும் ஆட-மனமுங் களிப்படையவும், மயிலும் ஆடி நீயும் ஆடி-மயிலும் ஆடி நீயும் ஆடி, வரவேணும்-எம்மைக் காத்தருள வரவேண்டும், கதைவிடாத தோள் வீமன்-தண்டாயுதம் நீங்காத தோளையுடைய வீமன், எதிர்கொள் வாளியால்-தன்னை நோக்கி வருகின்ற அம்பினாலே, நீடு கருதலார்கள்-மிக்க பகைவரது பெரிய படை, பொடியாக-அழியவும், கதறுகாலி-கன்றை எண்ணிக் கதறுகின்ற பசுக்கள், போய் மீள-தத்தம் இடங்களிற்போய்ச் சேரவும், விஜயன் ஏறு-அருச்சுனன் ஏறும், தேர்மீது-தேரின்மேல் நின்று, கனகம் வேதி-பொன்மயமான துளைக்கப்பட்ட சங்கை ஊதினவரும், அலை மோதும்-

அலைகள் மோதுகின்ற, உததி மீதிலே-கடலினமேல், சாயும்-சாய்ந்து கிடக்கும், உலகம் மூடு-உலகத்தைத் அளந்துமூடிய, சீர்பாதம்-அழகிய பாதங்களையுடைய, உவணம் ஊர்தி மாமாயன்-கருடவாகனருமாகிய திருமாலினது, மருகோனே-மருமகனே', வாழ்தேவர் - அழியாது வாழ்கின்ற தேவர்களது, பெருமாளே-நாயகனே', எ-று.

(வி-ரை) மருகோனே, பெருமாளே, ஆடி வரவேணும் என வினைமுடிவு செய்க பிரபுட தேவமாராஜன் உளமும் மாட என்பது முன்னே கூட்டி உரை செய்யப்பட்டது சேடன்-ஆதிசேஷன்; ஆர்-உயர்வுப பொருளையுடைய விகுதி. அபின்னம்-அபின்னமென்றுயிராறு காளி உமாதேவியாரின் அம்சமாதலின் சிவபெருமானுக்கு அபின்னசக்தி என்பார், 'அபின்னகாளி' என்றார் பூதம் என்றதற்கு ஐம்பூதமென்றுரைப்பினும் அமையும். வேதாளமவை எனபதில அவை பகுதிப் பொருள விகுதி காளி-கருநிற முடையவள் வாணி-சொல்லப்படுபவள். மலர் - தாமரை மலர், 'பூவிற்குத் தாமரையே' என்றும் 'பூவினுக கருங்கலம் பொங்கு தாமரை' என்றும், 'பூவெனப் படுவது பொறிவாழ் பூவே' என்றும் வரும் ஆன்றோர் வாக்குக்களால, மல ரென்று வாளா கூறின் தாமரையையே குறிக்குமென உணர்க. விஷ்ணுமூர்த்தியின் புதல்வியாகிய வள்ளி நாயகியாரை மணந்து கொண்டமையான் அவரை மாமனார் என்றும், இலக்குமிதேவியை மாமியார் என்றும் கூறினர். நெடிய மாமனார் என்றதற்குத் திரிவிக்கிரம அவதாரம் கொண்டவ

ரென்று கூறினும் பொருந்தும். வீமன் தன்னை நோக்கி
வரும் அம்புகளாலேயே எதிரிகளைக் கொன்றுவிடும் பராக்
கிரமம் படைத்தவன் என்பது தோன்றக் 'கதை விடாத
தோள்வீமன் . பொடியாக' என்றனர். 'கதறு
'காலி என்றார் கன்றை நினைந்துருகுவது பசுவிற்கு இயல்பா
தலின்; 'கன்றுநினை குரல் மன்று வழிப்பட' என்றார் **மணி
மேகலை நூலாசிரியரும்.** வாளி-அம்பு, கூர்மையுடையது என
பது காரணப்பொருள். கருதலார்கள்-பகைவர்கள். மாயன்-
திருமால், மாயன் என்னுஞ் சொல்லுக்கு மாயமுடையவன்,
அதிசயமான செயலுடையவன், கருநிறமுடையவன், என்ப
பல பொருள் கூறுவர். அருணகிரிநாதர் காலத்துத் திரு
வண்ணாமலையை ஆண்டுவந்த அரசன் பிரபுடதேவன் ஆத
லின் அவனைக் குறித்தார். இங்ஙனமே ஒட்டக்கூத்தர்
குலோத்துங்கனையும் **புகழேந்திப்புலவர்** சந்திரன் சுவர்க்கி
யையும் கூறுதல் காண்க.

'தானாடினால் தன் தசை யாடும்' என்னும் பழமொழிக்
கிணங்க நீடியாடினால் இவ்வுலகமெல்லாம் பஞ்சகிருத்தியப்
படும் என்பார் இவ்வாறு கூறினார். முருகவேளும் சிவ
பெருமானும் ஒருவரே ஆதலின், இங்ஙனம் கூறியது
பொருந்தும் என்க. முருகவேளையும் சிவபெருமானையும்
வேறுபடுத்திக் கூறுவது கற்பபேதமென்றறிக. சிவபெரு
மானுடைய விடை தருமமேயாகும். இக்கருத்தைப்பற்றி
'அறனுருவாகிய ஆனேறு ஏறுதல் இறையவன் யானென
இயற்று மாறே' என்றார் **பட்டினத்துப்பிள்ளையாரும்.** உலக

முழுவதையும் ஒருகாலத்தில் விஷ்ணுமூர்த்தி இரண்டடிகளால் அளந்து விட்டாராதலின் 'உலகமுடு சீர்பாதம்' என்றார். கருடன் திருமாலுக்குப் பெரியதிருவடி என்றும், அனுமன் சிறிய திருவடி என்றும் வழங்குவர். சிவபெருமானே முருகன் என்பதைப் பின்வரும் கந்தபுராணச் செய்யுட்களால் தெளிக.

'ஈசனே அவனாடலால் மதலையாயினன் காண்
ஆசிலா அவனறுமுகத் துண்மையா லறிநீ
பேசிலாங்கவன் பரனொடு பேதகனல்லன்
தேசுலாவகன் மணியிடைக் கதிர்வருதிறம்போல்'

'ஆதலின் நமது சக்தி அறுமுகன் அவனும் யாமும் பேதக மன்றால்' (36)

## யாழ்ப்பாணம்

37 தாத்தா தானந் தத்தன தனதன
தாத்தா தானந் தத்தன தனதன
தாத்தா தானந் தத்தன தனதன-தனதான.

பூத்தார் சூடுங் கொத்தலர் குழலியர்
பார்த்தால் வேலுங் கட்கமு மதனவிடு
போர்க்கா நீடுங் கட்சர மொடுநமன் விடுதூதும்

போமற் றாய்நாளுங் கைப்பொரு ளுடையவர்
மேற்றா ளாதம் பற்றிடு ப்ரமையது
பூட்டா மாயங் காறமை விழியினர் அமுதூறல்

வாய்பத்தா ரேதஞ் செபபுபொய் விரகியா
நூற்றேய் நூலின் சிற்றிடை யிடாபட
வாட்டாய வீசுங காபபுர ம்ருகமதம் அகிலார

மாபபூ ணாரங கசசணி முலையினா
வேட்பூ ணுகங கெடடெனை யுனதாமெய
வாககான ஞானம பெறறினி வழிபட அருளாயோ

ஆத்தாள் மாலதங கசசிக கனிகையுமை
கூததா டானந தசசிவை திரிபுரை
யாட்பேய பூதஞ சுற்றிய பயிரவி புவனேசை

ஆககா யாவும பற்றியெ திரிபுர
நோககா ஏதுஞ செறறவள திருவிளை
யாட்டா லீசன் பக்கம துறைபவள பெறுசேயே

ஏத்தா நாளுந தாபபண செபமொடு
நீததாா ஞானம பாறிய குருபர
யாபபா ராயுஞ் சொற்றமி ழருடரு முருகோனே

ஏறபோா தாம்வந திசைசையின மகிழவொடு
வாய்பபாய் வீசும் பொற்பரபை நெடுமதிள
யாழ்பபா ணாபன படடின மருவிய பெருமாளே.

(இ-ள்.) ஆத்தாள - உலகத்துககுத் தாயும், மால் தங் கச்சி-திருமாலுககுத் தங்கையும், கனிகை - கன்னிகையும், உமை-உமாதேவியும, கூததாடு ஆனந்தம் சிவை - நடனம் செய்கின்ற ஆனந்தத்தையுடைய சிவையும், திரிபுரையாள்- திரிபுரையும, பேய் பூதம் சுற்றிய பயிரவி - பேயும் பூதமுஞ் சூழ்ந்த பயிரவியும், புவனேசை-புவனேசையும், யாவையும் ஆக்கா - எலலாவறறையும் படைத்து, பற்றி - காபபாற்றி,

எதிரி புரம்-பகைவர்களுடைய முப்புரத்தை, ஏதும்நோக்கா செற்றவள்-ஒன்றையும் கவனியாமல் அழித்தவளும், திரு விளையாட்டால்-அழகிய விளையாட்டால், ஈசன் பக்கம் அது உறைபவள்-சிவபெருமான் இடப்பக்கத்தில் தங்குபவளுமாகிய அம்மையார், பெறு சேயே-பெற்றருளிய புதல்வனே!, நித்தர்-துறவிகள், நாளும்-நாடோறும், தர்ப்பணம் செபமொடு-தர்ப்பணங்களுடனும் செபத்தோடும், ஏத்தா-தோத்திரம் செய்து, ஞானம் பற்றிய-உண்மை அறிவைப்பெற்ற, குருபர-குருபரனே!, யாப்பு ஆராயும்-யாப்பிலக்கணத்தை ஆராய்கின்ற, சொல்தமிழ் அருள்தரு-புகழையுடைய தமிழ் மொழியை அகத்தியனார்க்கு அருளிச்செய்த, முருகோனே-முருகனே!, ஏற்போர் தாம் வந்து-இரப்பவர் வர, இச்சையின் மகிழ்வொடு - விருப்பம் பொருந்திய மகிழ்ச்சியுடன், வாய்ப்பாய-அவர்கட்குப் பேறாய, வீசும் பொன்பிரபை-வீசுகின்ற பொன்னினது ஒளியையுடைய, நெடுமதிள் - நீண்ட மதிலையுடைய, யாழ்ப்பாணயன்பட்டினம்-யாழ்ப்பாணயன் பட்டினத்தை, மருவிய சேர்ந்து எழுந்தருளியிருக்கும், பெருமாளே-பெருமானே!, பூத்தார் சூடும்-பூமாலையை சூடிய, கொத்து அலர் குழலியர் - கொத்தாகிய மலர்களையுடைய கூந்தலையுடையவர்களாய, பார்த்தால்-நோக்கினால், வேலும் கட்கமும்-வேலும் வாளும், மதன் விடு - மன்மதன் விடுகின்ற, போர் கூர் நீடும் கண சரமொடு-போரைச் செய்யும் கூரிய சிறந்த கண்ணையுடைய அம்பும், நமன்விடுதூதும்-இயமன் விடுகின்ற தூதுவனும், போல-போல, தாய்-தாவி,

நாளும்-எப்பொழுதும், கைப்பொருள் உடையவர் - கைப்பொருளுடையவர்களின், மேல்தாளார்-மேலே தமது அடிகளை நீட்டுகின்றவர்களும், தம் பற்றிடு பிரமை அது - தம்மைப் பற்றிக்கொள்ளும் ஆசையை, பூட்டர் மாயம் கற்ற-பூட்டும் மாயவித்தைகளைத் தெரிந்த, மைவிழியினர்-மை தீட்டிய கண்களுடையவர்களாய், அமுது ஊறல் - அமுதத்தை ஒத்த சுவையையுடைய ஊறலை, வாய்த்தார்-வாய்க்கப்பெற்றவர்களாய், பேதம் செப்பு பொய் விரகியர் - வேற்றுமைப்பட்டுப் பேசும் பொய்யையும் தந்திரத்தையும் உடையவர்களாய், நூல்-ஆடையணிந்த, தேய்நூலின் சிறு இடை இட்டார்பட-மெல்லிய நூலையொத்த சிறிய இடை வருந்த, வாட்டாய வீசும்-பக்கமாக மணம் வீசும், காப்புரம் மிருகமதம் அகில் ஆரம்-கற்பூரமும் கஸ்தூரியும் அகிலும் சந்தனமும் பூசிய, மாபூண ஆரம் கச்சு அணி முலையினர்-பெரிய ஆபரணமாகிய முத்துமாலையையும் கச்சையையும் அணிந்த ஸ்தனங்களையுடைய பெண்களின்மேல், வேள் பூண் எனை-விருப்பங்கொண்ட அடியேனுடைய, ஆகம் கெட-பாசவுடம்பு நீங்க, உனது மெய்வாக்கால் - தேவரீருடைய உண்மை வாக்கால், ஞானம் பெற்று-மெய்ஞ்ஞானத்தை அடைந்து, இனி வழிபட - இனிமேலேனும் துதித்தொழுக, அருளாய் - அருள் செய்வாய் எ-று.

(வி-ரை) கண்களை நமன் விடுதூது என்றார் நோக்கினார் உயிரை வவ்வுதலின், 'கூற்றமோ கண்ணே பிணையோ மடவரல் நோக்கம் இம்மூன்றும் உடைத்து' என்பு திருக்

**குறளும்** அதற்கு **பரிமேலழகர்** கூறிய உரையும் இங்கு நோக்கற்பாலன.

‘கூற்றமோ - என்னை வருத்துதலுடைமையாற் கூற்றமோ, கண்ணோ-என்மேலோடுதலுடைமையாற் கண்ணோ, பிணையோ-இயல்பாக வெருவுதலுடைமையாற் பிணையோ, அறிகின்றிலேன், மடவரல்நோக்கம்இம்மூன்றுமுடைத்து- இம்மடவரல் ‘கண்களின்நோக்கம் இம்மூன்றன் றன்மையையு முடைத்தாயிரா நின்றது.’

பிரமையது என்பதில், அது பகுதிப்பொருள் விகுதி. பூட்டார்-செய்யார் என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம் பல வகைப்பட்ட பொய்யக் கருத்துக்களைக் கண்கள் வாயிலாகத் தெரிவித்து ஆடவரை மயக்கலின் ‘மாயங் கற்றமை விழியி னர்’ என்றார் ‘சொல்லு மாடுப கண்ணினனே’ என வரும் **குறுந்தொகையடியையும்** ‘நாட்டமிரண்டும் அறிவுடம் படுத்தற்குக் கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்’ என்ற **தொல்காப்பியர் சூத்திரத்தையும்** நோக்குக. மெய் வாக்கு-உண்மை வாசகம் சிவபெருமானுக்குரிய செயல்களெல்லாம் உபசாரத்தால் உமாதேவியாருக்கும் ஏற்றிக் கூறப்பட்டன. யாப்பு பாட்டு. மதில்-மதிள் என்பதன் போலியாயிற்று. யாழ்ப் பாணயன் பட்டினம் என்பது நடுநாட்டில் விருத்தாசலத் துக்கு சமீபத்திலுள்ள திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் திரு அவதார ஸ்தலமாகிய புலி எருக்கத்தம் புலியூராக இருக்கலாமெனத் திருப்புகழ் பதிப்பாசிரியர் ஊகிக்கின் றார். (37)

## பொது

38 தனதனன தனதனன தானான தானதன
தனதனன தனதனன தானான தானதன
தனதனன தனதனன தானான தானதன-தந்ததான.

உறவினமுறை கதறியழ வூராரு மாசையுற
பறைதிமிலை முழவினிசை யாகாச மீதுமுற
வுலகிலுள பலரரிசி வாய்மீதி லேசொரியு மந்தநாளில

உனதுமுக கருணைமல ரோராறு மாறிருகை
திரளபுயமு மெழிலபணிகள வாகாது நீளவிழிய
முபயபத மிசைகுலவு சீரேறு நூபுரமும அந்தமாயும்

மறையமரைய யமராதரு பூமாரியே சொரிய
மதுவொழுகு தாவிலமணி நீடுதமு நூலொளிர
மயிலினமிசை யழகுபொலி யாளாயமு னடியா வந்துகூட

மறலிபடை யமபுரமு மீதோட வேபொருது
விருதுபல முறைமுறையி லேயூதி வாதுசெயது
மதலையொரு குதலையடி நாயேனையாளவிவண் வந்திடாயோ

பிறையெயிறு முரணசுரா போராது பாரில்விழ
அதிரவெழு பவிபுலக நீரேழு மோலமிட
பிடிகளிறி னடலநிரைகள் பாழாக வேதிசையி னிறநாகம்

பிரியநெடு மலையிடிய மாவாரி தூளியெழ
பெரியதொரு வயிறுடைய மாகாளி கூளியொடு [தீரா
பிணநிணமு முணவுசெய்து பேயோடு மாடல்செய வென்ற-

குறமறவர் கொடியடிகள் கூசாது போய்வருடக்
கரடிபுலி திரிகடிய வாரான கானின்மிகு
குளிர்கனிற் றினைமாம தேயாகி நீடியுயர் குன்றுலாவி
கொடியவொரு முயலகனின் மீதாடு வாருடைய
வொருபுரம துறவளரு மாதாபெ றுவருள்செய
குமரகுரு பரமமா மனூடா பேணவருள் தம்பிரானே.

(இ-ள்) பிறை எயிறு - பிறைச்சந்திரனை யொத்த பற்களையுடைய. முரண் அசுரர் - போர்செய்யும் அவுணர்கள், பேராது - நிலைபெயராமல், பாரில் விழ - பூமியில் விழவும், எழு புவி அதிர - ஏழு உலகங்களும் நடுங்கவும், உலகம் ஏழ் ஏழும் தலமிட - பதினான்கு உலகமும் ஓலமிடவும், பிடி களிறின் - பெண்ணும் ஆணுமாகிய யானைகளின், அடல் நிரைகள் - போரிலேயுள்ள அணிகள், பாறாக - பாறாகவும், திசையில் நின்ற - திசைகளில் நிலைபெற்றுள்ள, நாகம் பிரிய - அஷ்ட கஜங்கள் உடல் பிரியவும், நெடுமலை இடிய - உயர்ந்த மலைகள் இடியவும், மாவாரி - பெரிய கடலில், தூளி எழ - புழுதி யெழும்பவும், பெரியது ஓர் வயிறு உடைய - பெரிய வயிற்றையுடைய, மாகாளி - பெருமை பொருந்திய காளிதேவி, கூளியொடு - பூதங்களோடு, பிணம் நிணமும் உணவு செய்து - பிணத்தின் கொழுப்பையுமுண்டு, பேயோடும் ஆடல் செய - பேயோடு கூத்தாடவும், வென்ற - வெற்றிகொண்ட, தீரா - அஞ்சாத வன்மையுடையவனே!, குறமறவர் கொடி - வேடர்கள் பெற்ற பூங்கொடிபோன்ற வள்ளிநாயகியாரது, அடிகள் - திருவடிகளை, கூசாது - நாணமில்லாமல், போய் வருட - போய்த் தடவுதற்கு, கரடி புலி - கரடியும் புலிகளும், திரி - திரிகின்ற, கடிய-

கடுமையான, வார் ஆனகானில்-நீண்ட காட்டில், மிகு-சிறந்த குளிர்-குளிர்ந்த, கனி இன-வேங்கையினது இனிய, இளம் மரம் அது ஆகி-இளமை வாய்ந்த மரமாகி, நீடி-சிறந்து, உயர் குன்று உலாவி-உயர்ந்த குன்றுகள் தோறும் உலாவி, கொடியது ஒரு-கொடுமையையுடைய ஒரு, முயலகனின் மீது ஆடுவார் உடைய-முயலகன் என்னும் பூதத்தின்மேல் நடனம் செய்கின்ற சிவபெருமானது, ஒரு புறம் அது-ஒரு பக்கம், உறைவளரும்-பொருந்தவளாகின்ற, மாதா-உமாதேவியார், பெறு-பெறுதுபெற்று, அருள் செய-அருளைச்செய்கின்ற, குமரகுருபர-குமரனாகிய குருபரனே!, அமரர் வான் நாடர்-இறவாமையையுடைய தேவர்கள், பேண அருள்-தொழ அருள் செய்கின்ற, தம்பிரானே-தலைவனே!, உறவின் முறை-சுற்றத்தார், கதறி அழ-ஓலமிட்டு அழவும், ஊராரும் ஆசை அற-ஊரிலுள்ளவர்களுடைய ஆசை நீங்கவும், பறை திமிலை முழவின் இசை-பறை சல்லரி தம்பட்டங்களினுடைய ஓசை, ஆகாசம் மீது உற-ஆகாயமளவும் கேட்க, உலகில் உள பலர்-உலகத்திலுள்ள பலர், அரிசி வாய்மீதில் சொரியும்-அரிசியை வாய்மீதிலே பெய்கின்ற, அந்த நாளில்-அந்த நாளில், உனது முகம்-தேவரீரது முகங்களாகிய, கருணை மலர்-அருளாகிய மலர்கள், ஓர் ஆறும்-ஆறுடனும், ஆறு இரு கை-பன்னிரண்டு கைகளுடனும், திரள் புயமும்-திரண்ட தோள்களுடனும், எழில் பணி கொள்-அழகிய குண்டலத்தை அணிந்த, வார் காதும்-நீண்ட திருச்செவிகளுடனும், நீள் விழியும்-நீண்ட கண்களுடனும், உபய பதம்

மிசை-இரண்டு திருவடிகளிலும், குலவு சீர் ஏறு நூபுரமும்-ஒளிவிளங்கும் சிறப்புமிக்க சிலம்புகளுடனும், ஆரந்தம் மார்பும்-அழகிய மார்புடனும், மறை அறைய-வேதங்கள் கோஷிக்க, அமரர் தரு-தேவர்கள் கற்பகத்தருவினின்று, மது ஒழுகு-தேன் ஒழுகுகிற, பூமாரி சொரிய-பூவாகிய மழையைப் பொழிய, உதர வில-உதர பந்தனமாகிய ஒளியைக் கொண்ட, மணிமீது-மணி வடத்தின்மேல், முந்நூல் ஒளிர-முப்புரி நூல் விளங்க, மயிலின் மிசை-மயிலின்மேல், அழகு பொலி ஆளாய-அழகு விளங்குகின்றவராய், முன-முன்னே, ஆர் அடியார் வந்து கூட-அரிய சிவனடியார் வந்து சேர, மறலி படை-யமனுடைய படைகள், எமபுரம்மீது ஓட-யமபட்டணத்துக்கு ஓடும்படி, பொருது-சண்டையிட்டு, விருது பல வெற்றிச் சங்கு பலவற்றை, முறை முறையிலே ஊதி-முறை முறையே ஊதி, வாதுசெய்து-தாக்கித்து, மதலை-சிறுவனும், குதலை-அறிவில்லாதவனுமாகிய, அடி நாயேனை-தாழ்ந்தவனாகிய என்னை, இங்ஙன-இவ்வாறு, ஆள-ஆளுவதற்கு, வந்திடாயோ-வரமாட்டாயோ? எ-று

(வி-ரை) திமிலை-சல்லரி முழவு-மத்தளம் மணி-ஆபரணம். நூபுரம்-சிலம்பு. உதரம்-வயிறு. வில-ஒளி. குதலை-அறிவிலான் கணி-வேங்கைமரம். முயலகன் - ஒருபூதம். ஆணவமலத்தைக் குறிக்கும். 'கானில் மிகு குளிர் கணியின் இள மரமதே யாகி' என்றது முருகப் பெருமான் வள்ளி நாயகியாரைக் காதலித்த ஞான்று வேடர்களுக்கஞ்சி வேங்கைமரமாக நின்ற செய்தியைக் குறித்தது. தேவர்களுக்குத்

தேவனாகிய முருகப்பெருமான் ஒரு வேடச்சிறுமியை விழைந்து தன் பெருமைக்குத் தக்கதன்றென்று, சிறிதும் நினையாமல் அவளது அழகிய கால்களைக் கூசாது வருடினான் என்பது தொனிக்கக் 'குறமனவா கொடியடிகளை கூசாது போய வருட' என்றார்.

உமாதேவியார் வாமபாகத்தில் அமர்ந்தருள்பவராகலின் 'ஒரு பாகத்து உறைபவளரும நாதர்' என்றார். பெற்ற அற்புதத் தெய்வக் குழவி என்பார், 'மாதா பெறு அருள் செய குமர குருபர' என்றார். பெறு என்பதன் வினையெச்ச விகுதி விகாரத்தால் தொக்கது. குமரகுருபர-அண்மை விளி. புரமது, அது-பகுதிப் பொருள் விகுதி. உயிர் போகின்ற காலத்தில் தேவரீரது திவ்வியதரிசனத்தை அடியேனுக்குக் கொடுத்தல் வேண்டும் என வேண்டினார்.

இவ்வாறே பட்டினத்துப் பிள்ளையார்,

'கல்லா யெனக்கு மனுவொன்று தந்தருள் ஞானமில்லாப்
பொல்லா வெனைக்கொன்று போடும் பொழுதியல் பூசைசெ
சொல்லா நற்கோயில் நியமம் பலவகைத் தோத்திரமும்பம்
எல்லா முடித்தபின் கொல்லுகண் டாயகச்சி யேகம்பனே.

என்றருளிச் செய்ததையும், திருஞானசம்பந்தர்,

'புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
யறிவழிந்திட் டைம்மேலுந்தி
அலமந்த போதாக வஞ்சேலென் றருள
செய்வான் அமருங்கோயில்

சனகற் குமரகத் தியபுலஸ்த் தியசநற்
குமரர்க்கு மநுக்ர ஹமெய்ப் பலகைச்
சதுபத் துநவப் புலவர்க்கும் விபத் திலிஞான

படலத் துறுலக் கணலக் கியதமிழ்த்
த்ரயமத் திலகப் பொருள்வ்ருத் திபினைப்
பழுதற் றுணர்வித் தருள்வித் தகசற் குருநாதா

பவளக் கொடிசுற் றிப்பொற் கமுகிற்
றலையிற் குலையிற் பலமுத் திரள்செய்ப்
பழநிப் பதிவெற் பிணிலற் குமரப் பெருமாளே.

(இ-ள்) சடிலத்தவன்-சடையையுடைய சிவபெருமான், இட்ட-கொடுத்த சாபத்தால், விசிட்டம் குலத்து-சிறந்த குலத்தில், ஒரு செட்டி இடத்தின் உதித்து அருள-ஒரு செட்டியின் வீட்டில் தோன்றியருளிய. வித்தகம் ருத்ர ஜன்மன் பெயர் செப்பிபிட-ஞானத்திற் சிறந்த உருத்திர சன்மன் என்னும் பெயரைச் சொல்ல, பரிவால்-அன்பால், சனகர்க்கும் அகஸ்திய புலஸ்திய சனற்குமாரர்க்கும்-சனகர் முதலாகிய நால்வருக்கும், அநுக்கிரக-அருள்புரிந்த, மெய்ப் பலகை-சங்கப் பலகையை, சதுபத்து நவப் புலவர்க்கும்-சங்கப்புலவர் நாற்பத்தொன்பது பேருக்கும், விபத்தி இல் ஞானம் படலத்து உற-வேற்றுமையில்லாத ஞான படலத்திலே பொருந்திய, லக்கண லக்ய-இலக்கண இலக்கிய செறிவையுடைய, தமிழ் த்ரயம் அதில்-இயல் இசை நாடகம் என்னும் மூவகைப்பட்ட தமிழில், அகப்பொருள் விருத்தியினை-அகப்பொருளின் விரிவை, பழுது அற்று-குற்றம்

நீங்க, உணர்வித்தருள-புலப்படுத்தியருளும், வித்தக சற்குரு நாதா-ஞானத்தையுடைய உண்மைக் குருநாதனே!, பவளம் கொடி சுற்றிய-பவளக்கொடியால் சூழப்பட்ட, பொன் கமுகின் தலையில் குலையில்-அழகிய பாக்குமரத்தின் உச்சியின் குலைகளிலே, பலமுத்து உதிர்-பல முத்துக்கள் உதிர்கின்ற-செய் பழநிபதி-வயல்களையுடைய பழநி என்னும் திருப்பதியிலுள்ள, வெற்பினில் - மலையின் மேவிவாழும், நல்குமரன் பெருமாளே - நல்ல முருகனாகிய பெருமானே!, கடலை சிறைவைத்து - கடலைச் சிறையிலிட்டு, மலர் பொழிலை - பூக்களையுடைய சோலையிலே, பிரமரத்தை உடல் பொறியிட்டு - வண்டுகளை உடம்பிலே முத்திரையிட்டு, மடு கமலத்தை மலர்த்தி - மடுவிலேயுள்ள தாமரை மலர விரியும்படி செய்து, விடத்தை இரப்பவன் ஊணு கருதி - விஷத்தைப் பிச்சை எடுப்பவனுக்கு இரையாகும்படி எண்ணி, சருவி கயலை-பிறழும் கயல்மீனை, கயம் உட்படுவித்து-குளத்துள் புகும்படி செய்து, உழையை கவனத்து அடைசி-மானை விரைவாக ஓடும்படி செய்து, கணையை கடைவித்து-அம்பைக் கடையும்படி செய்து, வடுதனை உப்பினில் மேவி - மாம்பிஞ்சின் பிளவை உப்பில் போட்டு, அடலை செயல் சத்தியை-போர்த்தொழிலையுடைய வேலை, அக்கினியில் பதிவித்து-நெருப்பில் புகும்படிசெய்து, யமனப்ரபுவை துகைத்து-யமனாகிய பிரபுவை உதைபடச் செய்து, அரி கட்கம்-பகைவர் உடலைவெட்டும் வாளை, விதிர்த்து முறித்து-சிதறும்படி முறித்து, மதித்த சகோரம் - மேன்மையாகக்

கூறப்பட்ட சகோரப்பறவை, அலற-அலறும்படி, பணி ரத்ந மணி குழையை-தாழ்ந்த ரத்ந இழைந்த அழகிய குண்டலத்தை, சிலுகிட்டு-துன்பஞ்செய்து, மை இட்டு-மை எழுதி, ஒளி விட்டு மருட்டுதல் உற-ஒளியை வீசி மயக்குதலையுடைய, பொறிச்சியர் கண்கடையில்-காமப்பொறிகளை யுடைய பெண்களின்கடைக் கண்ணில், படுவேனோ-அகப் படுவேனோ? எ-று.

(வி-ரை.) இங்குக் கூறப்பட்ட கண்வருணனை மிகவும் சமத்காரமாகவும் நயமிகுந்தும் உள்ளது. கண்ணுக்கு அழகினால் தோற்ற கடல் வேல் முதலிய பொருள்கள் ஒவ்வொரு வகையாகத் தண்டிக்கப்பட்டன என்று கூறும் சதுரப்பாடு மகிழ்ச்சி பயக்கத்தக்கது. கண்ணுக்குத் தோற்ற கடல் சிறையிலே வைக்கப்பட்டும், வண்டுகள் உடம்பிலே விலங்கிடப்பட்டும், தாமரை மலர் மலர்த்தப்பட்டும், நஞ்சு உண்ணப்பட்டும், கயல்மீன் குளத்துட் படுத்தப்பட்டும், மான் ஓட்டுவிக்கப்பட்டும், அம்பு கடைவிக்கப்பட்டும், மாம்பிஞ்சு உப்பிட்டப்பட்டும், வேல் நெருப்பில் காய்ச்சப்பட்டும், இயமன் சிவபெருமானால் உதையுண்டும், கட்கம் முறிக்கப்பட்டும், சகோரம் அலறும்படி செய்தும், தண்டிக்கப்பட்டன என்று சொல்நயந் தோன்றக் கூறினார்.

சிறைவைத்தல்-சிறையில் வைக்கப்படுதல்; ஒரு பக்கமாக அமைக்கப்படுதல். உடல் பொறி யிடல் - உடம்பில் விலங்கிடப் பெறுதல்; உடம்பில் வரி பெற்றிருத்தல்; மலர்த்தல்-மலரும்படி செய்தல்; விரியும்படி செய்தல், அதாவது

துன்பத்தினால் உடம்பு கிழியுண்டு விரிதலாம். விடத்தைத் திரப்பவன் ஊணாகக் கருதி - நஞ்சைச் சிவபெருமானுடைய உணவாகும்படி எண்ணி, கயம் உட்படுவித்து - குளத்துள் வாழ்தல், குளத்துள்ளே அமிழ்வித்தல். உழையைக் கவனத்து அடைசி-மானை விரைந்தோடும்படி அடைவித்து; மான் விரைந்தோடுதல் இயல்பு. கணையைக் கடைதல்-கணை செய்யப்படுங் காலத்துக் கடையப்படுதல், தோற்றதனால் கடையப்படுதல். வடு-மாம்பிஞ்சு, உப்பினில் மேவல்-உப்பிடுதல், உப்பிட்டுத் துன்பப்படுதல். சத்தியை அக்கினியிற்புகுவித்தல், வேல் வடித்துச் செய்யப்படுங் காலத்து நெருப்பிற் காய்ச்சப்படுதல். தோற்றமையான் நெருப்பிலிடுதல் எமப் பிரபுவைத் துகைவித்து-எமனைச் சிவபெருமானால் உதையுண்ணும்படி செய்தல். கடகம்-வாட்படை, அதனை முறித்தலாவது ஒடித்தலும், வளைத்தலுமாம். சகோரம் அலறல்-சகோரப் பறவை துன்ப மிகுதியால் அலறுதலென்றும், இயற்கையாகக் கூவுதலென்றுங் கொள்க. பொறிச்சியர்-பொறியையுடையவர்; பொறி-கட்பொறி, இயந்திரம். கட்கடை என்றது நோக்கம். கட்கடையில் மிகுதியும் வெளிப்படுதல் நோக்கி இவ்வாறே **மணிவாசகப் பெருமானார்,**

> பஞ்சாய வடிமடவார் கடைக்கண்ணால் இடர்ப்பட்டு
> நெஞ்சாய துயர்கூர நிற்பேனுன் னருள்பெற்றேன்
> உய்ஞ்சேனா னுடையானே யடியேனை வருகவென்
> றஞ்சேலென் றருளியவா றார்பெறுவா ரச்சோவே.

எனக் கடைக்கண்ணை விதந்து எடுத்தோதுதல் காண்க.

முருகப்பெருமான் வணிகர் குலத்தில் சிவபெருமான் திருவாணையின்படி உதித்தருளி உருத்திரசன்மர் என்னும் திருநாமத்துடன் விளங்கினர். ஆதலின், 'சடிலத்தவனிட்ட விசிட்டகுலத்து ஒரு செட்டியிடத்தின் உதித்து அருள வித்தக உருத்திரசன்மப் பெயர் செப்பியிட' என்றருளிச் செய்தார். இவ்வரலாற்றை இறையனார் அகப்பொருளுரையின் கண்ணும் காண்க.

உருத்திரசன்மன்-உருத்திரனுக்குப் பிறந்தவன், சன்மா என்பதைச் சருமன் எனத் திருத்திப் பொருளில் முரண்பட்டு இடர்ப்படுவாருமுளர். மெய்ப் பலகை-சங்கப் பலகை; புலமை யுள்ளவருக்குமட்டும் இடந்தரலால். சதுபத்து நவப் புலவர் - சங்கப்புலவர் நாற்பத்தொன்பதின்மர். விபத்தி-வேற்றுமை, தமிழ்த்திரயம்-முத்தமிழ், அதாவது இயல் இசை, நாடகம். பழுதற்று என்னும் வினையெச்சம் சொல் பிரியினும் பொருள் பிரியா வினைக்குறை என்னும் விதியின்படி திரித்துப் பொருளுரைக்கப்பட்டது. தமிழுக்கு முருகப்பெருமான் ஓர் ஆசிரியர் ஆதலானும், முதற் சங்கத்திலிருந்து அதனை ஆராய்ந்தமையாலும், 'தமிழ்த் திரயமதில் அகப்பொருள் விருத்தியினைப் பழுதற் றுணர்வித்தருள் வித்தக சற்குருநாதா' என்றருளிச்செய்தனர் (39)

40 தத்தத்தத் தத்தத்தத் தன
தத்தத்தத் தத்தத்தத் தன
தத்தத்தத் தத்தத்தத் தன - தனதான

முத்துக்கருச் சிட்டிக்குப்பிற
டித்துச்சுகக் கைப்பிற் சுற்றிய
முற்பக்கத் திற்பொற் புற்றிட நுதல்மீதே

முகயபபச சைபபொட்டிட்டணி
ரநகைசுட் டிப்பொற்புற்றிட
முசசட்டைச சித்ரககட்டழ கெழிலாடத்

திததிககச சொற சொற்ஸபரிதம்
நசசுககட கறபுசசொககியா
செபபுககொக ககககசஃபபெறு தனமேரு

திடடத்தைப பறறிபபாபல
லசசைககுட படடுத்தொட்டுயிர்
சிககிசசொக கியகெடடிபபடி உழலவேனோ

மெத்தத்தாக கத்தைத்தித்திமி
ஞிசசித்தத் தி பத்தரதொடு
மெசசிசசொாக கததிசி ரம அருளவாயே

விததைககுக காத்தருததறபர
முககட்சித் தாககுபபுத்திர
விசசித்ரச செசசைககதிமை புணையோனே

வித்யககப பத சித்தாக
ளொடடுத்திய குக்குட்பட்டவ
ஷைடைககப புறபபத்தாகள அமரோரும்

நெட்டுக்குப புட்பத்தைக்கொடு
முற்றத்தாற றுசசிக்கப்பழ
நிக்குப்பட் டத்துக்கு ற்றுமை பெருமாளே.

(இ-ள்) விததைக்கு காத்திரு - சகலகலை ஞானங்கட்கும் கர்த்தாவும், தற்பரம் முக்கண் சித்தர்க்கு புத்திர - தனக்குத் தானே பரமானவரும் மூன்று கண்ணையுடைய சித்தருமாகிய சிவபெருமானுக்குப் புதல்வனே!, விசித்திரம் செச்சை

கத்திகை புனைவோனே - அழகிய வெட்சிமாலையை அணி பவனே', நித்தியம் கற்பத்தில் சித்தர்கள் - நித்திய கற்பத்தி லுள்ள சித்தபுருஷர்களும், எட்டு திக்குள் படவர்-எட் டுத்திசைகளிலும் வசிப்பவர்களாகிய, நிஷ்டைக்கு அற்பு உற்ற பத்தர்கள் - நிஷ்டானுபூதியை விரும்பிய அன்பர் களும், அமரோரும்-தேவர்களும், நெட்டுக்கு - மனவுறுதி யுடன், புட்பத்தை கொடு - மலர்களைக்கொண்டு, முற் றுந்து உற்று - கோயில் முற்றுந்துச் சென்று, அர்ச்சிக்க- அருச்சனை செய்ய, பழனிக்குள் - பழனிமலைக்குள், பட் டத்துக்கு உற்று உறை பெருமாளே - சிங்காசனத்துக்குப் பொருந்தி உறைகின்ற பெருமானே', முத்துக்குச்சு இட்டு- முத்துக்குச்சு என்னும் ஆபரணத்தைத்தரித்தும், குப்பி முடித்து-குப்பிமுடித்தும், சுக்கை-மாலையை, பின் சுற்றியும்- பின்னே சூழவிட்டும், முன் பக்கத்தில் - முன்பக்கத்தில், பொற்பு உற்றிட-அழகு பொருந்த, நுதல்மீது-நெற்றியின் மேல், முக்கிய பச்சை பொட்டு இட்டு-முக்கியமான மரகத திலகம் தீட்டியும், அணி-அழகிய, ரத்நம் சுட்டி-இரத்தி னம் வைத்திழைத்த சுட்டி யென்னும் ஆபரணம், பொற்பு உற்றிட-பொலிவுபெற்று விளங்கவும், முச்சட்டை-ஒழுங் காகவுள்ள, சித்ரம் கட்டு அழகு எழில் ஆட-சித்திரவேலை கள் செய்த ஆடையில் அழகும் தோற்றமும் விளங்கவும், தித்திக்க-இனிக்கும்படி, சொல்சொல-சொல்லுகின்ற சொல் லையும், துப்பு இதழ்-பவளம்போன்ற இதழையும், நஞ்சுகண்- விஷம்பொருந்திய கண்ணையும் உடைய, கற்பு சொக்கியர்-

கற்பனைகள் தெரிந்து ஆடவரை மயக்குகிற மாதர்களாகிய பெண்களுடைய, செப்புக்கு ஒக்க - கலசத்துக்கு ஒப்பென்று சொல்லும்படி வட்டமாகத் திரண்ட, கச்சு பெறுதனம் மேரு-கச்சைத் தரித்த ஸ்தனமாகிய மேருமலைகளின் திட்டத்தைப் பற்றி தொட்டு-மேட்டைப் பிடித்துத் தொட்டு, பல பல்லசனைக்கு உட்பட்டு-பலவகையான நாணமுடைய செயல்களுக்கும் மனம்பொறுத்து, உயிர் சிக்கி சொக்கி-உயிர் அகப்பட்டு மயங்கி, கெட்டு இப்படி உழலவேனோ - அறிவுகெட்டு இவ்விதமாக வருந்துவேனோ?, மெத்த துக்கத்தை-மிக்க துயரத்தை திதி-சதிசெய்து, இனி சித்தத்தில - இனிமேல் மனத்தில், பத்தொடு முயற்சியோடு, மெச்சி சொக்கத்தில-பாராட்டிச் சொக்கலோகத்தில், சிற்பரம் அருள்வாய-ஞானத்தின் மேம்பாட்டை அருள்செய்வாய் எ-று.

(வி-ரை) சுக்கை-பூமாலை. பொற்பு-அழகு. நச்சுக்கண்-நஞ்சையொத்த கண்; வலித்தல் விகாரம் பெற்றது. தன மேரு திட்டம் - மேருவின் அளவையொத்த ஸ்தனங்கள். சொக்குதல்-மயங்குதல். சிற்பரம் - மேன்மையாகிய ஞானம், முக்கட் சித்தர் என்றார் பஞ்சகிருத்தியங்களையும் ஒரு சித்து போல செய்தலின். கெச்சை கத்திகை-வெட்சிமாலை அற்பு-அன்பு; வலித்தல் விகாரம் பெற்றது. (40)

41 தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன-தனதான.

கடலைபொரி யவரை பலகனி கழைநுகர்
கடினகுட வுதர விபரீத

கரடதடமுமத நளினசி றுநயன
    கரிமுக வரது துணைவோனே
வடவரை யின்முகடு அதிரவொ ருநொடியில
    வலம்வரு மரகத மயிலவீரா
மகபதி தருசுதை குறமின் இடிருவரு
    மருவுச ரசவித மணவாளா
அடல்சு ரர்கள்குல முழுதும டியவுய
    ரமரர்சி றையைவிட வெழினீறு
மருணகி ரணவொளி யொளிரும யிலைவிடு
    மரகர சரவண பவலோலா
படலவு டுபதியை யிதழிய ணிசடில
    பசுபதி வரநதி யழகானை
பழநிம லையருள்செய மழலைமொ ழிமதலை
    பழநிம லையில்வரு பெருமாளே.

(இ-ள்) கடலை பொரி அவரை-கடலையையும் பொரியையும் அவரையையும், பல கனி-பலவகைப்பட்ட பழங்களையும், கழை-கரும்பையும், நுகர-உண்கின்ற, கடின குட உதரம்-வன்மையான குடம்போன்ற வயிற்றையும், விபரீத கரடம்-வேறுபட்ட மதம்பாய் சுவட்டையும், தடம் முமமதம்-மிகுதியான மும்மதங்களையும், நளினம் சிறு நயன-தாமரை மலர்போன்ற சிறிய கண்களையுமுடைய, கரிமுகவரது-யானைமுகத்தையுடைய விநாயகரது, துணைவோனே-சகோதரனே!, வடவரையின்-வடக்கேயுள்ள மேருமலையின், முகடு அதிர-சிகரம் நடுங்கும்படி, ஒரு நொடியில்-ஒரு

நொடிப்பொழுதில், வலம்வரு உலகத்தைச் சுற்றிவந்த, மரகதம் மயில்வீரா-பச்சை மயிலையுடைய வீரனே!, மகபதி தரு-இந்திரன் பெற்ற, சுதை புதல்வியாகிய தெய்வயானை அம்மையாரை, குறமின்ஒடு-குறவர் மகளாகிய வள்ளிநாயகியாரோடு, இருவரும்-இருவரையும், மருவ-சேர்கின்ற, சரசவித-லீலை வகைகளைச் செய்யும், மணவாளா - நாயகனே!, அடல் அசுரர்கள் வலிமை மிக்க அசுரர்களுடைய, குலம் முழுதும் மடிய-கூட்டம் முழுவதும் ஒழியவும், உயர் அமரர் சிறைமை விட-சிறந்த தேவர்களுடைய சிறையை ஒழிக்கவும் எழில் மீறும்-அழகு மிகுந்த, அருணகிரணம் ஒளி-ஒளிரும் சூரியகாந்திபோலும் ஒளி விளங்கும், அயிலைவிடு - வேற்படையை விடுகின்ற, சரவணபவ - சரவணப்பொய்கையில் தோன்றி, அபகாரலோலா-வினையை அரிக்கும் ஆசைப் பெருக்கை உடையவரே!, படர் உடுபதியை - கூட்டமான நட்சத்திரங்களுக்குத் தலைவனான சந்திரனையும், இதழி அணி சடிலம்-கொன்றை மாலையையும் அணிந்த, பசுபதி-சிவபெருமானும், சுர நதி-கங்காதேவியும், அழகான பழமலை-அழகானவரும் பழமையானவருமாகிய உமாதேவியாரும், அருள்செய் - பெற்றருளிய, மழலைமொழி மதலை மழலைச் சொற்களைப்பேசுங் குழந்தையே!, பழநி மலையில் வரு பெருமானே - பழனி மலையில் எழுந்தருளியுள்ள பெருமானே!. எ-று.

(வி-ரை) கடினகுட உதரம் வன்மையான குடம் போன்ற வயிறு. விபரீதகரடம்-வேறுபாடான மதம்பாய்

சுவடு தடம் மிருதி மும்மதம்-கன்னமதம், கும்பமதம், கோசமதம். இவை இச்சாஞான சத்திகளைக் குறிக்கும். சத்து, சித்து, ஆனந்தம் என்னலுமாம். யானைகருக் கண் சிறிதாதல்பற்றிச் சிறுநயனம் என்றார். கரிணி பெண்யானை; ஈன்று யானை யென்றவளவில் நின்றது. விநாயகக்கடவுளும் சுப்பிரமணியக்கடவுளும் சிவபெருமானினின்று வேறாகாது, மணியும் அதன் ஒளியும்போலப் பிரிவின்றி நிற்கும் அவருடைய இரண்டுசத்திகளாம். சிவபெருமானினின்றும் தோற்றிய சத்திகளாகையால் அவர்க்குக் குமாரர்கள் எனப்படுவர். வடவரை-வடக்கின் கணுள்ள மேருமலை. மகபதி-யாகங்களுக்குத்தலைவனாகிய இந்திரன், மகம்-யாகம்; பதி-தலைவன். சுதை-செய்வயானை; தெய்வயானை அம்மையாரும் வள்ளி நாயகியாரும் முருகப்பெருமானுக்கு ஞானசத்தியும் கிரியா சத்தியுமாவர், இவ்வாறன்றித் தெய்வயானை அம்மையாரை இச்சாசத்தியாகக் கொண்டு வேற்படையை ஞானசத்தியாகக் கொள்ளுதலும் உண்டு. சரவணபவன்-சரவணப் பொய்கையில் உற்பவித்தவன். படலம்-கூட்டம்; உடுபதி-நட்சத்திரங்களுக்குத் தலைவனாகிய சந்திரன்; உடு-நட்சத்திரம். இதழி-கொன்றைமாலை பசுபதி- ஆன்மாக்களுக்குத் தலைவனான சிவபெருமான் பசு - ஆன்மாக்கள். பசுபதி என்னும் பெயரே சிவபெருமான தலைமைப்பாட்டை விளக்கும் என்பர். 'பசுபதிப் பெயரிய தனிமுதற் கடவுள்' என்றார் பிறரும். வரநதி-கங்கைநதி, அதாவது கங்காதேவி. முருகப்பெருமான் இளைய பிள்ளையாராதலின் மழலை

மொழிப் பதலெனாறா. சிவபெருமான் எக்காலத்தில் உள்ளரோ அக்காலத்தே அவரோடு பிரிவின்றித் தாதான்மியமாய் இருக்கும் பெரியாள் என்பார் 'பழநிமலை அருள்செய் மழலை' என்றார்.

பழநிமலை - ஆதிசக்தி (41)

42 தனனத தனதன தனதன தந்தத
தனனத தனதன தனதன தநதத்
தனனத தனதன தனதன தந்தத-தனதான

படிகநிறதுகி லெனவள ரநதக
கடலெட டையுமா குடிமுநி யென்கட
புநிதசரந்தனை நிலைகொள சயபுச சதுர்வேதன

புரபட டெரிபெபு விரிகனல சிநதிக
கடிபத தொடுசில சிறுநகை கொண்டற
பதகாத நாகர பரசிவ னிநதத தனிமூவர்

நிடசிக தமுநிமை தெளிவுற வும்பொற
செவியுட பிரணவ ரகசிய மனபுற
றிடவுமெ னமொழி யுரைசெயத முநதைக குருநாதா

வெதிருற் றசுரர்கள் படைகொடு சணடைக
கிடமறவந திடவவர் குலமுழுதும் பட
டிடவுககிரமொடு வெகுளிகள பொஙகக் கிரியாவும்

பொடிபட் டுதிரவும விரிவுற மணடச
சுவரிட டதிரவு முகடுகி ழிநதப
புறமப் பரவெளி கிடுகிடெ னுஞசத தமுமாக

பொருதுக கையிலுள வயினிணை முணகக
குருதிப் புனலெழு கடலினு மிஞ்சப
புரவிக் கனமயி னடவிடும் விநதைக குமரேசா

படியிற் பெருமிதத் தகவுயர் செம்பொற்
கிரியைத் தனிவலம் வரவர நந்தப்
பலனைக் கரிமுகன் வசமரு ளும்பொற் பதனாலே

பரவைப் படவிட வுளமிக வும்வெட் குண்டக்
கனியைத் தரவிலை யெனவருள் செந்திற்
பழநிச் சிவகிரி தனிலுறை கந்தப் பெருமாளே.

(இ-ள்) புடவிக்கு - பூமிக்கு. அணிதுகில் என-தரிக்கின்ற ஆடையென்று சொல்லும்படி, வளர் - வளர்கின்ற, அந்தக் கடல் எட்டையும் - எட்டுத்திசையிலுமுள்ள அந்த ஏழுகடலையும், அறத் தண்ணீர் வற்றும்படி குடிமுனி- குடித்த அகத்தியமுனிவரும், எண்கண்-எட்டுத்திருக்கண்களையுடைய, புனித - பரிசுத்தமான, சததள நிலைகொள் - நூறு இதழ்களையுடைய. தாமரைமலரிலே வசிக்கும், சயம்பு சதுர்வேதன்-தானேதோன்றிய நான்குவேதங்களுக்குந்தலைவனாகிய பிரமதேவனும், விழிக்கனல் சிந்தி-கண்களிலேநெருப்பைச் சொரிந்து, கடினத்தொடு-கடினத்துடனே, எரியெழ-நெருப்புண்டாக, சில்சிறுநகைகொண்டு-மிகச்சிறியபுன்னகை புரிந்து, புரம் அட்ட-முப்புரங்களையும் அழித்த, அற்புதக் கர்த்தா-வியப்பான தொழிலையுடைய தலைவரும், அகரம் பரசிவன் - பிரணவப்பொருளாக இருக்கும் மேலான சிவ பெருமானும் ஆகிய, இந்த தனிமூவர் இட-இந்த ஒப்பற்ற மூவருடைய, சித்தமும் நிறை தெளிவு உற-மனங்களும் நிறைந்த தெளிவை அடைய, பொன் செவியுள் - அழகிய காதுகளில், பிரணவ ரகசியம் - பிரணவத்தினுடைய உண்

அருந்திடும்-விருப்பமாக நீட்டந்த கொடுத்த, பொய்பு அந்நலை-தன்மையினால், பரந்த மொட்டிட-சிவபெருமானது மணமடையும்படி, மிகவும் வெகுண்டு-மிகவும் கோபித்து, அக் கனியை தராதொழிலை என - அந்தப் பழத்தை எனக்குக் கொடுக்கவில்லை யென்று, அருள் செந்தில் பழநி சிவகிரிதனில்-அருளையுடைய செந்தூரிலும் பழநியிலுள்ள சிவகிரியிலும், உறை கந்தப் பெருமாளே - எழுந்தருளியிருக்கும் கந்தப்பெருமானே', எ - று.

(வி-ரை) கடல் பூமியைச் சுற்றி இருத்தலின் 'புடவிக் கணி துகில்' எனக் கூறினார். அந்தக் கடல் எட்டு-அதாவது எட்டுத் திக்குகளிலுள்ள கடல். கடலைக் குடிமுனி-அகத்திய முனிவர், அகத்திய முனிவர் ஒரு காலத்தில் கடலின் நீரை உழுந்தளவாகச் செய்து பருகினார் என்பது புராணம். கடல் என்றதனால் கடல் நீரைக் குறித்தது. சததளம்-நூறிதழ். எண்கண்-எட்டுக் கண்கள். நான்கு தலையை உடையனாதலின் எண்கண்களாயின. புரம்-முப்புரம். 'புரமட்டு. பரமசிவன்' இதில் அடங்கிய கதை சிவபெருமான் முப்புர மெரித்த வரலாறு —

தாரகாசுரன் புதல்வர்களாகிய வித்துன்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்னும் மூவரும் சிவபெருமானைப் பூசனை செய்த பயத்தால் பொன், வெள்ளி, இரும்பு ஆகிய இவற்றால் வானத்தில் பறக்கத்தக்க கோட்டைகளை அமைத்துக்கொண்டு அவற்றோடு ஆங்காங்குச் சென்று தேவரைப்

அருளும்-விரும்பிக் கேட்டதைக் கொடுத்த. பெரிய அருளை-தன்மையினைப், பாச வெட்டிட-சிவபெருமான் நாணமடையும்படி, மிகவும் வெகுண்டு-மிகவும் கோபித்து, அக் கனியைத் தராதிலே என-இந்தப் பழத்தை எனக்குக் கொடுக்கவில்லையென்று, அருள் செந்தில் பழநி சிவகிரிகளில்-அருளையுடைய செந்தூரிலும் பழநியிலுள்ள சிவகிரியிலும், உறை கந்தப் பெருமாளே - எழுந்தருளியிருக்கும் கந்தப்பெருமாளே! (க - ய)

(வி-ரை) கடல் பூமியைச் சூழ்ந்திருத்தலின் 'புடவிக் கணி நதியர்' எனக் கூறினார்; அந்தக் கடல் எட்டு-அதாவது எட்டுத் திக்குகளிலுள்ள கடல். கடல் குடி முனி-அகத்திய முனிவர், அகத்திய முனிவர் ஒரு காலத்தில் கடலின் நீரை உறிஞ்சினாராகச் செய்தது பழங்கதை என்பது புராணம். கடல் என்றது ஈண்டு கடல் நீரைக் குறிக்கும். சததளம்-நூறிதழ் கண்கண்-எட்டுக் கண்கள். நான்கு தலையை உடையனாதலின் எண் கண்களாயின. புரம்-முப்புரம் 'புரமட்டு. பரமசிவன்' இதில் அடங்கிய கதை சிவபெருமான் முப்புரம் எரித்த வரலாறு —

தாரகாசுரன் புதல்வர்களாகிய வித்துன்மாலி, தாரகாட்சன், கமலாட்சன் என்னும் மூவரும் சிவபெருமானைப் பூசனைசெய்த பயத்தால் பொன், வெள்ளி, இரும்பு ஆகிய இவற்றால் வானத்தில் பறக்கத்தக்க கோட்டைகளை அமைத்துக்கொண்டு அவற்றோடு ஆங்காங்குச் சென்று தேவரைப்

பெரிதும் வருந்தி வந்தனர். இவர்தம துன்பத்தைப் பொறாத தேவர் சிவபெருமானிடம் முறையிட அவர், திருமால் வழியாக அம்மூவருக்கிருந்த சிவபத்தி சிதைய, பூமியைத் தேராகவும், சூரிய சந்திரர்களைத் தேருருளைகளாகவும், மேருமலையை வில்லாகவும், வாசுகியை நாணாகவும், வேதங்களைக் குதிரைகளாகவும் பிரமனைச் சாரதியாகவும், விஷ்ணு மூர்த்தியைப் பாணமாகவும் கொண்டு அவரை அழிக்கச் செல்லுகையில் விஷ்ணுமூர்த்தி தமது துணையைக் குறித்துச் சிறிது செருக்குற்றனர். அதுகண்ட இறைவன் உடனே சிரிக்க, முப்புரங்களும் எரிந்து சாம்பராயின என்பதாம்.

பிரணவ ரகசியம்-பிரணவத்தின் உண்மை. பிரணவமானது மூலமொழி எனவும், ஒருமொழி எனவும், ஓங்காரம் எனவும், குடிலை எனவும், உத்கீதை எனவும், சுத்தமாயை எனவும்படும். அது சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் பீடமாயும், மற்றைத் தேவர்களுக்கெல்லாம் பிறப்பிடமாயும், எல்லா மந்திரங்களுக்கும், வேதங்களுக்கும் மூலமாயும் உள்ளது. சிவன் ஓங்கார மூலப்பொருளெனப்படுவர். பிரணவம் சமஷ்டிப் பிரணவம், வியஷ்டிப் பிரணவம், என இருவகைப்படும். சமஷ்டிப் பிரணவம் 'ஓம் காரம் என நிற்பது' வியஷ்டிப் பிரணவம் அகார, உகார, மகார விந்து நாதம் என நிற்பது பொருந்துகைகையிலுள்ள என்புழி வலமெழுந்து சந்த இன்ப நோக்கி மிக்கது. செம்பொற் கிரி மேருமலை; மேருமலையை வலம் வந்த வரலாறு:—

ஒருகால் சிவபெருமான் தமது கரத்தில் ஒரு கனியை ஏந்திக்கொண்டு தமது புதல்வர்களை நோக்கி, 'இப்பூமண்டலத்தைச் சுற்றிக்கொண்டு முன்னே வருவோருக்கு இக்கனி தரப்படும்' எனத் திருவாய் மலர்ந்தருளினார். அது கேட்ட குமரக் கடவுள் தமது மயில்மேலமர்ந்து மேருமலையை ஒரு நொடிப்போதிற் சுற்றிவந்தனர், என்பதாம்.

அக்கனி-பண்டறி சுட்டு. (42)

43 தனதன தந்தத தனத்த தானன
தனதன தந்தத தனத்த தானன
தனதன தந்தத் தனத்த தானன - தனதான.

மலரணி கொண்டைச் சொருக்கி லேயவள்
சொலுமொழி யின்பச் செருக்கி லேகொடு
மையுமடர் நெஞ்சத் திருக்கி லேமுன் மதியாலே

மருவுநி தம்பத் தடத்தி லேநிறை
பரிமள கொங்கைக் குடத்தி லேமிக
வலியவும் வந்தொத் திடத்தி லேவிழி வலையாலே

நிலவெறி யங்கக் குலுக்கி லேபழி
வலைபுனை செங்கைக் குலுக்கி லேமன
நிதிபறி யந்தப் பிலுக்கி லேசெயு மொயிலாலே

நிதமிய லுந்தத் துணுக்கி லேபர
வசமுட னன்புற் றிணக்கி லேயொரு
நிமிடமி ணங்கிக் கணத்தி லேவெகு மதிகேடாய்

அலையநி னைக்கற் பனத்தி லேயுற
இனமிகு மென்சொற் பனத்தி லேவரு
மறிவும ழிந்தற் பனத்தி லேநித முழல்வேனோ

அசடனை வஞ்சக் கமாத்த னாகிய
கசடனை யுன்சிற் கடைக்க ணாடிய
மலர்கொடு நின்பொற் பதத்தை யேதொழ வருடாராய்

பலபல பைம்பொற் பதக்க மாரமு
மடிமைசொ லுஞ்சொற் றமிழ்ப்ப னீரொடு
பரிமள மிஞ்சக் கடப்ப மாலையு மணிவோனே

பதியினில் மங்கைக் கதித்த மாமலை
யொடுசில குன்றிற் றரித்து வாழ்வுயர்
பழனியி லன்புற் றிருக்கும் வானவர் பெருமாளே.

(இ-ள்) பலபல பைம்பொன் பதக்கமும்-பலபலவாகிய பசுமையான பொன்னால் செய்யப்பட்ட பதக்கங்களையும், ஆரமும் - முத்துமாலையையும், அடிமை சொலும் சொல் தமிழ்-அடிமைத் திறத்தைச்சொல்லும் பெருமை பொருந்திய புலவர்களால் பாடப்பட்ட பாமாலையையும், பனீரொடு பரிமளம் மிஞ்ச கடப்பமாலையும் அணிவோனே-பன்னீருடன் வாசனைமிகும்படி கடப்பமாலையையும் தரித்துக் கொண்டிருப்பவனே!, பதியினில் - க்ஷேத்திரங்களிலும், மங்கை கதித்த மாமலையொடு-வள்ளிமலையோடு, சில குன்றில் தரித்து-சிலமலைகளில் தங்கி, வாழ்வு உயர் பழநியில்-செல்வமிகுந்த பழனித்தலத்தில், அன்பு உற்று இருக்கும்-அன்பு பொருந்திவாழும், வானவர் பெருமாளே - தேவர்களுக்குப் பெருமாளே!, மலர் அளி கொண்டை செருக்கில்-பூக்கள் தரித்துள்ள வண்டுகள் மொய்க்கும் கொண்டையின் செருக்கிலும், அவள் சொலுமொழி இன்பம் செருக்

கில-அவள் சொல்லுகின்ற சொல்லினது இன்ப மிருதியி லுமம, கொடுமையும அடர் நெருங்கும் திருக்கில் - கொடுமை நெருங்கிய மனத்தினது மாறுபாட்டிலும், முகம மதியால்- சந்திரனை ஒத்த முகத்தாலும, மருவு நிதமபம தடத்தில- சேர்கின்ற நிதம்பத் தடத்திலும, நிறை பரிமளம கொங்கை குடத்தில-வாசனை நிறைந்த கொங்களாகிய குடத்தாலும், மிக வலியவும் வந்து ஒத்து இடத்திலே-மிகவும் வலியவந்து உடம்பைப்பொருந்தும் இடத்தாலும, விழிவலையால-கண்க ளாகிய வலையாலும், நிலவு எறி அங்கம் குலுக்கில-ஒளி வீசும் உடமபின குலுக்காலும், எழில வளை புனை-அழகிய வளையல்கள் தரித்த, செம கை கிலுக்கில-சிவந்த கைகளின் அசைவாலும, கனம நிதிபறி அந்த பிலுக்கில-மிக்க செல வத்தை அபகரிக்கும அந்த பிலுக்காலும, செயும ஒயிலால- செய்கின்ற ஒழுங்காலும, நிதம் இயலும துர்க்குணத்தில- தினந்தோறும பழகுகின்ற தீக்குணத்தாலும், பரவசமுடன் அன்பு உற்று இணக்கில-பரவசத்தோடு அன்பு பொருந்தும் கலவியினாலும, ஒருநிமிஷம் இணங்கி-ஒருநிமிஷம் பொருந்தி, கணத்தில வெகுமதி கேடாய-க்ஷணநேரத்தில மிக்க அறிவு கெட்டு, அலைய நினைந்து- அலைய எண்ணி, உற்பனத்தில்- தோற்றத்தில, அனுதினம - தினந்தோறும், மிகும் என் சொப்பனத்தில வர-மிக்க எனது கனவில் வர, அறிவும் அழிந்து-அறிவும் ஒழிந்து, அற்பன் அப்பத்தில - கீழ்மை யுடையவனாகிய யான் அந்தக் கலவியில, நிதம் உலைவேனோ- எப்போதும் வருந்துவேனோ, அசடனை-குற்றமுடையவனை,

வஞ்சம் சமர்த்தன ஆகிய கசடனை-வஞ்சகமாகிய சாமார்த்தியத்தை உடைகீழ்மகனை, உன சித் கடைககண்நாடி-தேவரீரது ஞானம் மிக்க கடைககண்ணால் பாாதது, அலர்கொடு-பூக்களைக்கொண்டு, நின்பொன பததைையே-நினது அழகிய திருவடிகளையே, தொழ-வணஙக, அருள் தாராய்-கருணையைத தருவாயாக எ-று

(வி-ரை) மொழி இனபச செருககு-சொலலிலே உண்டாகும் இன்பததின வளமை. நெஞ்சத்திருக்கு - மனக்கோட்டம். தடம-உயாநத இடம். 'அகஙகினற கொஙகைத் தடமது' என்றா மணிவாசகரும். பரிமளகொஙகைக் குடம்-வாசனைப பொருள்கள பூசபபட்ட ஸ்தனமாகிய குடம். கனநிதி-மிக்கபணம நாள்தோறும தீககுணஙகளிலே பழகுவார் என்பார், 'நிதமியலும தாககுணத்திலே' என்றார். உற்பனம்-தோற்றம். நனவின்கண் மிக்கது கனவிலும் தோன்றுமாதலின் என்'சொபனததிலேவர அறிவுமயங்கி' என்றார்.

## திருச்செந்தில்

44 தந்தநதந தநதன தானன
தந்தந்தந தந்தன தானன
தந்தந்தந் தந்தன தானன-தனதான

வஞ்சங்கொண் டுந்திட ராவண
னும்பந்தென் திண்டரி தோகரி
மஞ்சின்பண் புஞ்சரி யாமென — வெகுசேனை
வந்தம்பும் பொங்கிய தாகவெ
திர்நதந்தன் சமபிர தாயமும்
வம்புந்தும் பும்பல பேசியு — மெதிரேகை

மிஞ்சென்றுஞ் சண்டைசெய போதுகு
ரங்குத்துஞ் சுங்கனல போலவெ
குண்டுங்குன் றுங்கர டாமர மருமவீசி
மிண்டுந்துங் கங்களி ஞலெத
காந்தங்கங் கங்கர மாபொடு
மினசந்துஞ் சிந்திநி சாசரா வகைசேர
வுஞசண்டன றெனறிசை நாடிவி
ழுந்தங்குஞ் சென்மம தூதாக
ளுந்துந்துந் தெனறிட வேதசை நிணமூளை
யுணடுங்கண் டுஞசில கூளிகள
டிணடிண்டென றுங்குதி போடவு
யாந்தம்புங் கொண்டுவெல மாதவன மருகோனே
தஞசந்தஞ சஞசிறி யேன்மதி
கொஞ்சங்கொஞ் சந்துரை யேயருள
தந்தென்றின் பந்தகு வீடது தருவாயே
சங்கங்கஞ் சங்கயல சூழ்தட
மெங்கெங்கும் பொங்கம காபுனி
தந்தங்குஞ் செந்திலில வாழ்வுயா பெருமாளே.

(இ-ள்) வஞ்சம் கொண்டு-வஞ்சகச செயலைக்கொண்டு, திடராவணனும்-வலிமைபொருந்திய இராவணன், பநது என் கட்டுடைய தென்று சொலலத்தக்க, திண்பரி தேர் கரி-உறுதியான குதிரை தேர யானைபபடைகள், மஞ்சின் பண்பும் சரி ஆம என - மேகத்தினது தன்மைக்கு ஒபபென்று சொல்லும்படி, வெகு சேனை-அநேக சேனைகள், வந்து அம்பும் பொங்கியது ஆக எதிர்ந்து - மேலெழுந்துவந்து அம்புகளை மிகுதியாகச செலுத்தி எதிர்த்து, தன் சம்பிரதாயம்-

தன் வெலாமாரையும், வம்பும் தூம்பும் பசுப்பசியும்-வீணை யையும் இருக்கு சகியாமையையுமான பல வார்த்தைகளைப் பேசிக்கொண்டும், எதிராகை மிகுதி ... சண்டை செய் போது-எதிரிலே முன்னேதாக்கு என்று வீரர் சண்டை செய்கின்ற பொழுது, குரங்கும் - அனுமானும், நெருப்புக் கனலபோல-அடங்கியிருந்த நெருப்புப்போல, வெகுண்டும்-கோபித்தும், குன்றும்- மலைகளையும், காடு ஆமரம் அதுவும் வீசி-மதம்பாய்கின்ற கவடடையுடைய பெரியமரம்போன்ற யானைகளையும் எடுத்தெறிந்து, பிணங்கும்-நெருங்கிய, நாககங் களினில-மலைகளினால், தகர்ந்து-பிளந்து, அங்கம் கம் கரம் மார்பொடு-உறுப்புக்களையும் தலையையும் கையையும் மார்போடு, மின்சந்தம்-ஒளிபொருந்திய சந்தனமரங்களையும், சிந்தி-அழித்து, நிசாசர் ... சேரவும்-அரக்கர்கூட்டம் சேரவும், சண்டன்-யமனுடைய, தென்திசை நாடி-தென்றிசையை நோக்கி, விழுந்து அங்கும் சென்று விழுந்துபோய், எமதூதர்கள் உந்து உந்து என்றிட-எமதூதர்கள் தள்ளு தள்ளு என்று கூற, தசை நிணம் மூளை-தசையையும் கொழுப்பையும் மூளையையும், உண்டும் கண்டும் - உண்டும் பார்த்தும், சில கூளிகள்-சில பேய்கள், டிண் டிண்டு என்று-டிண்டிணென்று, குதிபோட-கூத்தாட, உயர்ந்து-சிறந்து, அம்பும் கொண்டு-அம்பையும் கைக்கொண்டு, வெல் மாதவன்-வெல்லுகின்ற விஷ்ணுமூர்த்தியினுடைய, மருகோனே-மருகனே', சங்கம் கஞ்சம் கயல - சங்குகளும் தாமரை மலர்களும் கயல்மீன்களும், சூழ்தடம்-சூழுகின்ற குளங்கள்,

எங்கு மெங்கும் பொங்க - எல்லா விடங்களிலும் மிகுந்து விளங்க, மகா புனிதம் தங்கும்-மிக்க பரிசுத்தம் பொருந்திய, செந்திலில் வாழ்வு உயர் பெருமாளே - திருச்செந்தூரில் வாழ்வு சிறந்து விளங்கும் பெருமாளே, ஏறைபே-மேலானவனே', சிறியேனை-சிறியவனாகிய அடியேனை தஞ்சம் தஞ்சம்-நேரிருக்கும் உடைக்கலம் - அடைக்கலம், மதி கொஞ்சம் கொஞ்சம்-எனக்கு அறிவு சிறிது சிறிது, அருள் தந்து-ஆதரவால கருணைசெய்து, இன்பம் தரு வீடு அது - அழியாத பேரின்பத்தைக் கொடுக்கும் முத்தியை, என்று தருவாய்-எனக்குக் கொடுத்தருளுவாய் என்று.

(வி-ரை) மஞ்சு-மேகம் சம்பிரதாயம்-விதி வம்பு தும்பு-பயனில் சொற்கள் கைமிஞ்சல் - சண்டை தொடங்குதல். கனல்போல் வெகுண்டு - நெருப்பைப்போலக் கோபித்து, 'எரிதனி லிழுதென வெகுண்டான்' என்றார் பெரியாரும். மரமத்து- அந்த பகுதிப்பொருள் விகுதி சண்டன் - இயமன், தஞ்சம் தஞ்சம்-அடுக்குத்தொடர், அவலத்தின்கண் வந்தது. கொஞ்சம் கொஞ்சம் - அடுக்கு இழிவில் வந்தது இன்பந் தரு வீடு-நித்திய நிரதிசய இன்பத்தைத் தரும் மோக்ஷம். சங்கம் கஞ்சம் கயல்சூழ் தடம் - சங்குகளும் தாமரையும் மீனும் சூழ்கின்ற குளம். (44)

45 தன்ன தனதன தனதன தனதன
தன்ன தனதன தனதன தனதன
தன்ன தனதன தனதன தனதன-தனதான.

நெடிய வடகுவ டிடியவு மெழுகிரி
நெறுநெ றெனநெரி யவுமுது பணிபதி
நிபிட முடிகிழி யவுநில மதிரவும் விளையாடும்

நிகரில கலவியும் ரவியுமிழ துவசமும்
நினது கருணையு முறைதரு பெருமையும
நிரமு மிளமையும் வளமையு மிருசர ணமுநீப

முடியு மபிநவ வனசரர் கொடியிடை
துளர ளாவன மிருகமத பரிமள
முகுள புளகித தனகிரி தழுவிய திரடோளும்

மொகுமொ கெனமது கரமுரல குரவணி
முருக னறுமுக னெனவரு வனபெயா
முழுது மியலொடு பழுதற மொழிவது மொருநாளே

கொடிய படுகொலை நிசிசர ருரமொடு
குமுகு மெனவிசை யுடனிசை பெறமிகு
குருதி நதிவித சதியொடு குதிகொள விதியோடக்

குமறு கடல்குடல் கிழிபட வடுமர
மொளமொ ளெனவடி யொடலறி விழவுயா
குருகு பெயரிய வரைதுளை படவிடு சுடர்வேலா

இடியு முனைமலி குலிசமு மிலகிடு
கவள தவளவி கடதட கனகட
விபமு மிரணிய தரணியு முடையதொா தனியானைக்

இறைவ குருபர சரவண வெகுமுக
ககன புனிதையும் வனிதைய ராறுவரு
மெமது மகவென வுமைதரு மிமையவர் பெருமாளே.

(இ-ள்) கொடிய படுகொலை - கொடுமையான மிக்க கொலைத் தொழிலையுடைய, நிசிசரா உரமொடு-அவுணர்கள் மார்புடன், குமுகுமு என விசையுடன் இசைபெற - குமு

குமுவென்று விரைவுடன் ஒலிபெறும்படி, மிகு குருதிநதி-மிக்க இரத்தமாகிய ஆறு, விதசதியொடு குதிகொள - பல விதமான தாளத்தோடு குதித்தெழுந்து, விதி ஓட - ஒழுங்காக ஓடவும், குமுறு கடல குடல் கிழிபட - சப்திக்கின்ற கடலினது குடலானது கிழிபடவும், வடுமரம் மொளுமொளு என அடியோடு அலறிவிழ - மாமரம் மொளுமொளென்று வேருடன் அரற்றிவிழவும, உயர்குருகு பெயரிய வரை துளைபட-உயர்ந்த பறவையின் பெயரைப் பெற்ற கிரவுஞ்சமலை துளைபடவும, விடுசுடர்வேலா-எறிகின்ற ஒளியையுடைய வேலையுடையவனே', இடியும் முனைமலி குலிசமும்-இடியேற்றையும் வெற்றிகின்ற மிக்க வஜ்ஜிரப்படையையும், இலகிடு கவள-விளங்குகின்ற கவளத்தைக்கொண்ட, தவள விகட தட - வெண்மையான அழகிய அகன்ற, கனகட-மிகுந்த மதத்தையுடைய, இபமும் இரணிய தரணியும் உடையது-மரக்கொம்பையும பொன்மயமான மலையையும் உடையதாகிய, ஓர் தனி யானைக்கு இறைவ - ஒப்பற்ற யானைக்குத் தலைவனே', குருபர-குருபரனே', சரவண-சரவணப் பொய்கையில் தோன்றினவனே', வெகுமுக ககனம் வனிதையும் - ஆயிர முகங்களையுடைய ஆகாய கங்கையும், வனிதையர் அறுவரும் - கார்த்திகை முதலிய ஆறு பெண்களும், எமது மகவு என - எம்முடைய குழந்தை என்று சொல்ல, உமைதரு இமையவர் பெருமாளே-உமாதேவியார் பெற்றருளிய தேவர்கள் பெருமானே', நெடிய வட குவடு இடியவும்-நீண்ட வடக்கின்கண் உளதாகிய மேருமலை இடி

யவும், எழுகிரி நெறுநெறு என நெரியவும் - ஏழுமலைகளும் நெறு நெறுவென நெரியவும், முதுபணிபதி சிரமுடி நெளியவும் - பெரிய படத்தையுடைய ஆதிசேடனுடைய இரத்தினச் செறிவையுடைய கிரீடசிகரமும் நெளியவும், நிலம் அதிரவும் விளையாடிய - பூமி அதிரும்படியும் விளையாடுகின்ற, நிகர் இல கலபியும் - ஒப்பற்ற மயிலையும், ரவி உமிழ் துவசமும் - கதிரைக் கக்குகின்ற கொடியையும் உடைய. நினது கருணையும் - தேவரீருடைய திருவருளையும், முறைதரு பெருமையும் - முறைமையால் வருகின்ற பெருமையையும், நிறமும் இளமையும் - சிவந்த நிறத்தையும் இளமையையும், வளமையும் - எண்குணச் செழுமையையும், இருசரணமும் - இரண்டு திருவடிகளையும், நீபம் முடியும் - கடப்பமாலை தரித்த மகுடமும், அபிநவ வனசர கொடி இடை - புதிய வேடர்களுடைய கொடியை ஒத்த இடையையுடைய மகளாகிய வள்ளி நாயகி, தளர வளர - தளரும்படி ஓங்கி வளர்கின்ற, வனம் மிருகமதம் பரிமளம் - அழகிய கஸ்தூரி யணிந்த வாசனையையுடைய, முகுளம் புளகிதம் நளினம் - தாமரை அரும்பை ஒத்த குமிழ்ப்பை உடைய ஸ்தனங்களாகிய மலைகளை, தழுவிய திரள் தோளும் - திரண்ட தோள்களையும் உடைய, மொகுமொகு எனமதுகரம் முரல - மொகுமொகு வென்று வண்டுகளொலிக்கின்ற, குரவு அணி முருகன் - குரா மலையைத் தரித்த முருகனென்றும், அறுமுகன் என - ஆறுமுகனென்றும், வருவன பெயர் முழுதும் - வருவனவாகிய பெயர்கள் முழுவதையும், இயல்கொடு பழுது அற - அழகோடு குற்றம்

திகலி னைப்ப லைகளு முயல கன்று லைபபொ
ருளுமெ னின்றி னைக்கு மிவையோடே

மனைகள் பெண்டிர் மக்கள் தமைநி னைந்து சுத்த
மதிம யங்கி விட்டு மடியாதே

மருவி யின்றெ னக்கு மரக தஞ்சி றக்கு
மயிலில் வந்து முத்தி தரவேணும்

நினைவ ணங்கு பத்த ரனைவ ருந்த ழைக்க
நெறியில் நின்ற வெற்றி முனைவேலா

நிலைபெ றுந்தி ருத்த ணியில்வி ளங்கு சித்ர
நெடிய குன்றி னிற்கு முருகோனே

தினைவி ளைந்த வற்ற புனையி ளங்கு றத்தி
செயல றிந்த ணைக்கு மணிமார்பா

திசைமு கன்றி கைக்க வசுர ரன்றி றைத்த
சிறைதி றந்து விட்ட பெருமாளே

(இ-ள்) நினை வணங்கு பத்தர் - தேவரீரை வணங்குகின்ற அடியார்கள், அனைவரும் - எல்லாரும், தழைக்க - செழுமையடையும்படி, நெறியில் நின்ற - அவர்கள் பத்திமார்க்கத்துக்கு எளிவந்த, வெற்றி முனை வேலா - வெற்றியையுடைய போர்முனைக் கூர்மையும் வேலை உடையவனே!, நிலைபெறும் திருத்தணியில் - எக்காலத்தும் அழியாது நிலைபெற்ற திருத்தணிகை என்னும் ஸ்தலத்தில், விளங்கு சித்ரம் நெடிய குன்றில் - விளங்குகின்ற அழகிய நீண்ட மலையில், நிற்கும் முருகோனே - எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமானே!,

தினை விளங்கல் உற்ற - தினைகள் மிகவும் வளர்கின்ற, புனம்
இளம் குறத்தி - புனத்திலே ஆயலோட்டியிருந்த இளைய
குறப்பெண்ணாகிய வள்ளிநாயகி, செயல் அறிந்து - பக்தி
ஒழுக்கத்தைத் தெரிந்து, அணைக்கும் மணிமார்பா - சேர்க்
கின்ற அழகிய மார்பையுடையவனே!, திசைமுகன்-பிரமதே
வன், திகைக்க - திகைக்கும்படி, அசுரர் - அசுரர்கள்,
அன்று - அக்காலத்தில், அடைத்த சிறை - தேவர்களை
அடைத்து வைத்த சிறைச்சாலையை, திறந்து விட்ட
பெருமாளே-திறந்து வெளிவிட்ட பெருமானே!, எனை
அடைந்த - என்னைச் சேர்ந்த, குட்டம் - குட்டநோயும்,
வினைமிகுந்த-தீவினைமிகுந்ததாலாகிய, பித்தம்-பித்தநோயும்,
எரி வழங்கு வெப்பு-எரிவு பொருந்திய சுரநோயும், வலி
பேசா-ஒன்று கொன்றுதன் வலிமையைப் பேசிக்கொண்டு,
இகலி நின்று அலைக்கும்-பகைத்து நின்று துன்பப்படுத்தும்,
முயலகன்-முயலகன் நோயும், குலைப்பொடு நடுக்கத்தோடு,
இருமல் என்று உரைக்கும்-இருமல் என்று சொல்லுகின்ற,
இவையோடு-இவைகளோடு, மனைகள்-வீடுகள், பெண்டிர்-
மனைவிமார், மக்கள்-பெற்ற பிள்ளைகள், தமை நினைந்து-இவர்
களை எண்ணி, சுத்தம் மதிமயங்கி விட்டு - தூய்மையான
அறிவு மயக்கங்கொண்டுவிட்டு, மடியாது - அழியாமல்,
மருவி-என்னறிவிற் கலந்து, இன்று எனக்கு-இப்பொழுது
அடியேனுக்கு, மரகதம் சிறக்கும் மயிலில் - பசுமை நிறஞ்
சிறந்த மயில்மேல், வந்து முத்திதரவேணும்-வந்து மோட
்க்ஷத்தை அளித்தருளவேண்டும் எ-று.

(வி-ரை) குட்டம்-குஷ்டரோகம். பேசா-பேசி, செய்யா யென்னும் வாய்பாட்டு வினையெச்சம். இகலி-இகல் பகுதி; பகைத்து. முயலகன்-ஒருநோய். பெண்டிர்-இர் பலர் பால் விகுதி. இந்திரிய வயப்பட்டுப் பெண்டு பிள்ளை பண்டு பதார்த்தங்களில் பற்றுவைத்து உழல்வோர் இறப்பையே முடிவாக அடைவர் ஆதலின் 'மனைகள் பெண்டிர் மக்கள் தமைநினைந்து சுத்தமதி மயங்கிவிட்டு மடியாதே' என்று அருளிச் செய்தார். இக்கருத்தே பற்றி **மாணிக்கவாசகரும்,**

'இந்திரிய வயமயங்கி இறப்பதற்கே காரணமாய்
அந்தரமே திரிந்துபோய் அருநரகில் வீழ்வேனைச்
சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அந்தமிலா ஆனந்தம் அணிகொள்தில்லை கண்டேனே'

என்றருளிச் செய்வாராயினர்.

மரகதம் சிறகு மயில்-பச்சை மயில்.

சூரபன்மனால் சிறைவைக்கப்பட்ட தேவேந்திரனை அதினின்றும் மீட்டபடி தேவர் எல்லார்க்கும் அதிகாரியிருப்பவும் காம பீடிசெய்த காரணத்தால் 'திசைமுகன் திகைக்க அசுரர் அன்றடைத்த சிறை திறந்துவிட்ட பெருமானே' என்றார். (46)

## திருச்செந்தில்

47 தந்தனத் தந்தனத் தந்தனத் தந்தனத்
தந்தனத் தந்தனத்-தனதான.

பங்கமே வும்பிறப் பங்கதா ரந்தனிற்
பந்தபா சந்தனிற் றடுமாறிப

பஞ்சபா ணம்படப் புண்படா வஞ்சகப்
பண்பிலா டம்பரப் பொதுமாதர்

தங்களா லிங்கனக் கொங்கையா கம்படச்
சங்கைமால் கொண்டிளைத் தயராதே

தண்டைசூழ் கிண்கிணிப் புண்டரீ கந்தனைத்
தந்துநீ யன்புவைத் தருள்வாயே

அங்கைவேல் கொண்டரக் கன்ப்ரதா பங்கெடுத்
தண்டவே தண்டமுட் படவேதான்

அஞ்சவே திண்டிறற் கொண்டலா கண்டலற்
கண்டலோ கங்கொடுத் தருள்வோனே

திங்களார் கொன்றைமத் தந்துழாய் துன்றுபொற்
செஞ்சடா பஞ்சரத் துறுதோகை

சிந்தையே தென்றிசைத் தென்றல்வீ சும்பொழிற்
செந்தில்வாழ் செந்தமிழ்ப் பெருமாளே.

(இ-ள்) அங்கை வேல்கொண்டு-உள்ளங்கையிலே வேற்படையைக் கொண்டு, அரக்கன் பிரதாபம் கெடுத்து - சூரபதுமனுடைய வீரத்தை ஒழித்து, அண்டம் வேதண்டம் உட்பட-உலகமும் திசையும் எல்லாம், அஞ்ச-பயப்படும்படி, திண் திறல்-உறுதியான வலிமையுடைய, கொண்டல் ஆகண்டலற்கு-மேகவாகனமுடைய இந்திரனுக்கு, அண்டர் லோகம்-தெய்வலோகம், கொடுத்து அருள்வோனே - தந்தருள்பவனே!, திங்கள்-பிறைச் சந்திரனும், ஆர் - ஆத்திமலரும், கொன்றை-கொன்றைமலரும்; மத்தம்-ஊமத்த மலரும், துழாய்-துளவமலரும், துன்று-நெருங்கியுள்ள, செம்

சடா பஞ்சரத்து-சிவந்த சடையாகியகூட்டில், உறுதோகை-தங்கியுள்ள மயில்போன்ற கங்காதேவியாருடைய, சிங்கையே-கருத்தில் இருப்பவனே!, தென்திசை - தென்திசையிலுள்ள, தென்றல் வீசும்-தென்றற்காற்று வீசுகின்ற, பொழில்-சோலையையுடைய, செந்தில்வாழ்-திருச்செந்தூரில் வாழ்கின்ற, செந்தமிழ் பெருமாளே-செந்தமிழுக்குரியபெருமானே, பங்கம மேவும்-குற்றம் பொருந்திய, பிறப்பு அந்தகாரம் தனில்-பிறப்பாகிய இருட்டிலே, பந்தபாசம் தனில்-கட்டாகிய வினைகளில், தடுமாறி-தடுமாற்றமடைந்து, பஞ்ச பாணம் பட-காமனுடைய ஐந்து அம்புகள் தைக்க, புண்பட-மனம் புண்பட்டு, வஞ்சகம் - வஞ்சகத்தையுடைய, பண்பு இல்-நற்குணமில்லாத, ஆடம்பரம் பொதுமாதர்-பகட்டையுடைய பொதுமாதர், தங்கள் - தங்களுடைய, ஆலிங்கனம் கொங்கை-தழுவுகின்ற ஸ்தனங்களை, ஆகம்பட-மார்பில் பொருந்த, சங்கைமால் கொண்டு இளைத்து-சந்தேகமும் மயக்கமும் கொண்டு தேகமெலிந்து, அயராது-வருந்தாமல், தண்டை-தண்டையும், கிண்கிணி-கிண்கிணியும், சூழ்-சூழ்கின்ற, புண்டரீகம் தனை-தாமரை மலர்போன்ற திருவடிகளை, தந்து-கொடுத்து, நீ அன்புவைத்து அருள்வாய்-தேவரீர் அன்புவைத்து அருள்செய்வீராக.

(வி-ரை) தன்னையும் தன் தலைவனையும் ஆன்மா உணராதபடி மறைக்கப்பட்டிருப்பது பிறப்பின் கண்ணே என்பார் 'பிறப்பந்தகாரம்' என்றார். பந்தபாசம் - தொடர்பையுண்டாக்கும் ஆணவம், கன்மம், மாயை என்னும் வினைகள்.

இவற்றின் இயல்பைப் பின்வரும் சிவப்பிரகாசத் திருவிருத்தத்தாலறிக.

'ஏகமாய்த் தன்கால எல்லைகளின் மீளும் எண்ணரிய
சத்தியதாய் இருளொளிர இருண்ட
மோகமாய்ச்செம்பிலுறு களிம்பேய்ப்ப நித்தமூலமலமாய
முழுதினையு மறைக்கும் [றிவு
பாகமாம் வகைநின்று திரோதான சத்திபண்ணுதலான்
மலமெனவும் பகர்வரது பரிந்து
நாகமா நதிமதியம் பொதிசடையா னடிகள் நணுகும்வகை
கருணைமிக நயக்கும் தானே'

பஞ்சபாணம்-இவை என்பதும் அவற்றின் செயலையும் முன்னாகக் கூறினோம்.

ஆலிங்கனங் கொங்கை - தழுவுதற்குரிய கொங்கை. ஆடம்பரம்-செருக்கு, பெருமகிழ்ச்சி. அயர்தல்-இளைத்தல். புண்டரீகம் தாமரை; இங்குத் திருவடிகளுக்காயிற்று. கொண்டல் - மேகம் கடலின் நீரைக் கொள்வது என்க் காரணப்பொருள்; கொள் + தல. ஆகண்டலன்-இந்திரன் மத்தம - ஊமத்தைமலர். கங்கையைத் தோகை என்பதற்கு ஏற்பச் சடையைப் பஞ்சரம் என்றார். பொன்மயமாய்ச் சிவந்த நிறத்துடன் கூடும்போலு மிருத்தலின்.

அகத்தியருக்குத் தமிழைச் செவியறிவுறுத்தியதனாலும் முதற்சங்கத்தில் புலவராய் வீற்றிருந்து தமிழ்ஆராய்ந்தமையாலும் 'செந்தமிழ்ப் பெருமாளே' என்றார். (47)

## குமரகோட்டம்

48 தனனதாத தத்ததந்த தனனதாத தத்ததந்த
தனனதாத் தத்ததந்த-தனதான

அறிவிலாப் பித்தருன்ற னடிதொழாமற்ற கெட்டவஞ்ச
ரசடர்பேய்க ளத்தர்நன்றி யறியாத

அவலர்மேற் சொற்களைக்கொண் டுகவிகளாக் கிப்புகழ்ந்
தவரைவாழ்த் தித்திரிந்து பொருள்தேடிச்

சிறிதுகூட் டிக்கொணர்ந்து தெருவுலா வித்திரிந்து
தெரிவைமார் கைப்புகுந்து தவமேயான்

திரியுமார்க் கத்துநிந்தை யதனைமாற் றிப்பரிந்து
தெளியமோட் சத்தையென்று அருள்வாயே

இறைவமாற் றற்றசெம்பொன் வடிவம்வேற் றுப்பிரிந்து
இடபமேற் கச்சிவந்த வுமையாடன்

இருளைநீக் கத்தவஞ்செய் தருள்நோக் கிக்குழைந்த
விறைவர்கேட் கத்தகுஞ்சொ லுடையோனே

குறவர்கூட் டத்தில்வந்து கிழவனாய்ப் புக்குநின்று
குருவியோட் டித்திரிந்த தவமானைக்

குணமதாக் கிச்சிறந்த வடிவுகாட் டிப்புணர்ந்த
குமரகோட் டத்தமர்ந்த பெருமாளே.

(இ-ள்.) இறைவா - சிவபெருமானே, மாற்று அற்ற செம்பொன் - மாற்றுக் காணமுடியாத சிறந்த சிவந்த பொன் போன்ற, வடிவம் வேறுபிரிந்து - திருவுருவத்தினின்றும் வேறுபட்டுப் பிரிந்து, இடபம் மேல - இடபவாகனத்தின் மேலூர்ந்து, கச்சிவந்த உமையாள்தான் - காஞ்சிபுரத்துக்கு

வந்த உமாதேவியாருடைய, இருளை நீக்க - மாயையை ஒழிக்க, தவம் செய்து அருள-தவத்தைச் செய்து முடிக்க, நோக்கி குழைந்த-அத்தவச் செயலைக்கண்டு உருகிய, இறைவா கேட்க தரும் - சிவபெருமான் கேட்கத் தக்க, சொல் உடையோனே-உபதேசமொழியை உடையவனே, குறவர் கூட்டத்தில் வந்து - குறவருடைய கூட்டத்திலே சென்று, கிழவனாய்ப் புக்கு நின்று - கிழவனாகப் போய் நின்று, குருவி ஓட்டி திரிந்த - குருவியைக் கவண் கல்லால் ஓட்டிப் புனமெல்லாம் திரிந்திருந்த, தவம மான் - பல பிறப்புக்களிலே செய்த தவத்தை யுடைய மான் போன்ற இயல்புடைய வள்ளிநாயகியை, குணம் அது ஆக்கி - தனது கருத்துக்கு இசையும்படி செய்து, சிறந்த வடிவு காட்டி - தன்னுடைய மேன்மையான உண்மை வடிவத்தைக் காட்டி, புணர்ந்த - சேர்ந்த, குமரகோட்டத்து அமர்ந்த பெருமாளே - குமர கோட்டத்தில் எழுந்தருளிய பெருமானே, அறிவு இலா பித்தர் - அறிவில்லாத பித்தர்கள், உன்தன் அடிதொழா - உன்னுடைய திருவடிகளை வணங்காத, கெட்ட வஞ்சர் - தீயகுணமுடைய வஞ்சகர்கள், அசடர் - குற்றமுடையவர், பேய கத்தர்-பேய்போன்ற பொய்யர், நன்றி அறியாத அவலர்மேல - ஒருவர் தமக்குச் செய்த நன்மையை உணராத வீணர் ஆகிய இவர்களின்மேல், சொற்கள் கொண்டு-அரிய சொற்களைத் தெரிந்தெடுத்து, கவிகள் ஆக்கி - பாட்டுக்களாகப் புனைந்து, புகழ்ந்து - வியந்து, அவரை வாழ்த்தி திரிந்து - அவரை வாழ்த்தித் திரிந்து, பொருள் தேடி -

பொருளைச் சம்பாதித்து, சிறிது கூட்டி கொணர்ந்து-சிறிது தொகை சேர்த்துக் கொண்டுபோய், தெரு உலாவி திரிந்து- தெருக்களிலே உலாவித் திரிந்து, தெரிவை மார்க்கு சொரிந்து - விலைமாதர்களுக்கு அந்தத் தொகையாகக் கொட்டிக்கொடுத்து, அவமே யான்-வீணாக நான். திரியும் மார்க்கத்து - திரிகின்ற தீயவழியிலுள்ள, நிந்தை அதனை மாற்றி-பழிப்பை ஒழித்து. பரிந்து-அன்புகொண்டு, தெளிய- தெளிவடையும்படி. மோக்ஷத்தை வீட்டின்பத்தை, என்று அருள்வாய்-எக்காலத்திலே அருள்செய்வாய்? எ-று.

(வி-ரை) நினை வணங்காதார்மேல் கவிபாடுதல் பொருந்தாத சொற்களைக் கொண்டு கவிகள்போலச் செய்யப்படும் போலிக்கவிகளை என்பார் 'சொற்கள் கொண்டு கவிகளாக்கி' என்றார். கடவுளை வணங்காதார் வீடுபேறு அடையாராய்ப் பிணிப்பூட்டுப்பட்டு இறப்பாராதலின் அவர் பிறவி பயனற்றதென்பார் 'அவலர்' என்றார். இவ்வாறே ஸ்ரீமத் அப்பர்சுவாமிகளும் கூறுதல் காண்க

'சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவரேனும்
மங்குவா ரவர்செல்வம் மதிப்போ மல்லோம்
மாதேவர்க் கேகாந்த ரல்லா ராகில்
அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோ யராய்
யாவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகி
லவர்கண்டீர் நாம்வணங்குங் கடவுளாரே.'

புகழ்த் தக்காரைப் புகழ்ந்து அவர் கொடுக்கும் சிறு தொகையை ஒன்றாகக் கூட்டிச் சேர்த்துப் பெண்களுக்கு மொத்தமாகக் கொடுக்கின்றேன் என்பது தோன்ற, 'சிறிது கூட்டிக் கொணர்ந்து தெரிவைமார்க்குச் சொரிந்து' என்றார். கொணர்ந்து என்பதற்குக் கொண்டு பகுத்துச் சொரிதல்-மிகுதியாகக் கொடுத்தல். இறைவர்-சிவபெருமான் அவர் வடிவம் பொன்வடிவமாதலின் 'இறைவர் மாற்றறியாச் செம்பொன் வடிவம்' என்றார் இதனை 'பொன்போல மிளிர்வதோர் மேனியினீர்' 'பொன்னார் மேனியனே' 'பொன் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி பொலிந்திலங்கும்' என்று வரும் திருவாக்குகளால் அறிக. உமாதேவியார் சிவபெருமானை நோக்கிக் காஞ்சிபுரத்தின்கண் தவஞ்செய்த காலத்துச் சிவபெருமான் அவரை யாட்கொள்ளத் திருவுளங்கொண்டு வேகவதியாற்றில் நீர் பெருகும்படி செய்ய, அதனைக்கண்ட உமாதேவியார் தாம் புதிதாகப் பிரதிட்டித்துப் பூசித்த சிவலிங்கப்பெருமானுக்கு ஊறு வருமென்றெண்ணி அவரைத் தமது ஸதனங்களாரத் தழுவினார். அதனால், அப்பெருமான் திருமேனி குழைந்து, அம்மையார் முலைச்சுவட்டையும் வளைச்சுவட்டையும் பொருந்தினர் என்பது **காஞ்சிப் புராணம்.**

இறைவர் கேட்கத் தகுஞ்சொல் என்றது பிரணவச் சொல்.

முருகப்பெருமான் ஞானநாயகியார் அன்னைப்பெறும் பொருட்டு முத[illegible] திருவிளையாடல்கள்புரிந்த

வரலாற்றைக் கூறுமுகத்தான் அவரது அன்புக்கு எளிவரும் பெருமையை எடுத்துக் கூறினார்.

குறவர் குலத்தில் பிறந்தாரேனும் முற்றவப்பேறுடையவராய்த் திருமாலின் திருமகளாகச் சிறந்தாராதலின் வள்ளி நாயகியாரைத் 'தம்மான' என்றார்.

சிறந்த வடிவு தனதுமை வடிவம. குமரன் + கோட்டம் என்பது 'சில விகாரமாம் உயர்திணை' (நன்-சூத். 159) என்ற விதியினால் குமரகோட்டம் எனப் புணர்ந்தது. (48)

## சோலைமலை

49 தனனதந்த தத்தான தனனதந்த தத்தான
தனனதந்த தத்தான - தனதான.

களவுகொண்டு கைக்காசின் அளவறிந்து கர்ப்பூர
களபதுங்க வித்தார முலைமீதே
கலவியின்பம் விற்பார்கள் அவயவங்கள் ஒப்பாடு
கவிதெரிந்து கற்பார்கள் சிலதாமே
உளநெகிழ்ந்த சத்தான உரைமறந்து சத்தான
உணர்வுணர்ந்து கத்தூரி மணநாறும்
உபயபங்க யத்தாளை பெயமென்று உனைப்பாடி
யுருகிநெஞ்சு கற்றேறில் இழிவாமோ
அளவிலங்க விச்சேனை பரவைபந்த சுக்ரீவ
அரசுடன் கடற்றாளி எழுவேபோய்
அடலிலங்கை சுட்டாடி நிசிசரன்த சக்ரீவ
மறவொரம்பு தொட்டோன்தம் மருகோனே
வளருமந்த ரச்சோலை மலையுகந்த முப்பாலை
வனசகொம்பினைத் தேடி ஒருவேட

வடிவுகொண்டு பித்தாகி யுருகிவெந்த ழறகானில
மறவர்குன்றினிற்போன பெருமாளே.

(இ-ள்) அளவு இல் வன கவிசேனை-அளவில்லாத வலி
மையுடைய குரங்காகிய சேனை, பரவ - பரவும்படி, வந்த
சுகரீவ அரசுடன்-தன்னைவந்துசேர்ந்த சுகரீவமன்னனுடன்
கடல தூளி எழ போய - கடலிலே தூகள உணடாகும்படி
அதனைக கடந்துசென்று, அடல இலஙகை சுடடு ஆடி-வலி
மையான அரண்கள பொருந்திய இலஙகையை எரிததுச்
சணடையாகிய விளையாட்டைசசெயது, நிசிசரன-அரகக
னாகிய இராவணனுடைய, தசம கிரீவம் அற - பததுத தலை
களும் அறுபடும்படி, ஓர அம்பு-ஒபபறற கணையை, தொட்
டாரதம மருகோளே-விட்டவராகிய இராமபிரானுடைய
மருகனே!, வளரும மந்தரம் சோலைமலை - ஆகாயத்தை
அளாவி வளாகினற மநதரமலையையும சோலை
மலையையும், உகநத-விருமபி எழுந்தருளியிருககும், முன்
பாலை முன்னொருகாலததில பாலைநிலததில, வனசா கொம்
பினை தேடி-வேடாமகளாகிய வள்ளியம்மையாரைத தேடி,
ஒருவேடன் வடிவுகொண்டு-ஒபபறற வேடனுடைய உரு
வததைத தாங்கி, பித்து ஆகி உருகி-காம மயககங்கொண்டு
மனங்கரைந்து, வெம் தழல கானில-வெம்மையையுடைய
நெருபபுபபோலும் சுடுகின்ற காட்டில, மறவர் குன்றினில்
போன பெருமாளே-வேடர வாழுகினறமலைசசாரலிற்சென்ற
பெருமானே!, களவுகொண்டு-வஞ்சகமான தொழில தெரிந்
தும், கைகாசின் அளவு அறிந்து-கையிலேயுள்ளபொருளின்

அளவை யுணர்ந்தும, கர்ப்பூரம களபம துங்கம்-கர்ப்பூரம் கலந்த கலவைச் சாந்தைப் பூசிய உயர்ந்த, வித்தார முலை மீது-பெரிய தனங்களின்மேலே, கலவி இன்பம் விற்பார்கள்-போகமாகிய இன்பத்தை விற்கிறவர்களாகிய பொதுமகளி ருடைய, அவயவங்களை-உருப்புக்களை, பாடுகவி தெரிந்து கற்பார்கள்-பாடுகின்ற பாட்டுக்களை அறிந்து கற்றுக்கொள் வார்கள், சிலர் தாம்-சிலர், உளம நெகிழ்ந்த- மனம் உருகிய, அசத்தான உரை மறந்து-பயனற்ற சொல்லை மறந்து, சத்தான உரை உணர்ந்து-உண்மைப் பொருளாகிய தேவ ரீரை மெய்ஞ்ஞானத்தால் அறிந்து, கத்தூரி மணம் நாறும- கத்தூரியின் மணம்வீசுகின்ற, உபயம பங்கயம தாளில்- இரண்டாகிய தாமரை மலரை ஒத்த திருவடிகளில், அபயம என்று உனைப்பாடி-அபயமென்று தேவரீரைக் குறித்து, நெஞ்சு உருகி-உள்ளம்நெகிழ்ந்து, சற்று ஓதில்-சிறிது கவி பாடித் துதிப்பார்களாயின், இழிவு அமோ - அவர்களுக்கு இகழ்ச்சி உண்டாகுமோ? எ-று.

(வி-ரை) பொதுமாதர் பொருள்வாங்கப் போகத்தைத் தருவாராதலின் 'கைக்காசின் அளவறிந்து' என்றார் இவ ரைப் பொருட்பெண்டிர் என்பதும் அதுபற்றியே என்க. அத்தகைய மாதர்களது உறுப்புக்களைப் புகழ்ந்து கவிபாடு வோர் தேவரீரது திருவடியைப் பாடுவாராயின் அவருக்கு இழிவாகுமோ என்று அவர்தம் புன்செயலை இகழ்ந்து கூறி னார். உரைமறந்து - சொல்லற்று. கவிசசேனை - குரங்குச சேனை. தசக்கிரீவன்-இராவணன்; பத்துத் தலையையுடைய

வன், கிரீவம்-கழுத்து தொட்டார் - விட்டவர். வஞ்சர் - வேடர். மாதர்மேல் மையலை வைத்து அவரைப் பாடிப் புகழ்ந்து பெறுவது சிறிதுகாலம் நிற்பதாகிய சிற்றின்பமே என்னும் அதனைக் கண்கூடாகத் தெரிந்துவைத்தும் அவரைப் புகழ்வோரும் உளரென்றும் அன்னார் எக்காலத்தும் எவ்விடத்தும் அநுபவிப்பதாகிய பரிபூரண சுகத்தை அடைய வேண்டுமாயின் தேவரீருடைய திருவடிப் புகழ்ச்சியையே கூற வேண்டும் என்றும் கூறினார் இக்கருத்துப் பற்றியே,

'தந்தையுங் கனையார் தங்கள்மேல் வைத்த
தயாவை நூறாயிரம் கூறிட்டு
அத்திலங் கொருகூறுன் னடிமிசை வைத்திடுவார்
அமருலகளிக்குநின் பெருமை'

என்றருளிச் செய்தார் கருவூர்த்தேவரும். இவ்வாறே,

'மங்கையர்கள் யோனிமிசை வைத்திருக்கும் ஆசையினைப்
பங்குசெய்து நூற்றிலொரு பங்கெடுத்துக—கங்கையணி
வேணியரன் பாதார விந்தத்தே வைத்தக்கால்
காணலாங் காணுங் கதி'

என ஒரு பழம்பாட்டு வருதலும் காண்க. (49)

## பொது

50 தத்த தனதன்ன தான தானதன
தத்த தனதன்ன தான தானதன
தத்த தனதன்ன தான தானதன-தனதான.

எத்தி இருகுழையை மோதி மீனமதின
முட்டி இடறியம தூதர் போலமுகில்
ஒட்டி அயலையர வாளை வேலமுனையை எதிர்சீறி

எத்தி சையினுமொரு காம ராஜனமிக
வெற்றி அரசுதனை ஆள வீசி அடல
எற்றி இளைஞருயிர் கோலு நீலவிழி மடமாதர்

வித்தை தனிலுருகி ஆசை ஆகிஅவர்
கைக்குள் மருவுபொரு ளான ஆகுமவரை
மெத்தை தனிலுருகி மோகமாகிவிட அதனமேலே

வெட்க மிலைநடவு மேகு மேகுமினி
வற்றா வரை அழைப்பு மாத ரேனமுன
விட்ட படிறிகடம நேச ஆசைகெட அருளவாயே

ஒத்த வரிகமுகு வாளை தாவுபுனல
அத்தி நகரமர சான வாளநிருபன
ஒக்க நினைவுமுனி லாமல வாகுபெல நிலைகூர

உற்ற தருமனுடன் வீமன வேலவிசயன
வெற்றி நகுலசக தேவர் தோதனிலும
ஒத்து முடுகிவிடு பாகன் மாளமரில அசுரேசன்

பத்து முடிகளது களாக வாகுஇரு
பத்து மொருகணையில வீழ நேரவுணா
பட்டு மடியஅமா மோது காளமுகில மருகோனே

பச்சை மயிலவரு வீர வேலமுருக
துட்ட நிருதாகுல கால வானவாகள
பத்தி உடனடியில வீழ வாழ்வுதவு பெருமாளே.

(இ-ள்) வரி ஒத்த கமுகு-கீற்றுக்கள் ஒன்றற்கொன்று இடை வெளியால் ஒத்துள்ள கமுகமரத்தை, வளை தாவு புனல்-வாளைமீன் தாவுகின்ற நீர் வளமுடைய, அத்திநகரம் அரசு ஆன வாள்நிருபன்-அஸ்தினபுரிக்கு வேந்தனான வாட்

போரிற் சிறந்த துரியோதனனுக்கு, ஒக்கும் நினைவுமுன் நிலாமல்-தன் உதவியைப்பெற வேண்டுமென இசைந்த எண்ணத்துக்கு முரண்பட்டுத் தோன்றாமல், வாகுபலம் நிலைகூற-அவனுடைய தோள்வலியின் நிலைமையினை வீமனுக்கு எடுத்துச் சொல்லி, உற்ற தருமன் அடலவீமன்-சாந்தம் பொருந்திய தருமநந்தனனுக்கும் போரைச் செய்யும் வீமசேனனுக்கும், வேல்விசயன் - படைத்தொழிலில் வல்ல அருச்சுனனுக்கும், வெற்றிநகுல சகதேவர்-வெற்றியையுடைய நகுலனுக்கும் சகதேவனுக்கும், தேர்தனில் ஒன்று முடுகி விடுபாகன-தேரிலே மனமகிழ்ந்து செலுத்துகின்ற சாரதியும், வாள் அமரில் அசுரேசன்-வாட்போரிற் சிறந்து வலிகிய இராவணனுடைய, பத்துமுடிகள் தூள் ஆக பத்து முடிகளும் பொடியாகவும், வாகு இருபத்தும ஒருகணையில வீழ-இருபது தோள்களும் ஒப்பற்ற அம்பொன்றினால் நிலத்திலே விழவும், நேர் அவுணர் பட்டுமடிய - போரில் எதிர்த்துவந்த இராக்கதர்கள் அம்பாலே தாக்கப்பட்டு இறக்கவும், அமர் மோது காளமுகில் மருகோனே-சண்டையில் தாக்குகிற கரிய மேகம்போலும் நிறத்தையுடைய திருமாலுக்கு மருமகனே!, பச்சைமயிலில் வருவீர-பச்சை மயிலின்மேல் ஊர்ந்துவரும் வீரனே!, வேல முருக-வேற்படையையுடைய முருகனே!, துட்டநிருதர் குலகால-தீயோராகிய அரக்கர் கூட்டத்துக்கு யமனைப்போன்றவனே!, வானவர்கள் பக்தியுடன் அடியில் வீழ-தேவர்கள் அன்போடு திருவடிகளிலே வணங்க, வாழ்வு உதவு பெருமாளே-

பேரின்பப் பெருவாழ்வைத் தந்தருளும் பெருமானே', இரு குழையை எதிர்த்து மோதி-இரண்டு குண்டலங்களையும் தாக்கி, மீனம் அதில் முட்டி இடறி-சேலமீனின் மேல் வீழ்ந்து முட்டி அதனைத் தள்ளி, யமதூதர்போல் முகில் எட்டி-யம தூதுவர்போலக் கோபமிருந்து மேகம்போன்ற கூந்தலின் அருகு சென்று, வயவர் கரம் வாளை-வீராகரத்தே வைத்த திருக்கும் வாளையும், வேல் முனையை-வேலின் நுனியையும், எதிர் சீறி எதிரே கோபித்து, எத்திசையினும் - எல்லாத் திக்குகளிலும், ஒரு காமராஜன் மிக வெற்றி அரசு தனை ஆள ஒப்பற்ற மன்மதன் வெற்றியோடு கூடிய தனது அரசாட்சியைச் செலுத்தும்படி, வீசி அடல் எற்றி-வீசிச் சண்டையிலே கொன்று, இளைஞர் அருமை உயிர் கோலும்-மைந்தர்களுடைய அரிய உயிரை வளைத்துக் கொள்ளும், நீலம் விழி மடம் மாதர்-நீலநிறம் பொருந்திய கண்களையுடைய மடப்பம் பொருந்திய பெண்களுடைய, வித்தைதனில் உருகி-மாயவித்தைகளில் மனமுருகி, ஆசை ஆகி-ஆசை மிகுந்து, அவர் கைக்கு உள-அவருடைய கைக்குள் சிக்கி, மருவு பொருள் ஆன ஆகும்வரை - கையில் பொருந்திய பொருள் முடியும் வரையில், மெத்தைதனில் உருகி மோகம் ஆகிவிட அதன்மேல்-மெத்தையின்மேல் மனமுருகி மோகம் மிகுதலினால், வெட்கம் இல நடவும் ஏகும் ஏகும் - பொருளில்லாமல் இங்கே இருக்கின்றீரே உமக்கு வெட்கமில்லையா நடவுங்கள்; போங்கள்; போங்கள், இனி மற்றவரை அழையும் மாதரே என - இனிமேல் பொருளுள்ள மற்றவர்

களை அழையுங்கள் மாதர்களே என்று சொல்லி, முன்விட்ட படிறிகள் தம்-முன்னே தெருவிலே விட்ட வஞ்சகிகளின் மேலுள்ள, நேசம் ஆசைகெட அருளவாய்-மிக்க ஆசையானது அழிய எனக்கு அருள்புரிவாய் எ-று.

(வி-ரை) வயவா-வீரா. முகில்-கூந்தல். அடல்-போர். கோலுதல்-கொள்ளுதல். மடமாதர் - மடப்பத்தையுடைய பெண்கள். மடப்பம் - கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை. விதனை-பொய்யாகக் காட்டும் செயல்கள். ஏகும் ஏகுமென்ற அடுக்கு விரைவுப் பொருளில் வந்தது. படிறிகள்-வஞ்சனையுடையவர்கள். வரிகமுகு-கீற்றுறையுடைய பாக்குமரம். நீர்வளம் மிகுதி கூறுவார் 'வரிகமுகு வாளை தாவுபுனல்' என்றார்.

'வெள்ளத்தடங் காசினைவாளை வேரிக்கமுகின் மீதேறி
துள்ளி முகிலைக் கிழித்து மழைத்துளியோ டிறங்குஞ் சோ
ணாடா'

என்று பிறருங் கூறியது காண்க.

நிருபன்-அரசன். வாகுபல நிலை - தோள்வலியின் தன்மை. மல்யுத்தத்தில் சிறந்தவனாதலின் 'அடலவீமன்' என்றும், படைக்கலப் பயிற்சியில் மிக்கோனாதலின் 'மேலவிசயன்' என்றும், கூறினார். அர்ச்சுனன் தேரிலேயன்றி நகுல சகாதேவர் தேர்களிலேயும் பாகனாக அமர்ந்து தேரைச் செலுத்தினது அவனது பெருங்கருணையே என்பார், 'நகுல சகதேவர் தேர்தனிலும் ஒத்துமுடுகிவிடும் பாகன்' என்றார். உம்மை இழிவுசிறப்பு. முடிகள் என்புழி முற்றும்மை விகாரத்தால் தொக்கது. சந்தம் நோக்கி வாகிரு எனப

புணர்ப்பாலது வாகு-இரு என புணராது நின்றது. காள முகில-கருமேகம்; இங்கு அநங்கமுடைய இராமபிரானைக் குறித்தது. நிருதா குல காலன-அரக்கருடைய குலத்துக்கு இயமனைப் போன்றவன். (50)

## பொது

51 தனத்ததன தனத்ததன தனத்ததன தனத்ததன
தனத்ததன தனத்ததன-தனதான.

குறிப்பரிய குழற்குமதி நுதற்புருவ விலுக்குமிரு
குழைக்குமவடு விழிக்குமெழு குமிழாலும்

கொடிப்பவள இதழ்க்குமிரு சுடர்த்தரள நகைக்குமமு
தினுக்குமிக உறத்தழுவு குறியாலும்

அறப்பெரிய தனக்குமன நடைக்குமினி னிடைக்குமல
ரடிக்குமிள நகைக்குமுளம் அயராதே

அகத்தியனொ டுரைத்தபொரு ளளித்தருளி அரிபிரம
ரளப்பரிய பதக்கமலம் அருள்வாயே

கறுத்தடரு மரக்கரணி கருக்குலைய நெருக்கியொரு
கணத்திலவர் நிணத்தகுடல் கதிர்வேலால்

கறுத்தருளி அலக்கணுறு சுராக்கவர்கள் பதிக்குரிமை
அளித்திடரை அறுத்தருளும் அயில்வீரா

செறுத்துவரு கரித்திரள்கள் திடுக்கிடவல மருப்பையரி
சினத்தினொடு பறித்தமர்செய் பெருகானில்

செலக்கருதி அறக்கொடிய சிலைக்குறவர் கொடித்தனது
சிமிழ்த்தனமு னுறத்தழுவு பெருமாளே.

(இ-ள்) கறுத்து அடரும் அரக்கர் அணி-கோபித்துப் போரில் நெருங்குகின்ற இராக்கதருடைய கூட்டம், கருகு லைய நெருக்கி-ஒருங்குகெடும்படி துன்புறுத்தி, ஒரு கணத் தில்-ஒரு கணப்பொழுதினுள், அவர் நிணத்தகுடல்-அவரு டைய கொழுப்புள்ள குடலை, கதிர்வேலால்-ஒளியையுடைய வேற்படையினாலே, கறுத்து அருளி - கோபித்தருளி, அலக் கண் உறு சுரர்க்கு-அவரது தீய செயலினாலே துன்பப்படு கின்ற தேவர்களுக்கு, அவர்பதிக்கு உரிமை அளித்து-அவர் கள் தலைவனாகிய இந்திரனுக்கு அமராவதியின் அரசுரிமை யைத் தருதலால், இடரை அறுத்தருளும் மயிலவீரா-வருத் தத்தை ஒழித்தருளும் மயிலவீரனே!, செறுத்து வரு கரி திரள்கள் திடுக்கிட-கோபித்துவரும் யானைக்கூட்டங்கள் திகிலடைய, வலமருப்பை அரிசினத்தினோடு பறித்து-வலிய கொம்புகளைக் கோபத்தினோடு ஒடித்து, அமர் செய் பெரு கானில் செல கருதி-போர் செய்கின்ற பெரிய காட்டிலே போக நினைத்து, அது கொடிய சிலை குறவர்-மிகவும் கொடிய தொழிலையுடைய வில்லைத் தாங்கிய வேடர்களுக்கு, கொடி அனது சிறிய தனம-மகளாகிய கொடிபோலும் மேனமை யுடைய வள்ளிநாயகியாரின் கச்சைக் கட்டிய ஸதனங்களை, முன்உற தழுவு பெருமாளே-முன்னே சென்று தழுவுகின்ற பெருமானே!, குறிப்பு அரிய குழறகும் - உவமை இன்ன தென்று குறித்துச் சொல்லுதற்கு அருமையான கூந்தலா லும், மதிநுதற்கும்-பிறையை ஒத்த நெற்றியாலும், புருவம் விலுக்கும்-வில்போன்ற புருவத்தாலும், இரு குழைக்கும-

இரண்டு குண்டலங்களாலும், வடு விழிக்கும் - மாம்பிஞ்சை யொத்த கண்களாலும், எழு குமிழாலும் - தோன்றுகின்ற குமிழம்பூப் போன்ற மூக்காலும், கொடிபவளம் இதழ்க்கும்- கொடியாகப் பூக்கும் பவழம்போலும் சிவந்த இதழாலும், மிகு சுடர் தரளம் நகைக்கும்-மிகுந்த ஒளியையுடைய முத்தைப்போன்ற பற்களாலும், அமுதினுக்கும் மிக உற்ற குழவு குறியாலும்-அமுதத்தினுக்கும் சுவையில் மிகுந்த புணர்ச்சிக் குறிப்பாலும், அற பெரிய தனக்கும்-மிகவும் பெரிய ஸ்தனங்களாலும் அன்ன நடைக்கும்-அன்னம்போன்ற நடையாலும், மின்னின் இடைக்கும்-மின்னலையொத்த இடையாலும், மலர் அடிக்கும்-தாமரை மலரை நிகர்த்த அடிகளாலும், இளமை நகைக்கும் - புன்னகையாலும், உளம் அயராது- மனம் சோர்வடையாமல், அகத்தியனொடு உரைத்த பொருள் அளித்தருளி-அகத்திய முனிவனுக்கு உபதேசித்த பிரணவப் பொருளை உபதேசித்தருளி, அரி பிரமா அளப்பு அரிய பதம கமலம் அருள்வாய்-திருமாலுக்கும் பிரமனுக்கும் அளவிடமுடியாத பெருமையையுடைய திருவடித் தாமரைகளை எனக்கு அருள் செய்வாய் எ-று.

(வி-ரை) மதி ஈண்டு பிறை. வடுவிழி-மாம்பிஞ்சின் பிளவையொத்த கண். குமிழ்-மூக்கு; ஆகுபெயர். தரள நகை-முத்துப்போல வெண்மையான பல். அமுது-இதழூறல். தனக்கும் என்புழி அத்துச் சாரியை விகாரத்தால் தொக்கது. மின்னின் இடை-மின்னலைப்போல் தோன்றி மறையும் இடை. இடை மிகநுண்ணியதாக இருத்தலின் உண்டோ இல்லையோ

என்று ஐயங் கொள்ளுமாறு மின்னற் கொடிபோல ஒருகால் தோன்றியும் பிறிதொருகால் தோன்றாமலும் இருக்கும் என்பது பற்றி மின்னலை மகளிர் இடைக்கு உவமையாகக் கூறுவது புலவர் மரபு. இதுபற்றியே **திருத்தக்கதேவரும்,**

'அங்கைபோல வயிறணிந்த வலஞ்சுழிய பைங்கொடும்பூண்
கங்கையின் சுழியலைக்குங் கணைகொள்ள வுடங்கிடையை
யுண்டெனத் தமர் மதிப்பர் நோக்கினார் பிறரெல்லா
முண்டில்லை யென்னைய மல்லதொன் றுணர்வரிதே'

எனக் கூறுவாராயினர்.

அகத்தியனொடு உரைத்தபொருள் - அகத்தியருக்கு உபதேசித்த பிரணவப்பொருள் 'அகத்தியனுக்கு ஒத்து உரைக்கும் குருவே' என்றருளிச் செய்தார் **அருணந்தி சிவாசாரியரும்.** கறுத்தல்-கோபித்தல்; கறுப்பு என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த தொழிற்பெயர், கறுப்பும் சிவப்பும் வெகுளிப்பொருள (தொல்) அலக்கண் - துன்பம் செறுத்து வரு கரித்திரள்கள் - கோபித்து வரும் யானைக்கூட்டங்கள். அரிசினம்-கோபம் 'அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும்' என்ற **ஆழ்வார்** திருவாக்கினும் அரிசினம் இப்பொருட்டாதல் காண்க. அறக்கொடிய சிலைக்குறவர்-மிகவும் கொடிய வில்லையுடைய குறவர். கொடிய சிலைக்கு என்றது உடையான் தொழில் உடைமையின்மேல் ஏற்றிக் கூறப்பட்ட உபசாரவழக்கு. சிமிழ் ஸ்தனம் - சிமிழை ஒத்த ஸ்தனம். உறத்தழுவுதல் பொருந்த அணைத்தல். **(51)**

## வேளூர் (வைதீசுவரன் கோயில்)

52 தனந்த தத்தன தானான தானன
தனந்த தத்தன தானான தானன
தனந்த தத்தன தானான தானன-தந்ததான.

நிறைந்த துப்பிதழ் தேனூறல் நேரென
மறந்த ரித்தக ணாலால நேரென
நெடுஞ்சு ருட்குழல் சீமூக நேரென    நெஞ்சினமேலே
நெருங்கு பொற்றன மாமேரு நேரென
மருங்கு நிட்கள ஆகாச நேரென
நிதம்ப முக்கணர் பூணார நேரென    நைந்துசீவன்
குறைந்தி தம்பட வாய்பாடி யாதர
மெழுந்த மைத்துனை மேல்வீழு மாலொடு
குமண்டை யிட்டிடை சோராவி டாயில    மைந்தநாபி
குடைந்தி ளைப்புறு மாமாய வாழ்வருள்
மடந்தை யர்க்கொரு கோமாள மாகிய    [வேன்
குரங்கை யொத்துழல் வேனேனை யாளுமை யென்று    சேர்
மறைந்த சுக்ரிப போராட வேயொளி
யிருந்து நற்றைய வாய்மீள வேயவன்
மனங்க ளித்திட மாமேரு நேரெனு    நெஞ்சவாலி
மதஞ்செ குத்திட வீறான தோர்கணை
வளைந்த விற்றசர மீதேவ வானரம்
வளைந்து சுற்றிணு மேயோடி யாடிய    ணாங்கிமேவ
அறைந்த மைத்தநு மாறோடு மாகடல்
வரம்ப டைத்ததின் மேலேறி ராவண
னரண்கு லைத்தெதிர் போராடு நாரண    மைந்தனான

அநங்கன் மைத்துன வேளே கலாபியின்
விளங்கு செய்ப்பதி வேலா யுதாவிய
னலங்க யப்பதி வாழ்வான தேவர்கள் தம்பிரானே.

(இ-ள்) மறைந்த சுக்ரீபர் போராட-வாலிக்கு முன் னிற்கலாற்றாது மறைந்த சுக்ரீபன் சண்டை செய்யவும், ஒளி இருந்து நலத்தயவாய் மீள - ஒளித்திருந்து சிறந்த இராம பிரான் கருணை தனக்குண்டாக மீளவும், அவன் மனம் களித்திட-அவனுடைய மனம் மகிழ்ச்சி அடையவும், மாமேரு நேர் எனும் நெஞ்சம் வாலி-பெரிய மேருமலைக்கு நிகரென்று சொல்லும் நிலைகலங்காத மனத்தையுடைய வாலியினுடைய, மதம் செகுத்திட - செருக்கை அழிக்க, வீறு ஆனது ஓர் கணை-மேன்மைபொருந்திய ஒப்பற்ற அம்பை, வளைந்த வில் சரம்மீது ஏவ-வளைந்த வில்லினது போக்கிலே விட, வானரம் வளைந்து சுற்றிலும் ஓடி ஆடி வணங்கி மேவ-குரங்குகள் வளைந்து சுற்றிக்கொண்டும் ஓடியும் ஆடியும் வணங்கிக்கொண்டு மிருப்ப, அறம் தழைத்து-தருமமானது செழிக்க, அநுமானோடு மாகடல் வரம்பு அடைத்து-அநுமானுடன் பெரிய கடலின் கரையைக்கட்டி, அதின்மேல் ஏறி-அக்கரையின் மீது சென்று, இராவணன் அரண் குலைத்து-இராவணனுடைய காவல்களை அழித்து, எதிர்போராடு நாரணன்-எதிர்த்துச் சண்டைசெய்யும் திரு மாலின், மைந்தன் ஆன அனங்கன் மைத்துனன் வேளே-மன்மதனுக்கு மைத்துனனை முருகனே', கலாபியின் விளங்கு செய்ப்பதி வேலாயுதா-மயிலின்மேல் விளங்குகின்ற

வயலூரில் வாழும் வேலவனே', வியன் நலம் கயம்பதி வாழ்வு ஆன தேவர்கள் தம்பிரானே-அகன்ற நன்மையுடைய திருவானைக்காவில் வாழ்வு பொருந்திய தேவர்கட்குத் தலைவனே', நிறைந்த துப்பு இதழ் ஊறல்-செம்மை முற்றுப்பெற்ற பவளத்தை ஒத்த உதட்டினது ஊறல். தேன் நேர் என-தேனுக்கு ஒப்பாகுமென்றும், மறம் தரித்த கண் - கொலையைத் தம்மிடத்தே கொண்டுள்ள கண்கள், ஆலாலம் நேர் என-ஆலகால விஷத்துக்கு ஒப்பாகுமென்றும், நெடும்சுருள் குழல்-நீண்ட சுருண்ட கூந்தல், நீரதம் நேர் என-நீருண்ட மேகத்தை ஒக்குமென்றும், நெஞ்சின்மேல் நெருங்கு பொன்தனம்-மார்பின்மேலே ஒன்றோடொன்று நெருக்கமாக வளர்ந்துள்ள பொன்னணிமை வாய்ந்த ஸ்தனங்கள், மாமேரு நேர் என-பெரிய மேருமலையை ஒக்குமென்றும், மருங்கு நிட்களம் ஆகாசம் நேர் என இடை அருவமாகிய ஆகாயத்தை ஒக்குமென்றும், நிதம்பம் முக்கணர் பூணாரம் நேர் என-கடிதடப்பிரதேசம் மூன்று திருக்கண்களையுடைய சிவபெருமான் சூடியுள்ள ஆபரணமாகிய பாம்பை ஒக்குமென்றும் புகழ்ந்து சொல்லி, சீவன் நைந்து-உயிர் வருந்தி, குறைந்து இதம்பட-ஊக்கம் குறைந்து இன்பம் உண்டாக, வாய் பாடி-வாயால் பாடி, ஆதரவு அழிந்து-ஆசை கெட்டு, அழைத்து அணைமேல் வீழ்ப் மாலொடு - அழைத்துப் படுக்கையின் மேல் விழுகின்ற மையலுடன், குமண்டை இட்டு - மண்டியிட்டு, உடைசோரா-ஆடை நெகிழ்ந்து, விடாயில் அமைந்து-இளைத்து, நாபி குடைந்து இளைப்பு உறும் மாமாயம் வாழ்வு

அருள்-வலிமையுள்ள உந்தியென்னும் மடுவில திளைத்து இளைப்பை அடைகின்ற பெரிய மாயமான வாழ்வைக் கொடுக்கின்ற, மடந்தையாககு-பெண்களுககு, ஒரு கோமாளம ஆகிய குரஙகை ஒத்து உழலவேனோ - ஒரு பரிகாசமுடைய குரஙகைபபோல வருநதுவேனோ? மனோலயம என்று சோவேன்-மனோலயத்தை என்று அடைவேன எ-று.

(வி-ரை) ஆலாலம-ஆலகாலவிஷம மறம தரிததகண்-கொலைத்தொழிலை பூணடுளள கண், நோககினோககுத் துனபஞ செய்தலால இவவாறு கூறினா நெடுஞசுருள குழல-நீண்ட சுருணட கூநதல சீமூதம-நீருண்ட மேகம். பொறறனம் - பொன்போனற நிறததையுடைய ஸதனம். மருங்கு நிட்கள ஆகாசம் இடை நுண்மையினால கணகளுக்குப புலபபடாமையால, இவவாறு கூறினா. பூணாரம் என்றது-பாம்பைக குறிததுப பின ஆகுபெயரால படததை உணாததிற்று. மாதா மயலில சிககிக கைபபொருள் இழந்து, இம்மை யின்பமுங்கெட்டு அலைவேனோ எனபாா, 'குரங்கை ஒத்துழலவேனோ' என்றாா. மனோலயம-மனம் செயலறறு ஒடுங்கும் நிலை. இதனை இவவாசிரியரே கநதரனுபூதி என்னும நூலின்கண,

'தூசா மணியுந் துகிலும புனைவாள
நேசா முருகா நினதன பருளம
ஆசா நிகளந துகளா யினபின
பேசா வனுபூ திபிறந் ததுவே'

என்றருளிச செய்தது காண்க.

அனங்கன்-மன்மதன. கலாபி-மயில. கயபதி-திரு வானைககாவுககு யானை பூசிதத காரணததால இபபெயா வந்தது. இது திருசசிராபபளளி ஜிலலாவி லுளளது. (52)

## திருவருணை

53 தான தத்த தந்த தான தத்த தநத
தான தத்த தநத-தனதான.

தோத கம்பெ ரும்ப யோத ரததி யஙகு
தோகை யாக்கு நெஞ்சம அழியாதே
சூலை வெபப டாந்த வாத பிதத மெனறு
சூழ்பி ணிகக ணஙகள அணுகாதே
பாத கசச மனதன மேதி யிறபு குநது
பாசம் விடடெ றிநது பிடியாதே
பாலொ லைககி ரஙகி நாவ லாகளி சைந்த
பாடல டிககு செஞசொல தரவேணும்
வேத மிககு விநது நாத மெயக்க டமப
வீர பதர கந்த முருகோனே
மேரு வைபபி ளநது சூர னைகக டிநது
வேலை யிறறு ளைநத கதிர்வேலா
கோதை பொற்கு றிஞ்சி மாது கசச ணிந்த
கோம ளககு ரும்பை புணர்வோனே
கோல முறறி லஙகு சோண வெறபு யாநத
கோபு ரத்த மர்ந்த பெருமாளே.

(இ-ள்) வேதம மிகக விந்து நாத-வேதத்தாலே மிகுத்துச் சொல்லப்பட்ட விந்துநாத தத்துவங்கட்குத் தலைவரே', மெய் கடம்ப-உடம்பிலே கடப்பமாலை தரித்த, வீரபத்திர

மனத்துணிவும் சிரேட்டமு முடையவனே!, கந்த முருகோனே-கந்தனாகிய இளையோனே!, மேருவை பிளந்து-மேருமலையை வெட்டி, சூரனை கடிந்து-சூரனைக் கொன்று, வேலையில துளைந்த கதிர்வேலா - சமுத்திரத்தில முழுகிய ஒளியையுடைய வேற்படையை உடையவனே!, கோதை பொன குறிஞ்சி மாது-பூமாலைபோலும் அழகுவாய்ந்த குறிஞ்சிநிலப் பெண்ணாகிய வளளிநாயகியின, கச்சு அணிந்த கோமளம குரும்பை கசசைத தரித்த மிருதுவான தென்னம பிஞ்சை ஒத்த ஸதனங்களை, புணர்வோனே - தழுவுபவனே!, கோலம உற்று இலங்கு-அழகுபெற்று விளங்குகின்ற, சோணவெற்பு-சோணமலையினகண், உயர்ந்த கோபுரத்து அமர்ந்த பெருமாளே-உயர்ந்த கோபுரத்தில் எழுந்தருளியுள்ள பெருமானே!, தோதகம் பெருமை பயோதரத்து - வஞ்சகமுளள பெரிய ஸ்தனங்களோடு, இயங்கு தோகையாக்கு-நடமாடும் பெண்களுக்கு, நெஞ்சம் அழியாது-மனமுடையாதபடிக்கும, சூலை வெப்பு-சூலையும் சுரமும், அடர்ந்த வாதம் பித்தம்-மிகுந்த வாதநோயும் பித்த மயக்கமும், என்று-என்றுசொல்லுகின்ற, சூழ்பிணி கணங்கள்-சூழ்ந்த நோயின் கூட்டங்கள், அணுகாது-சேராதபடிக்கும், பாதக சமன-கொடியவனாகிய யமன், தன் மேதியில் புகுந்து-தனது எருமைக்கடாவின்மேலேறி, பாசம் விட்டு எறிந்து பிடியாது-கயிற்றை விட்டு வீசிப பிடியாதபடிக்கும், பாவலர்க்கு இரங்கி நக்கீரதேவருக்குமனமிரங்கி, நாவலர்க்கு இசைந்த-நாவில் வல்ல அவர்க்குப் பொருத்தமாக அருள்

செய்த, பாடல் மிக்க செம் சொல்-பாடல்களில் சுவை மிகுந்த செவ்விய சொற்களை, தரவேணும் - அருள்புரிய வேண்டும் எ-று.

(வி-ரை) பயோதரம்-ஸ்தனம். பிணிக்கணங்கள்-4448 நோய்களும் பலவகைக் கூட்டங்களாக இருந்ததலின் பிணிக் கணங்களென்றார். பிணி, மூப்பு, சாக்காட்டை ஒழிக்க எனக்குப் பிரணவச்சொல்லை உபதேசிக்கவேண்டும் என்பார், பாதகச்சமன. . செஞ்சொல் தரவேணும்' என்றார்; விந்து-சுத்தமாயை.

குறும்பை-ஆகுபெயரால் ஸ்தனத்தை உணர்த்திற்று()

## சோலைமலை

54 தானதனத் தானதனத் தானதனத் தானதனத்
தானதனத் தானதனத்-தனதான.

சேலையடாத் தாலமிகுத் தேயுழையைச் சீறிவிழித்
தூறிசிவப் பேறிவிழிக் கடையாலே
தேனிரதத் தேமுழுகிப் பாகுநிகர்த் தாரமுதத்
தேறலெனக் கூறுமொழிச் செயலாலே
ஆலிலையைப் போலும்வயிற் றாலளகத் தாலதரத்
தாலிரதத் தாலும்வளைப் பிடுவோர்மேல்
ஆசையினைத் தூரவிடுத் தேபுகழ்வுற் றேபரிநற்
றாளிணையைச் சேரஎனக் கருள்வாயே
காலனைமெய்ப் பாதமெடுத் தேயுதையிட் டேமதனைக்
காயஎரித் தேவிதியிற் றலையூடே

காசினியிற் காண இரப் போன்மதியைச் சூடியெருதே
றிவிரித் தூருதிரைக் கடலமீதில

ஆலமிடற் றோனையிபத் தோலையுடுத் தீமமதுற்
றாடியிடத் தேயுமைபெற் றருள்வாழ்வே

ஆழியினைச் சூரனைவெற் பேழையயில் தொட் டாவிதுணித்
தாதிதிரு சோலைமலைப் பெருமாளே.

(இ-ள்) காலனை-யமனை, மெய்ப் பாதம் எடுத்து-உண்மை வடிவான திருவடியைத் தூக்கி, உதையிட்டு - உதைத்து, மதனை காய எரித்து-மன்மதனைச் சுடும்படி நெற்றிக் கண்ணால் எரித்து, விதியின் தலை ஊடு-பிரமனது தலையோட்டில், காசினியில்-பூமியில், காண இரப்போன்-யாவரும் பார்க்கும்படி பலியை இரப்பவனும், மதியை சூடி-பிறைச்சந்திரனைத் தரித்தவனும், எருதது ஏறி - எருதின்மேலேறினவனும், விரித்து ஊருதிரைக் கடல மீதில் விரித்து தவழுகின்ற அலையையுடைய கடலிலுண்டாகிய, ஆலம் மிடற்றோனை - விஷத்தையுடைய கண்டத்தையுடையவனும், இபம் தோலை உடுத்து-யானையின் தோலை அணிந்து, ஈமம் அது உற்று ஆடி-சுடலை இடத்துச்சேர்ந்து ஆடுகின்றவருமாகிய சிவபெருமானிடத்து, உமை பெற்றருள் வாழ்வே-உமாதேவியார் பெற்றருளிய செல்வமே!, ஆழியினை-கடலையும், சூரனை-சூரனையும், ஏழ்வெற்பு-ஏழுமலைகளையும், அயில் தொட்டு-வேலை விட்டு, ஆவி துணித்து உயிரைக் கொன்று, ஆதி திருசோலை மலை பெருமாளே-பழைய அழகிய சோலைமலையில் வாழும் பெருமானே!, சேலை அடாத்து-சேலமீனை வென்றும், ஆலம்

மிகுத்து விஷத்தினும் சிறந்தும், உமையை சீறி - மானைக் கோபித்தும், விதிர்த்து-அரிகள் சிதறி, ஊறு சிவப்பு ஏறு விழி கடையால் - மிகுந்த சிவப்பையுடைய கண்களின் கடைப் பார்வையாலும், தேன் இரதத்து முழுகி-தேனின் சுவையில் முழுகி, பாகு நிகாத்து-பாகை ஒத்த, அமுதம் தேறல் என-அரிய ஆர் அமிர்தத்தை ஒத்த தேனென்று கூறும் மொழி செயலால்-சொல்லுகின்ற சொல்லைச் சொல் வகையாலும், ஆல் இலையை போலும் வயிற்றால்-ஆலிலையை ஒத்த வயிற்றாலும், அளகத்தால்-கூந்தலாலும், அதரத்தால்-உதட்டாலும், இரதத்தால்-இரதத்தை ஒத்த அலகுலாலும் வளைப்பிடுவோர்மேல்-ஆடவர் மனங்களைக் கவர்வோராகிய பெண்களின்மேல், ஆசையினை தூரவிடுத்து-ஆசையை அகல வோட்டி ஒழித்து, புகழ் உற்று-புகழைப் பெற்று, பிரிய நல தாள் இணையை சேர எனக்கு அருள்வாய்-அன்பையுடைய அழகிய இரண்டு திருவடிகளையும் சேரும்படி எனக்கு அருள் செய்வாய் எ-று.

(வி-ரை) நற்றாள் என்றார் பிறவிக்கடலுக்கு மருந்தாக லின்; 'கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅ ரெனின்' என்னும் திருக்குறளுக்குப் **பரிமேலழகர்** இவ்வாறு பொருளுரைத்தல் காண்க.

சிவபெருமான் யானையை யுரித்து அதன் தோலை உடுத்துக் கொண்டாராதலின் 'ஆனையுரித் தோலை யுடுத்து' என்றார். உலகமெல்லாம் அழிந்து சுடுகாடாயினபின் மீண்டும் உலகத்தைத் தோற்றுவிக்கப் பஞ்சகிருத்திய நடனம் சிவ

பெருமான் செய்வார் ஆதலின் 'ஏம மதற்றுடி' என்றார். இதனை,

'கோயில சுடுகாடு கொலபுலித்தோ னலலாடை
தாயுமிலி தநதையிலி தான்றனியன காணேடீ
தாயுமிலி தநதையிலி தானறனிய னாயிடினுங்
காயினுல கனைத்துங கறபொடிகாண் சாழலோ'

எனவரும் திருவாசகத்தானும் அறிக.

ஏமமது-அது பகுதிப்பொருள் விகுதி. (54)

பொது

55 தனதன தானத தனநத தனதன தானத தனந்த
தனதன தானத் தனந்த தனதான.

பழுதற ஓதிக கடநது பகைவினை தீரத துறநது
பலபல யோகத திருநது மதராசன்
பரிமள பாணத தயாநது பனைமட லூரதற கிசைந்து
பரிதவி யாமெத் தநொந்து மயலாகா
அழுதழு தாசைப் படுஙக ணபிநய மாதாக கிரங்கி
அவர்விழி பாணத துநெஞ்சம் அறைபோய்நின்
றழிவது யானமுற பயந்த விதிவச மோமய னுறையுன்ற
னருள்வச மோஇய ரமநதெ ரிகிலேனே
எழுதரு வேதத தமன்றி முழுதினு மாயநிற குமெந்தை
எனஒரு ஞானக குருந்தா உளமேவும்
இருவுரு வாகித தலஙகி ஒருகன தூணிற பிறந்து
இரணியன மார்பைப பிளநத தனியாண்மை
பொழுதிசை யாவிக் ரமனதன் மருகபு ராரிக்கு மைந்த
புளகப டீரக் குரும்பை உடன்மேவும்

புயலகரி வாழுச சிலம்பின் வனசர மானுக் குகந்து
புனமிசை ஓடிய புகுந்த பெருமாளே.

(இ-ள்) எழுதரு வேதததும-எழுதுவதற்கு அருமை யான வேதஙகளிலும, அனறி முழுதினுமாய் நிற்கும் எநதை என-அலலாத எலலாப பொருளகளிலும் அபபொருளகளே தானென்று சொலலுமபடி இருபபான என் தந்தையாகிய பரம்பொருளென்று சொலலிய, ஒரு ஞானம் குருந்தா-ஒப பற்ற ஞானததின் கொழுநதுபோனற பிரகலாதருடைய, உளம் மேவும-நெஞசில அமாநது வாழும், இரு உருவு ஆகி துலஙகி-மனிதனும சிஙகமுமாகிய இரண்டு வடிவங்களோடு விளஙகி, ஒரு கனதூணில பிறநது-ஒரு பெரிய தூணிலே உறபவிதது, இரணியன மாரபை பிளந்த - இரணியனது மாரபைக கூறுசெயத, தனி ஆணமை-ஒபபறற ஆணதன மையையுடைய, பொழுது இசையா-சூரியனும் ஒபபாகாத, விரமன்தன மருகோனே - வீரனாகிய திருமாலின் மரும கனே', புராரிககு மைநத-சிவபெருமானுககு மைநதனே', புளகம படீரம குரும்பை உடனமேவும்-அரும்பிய சந்தனம் பூசிய ஸ்தனங்கள் பொருந்திய, புயலகரி வாழ-தேவசேனை யார் வாழ்ந்திருப்பவும், சிலம்பின் - மலைச்சாரலில (வசித் திருந்து), வனசரமானுககு உகநது - வேடா பெணணை விரும்பி, புனம்மிசை ஓடி புகுந்த பெருமாளே - கொலலை நிலததில விரைந்துசென்ற பெருமானே', பழுது அற-ஐயந திரிபென்னும் குற்றந் தீரும்படி, ஓதி கடந்து-கறறு அறி யாமையினின்றும் நீங்கியும், பகைவினை தீர துறந்து-பகைத்

தொழிலினை முற்றும ஒழித்தும, பலபல யோகத்து இருந்து-பற்பல முயற்சிகளிலே இருந்தும், மதராசன் பரிமளம் பாணத்து அயர்ந்து-மன்மதனுடைய புஷ்பபாணத்தால் இளைத்தும, பனிமடல ஊர்தற்கு இசைந்து-பனிமடலின்று செய்த மாவினைச் செலுத்தற்கு விரும்பியும், பரிதவியா மெத்த நொந்து - பரிதவித்தும் மிகவும் வருந்தியும், மயலகூர-ஆசையானது அதிகரிக்க, அழுது அழுது ஆசைப்படும் கண்-அழுது அழுது ஆசைப்படுகின்ற கண்ணையுடைய, அபிநயம மாதர்க்கு - அபிநயத்தைச் செய்கின்ற பெண்களுக்கு, இரங்கி அவர் விழி பாணத்து-மனமிரங்கி அவர்களுடைய கண்ணாகிய அம்பினால் நெஞ்சம அறைபோய நின்று-மனம கீழறுபபோகி நின்று, அழிவது-பயனின்றி அழிந்துபோவது, யான்முனபயந்த விதிவசமோ-அடியேன முன்னாளில் செய்த விதியின செயலோ? மறை உனதன் அருளவசமோ - அனறித் தேவரீருடைய கருணையின செயலோ?, இ பிரமம தெரிகிலேன-இம்மயக்கம் இன்னதென்த தெரியவில்லை எ-று.

(வி-ரை) பழுது-ஐயம திரிபு முதலிய குற்றங்கள். ஐயம் இதுவோ அதுவோவென சந்தேகித்தல; திரிபு-ஒன்றை மற்றொன்றாகக் கொள்ளுதல.

‘கண்டபொருளை யிரட்டுறவே கருதலையந் திரியவே
கொண்ட திரிவாம’

என்பது **சிவஞானசித்தியார்.**

மடலூர்தல்-ஒரு பெண்ணின்மேல் காமங்கொண்ட ஒருவன் அப்பெண்ணை அடைதற்கு அவளைப்போல ஒரு ருவத்தைப் பனைமடலில் எழுதிப் பின் பனைமட்டைகளால் செய்யப்பட்ட குதிரையின்மேல் ஊர்ந்துவர, அப்போது அவன் உடம்பினின்றும் காமநீர் வெளிப்படுமாயின் அவ ளால் காதலிக்கப்பட்ட அப்பெண்ணை மணஞ் செய்வித்த லும், அவ்வாறன்றி அவன் உடம்பில் உதிரம் வெளிப்படு மாயின் அவனைக் கொல்லுதலும் ஆகிய வழக்கு. இவ்வழக் கைப் பற்றிய செய்யுள்கள் கோவைநூல்களில் வருதல் காண்க.

அறைபோதல்-வஞ்சிக்கப்படுதல் 'அறிவறைபோகிய' என வரும் **சிலப்பதிகாரத்தால்** அறிக.

எழுதருவேதம்-எழுதுவதற்கு அருமையாகிய வேதம். எழுதப்படாமையினால் வேதத்திற்கு எழுதாக்கிளவி என் றும் பெயர். பிரகலாதர்-பிரகலாதாழ்வார். 'நீ சொல்லும் அக்கடவுள் எங்கே உள்ளன் எனக்குக் காட்டுக' என்ற போது 'அவன் எங்கும் இருக்கின்றான். தூணிலும் உளன் துரும்பிலுமுளன்' என்று கூறிய செய்தியை, உள்ளிட்டு 'எழுதருஞானக் குருந்தர்' என்றார். ஞானக்குருந்தர்-பிரகலாதர்; குருந்து-இளமையைக் குறித்தது. இருவுரு-நரசிங்க வடிவம். புராரி-சிவபெருமான், திரிபுரம் தகனஞ் செய்தவர். (55)

## பெரும்பற்றப்புலியூர் (சிதம்பரம்)

56 தனதத்த தத்தன தானன தானன
தனதத்த தத்தன தானன தானன
தனதத்த தத்தன தானன தானன—தனதான.

விடுங்கைக் கொத்தக டாவுடை யானிடம்
அடங்கிக் கைச்சிறை யானது நேகமும்
விழுங்கப் பட்டற வேயற லோதியர் விழியாலே
விரும்பத் தக்கன போகமு மோகமும்
விளம்பத் தக்கன ஞானமு மானமும்
வெறுஞ்சுத் தச்சல மாய்வெளி யாயுயிர் விடுநாளில்
இடுங்கட் டைக்கிரை யாஅடி யேனுடல்
கிடந்திட் டுத்தம ரானவர் கோவென
இடுங்கட் டிச்சுடு காடுபு காமுன மனதாலே
இருந்திட் டுப்பெற வேகதி யாயினும்
இருந்திட் டும்பெற வேமதி யாயினும்
இரண்டிற் றொக்கதொ ரூதியம் நீதர இசைவாயே
கொடுங்கைப் பட்டம ராமர மேழுடன்
நடுங்கச் சுக்ரிவ னோடம ராடிய
துரங்கச் செற்றும கோததி தூளெழு நிருதசன்
குலங்கட் பட்டழி சாசரர் கோவென
இலங்கைக் குட்டழ லோனெழ நீடிய
குமண்டைக் குத்திர ராவண னார்முடி அடியோடே
பிடுங்கத் தொட்டச ராதிப னாதி
பரியங்கொட் டக்கநன் மாமரு காவியல்
பரபஞ்சத் துக்கொரு பாவல னேயென விருதூதும்

பரசண்டசொற் சிவ வேதசி காமணி
பரபந்தத் துக்கொரு நாதசதாசிவ
பெரும்பற் றப்புலி யூர்தனில் மேவிய பெருமாளே

(இ-ள்.) கொடுங்கை பட்ட மராமரம் ஏழுடன் - கொடுங்கைகள் உண்டாகிய ஏழுமராமரங்களுடன், நடுங்க - நடுங்கும்படி, சுக்ரீவனோடு அமர் ஆடிய - சுக்ரீவனோடு சண்டை செய்த, குரங்கைச் செற்று - வாலியைக் கொன்று, மகோததி தூள் எழ - சமுத்திரத்தில் தூள் உண்டாகும்படி, நிருதேசன் - இராவணனது, குலங்கள் பட்ட - குலத்திலே சேர்ந்த, நிசாசரர் - அரக்கர்கள், கோவென் - கோவென்றலறும்படி, இலங்கைக்குள் - இலங்கையிலே, தழலோன் எழ - அக்கினி தோன்ற, நீடிய - பலத்தாற் சிறந்த, குமண்டை - செல்வச் செருக்கையுடைய, குத்திர ராவணனார் - வஞ்சனையையுடைய இராவணனது, முடி அடியோடு பிடுங்க - முடிகள் பத்தையும் பறிக்கும்படி, தொட்ட சர அதிபனார் - விட்ட கணைக்குத் தலைவராகிய இராமபிரான், அதிப்ரியம் கொள்ள - மிக்க விருப்பங் கொள்ளுதற்கு உரிய, நல் மருகா - நல்ல மருமகனே!, இயல் பிரபஞ்சத்துக்கு - அழகிய உலகத்துக்கு, ஒரு பாவலன் ஆம் என - ஒப்பற்ற பாவலர் என்று, விருது ஊதும் - வெற்றிச் சங்கை ஊதுகின்ற, பிரசண்ட சொல் சிவ வேத சிகாமணி - பெருமையுடைய சொல்லையுடைய மங்களகரம் பொருந்திய வேதத்தின் தலையிற் சூடும் இரத்தினம் ஒப்பவனே!, பிரபந்தத்துக்கு ஒரு நாத - தமிழ் நூலுக்கு நாதனே!, சதாசிவ - என்றும் மங்களம் உடையவனே!, பெரும்பற்றப் புலியூர் தனில் மேவிய பெருமாளே - சிதம்

பாதத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமானே!, விடும் மைக்கு ஒத்த கடா உடையானிடம் - மைக்கொத்த எருமைக் கடாவையுடையவனாகிய யமனிடம், மடங்கி - அடங்கி, கைச்சிறையான அநேகமும் - கைவசத்திலிருக்கின்ற எல்லாமும், விழுங்கப்பட்டு அற - கவளீகரிக்கப் பட்டு மிகுதியும் அற, ஓதியா விழியால் - கருமணலை ஒத்த கூந்தலையுடைய பெண்களின் கண்களால், விரும்பத்தக்கன போகமும் மோகமும் - விரும்பத்தக்கனவாகிய போகமும் ஆசையும், விளம்பத் தக்கன ஞானமும் - சொல்லத்தக்கனவாகிய அறிவும் ஞானமும், வெறும் சுத்த சகம் ஆய் - வெறும் பொய்யாகி, வெளியாய் விடும் நாளில் - உடலைவிட்டு வெளிப்பட்டு உயிர்விடும்பொழுதில், இடும் கட்டைக்கு இரையாய் - அடுக்குகின்ற கட்டைக்கு இரையாகி, அடியேன் உடல் கிடந்திட்டு - அடியேனுடைய தேகம் பூமியிற் கிடந்து, தமர் ஆனவர் கோவென - சுற்றத்தார் கோவென்றலற, இடம் கட்டி - பாடை கட்டி, சுடுகாடு புகாமுன் - சுடுகாட்டைச் சேர்வதற்கு முன்பு மனத்தால் செய்து, பெற கதியாயினும் - கதி பெறுவதற்காவது, இருந்திட்டு மதிபெற ஆயினும் - மனத்தோடிருந்து நல்லறிவை பெறுதற்காயினும், இரண்டில் - இவ்விரண்டு தன்மைகளில், தக்கது ஓர் ஊதியம் - பொருந்தியதாகிய ஓர் இலாபத்தை, நீ தர இசைவாய - நீ எனக்குக் கொடுப்பதற்கு மனம் பொருந்துவாயாக எ-று.

(வி-ரை) கடாவுடையான்-இயமன் அவனிடம் மடங்கலாவது-அவன் கைக்குள் படுதல். கைச்சிறை - கைத்தலம்.

அறல் ஓதி-அறுக்கப்பட்ட மணலைப்போல கருமையும் பாகுபாடுமுடைய கூந்தல். அறு-பகுதி, அல்-விகுதி. 'வெறுஞ் சூந்த சலமாய வெளியாய்' என்றார் மிக விரைவில் அழிந்து போதலின்,

'மையாடு கண்ணியு மைந்தரும் வாழ்வு மனையுஞ்செந்தீ
யையா நின்மாலை யுருவெளித் தோற்ற மகிலத்துள்ளே
மெய்யா யிருந்தது நாட்செல நாட்செல வெட்டவெறும்
பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய்மெல்லப் போனதுவே'

என்றார் பட்டினத்துப் பிள்ளையாரும்,

தாசர்-சுபக்தர், தம் அடியாகப் பிறந்த பெயர். சுடுகாடு-வினைத்தொகை. உயிர் விடுவதன்முன் செய்யக் கடவனவாகிய செயல்களைப் புரிந்து, பின்னர் வீடுபேற்றை அடைவதாகிய தன்மையையேனும் உயிருடனிருந்து சீவன் முத்தராய் இருப்பதற்குரிய தன்மையையேனும் அருள் புரியவேண்டும் என்று வேண்டிக்கொண்டார் இவ்விரண்டு நிலையில் தமக்குத் தக்கது இன்னதென அறியவல்லவர் இறைவரே என்பார் 'இரண்டிற் றக்கதோர் ஊதியம் நீதர இசைவாயே' என்றார்.

சுக்ரீவனோடு டமராடிய குரங்கு-வாலி. மகோததி-மகா உததி; பெருங்கடல், குணசந்தி குமண்டை செருக்கு குத்திரம்-வஞ்சகம் சராதிபன்-இராமபிரான் சர அதிபன்-சரத்திற்கு அதிபன்; தீர்க்கசந்தி சரம்-அம்பு. கொட்டக்க-கொள்ளத்தக்க கொள்-தக்க. பெரும்பற்றப்புலியூர்-சிதம்பரம், புலியூர்-வியாக்கிரபாத முனிவர் பூசித்த ஸ்தலம் (56)

## பொது

57 தனத்த தானன தானன தநதன
தனத்த தானன தானன தந்தன
தனத்த தானன தானன தநதன-தாந்ததான.

கறுதது நீவிடு கூாவேலி னுங்கடை
சிவதது நீடிய வாயமீனம ஒணகுழை
கடகக ஓடிய ஆலால நஞ்சன — வஞ்சநீடு

கயறக ணாகனி வாயூற லுணடனி
கழுதது மகமு மேகப வஙகொடு
கலகக மாாபக பாடீர குஙகும — கொஙகைமீதே

உறுகது மாரமு மோகாவ டஙகளு
மறுத்து நேரிய கூாவாளர கமபட
உடுதத ஆடையும் வேறாயு ழன்றாக — ழன்றுவீழ

உருககு நாபியின மூழ்கா மருஙகிடை
செருக்கு மோகன வாராத ரஙகளை
ஒழிகக ஓர்வகை காணேனு றாநதினை — யொன்றுகாணேன்

நிறதத நூபுர பாதார விந்தமு
முடுத்த பீலியும் வாராத ணஙகளும்
நிறததி லேபடு வேலான கணைகளும் — வண்டுபாட

நெறிதத ஓதியு மாயான்ம னமபரி
தவிகக மால்தர லாமோ கலந்திட — [வாய்
நினைக்க லாமென வேலவேடா கொமபுடன நண்புகூர்

மறித்த வாரிதி கோகோவெ னுமபடி
வெறுத்த ராவணன் வாணாளை அம்பினில
வதைத்த மாடனு மேவார்பு ரங்கனல — மண்டமேரு

வளைத்த தாதைய மாறான குன்றமு
மனைத்து லோகமும் வேதாக மங்களும்
மதித்த சேவக வானோரு மும்பர்கள் தம்பிரானே.

(இ-ள்) நிறைந்த நூபுரம பாதாரவிந்தமும்-ஒளிபொருந்திய சிலம்புகளை அணிந்த திருவடிகளாகிய தாமரை மலர்களும், உடுத்த பீலியும் - உடுக்கப்பட்ட மயில்தோகையும், வார் ஆர தனங்களும்-கச்சை அணிந்த ஸ்தனங்களும், நிறத்தில் படுவேல ஆன கண்களும்-ஒளிவீசுகின்ற வேற்படையை ஒத்த கண்களும், வண்டு பாட நெறித்த ஓதியும் ஆய-வண்டுகள் ஒலி செய்யும் வகிர்ந்த கூந்தலும் உடையவளாயுள்ள, வேடர் கொம்புடன் - வள்ளிநாயகியோடு, யான மனம பரிதவிக்கல ஆமோ - நான் மனம் வருந்தலாமோ, கலந்திட நினைக்கலாமோ-கலவி செய்ய எண்ணலாமோ, என நண்பு கூர்வாய்-எனக்கூறி நட்புச் செய்பவனே', மறித்த வாரிதி-மடங்கி வருகின்ற அலைகளையுடைய கடலை, கோ கோ எனும்படி-கோவென்றலற, வெறுத்த ராவணன வாழ்நாளை-வலிமிகுந்த இராவணனுடைய வாழ்நாட்களை, அம்பினில் வதைத்த - பாணத்தால் கொன்ற, மாமனும் - மாமனாகிய இராமனும், மேவார் புரம் கனல் மண்ட - பகைவர்களுடைய முப்புரங்களிலும் நெருப்புப் பற்ற, மேரு வளைத்த தாதையும் - மேருமலையை வளைத்த தந்தையாகிய சிவபெருமானும்,* ஆறு ஆன குன்றமும் - ஆறு மலைகளும், அனைத்துலோகமும்-எல்லா உலகங்களும், வேதாகமங்களும்-வேதம் ஆகமம் முதலிய சாஸ்திரங்களும், மதித்த சேவக-

மிகவெண்ணும் தொழிலையுடையவனே', வான் ஆளும் உம்பர்கள் தம்பிரானே - சுவர்க்கத்தை ஆள்கின்ற தேவர்களின் தலைவனே', கறுத்து - கருநிறம்பெற்று, நீவிடு கூர்வேலினும் கடை சிவந்து-வடிக்கின்ற கூரிய வேலைக்காட்டிலும் கடைப் பாகம் சிவந்து, நீடியவாய்-நீண்டு, மீனம் ஒண்குழை கடக்க ஓடிய-சுறுமீனின் வடிவமாகச் செய்யப்பட்ட ஒளிபொருந்திய குண்டலங்களைக் கடக்கும்படி ஓடிய, ஆலாலம் நஞ்சு ஆன-ஆலகாலவிஷத்தை ஒத்த, வஞ்சம் நீடும் கயல் கணார்-வஞ்சக மிகுந்த கயலை ஒத்த கண்ணையுடைய பெண்களினது, கனிவாய ஊறல் உண்டு-கோவைப்பழத்தை ஒத்த வாயினூறலை உட்கொண்டு, அணி கழுத்தும் ஆகமும் - அழகிய கழுத்தும் மார்பும், ஏகிபவம் கொடு கலக்க - ஒரே தன்மையைக்கொண்டு சேர, மார்பகம் பாடீரம குங்குமம் கொங்கைமீது - மார்பினகண்ணுள்ள சந்தனமும் குங்குமமும் பூசிய ஸ்தனங்களின்மேல், உறுத்தும் ஆரமும்- உறுத்துகின்ற முத்துமாலையும், ஓகாபடங்களும் - கண்களுக்கு ஓகையை ஊட்டும் மாலைகளும், அறுத்து - அறுந்தெறிந்து, கூர்வாள் நகம்பட - கூரிய ஒளிபொருந்திய நகக்குறி தோன்ற, உடுத்த ஆடையும் வேறாய் - கட்டிய ஆடையும் வேறாகி, உழன்று கழன்று வீழ - தடுமாறி அவிழ்ந்து விழ, உருக்கும் நாபியின் மூழ்கா - மனத்தை உருக்குகின்ற உந்தியில் முழுகி, மருங்கிடை செருக்கும் - பக்கங்களிலே மிகுந்த, மோகன ஆசா ஆதாரங்களை - மயக்குகின்ற பெருகிய ஆசைகளை, ஒழிக்க ஓர் வகை காணேன் - ஒழிப்பதற்கு ஒரு

வழியில்லை, உற்ற துணை ஒன்று காணேன்-மிக்க உதவியும் ஒன்றும் எனக்குத் தோன்றவில்லை என்-று.

(வி-ரை) ஏகீபவம்-ஒன்றான தன்மை. படீரம்-சந்தனம், நீட்டும் வழி நீட்டல். மூழ்கா-மூழ்கி, செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். நூபுரம்-சிலம்பில் ஒருவகை. பாதாரவிந்தம்-பாதமாகிய தாமரை. வார்-கச்சு. நெறித்த ஓதி-வளைவுடைய கூந்தல். வாழ்நாள்-வாணாள், இதற்கு விதி வீரசோழியத்தில் காண்க. மேவார்-பகைவர். புரம்-திரிபுரம். சிவபெருமான் திரிபுரமெரித்த வரலாற்றை ஈண்டுக் குறித்தார். புரம் என்பதைச் சரீரமாகக் கொண்டு உள்ளுறை கூறுதலுமாம். இதனை,

'அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புர மெரிசெய்தான் என்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புர மெய்தமை யாரறி வாரே.

என்னும் திருமூலர் திருவாக்கானு மறிக. (57)

58 தனதத்த தனத்த தனத்தன
தனதத்த தனத்த தனத்தன
தனதத்த தனத்த தனத்தன-தனதான.

புருவத்தை நெறித்து விழிக்கயல்
பயில்விட்டு வெருட்டி மதித்திரு
புதுவட்டை மினுக்கி அளிக்குலம் இசைபாடும்
புயலச்சற்று விரித்து நிரைத்தொளி
வளைஇட்ட கரத்தை அசைத்தகில்
புனைமெத்தை படுத்த பளிக்கறை தனிலேறிச்

சரசதந்தை விளைத்து முலைக்கிரி
புளகிக்க அணைத்து நகக்குறி
தனைவைத்து முகத்தை முகத்துடன் உறமேவித்
தனிவித்தி ரத்தத் தரத்தமிழ்
அமுதத்தை அளித்து உருக்கிகள்
தருபித்தை அகற்றி உனைத்தொழ முயல்வேனோ
பரதத்தை அடக்கி நடிப்பவர்
திரிபுரத்தை எரிக்க நகைப்பவர்
பரவைக்குள் விடத்தை மிடற்றிடு பவர்தோகப்
பரையுற்ற கரத்தர் மிகப்பகி
ரதியுற்ற சிரத்தர் பிறைத்துய
பரவத்தர் பொருப்பி லிருப்பவர் உமையாளர்
சுராசுத்தர் மனத்துறை வித்தகர்
பணிபத்தர் பவத்தை அறுப்பவர்
சுடலைப்பொடி மெய்ப்ப ரிசிப்பவர் விடைஏறும்
துணையொத்த பதத்த ரெதிர்த்திடு
மதனைக்க டிமுத்தர் கருத்தமர்
தொலைவற்ற கருப்பைக் குதித்தருள் பெருமாளே.

(இ-ள்) பரதத்தை அடக்கி நடிப்பவர்-பரதசாத்திரத்தைத் தமது திருவடிக்குள் அடக்கி நடனஞ் செய்பவரும், திரிபுரத்தை எரிக்க நகைப்பவர்-முப்புரங்களை எரிப்பதற்காகச் சிரிப்பவரும், பரவைக்குள் விடத்தை-சமுத்திரத்திலே பிறந்த விஷத்தை, மிடற்று இடுபவர்-கழுத்திலே தரிப்பவரும், தோ கப்பரை உற்ற கரத்தர்-பலியைப் பெறுகின்ற பிரமகபாலமாகிய பாண்டம் பொருந்திய கையை உடையவரும், மிக பகிரதி உற்ற சிரத்தர்-கங்கை மிகவும்

பொருந்திய தலையை உடையவரும், சிறந்து உயர் பரவத்
தர்-ஒளியால் சிறந்த பரவஸ்து ஆனவரும், பொருப்பில்
இருப்பவர்-கைலாசமலையில் வீற்றிருப்பவரும், உமை ஆளர்-
உமாதேவியாரைப் பாகத்தில் உடையவரும், சுரா சுத்தா
மனத்து-தேவர்கள் பரிசுத்தவான்களாகிய இவர்களுடைய
மனத்தில், உறை வித்தகா-வசிக்கின்ற ஞானியாரும், பணி
பத்தர் பவத்தை அறுப்பவர்-தம்மை வணங்குகின்ற அடி-
யார்களது பிறப்பை ஒழிப்பவரும், சுடலை பொடியை பூசிப்
பவர்-சுடுகாட்டுச் சாம்பலைப் பூசுபவரும், விடை ஏறும்
துணை ஒத்த பதத்தர்-எருதின்மேலேறும் ஒன்றற்கொன்று
ஒத்த திருவடிகளையுடையவரும், எதிர்த்திடு மதனை கடிமுத்
தர்-எதிர்த்து வந்த மன்மதனைக் கோபித்த பாசங்களி
னின்று நீங்கியவரும் ஆகிய சிவபெருமான், கருத்து அமர்-
திருவுள்ளத்தில் பொருந்திய, தொலைவு அற்ற கிருபைக்
குள-அளவில்லாத கருணையினால், உதித்த அருள் பெரு
மாளே-திருவவதாரம் செய்த பெருமானே!, புருவத்தை
நெறித்து - புருவத்தை நெறித்தும், விழிகயல் பயிலிட்டு-
கண்களாகிய கயல்மீன்களைப் பழக்கிவிட்டு, வெருட்டி-அஞ்
சும்படிசெய்து, மதித்து இரு புதுவட்டடை மினுக்கி-எண்ணி
இரண்டு புதிய சூதாடு கருவியை ஒத்த ஸ்தனங்களை
மினுக்கி, அளிகுலம் இசைபாடும் - வண்டின கூட்டங்கள்
ரீங்காரம் செய்யும், புயல் சற்று விரித்து - மேகத்தை ஒத்த
கூந்தலைச் சிறிது விரித்து, நிரைத்து ஒளிவளை இட்ட
கரத்தை அசைத்து - வரிசையாகி ஒளிபொருந்திய வளையல்

அணிந்த கைகளை அசைத்து, அகில புனை மெத்தை படுத்த- அகில மணம் ஊட்டப்பட்ட மெத்தை இட்ட, பளிக்கு அறைதனில் ஏறி-பளிங்குபோல வெண்மையாகிய பள்ளி யறையிற் சென்று, சரசத்தை விளைத்து-பலவகைப்பட்ட சரசங்களைத் தோற்றுவித்து, முலைகிரி புளகிக்க அணைத்து- முலைகளாகிய மலைகள் மயிர்க்குச் செறியும்படி சேர்த்து, நகம் குறி தனை வைத்து - நகக்குறிகளை யிட்டு, முகத்தை முகத்துடன் உறமேவி-முகத்தை முகத்தோடு பொருந்தச் செய்து, தணிவித்து - காமவெப்பத்தை அடக்குவித்து, இரதத்து அதரத்து உமிழ் அமுதத்தை - இனிமையை யுடைய உதட்டு உமிழ்கின்ற அமிர்தத்தை யூறுத்த ஊறலை, அளித்து உருக்கிகள் -கொடுத்து மனத்தை உருக்கும் பெண் கள், தரு பித்தை-அளிக்கும் மயக்கத்தை, அகற்றி-ஒழித்து, உனை தொழ முயலவேனோ-உன்னை வணங்க முயற்சி செய் வேனோ எ-று.

(வி-ரை) விழிக்கயல-கண்ணாகிய கயல்மீன அளிக் குலம் - வண்டினது கூட்டம், ஆறும்வேற்றுமை ஒன்றன் கூட்டத்தற்கிழமை புயல-மேகம். இங்கு உவமையாகு பெயராய்க் கூந்தலை உணர்த்திற்று, நகக்குறி

அதரம்-உதடு, சிவபெருமான் திரிபுரத்தைச் சிரித் தெரித்தா ராதலின் 'திரிபுரத்தைச் சிரிக்க எரித்தார்' என்றார்.

திருப்பாற்கடலில் மந்தரகிரியை நாட்டி வாசுகியை நாணாகக் கோத்துச் சுரர் ஒருபுறமும், அசுரர் மற்றொரு

புறமுமாகப் பற்றி இழுத்துக் கடைந்த காலத்தில் அமுதத்தோடு பிறந்த ஆலகாலவிஷத்துக் கஞ்சித் தேவர்கள் சிவபெருமான்பால் அபயம்புக அவர்களுக்கு அபயாஸ்தம் அளித்தருளி அக்கொடிய விடத்தை தாமுண்டு கண்டத்தில் நிறுத்தினார் ஆதலின் 'பரவைக்குள் விடத்தை மிடற்றிடுபவர்' என்றார்.

கப்பரை-பிரமகபாலம். பகீரதி-கங்கை. பொருப்பு-மைபாயமலை. சிவபெருமான் மாசற்ற மனத்தையுடையவர் உள்ளத்தில் எக்காலும் வீற்றிருப்பவராதலின், 'சுத்தர் மனத்துறை வித்தகர்' என்றார்.

'கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்
விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை
அரவாடச் சடைதாழ வங்கையினி லனலேந்தி
இரவாடும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே'

சுடலைப்பொடி-திருநீறு. பரிசிப்பவர் - பூசுபவர். மன்மதனை எடுத்தெரித்துத் தமக்குக் காமமின்மையை உணர்த்தினார் ஆதலின் 'எதிர்த்திடும் மதனைக் கடிமுத்தர்' என்றார். (58)

## பழனி

59 தன்ன தனதன தன்ன தனதன
தான தானன-தன தான.

குவளை பொருதிரு குழையை முடுகிய
கோல வேல்விழி மடவார்தங்

கொடிய மருகமத புளக தனகிரி
கூடி நாடொறு மயலாகிச்

துவள உருகிய சரச விதமது
சோர வாரிதி அலையூடே
சுழலு மெனதுயிர மவுன பரமசு
கோம கோமதி படியாதோ
கவள கரதல கரட விகட க
போல பூதர முகமான
கடவுள கணபதி பிறகு வருமொரு
காரணா கதிர் வடிவேலா
பவள மரகத கனக வயிரக
பாட கோபுர அரிதேரின
பரியு மிடறிய புரிசை தழுவிய
பாகை மேவிய பெருமாளே

(இ-ள்) கவளம் கரதலம்-கவளத்தையுடைய துதிக்கையையும், கரடம் விகடம் கபோலம் பூதரம் முகம் ஆன-மதம் பொழிகின்ற அழகிய கன்னத்தையும் மலைபோன்ற முகத்தையுமுடைய, கடவுள் கணபதி பிறகு வரும் ஒரு காரணா-தெய்வமாகிய விநாயகருக்குப் பின் தோன்றிய ஒப்பற்ற காரணப்பொருளே, கதிர் வடிவேலா - ஒளிபொருந்திய வடித்த வேற்படையை உடையவனே, பவளம் மரகதம் கனகம் வயிரம் கபாடம் கோபுரம் - பவளம், பச்சை, பொன், வயிரம் முதலியவற்றையுடைய கதவுகள் பொருந்திய கோபுரங்களையுடைய, அரி தேரின் பரியும் - சூரியனுடைய குதிரையும், இடறிய புரிசை தழுவிய - உயர் மிகுதியினால் தடைபட்டுச் செல்லும் மதில்களையுடைய, பாகை

மேவிய பெருமாளே - பாகை எனனும் திவவிய க்ஷேததிரத்தில் அமாநதிருககும பெருமானே!, குவளை பொருது-நீலோறபல மலாகளோடு சணடைசெயது, இருகுழையை முழுகிய-இரணடு குணடலஙகளை விசையுடன் தாககிய, கோலம் வேலவிழி மடவாாதம-அழகிய வேற்போன்ற கண்களையுடைய பெணகளினது, கொடிய மிருகமதம் புளகம தனம் கிரி - கொடுமையான கஸதூரியணிந்த புளகததை யுடைய ஸ்தனமாகியமலைகளை, கூடிநாள்தொறும மயல ஆகி-அணைநது தினந்தோறும ஏளாகினற ஆசையுடையவனாகி, துவள உருகிய சரசவிதம-சோரும்படி உருகியசரசங்களின பகுதிகளை யுடைய, மதுசோர - இனபமான தேன மிக, வாரிதி அலை ஊடு - யோகமாகிய சமுத்திரததின அலைகளின் நடுவில, சுழலும எனது உயிா மவுனம பரமசுகம் மகோததி படியாதோ - சுழலகினற எனனுடைய உயிா மவுனமாகிய மிக்க சுகமாகிய பெரிய கடலில படிநதிடாதோ? எ-று.

(வி-ரை) கோலம்-அழகு. வாரிதி-கடல. மவுன பரம சுக மகோததி-மவுனமாகிய மேலான இனபமாகிய பெருங்கடல. கவளகரதல கரட விகட கபோல பூதர முகமான கடவுள்-கவளத்தையுடைய துதிககையையும மதம் பொழிகின்ற அழகிய கனனத்தையும மலைபோன்ற முகத்தை முடைய விநாயகர். கடவுள-மனமொழி மெய்களைக் கடநத பொருள; கட-பகுதி. உள்-தொழிற்பெயா விகுதி; எலலாவற்றையும் இயக்குகின்ற பொருளென்று கூறலுமாம.

கணபதி-கணங்களுக்குக் கடவுள், மூவருக்கும் காரணமாக முருகப்பெருமான் உள்ளனென்பார் 'காரணா' என்றார்.

பரியும் என்புழி-உம்மை சிறப்பு. மதில்களின் உயர்ச்சி கூறுவார் 'அரி தேரின் பரியு மிடறிய புரிசை' என்றார். அரி-சூரியன் (59)

### சிதம்பரம்

60 தனனந் தனத்த தந்த தனனந் தனத்த தந்த
தனனந் தனத்த தந்த தனதான

மதவெங் கரிக்கி ரண்டு வலுக்கொம் பெனத்தி ரண்டு
வளருந் தனத்த ணிந்த மணியாரம்

வளைசெங் கையிற்சி றந்த வொளிகண் டுநித்தி லங்கு
வருமந் திகைத்தி ரங்க வருமானார்

விதவிங் கிதப்ப ரிந்த நகைகொஞ் சுதட்கு ணங்கள்
மிகைகண் டுளக்க லங்கி மருளாதே

விடுசங் கையற்று ணர்ந்து வலம்வந் துனைப்பு கழ்ந்து
மிகவின் கவிப்பொ ருட்ப தங்கள் தருவாயே

நதியுந் திருக்க ரந்தை மதியுஞ் சடைக்க ணிந்த
நடநம் பருற்றி ருந்த கயிலாய

நகமங் கையிற்பி டுங்கு மசுரன் சிரத்தொ டங்கம்
நவதுங் கரத்த முந்து திரடோளுஞ்

சிதையும் படிக்கொ ரம்பு தனைமுன் தொடுத்த கொண்டல்
திறல்செங் கணச்சு தன்றன் மருகோனே

தினமுங் கருத்து ணர்ந்து சுரர்வந் துறப்ப ணிந்த
திருவம் பலத்த மர்ந்த பெருமாளே.

(இ-ள்) நதியும் திரு காந்தை மதியும்-கங்கையையும் அழகிய காந்தை மலரையும் சந்திரனையும், சடைக்கு அணிந்த-சடையிலே தரித்த, நடம் நம்பா - பஞ்சகிருத்திய நடனம் புரியும் சிவபெருமானே, உற்று இருந்த கயிலாயம் நகம்-பொருந்தியிருந்த கயிலாயமலையை, அம் கையில் பிடுங்கும் அசுரன்-அழகிய கையால் பறிக்கும் இராவணன், சிரத்தொடு அங்கம் - தலைகளோடு உடம்பும், நவதுங்கம் ரத்நம் முந்து திரள் தோளும் - ஒன்பதுவகைப்பட்ட உயர்ந்த ரத்நங்கள் இழைக்கப்பட்ட ஆபரணங்கள் விளங்குகின்ற திரண்ட தோள்களும், சிதையும்படிக்கு-அறும்படி, ஓர் அம்பு தனை ஓர் அம்பை, முன்தொடுத்த கொண்டல்-முன் ஒரு காலத்தில் விட்ட மேகநிறம் பொருந்திய, திறல் செங்கண் அச்சுதன்தன் - வலிமையுடைய சிவந்த கண்களையுடைய திருமாலுக்கு, மருகோனே-மருமகனே!, தினமும் கருத்து ஊர்ந்து - நாடோறும் திருவுள்ளத்தைத் தெரிந்து கொண்டு, சுரர் வந்து தேவர்கள் வந்து, உற பணிந்த-தாங்கள் வாழும்படி வணங்கிய, திரு அம்பலத்து - அழகிய பொன்னம்பலத்திலே, அமர்ந்த பெருமாளே-வீற்றிருக்கும் பெருமானே!, மதம் வெம் கரிக்கு-மதத்தையுடைய கொடிய யானைக்கு, இரண்டு வலு கொம்பு என-இரண்டாகிய வலிய கொம்புகள் என்று சொல்லும்படி, திரண்டு வளரும் தனத்து அணிந்த-திரண்டு வளர்கின்ற ஸ்தனங்களில் தரித்த, மணி ஆரம் - ரத்நமாலையினும், செம் கையில் சிறந்த - சிவந்த கைகளில் மிக்கு விளங்கும், வளை ஒளி கண்டு - வளையல்களி

லேயும் உள்ள ஒளியைப் பார்த்து, நீத்து இலங்கு வரும்-உலகப்பற்றைத் துறந்து தவவொழுக்கத்தால் விளங்குகின்ற முனிசிரேட்டர்களும், திகைத்து இரங்க வரும் மானார்-திகைத்து மனமிரங்கும்படியாகிய பெண்களினுடைய, வித இங்கிதம் பிரியங்கள் - பலவகைப்பட்ட குறிப்புக்களையும் ஆசையை விளக்கும் செயல்களையும், நகை கொஞ்சுதல் குணங்கள்-புன்சிரிப்பையும் கொஞ்சலையும் பிற குணங்களை யும், மிகைகண்டு-மிகுதியாகப் பார்த்து, உற கலங்கி மருளாது - மிகவும் கலங்கி மயங்காமல், சங்கை விடு அற்று உணர்ந்து - சந்தேகத்தைவிட்டுப் பொருளினுள்ள பற்றொழிந்து அறிந்து, வலம் வந்து உனை புகழ்ந்து - உன்னைச் சுற்றிவந்து புகழ்ந்து, மிக விஞ்சு பொன்பதங்கள் தருவாய-மிகவும் மேன்மையுடைய அழகிய திருவடிகளை அளிப்பாய் எ-று.

(வி-ரை) அழகு மிகுதி கூறுவார், 'நீத்திலங்கு வாரும் திகைத்து இரங்க வருமானார் என்றார்.' நீத்திலங்கு-குறுக்கல் விகாரம் பெற்றது. வாரும் என்புழி உம்மை சிறப்பு. 'விழைவுவிடுத்த விழுமியோருள்ளமும் விழைவின்கடாழ' என்றும்,

'தலைப்படு சாலபினுக்குந் தளரேன சித்தம பித்தனென்று
மலைத்தறி வாரில்லை யாரையுந் தேற்றுவன் எத்தனையுங்
கலைச்சிறு திங்கள் மிலைத்த சிற்றம் பலவன்கயிலை
மலைச்சிறு மான்விழி யாலழி வுற்று மயங்கினனே' என்றும்,

நடந்தா ளொருகன்னி மாராச கேசரிநாட்டிற்கொங்கைக
குடந்தா னசைய லயிலா யதுகண்டு கொற்றவரும் [லாம்
தொடாநதாசங் யாசியாயோ கமவிட்டார் சுதத சைவரெல்
மடநதா னடைத்தாச சிவபூசை யுஙகட்டி வைததனரே'

எனறும் வருவனவற்று லறிக.

இங்கிதம - குறிபபு, சஙகை நீஙகிய காலததலலது உணாசசி சிறவானமயின 'விடுசஙகை யு ஙணாநது' எனறா.

'ஐயமில பதநித தனிவிதது' எனறு பெரியாரும.
எனனும திருசராழல் திருபபாவானு மறிக

நகம-மலே. கைலாயம நகம அஙகையிற பிடுஙகும அசு ரன்-இராவணன

இவவரலாறறை,

'போாததா யஙகொரானே யினீருரி
தோலபுஙகு காடரஙகா நடமாட வலலாய்
ஆாதநானரக கனறனே மாலவரைககீழ
அடாததிட்டருள செயத வதுகருதாய
வோததும் புரணடும விழுந்தும
மெழுநதாலென வேதனேயான விலக்கி யிடாய
ஆாததார புனலசூழ திகைக
கெடில வீரட்டானததுறை யம்மானே'

எனனும் தேவாரததானும அறிக.

அசுதன் - அறிவிலலாதவன் அம்பலம-சபை. இஙகே பொறசபை இதற்கு ஞானசபை என்றும் பெயருண்டு.

சிதம்பரம் என்னும் பெயரும் அப்பொருட்டு. சிதம்பரத்தின் பெருமையைப் பின்வரும் பாட்டாலறிக.

'கரத்தால் தொழுதிடினுங் கண்டிடினு நெஞ்சி னாலுஞ்
சிரத்தால் வணக்கஞ் செயினும்-உரைத்திடினுந்
தில்லைக்கப் பாலன்றிச் சேவித்தா லுஞ்சனனம்
எல்லைக்கப் பாலதிற்கு மே' (60)

61 தானனா தந்தனந் தானனா தந்தனந்
தானனா தந்தனந்-தனதான

காதல்மோ கந்தருங் கோதைமார் கொங்கைசிங்
காரநா ளுஞ்செழுங் கனிவாயுங்
காளகூ டங்கொடுங் காலரூ பம்பொருங்
காமபா ணந்தரும் பினம்வாழும்
ஓதிகார் செஞ்சொலமென் பாகுந்தே னென்றியாந்
தோகைமோ கந்தனன் றுழையாதே
ஊசலா டும்புலன் தாரியே சென்றுநின்
றோயுமா றென்றையுங் கருதாதோ
தாதகி சண்பகம் பூகமா கந்தரந்
தாரமவா சந்திசந் தனநீடு
சாமவே தண்டெங் கோடிகோ தண்டசந்
தானமா தெங்கள்பைம் புனமேவும்
நீதிலா வஞ்சியங் கீகபா தம்படுஞ்
சேகரா தண்டையங் கழல்பேணித்
தேவிபா கம்பொருந் தாதிநா தன்தொழுந்
தேசிகா வும்பாதம் பெருமாளே.

(இ-ள்) தாதகி சண்பகம் - ஆத்திமரமும் சண்பகமரமும், பூகம் ஆர கந்தம மந்தாரம் - பாக்குமரமும் நிறைந்த மணமுடைய மந்தாரமரமும், வாசந்தி சந்தனம்-குருக்கத்தியும் சந்தனமரமும, நீடுசாமம வேதண்டம்-ஓங்கி வளரும் கரிய நிறத்தையுடைய மலையிலே வாழும, வெம்கோபம் கோதண்டம் சந்தானம - கொடிய கோபத்தையுடைய வில் வேடர்களது பரமபரையில வந்துதித்த, மாது எங்கள் பைம்புனம மேவும - பெண்மணியும் எமது பசுமையான கொல்லைப்புனத்தில தங்குபவளும், தீது இலா வஞ்சி-குற்றமில்லாத வஞ்சிக்கொடியை ஒத்தவருமாகிய வள்ளிநாயகியாரது, அம கீதம பதமபடும சேகரா - அழகிய குளிர்ச்சி பொருந்திய திருவடிகள பொருந்தும் சிரோபூஷணத்தை உடையவனே!, தணடை அம கழலபேணி - தண்டைகளைத் தரித்த அழகிய திருவடிகளை விரும்பி, தேவிபாகம் பொருந்து-உமாதேவியார இடபபாகத்தில விரும்பி யுறைகின்ற, ஆதிநாதன தொழும் தேசிகா - முதற்கடவுளாகிய சிவபெருமான வணங்குகின்ற ஆசாரியனே!, உம்பர் தம் பெருமாளே - தேவாகளுடைய பெருமானே!, காதல் மோகம் தரும கோதைமார - ஆசையையும மோகத்தையும் கொடுக்கும் பெண்களுடைய, கொங்கை சிங்காரம நாகம்-ஸ்தனங்கள அலங்காரமுள்ள மலைகளை ஒப்பாகுமென்றும, வாய செழும் கனி - வாய செழுமையான கொவவைக் கனியை ஒக்குமென்றும், கண காளகூடம் கொடும் காலரூபம - கணகள ஆலகால விஷத்தையும் கொடிய

யமனுடைய வடிவத்தையும், பொரும காமபாணம்-சண்டைசெய்யும் மன்மதன் அம்பையும ஒபபாகுமென்றும், சுரும்பு இனம் வாழும் ஓதி கார்-வண்டுகளின கூட்டம் வாழ்கின்ற கூந்தல மேகத்தை ஒக்குமென்றும, சொல மென்பாகு தேன்-நோமையான சொறகள மென்மையான பாகையும் தேனையும் ஒபபாகும் எனறும, அயாநது-சொலலித் தளாந்து, ஓம் நமோ கந்த என்று உரையாது - ஓம் நமோ கந்த என்று தோத்திரம் செய்யாமல, ஊசல ஆடும புலன்-ஒருவழி நிலலாமல இங்கும அங்கும அலைகின்ற புலனகள், தாரியே சென்று நின்று - அவற்றின வழியே சென்று நிலைபெறறு, ஓயும் ஆறு ஒன்றையும கருதாதோ-அடங்கும் விதம் ஒன்றையும எண்ணேதோ எ-று.

(வி-ரை) நாகம - மலை. கனி - கொவவைக்கனி. கான கூடம் - ஆலகாலவிஷம. காலரூபம - யமனுடைய வடிவம். ஓதி-கூந்தல. ஓம் நமோ கந்த - என்பது மந்திரம ஓம் நமகுமாரய-சரவணபவ எனபனபோல இதுவும் மநதிர மாதலை வடமொழி நூலகளில காணக.

புலன் ஒருவழிச செல்லாது பலவகைபபட்ட பொருள்களின் மேலுஞ் சென்று சென்று மீளுதலின் 'ஊசலாடு புலன்' என்றூா. ஓயதல்-செயலறறு நிற்றல. தாதகி-ஆத்தி. பூகம்-கமுகு. வாசந்தி-குருக்கத்தி. வேதணடம்-மலை.

'எங்கள் பைம்புனம்' என்றூா, பூவுலகத்தில் மானிட வடிவந்தாங்கிய வள்ளிநாயகியாா வீற்றிருந்த புனம் ஆக

வினை. எங்கள் என்பதை மாது என்பதுடன் இயைத்து எம் பொருட்டு மானுட மாதராய மண்ணுலகில் அவதரித்த காரணத்தால் எம்மையெல்லாம் ஆட்கொண்ட அம்மையார் ஆதலின், அவ்வுரிமை நோக்கிக் கூறினார் என உரைத்தலு மாம். கொலைத்தொழிலேயுடைய குறவர் குலத்துப் பிறந்தும் குற்றமொன்று மில்லாத குணமுடையா ராதலின் 'தீதிலா வஞ்சி' என்றார். சேகரர் என்பதைப் பெயராகக் கொள்க. கலவிக் காலத்து ஊடிய மகளிர் அடிகள் தலைவர் சென்னியிற்படுதல் இயற்கை என்பார், 'அஞ்சீத பாதம் படுஞ் சேகரர்' என்றார்.

சிவப்பிரகாச சுவாமிகளும் பிரபுலிங்கலீலையில்

'ஆதிபகவன் தனதுடல் தணிப்பான பணிய வவ்விறைவன்
பாதமிறைஞ் சுமந்தாங்கு நெற்றிப்பகையு மல்குற் பகையுமாஞ்
சீதமதியு மரவும் விழைஞ் செயற்கு முவகை செயாமலலை
மாதுபணியு மதற்குமன மகிழுமுமையை வணங்குவாம்.'

எனக் கூறியது காண்க.

தேவிபாகம் பொருந்த ஆதிநாதன்-சிவபெருமான்.

சிவபெருமான் உமாதேவியாரை இடப்பாகத்தே வைத்துக்கொண்டிருப்பது உலகத்தில் ஆன்மாக்கள் போகம் துய்க்கவேண்டியே என்பர். போகநுகர்ச்சி யின்றேல் ஆணவ மலம் நீங்குதலும் முத்திப்பேறு அடைதலும் அரிதாகும். இக்கருத்துக்களை,

'தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்
விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ'

எனவரும் **திருவாசகத்** திருமறையானும்,

'போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரித லோரார்
யோகியா யோக முத்தி யுதவுத லதுவு மோரார்
வேகியா னாற்போற் செய்த வினையினை வீட்ட லோரார்
ரூகியா மூடரெல்லா மும்பரி னொருவ னென்பர்'

எனவரூஉம் **சிவஞானசித்தித்** திருவிருத்தத்தானும் அறிக. ()

62 தான தாத்த தனதன தான தாத்த தனதன
தான தாத்த தனதன-தனதான

ஆலமேற்ற விழியினர் சாலநீட்டி யழுதழு
தாகமாயக்க முறைமுறை பறைமோதி
ஆடல்பார்க்க நிலையெழு பாடைகூட்டி விரையம
யானமேற்றி யுறவின ரயலாகக்
காலமாச்சு வருகென வோலைகாட்டி யமபடர்
காவலாக்கி யுயிரது கொடுபோமுன்
காமவாழ்க்கை பொடிபட ஞானம்வாய்த்த கழலிணை
காதலாற்க ருதுமுணர் தருவாயே
வேலகீர்த்தி விதரண சீலவாழ்த்து சரவணை
வியாழகோத்ர மருவிய முருகோனே
வேடர்நாட்டில் விளைபுன ஏனல்காத்த சிறுமியை
வேடமாற்றி வழிபடு மிளையோனே

ஞாலமேத்தி வழிபடு மாறுபேர்க்கு மகவென
நாணல்பூத்த படுகையில் வருவோனே
நாதபோற்றி யெனமுது தாதைகேட்க வநுபவ
ஞானவார்த்தை யருளிய பெருமாளே.

(இ-ள்) வேல்-வேற்படையை உடையவனே!, கீர்த்தி விதரண-மிக்க புகழையுடைய கொடையுள்ளவனே!, சீலர் வாழ்த்து சரவண-ஒழுக்கமுடையோர் வாழ்த்துகின்ற சரவணப்பொய்கையில் அவதரித்தவனே!, வியாழ கோத்ரம் மருவிய முருகோனே - வியாழ கோத்திரத்தைச் சேர்ந்த முருகனே!, வேடர் நாட்டில் - வேடர்களுடைய நாட்டில், புனம் விளை ஏனல்-புனத்திலே விளைகின்ற தினையை, காத்த சிறுமியை-காத்துவந்த வள்ளியை, வேடம் மாற்றி வழிபடும் இளையோனே - தனது வேடத்தை மாற்றி வணங்குகின்ற இளையவனே!, ஞாலம் ஏத்தி வழிபடும் - உலகம் வாழ்த்தி வணங்கும், ஆறுபேர்க்கும் மகவு என-கார்த்திகை முதலிய ஆறு பெண்களுக்கும் குழந்தை என்று சொல்லும்படி, நாணல் பூத்த படுகையில் வருவோனே - நாணல் பூத்துள்ள படுக்கையில் வருபவனே!, நாத போற்றி என-குருநாதனே போற்றி என்று, முதுதாதை கேட்க - முதிர்ந்த தந்தை கேட்கும்படி, அநுபவம் ஞானம் வார்த்தை அருளிய பெருமாளே - அநுபவமுள்ள ஞானமொழியை அருள்செய்த பெருமானே!, ஆலம் ஏற்ற விழியினார்-விடத்தை ஒத்த கண்களுடையவரும், சால நீட்டி - மிகவும் குரலை உயர்த்தி, அழுது அழுது ஆகம் மாய்க்க - மேன்மேலும் அழுது உடம்பை மாய்க்க, முறை முறை பறைமோதி - முறையே

பறையை அடித்து, ஆடல் பார்க்க - ஆட்டத்தைப் பலரும் பார்க்கும்படி, நிலை எழு பாடைகூட்டி-பூமியின்மேல் பிணம் ஏறிச்செல்லும் பாடையைக்கூட்டி, விரைய மயானம் ஏற்றி-விரைவில் சுடுகாட்டில் சேர்த்து, உறவினர் அயல் ஆக-சுற்றத்தார் பக்கத்திலே நின்று, காலம் ஆச்சு வருக என-உமது வாழ்நாள் முடிந்துவிட்டது வருவீராக என்று, ஓலைகாட்டி-வாழ்நாள் முடிந்தபடியைத் தெரிவிக்கும் ஓலையைக் காட்டி, யமன் படர் - யமன் தன்னுடைய ஏவலாளர்களை, காவல் ஆக்கி காவலாக வைத்து, உயிர் அது கொடு போம் முன் - உயிரைக் கொண்டுபோவதற்கு முன்னர், காமம் வாழ்க்கை பொடிபட - ஆசைமிகும் வாழ்க்கை அழியும்படி, ஞானம் வாய்த்த கழல் இணை-ஞானம் மிகுந்த இரண்டு திருவடிகளையும், காதலால் கருதும் உணர்தருவாய் - அன்பால் நினைக்கின்ற உணர்ச்சியை அளிப்பாய் எ-று.

(வி-ரை) வருகென, வருக என்பதின் ஈற்றகரம் தொகுத்தல. 'ஓலை காட்டி' என்றது. உலகவழக்கைக் குறித்து நின்றது. எமபடர்-எமதூதர். உயிர் அது-அது பகுதிப்பொருள் விகுதி. கொடுபோமுன்-கொண்டுபோகு முன். பொடிபட - முற்றும் அழிய. ஞானம்பொருந்திய திருவடிகளை நினைத்தலினாலேயே வீடுபேறு கூடுமாதலின், அவற்றை நினைக்கின்ற உணர்ச்சியே அமையுமென்பார் 'ஞானம் வாய்த்த கழலிணை காதலாற் கருது முணர் தருவாயே' என்றருளிச் செய்தார். உணர்-உணர்வு, முதனிலைத் தொழிற்பெயர்.

'வேடமாற்றி வழிபடும் இளையோன' என்றார் வேங்கை மரமாகவும், முதிய முனிவராகவும் வடிவங்கொண்டு எளிய ராய் நின்றார் ஆதலின். ஞாலம்-இடவாகுபெயர் மக்களைக் குறித்தலின். ஆறுபேர்-கார்த்திகை முதலிய பெண்கள்.

நாணல் பூத்த படுக்கை - சரவணப்பொய்கை. நாத- அண்மைவிளி. போற்றி-இகர ஈற்று வியங்கோள். முது தாதை-சிவபெருமான். எல்லாருக்கும் முன்னேயுள்ள முதல் வராதலின் சிவபெருமானை 'முதுதாதை' என்றார்.

'முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளே' என்றார் **மணிவாசகரும்**

அநுபவ ஞான வார்த்தை-பிரணவமொழி (62)

## சோணாசலம் (திருவருணை)

63 தனதன தானதன தனதன தானதன
தனதன தானதன-தனதான.

**விடமத வேள்வாளியின் விசைபெறு மாலாகல**
விழிகொடு வாபோவென வுரையாடும்

**விரகுட னாருயிர மனமுடை மாபாவிகள்**
மிருகமத கோலாகல முலைதோய

**அடையவு மாசாபர வசமுறு கோமாளியை**
அவனியு மாகாசமு மிசைபேசும்

**அசட அநாசாரனை அவலனை ஆபாசனை**
அடியவ ரோடாள்வது மொருநாளே

**வடகுல கோபாலர்த மொருபதி னாறாயிரம்**
வனிதையர் தோள்தோய்தரு மபிராமம்

மரகத நாராயணன் மருமக சோணசல
மகிப சதாகாலமும இளையோனே
உடுபதி சாயாபதி சுரபதி மாயாது
உலகுய வாராரகலி வறிதாக
உயரிய மாநாகமும நிருதரு நீறுயவிழ
ஒருதனி வேலேவிய பெருமாளே

(இ-ள்) வடகுல கோபாலா தம - வடக்கிலே வாழ்ந்திருந்த இடையர்களுடைய, ஒரு பதினறு ஆயிரம வனிதையா தோள-ஒப்பற்ற பதினறுயிரம பெண்களுடைய தோளகளை, தோய தரும அபிராமம மரகதம் நாராயணன மருமக-சேர்கின்ற அழகிய மரகதத்தினத்தை ஒத்த திருமாலுக்கு மருமகனே!, சோணசலம் மகிப - திருவணணமலைக்குத தலைவரே!, சதாகாலமும இளையோனே-எக்காலமும் இளமையோடிருப்பவனே!, உடுபதி சாயாபதி சுரபதி-சந்திரனும் சூரியனும் இந்திரனும, மாயாது உற-அழியாது வாழ்வைப பொருநதவும, உலகு உய-உலகம் வாழவும, வார ஆர கலி வறிது ஆக-நீண்ட கடல வீணாகவும, உயரிய மாநாகமும்-உயர்ந்த மாமரத்தின் வடிவுகொண்ட சூரபதுமனும் கிரவுஞ்சமலையும, நிருதரும் நீறு ஆய் விழ-இராக்கதர்களும் சாம்பராய அழிய, ஒரு தனிவேல் ஏவிய பெருமாளே-ஒரு ஒப்பற்ற வேற்படையைச செலுத்திய பெருமானே!, மதவேள் விடுவாளியின் - மன்மதன் செலுத்தும் அம்பினது, விசைபெறும் ஆலாகலம் விழிகொடு-வேகத்தையுடைய விஷத்தை ஒத்த கண்களைக்கொண்டு, வாபோ என

உரையாடும்-வா போ என்றுசொல்லும், விரகு உடன்-தந்திரத்தோடு, நூறு ஆயிர மனம உடைமாபாவிகள் - லக்ஷம் விதமாகச சிந்தையை உடைய பாவசெயலை யுடைய பெண்களின், மிருகமதம் கோலாகலம முலைதோய-சந்தனம் பூசி புகழ்ந்து பேசப்படும் ஸதனங்களிலேசேர, அடையவும் ஆசா பரவசம உறு கோமாளியை - முழுவதும் ஆசையிலே பரவசமடையும் பரிகாசதொழிலுடைய என்னை, அவனியும ஆகாசமும-பூமியும் தெய்வலோகமும், வசைபேசும் - பழியைக்கூறும், அசட அநாசாரனை - பயனற்ற ஒழுக்கமில்லாதவனும், அவலனை ஆ-ாசனை-வீணனவனும் நல்லவாபோ விருப்பவனுமாகிய என்னை, அடியவரோடு ஆளவதும ஒருநாளே - அடியார்களோடு ஆட்கொள்ளுவதாகிய ஒருநாளும உண்டோ? எ-று.

(வி-ரை) விடுவாளி எனக் கூட்டுக. ஆலாகலம் - பாற்கடல் கடைந்த காலத்துத் தோன்றிய விஷம் கண்ணினாலே மனக் குறிப்பனைத்தும் விளங்கத் தெரிவிக்கும் தந்திரமுடையார் என்பார், 'விழிகொடு வாபோ என வுரையாடும் விரகுடன்' என்றார். அவர் மனம் பலதிறப்பட்டுப் பலவழிச் சேறலின் நூறாயிரம் மனமுடை மாபாவிக ளென்றார்.

இதனை,

'வெம்புவாள் விழுவாள் பொய்யே
மேலவிழுந் தழுவாள் பொய்யே
தம்பலந் தினபாள் பொய்யே
சாகிறே னென்பாள் பொய்யே

அம்பிலுங் கொடிய கண்ணாள்
ஆயிரஞ் சிந்தை யாளை
நம்பின போக மெல்லாம்
நாயினுங் கடையா வாரே

என்ற ஆன்றோர் வாக்கானும் அறிக

'அத்தி மலரும் அருங்காக்கை வெண்ணிறமும்
கத்துபுனல் மீன்பதமுங் கண்டாலும்—பித்தரே
காணார் தெரியாக் கடவுளருங் காண்பரோ
மாணார் விழியார் மனம்'

வனிதையர்-கோபியர் மரகத நாராயணன் - பசுமை நிறமுடைய திருமால்

'பச்சைமா மலைபோல்மேனி பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா அமரரேறே ஆயர்தங் கொழுந்தே யென்னும்
இச்சுவை தவிர யான்போய் இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே,

என்றார் தொண்டரடிப்பொடி ஆழ்வாரும்,

மருமக - அண்மைவிளி 'சதாகாலமும் இளையோனே' என்றார், என்றுங் குமரனாயிருக்கும் இயல்பு நோக்கி. இது பற்றி யன்றே ஆசிரியர் நக்கீரனார்

'குன்ற மெறிந்தாய் குரைகடலிற் சூர்தடிந்தாய்
புன்றலைய பூதப் பொருபடையாய்—என்றும்
இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே
உளையாய்என் உள்ளத் துறை.

என அருளிச் செய்வாராயினர்.

உடுபதி - சந்திரன்; உடு - நக்ஷத்திரம்; பதி-தலைவன்; நக்ஷத்திரங்கள் இருபத்தேழும் சந்திரனைச் சுற்றி வருதலின் அவைகளுக்குச் சந்திரன் நாயகனெனக் கூறுதல் மரபு. சாயாபதி-சூரியன்; சாயா - நிழல், சாயையைச் சாயாதேவி என உருவகப்படுத்திச் சூரியனுக்கு மனைவியார் எனக் கூறுதலும் மரபு. ஆகலி-கடல் நிருதர்-அசுரர். மாநாகம்-ஈண்டுக் கிரௌஞ்சகிரி.

சத்தி வடிவமாகிய தனது வேற்படையை விடுத்துக் கிரௌஞ்சமலை வடிவமாக நின்ற அசுரனையும், அசுரர் பிறரையும் கொன்றார் ஆதலின் 'நீறாய் விழ ஒரு தனி வேலைவிய பெருமாளே' என்றார். (63)

## சோணாசலம்

64 தனனத்தன தானன தனனத்தன தானன
தனனத்தன தானன-தனதான

இடருக்கிடராகிய கொடுமைக்கணை மேல்வரு
மிறுதிச்சிறு கால்வரு மதனாலே

இயலைத்தரு கானக முயலைத்தரு மேனியி
லெரியைத்தரு மாமதி நிலவாலே

தொடரக்கொடு வாதையி லடையக்கரை மேலலை
தொலையத்தனி வீசிய கடலாலே

துணைபற்றிய பூமல ரணையிற்றனி யேனுயிர்
துவளத்தகு மோதுயர் தொலையாதோ

வடபொற்குல மேருவின் முடுகிப்பொரு சூரனை
மடியச்சுட ரேவிய வடிவேலா

மறவகக்குல மாமொரு குறமெய்யத்திரு மாமகள்
மகிழப்புன மேவிய மயில்வீரா
அடரப்படர் கேதகை மடலிற்றழை சோவய
லருணைத்திரு வீதியில் உறைவோனே
அவனித்திரு மாலொடு சிவனுக்கிமை யாவிழி
அமராக்கர சாகிய பெருமாளே.

(இ-ள்) வடபொன் குலம மேருவின-வடக்கின்கண் உள்ளதாகிய பொன்மயமான சிறந்த மேருமலையைப்போல, முடுகி பொரு சூரனை-மேலெழுந்து சென்று சண்டைசெய்யும் சூரனை, மடிய சுட ஏவிய வடிவேலா-மடியும்படியும் சுடுவதற்கும் செலுத்திய வடித்த வேலையுடையவனே', மறவர் குலம் ஆம ஒரு குறமெய் திருமாமகள்-வீரர் குலமாகிய 'ஒப்பற்ற' குறவருடைய அறிவையுடைய அழகிய சிறந்த வள்ளிநாயகியார், மகிழ புனம் மேவிய மயிலவீரா-மகிழும்படி புனத்திலே சென்ற மயிலவீரனே', அடர படர் கேதகை மடலில-நெருக்கமாகப்படர்ந்த தாழையின் மடலில், தழைசோ வயல-இலைகள் சோகின்ற வயலையுடைய, அருணை திரு வீதியில உறைவோனே-திருவண்ணாமலையின் அழகிய தெருவில தங்குபவனே', அவனி திருமாலொடு-பூமியில விஷ்ணுமூர்த்தியுடனும், சிவனுக்கு - சிவபெருமானுக்கும், இமையாவிழி அமராக்கு-இமைத்தலில்லாத கண்களையுடைய தேவாகளுக்கும், அரசு ஆகிய பெருமாளே-தலைவராகிய பெருமானே', இடருக்கு இடர் ஆகிய -முன்னரேயுள்ள துன்பத்துக்குமேல துன்பமாகிய, கொடுமை

கணை-கொடிய அம்போடும், மேலவரும் இறுதி சிறுகால்-மேலே வீசும் துன்பத்துக்கு இறுதியைத்தரும் தென்றற் காற்றோடும், வரும் மதனால்-வருகின்ற மன்மதனாலும், இயலை தரு கானகம் முயலை - அழகையுடைய காட்டு முயலை, தரு மேனியில்-உண்டாயிருக்கின்ற உடம்பிலே, எரியைதரும் மாமதி நிலவால் - நெருப்பைக் கொடுக்கின்ற சிறந்த சந்திரனுடைய கிரணங்களாலும், தொடர் கொடு வாதையில் அடைய-துன்பம் தொடர்ந்து மிக்க வருத்தத்தைச் சேர, கரைமேல் அலைதொலைய - கரையின்மேல் அலைகெடும்படி, தனி வீசிய கடலால் - தனியாக வீசிய கடலாலும், துணை அற்று - துணையின்றி, அணி பூமலர் அணையில் - அலங்கரித்துள்ள பூக்கள் மலர்ந்த படுக்கையில், தனியேன் உயிர்-தனியேனாகிய எனது உயிர், துவளத் தகுமோ-தளர்தல் தகுதியோ, துயர்தொலையாதோ-துன்பம் ஒழியாதோ எ-று.

(வி-ரை) சிறுகால்-தென்றல்; மந்தமாருதம் என்ற வடநூல் வழக்கங் காண்க சந்திரனிடத்துள்ள களங்கத்தை முயலெனக் கூறுதல் மரபு

வடபொற்குலமேரு-வடக்கின்கண் உளதாகிய அழகிய சிறப்புப்பொருந்திய மேருமலை; இன-ஐந்தனுருபு; ஒப்புப் பொருளில் வந்தது. இமையாவிழி அமரர்;-இமையாத கண்களையுடையதேவர்; இமைத்தல்-மூடுதல்; ஓவற இமைக்கும், விளங்கவிரொளி' என்னும் திருமுருகாற்றுப் படையிலும், 'நுதலது இமையா நாட்டம்' எனவரூஉம் அகநானூறு அடியிலும் இமைத்தல் இப்பொருளில் வருதல் காண்க அரசு-சொல்லால் அஃறிணை பொருளால் உயர்திணை. (64)

## சுவாமிமலை

65 தான தனதன தான தனதன
தான தனதன-தன தான

பாதி மதிநதி போது மணிசடை
நாத ரருளிய குமரேசா
பாகு கனிமொழி மாது குறமகள்
பாதம வருடிய மணவாளா
காது மொருவிழி காக முறஅருள்
மாய னரிதிரு மருகோனே
கால னெனையணு காம லுனதிரு
காலில வழிபட அருளவாயே
ஆதி யயனொடு தேவா சுரருல
காளும வகையுறு சிறைமீளா
ஆடு மயிலினி லேறி யமராகள
சூழ வரவரும இளையோனே
சூத மிகவளா சோலை மருவுசு
வாமி மலைதனில உறைவோனே
சூர னுடலற வாரி சுவறிட
வேலை விடவல பெருமாளே.

(இ-ள்) ஆதி அயனொடு-மேன்மையுள்ள பிரமதேவனுடன், தேவா சுரா உலகு ஆளும் வகை உறு - தேவாகளும் சுவாகக லோகத்தை அரசாளும்படி, சிறைமீளா - அவாகள் அடைநத சிறையை மீட்டு, ஆடும் மயிலினில ஏறி-நடனம செய்கினற மயிலினமேல் ஆரோகணித்து, அமராகள சூழ

வர வரும் இளையோனே-தேவர்கள் சூழ்ந்துவர வரும் இளையவனே!, சூதம் மிகவளர் சோலை-மாமரங்கள் மிகவும் வளர்கின்ற சோலைகள், மருவு சுவாமி மலைதனில் உறைவோனே-சூழ்ந்துள்ள சுவாமிமலையில் வசிப்பவனே!, சூரன் உடல் அற-சூரனுடைய உடம்பு அறும்படியும், வாரி சுவறிட-கடல்நீர் வற்றிப்போகவும், வேலைவிடவல பெருமாளே-வேலைச் செலுத்துவதற்கு வல்ல பெருமானே!, பாதிமதிநதி போது அணி சடை-பிறைச் சந்திரனையும் கங்கையையும் கொன்றை மலரையும் சூடுகின்ற சடையையுடைய, நாதர் அருளிய குமரேசா-சிவபெருமான் பெற்ற குமரேசனே!, பாகு கனிமொழி மாது குறமகள்-பாகையும் கனியையும் ஒத்த சொல்லையுடைய வள்ளிநாயகியாரது, பாதம் வருடிய மணவாளா-திருவடிகளைத் தடவிய மணவாளனே! காதும் ஒரு விழி காகம் உற அருள-கெடுக்கப்பட்ட ஒரு கண்ணைக் காகம் அடையும்படி செய்த, மாயன் அரி திருமருகோனே-மாயச் செயலுடையவனாகிய திருமாலுக்கு அழகிய மருமகனே!, காலன் எனை அணுகாமல-யமன் என்னைச் சேராதபடி, உனது இருகாலில் வழிபட அருள் வாய-தேவரீருடைய இரண்டு கால்களிலும் வணங்க அருள் செய்வாய் எ-று.

(வி-ரை) பாதிமதி-இளம்பிறை. நதி-கங்கை. போது-கொன்றைமாலை. மாது-வள்ளிநாயகியார். வருடுதல்-தடவுதல். காதும் ஒருவிழி காகம் உற அருள்-கெடுக்கப்பட்ட ஒரு கண்ணைக் காகம் அடையும்படி அருள்செய்த. 'இராம

ரும் சீதாபிராட்டியாரும் ஓரிடத்திருந்தபோது காகாசுரன் என்பவன் சீதையைத் தாக்கிய காரணத்தால் இராமர் பிரயோகித்த தருப்பைப் புல்லாகிய அம்பினால் ஒரு கண்ணிழந்து பின்னர் அவர் சகாயத்தால் அதனைப் பெற்றான் என்பது இராமாயணக் கதை.'

சிறைமீள-சிறையை மீட்டு மீளா - செய்யா என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். சூதம் - மாமரம். வாரி - கடல். வேலை விட்டவல பெருமாள்-உக்கிர குமார பாண்டியன் ஆடு மயில்-நடனஞ் செய்யும் மயில். சுவாமிமலை - திருவேரகம்; இது கும்பகோணத்துச் சமீபத்திலுள்ள முருகன் திருப்பதிகளில் ஒன்று. முருகன் திருவடிகளில் வழிபட்டார் மரணத்தினின்று நீங்கி வீடுபெறுவராதலின் 'காலனெனை யணுகாமலுன் திருகாலில் வழிபட அருள்வாயே' என்றார். (65)

## திருத்தணிகை

66 தனதந் தனதத் தனதந தனதத
தனதந தனதத-தனதான.

குயிலொன் றுமொழிக் குயினின் முலையக்
கொலையின் பமலாக்   கலையாலே

குளிருந் தவளக் குலசந் தரவொளிக்
கொடிகொங் கையினமுதத்   தனலாலே

புயலவந் தெறியக் கடனின் றலறப்
பொருமங் கையருக்   கலராலே

புயமொன் றமிகத் தளர்கின் றதனிப்
புயம்வந் தணையக்   கிடையாதோ

சயிலங் குலையத் தடமுந் தகரச்
சமனின் றலையப் பொருமவீரா
தருமங் கைவனக் குறமங் கையர்மெய்த்
தனமொன் றுமணித் திருமார்பா
பயிலுங் ககனப் பிறைதண் பொழிலிற்
பணியுந் தணிகைப் பதிவாழ்வே
பரமன் பணியப் பொருளன் றருளிற்
பகர்செங் கழுநிப் பெருமாளே.

(இ-ள்) சயிலம் குலைய தடமும் தகர - கிரவுஞ்சமலை நிலைகெட்டுப் பக்கங்களால் உடைபட்டழியவும், சமன் நின்று அலைய பொரும வீரா - யமன் நிலைத்துத் துன்புறத்தும்படி சண்டைசெய்யும் வீரனே!. அம் கை தரும - அழகிய கையைத் தருகின்ற, வனம் குற மங்கையர் - காட்டிலே வாழும் குறப்பெண்ணாகிய வள்ளிநாயகியின், மெய்த்தனம் ஒன்றும் மணி திரு மார்பா - பர அபர ஞானங்களாகிய ஸ்தனங்கள் பொருந்துகின்ற அழகிய மேன்மைபொருந்திய மார்பை உடையவனே!, ககனம் பயிலும் பிறை - ஆகாயத்திலே சஞ்சரிக்கும் பிறைச்சந்திரன், தண் பொழில் பணியும் தணிகைபதி வாழ்வே - குளிர்ந்த சோலையில் வணங்குகின்ற திருத்தணிகை யென்னுந் திருப்பதியில் கோயில் கொண்டிருப்பவனே!, பரமன் பணிய பொருள் அன்று அருளில் பகர் செங்கழுநி பெருமாளே - சிவபெருமான் வணங்கப் பிரணவத்தின் பொருளை அக்காலத்துக் கருணையினால் சொல்லியருளிய செங்கழுநீர்ப் பெருமானே!, குயில்

ஒன்று மொழி - குயிலை ஒத்த இனிமையான சொல்லை யுடைய தலைவி, குயில நின்று அலைய - குயில நின்று தன் குரலோசையினால துன்பஞ் செயயவும, கொலை இன்பம் மலா கணையாலும்-கொலைபினைச செயயும இனபமான பூங் கணையாலும், குளிரும் தவளம குலம சநதிரன ஒளி - குளிாசசி பொருநதிய வெண்மையான உயாநத சநதிரனது ஒளியாலும, கொஙகையின் கொடி முதது அனலால் - ஸதனஙகளில பொருநதிய ஒழுஙகாக உளள முததுமாலை யின நெருபபாலும, புயலவநது எறிய - மேகம் வந்து வீச வும், கடல நினறு அலற-கடல நிலைபெறறு அலறவும, புயம் வந்து அணைய கிடையாதோ-தோளிலே வநது பொருநதக் கிடைககாதோ எ-று.

(வி-ரை) குயிலொன்று மொழி-குயிலையொதத மொழி யையுடைய தலைமகள. தவளம-வெணமை. குயில-சநதிரன் முதலிய பொருளகள தலைவரைப பிரிந்த நஙகையருக்கு மயலை விளைததலின அவா அவறறைப பழிததலாகக கூறு தல கவி மரபு. சந்திரனைப பழிததலைப பினவரும் நைடதச் செயயுளானறிக.

நைடதம

'கன்று குணிலாக் கனியுகுத்தோன
கடலி னமுதங் கடைந்தெடுபபக
குன்ற மிடலுங் கலையணைததுங
தகர்ந்துள் ளாவி குறைந்திலையே
தூன்று கதிாவெண் கலைமதியே
சுலவு திரைநீாக கடல்குடிதத

அன்று கலச முனிவயிற்றி
லன்று மெனனி லெழலாயே.'

குயிலைப் பழித்தலைப் பின்வரும் பிரபுலிங்கலீலைச் செய்யுளானறிக

பிரபுலிங்கலீலை

'உயிர்த்த பொழுதே நின்குரல் கேளா
முனமேடைடிற நீன்றதாய்
நயத்தின் வளர்த்த தாய்குரல்
கேட்டலுமே நடுங்கத் துரந்ததாற்
பயத்தமலர்ப் பூங்காவகத்தி லிருந்து
பல்காற் கூவினும்
செயிர்த்து நின்னைக் குயிலே நான்
வெறுத்தல் செய்யவேண்டுமோ.'

முத்துக்கு அனல் பிறந்தது கொங்கைகளால் என்க. புயல்-மேகம். அலர்-பழிச்சொல், தலைவி மங்கையர் சொல்லும் அவர் மொழிக்கு ஆற்றாது வருந்துகின்றாளாதலின் 'அலரால் தளர்கின்ற' என்றார். புயம், புஜம் என்னும் வடசொல்லின் திரிபு. சைலம்-மலை. தடம்-கடல். ககனம்-ஆகாயம். தணிகைப்பதியிலுள்ள சோலைகள் வானுற வோங்கி வளர்ந்துள்ளன ஆதலின் 'பயிலுங்ககனப் பிறைதண் பொழிலிற் பணியுந் தணிகைப்பதி' என்றார். செங்கழுநி-செங்கழுநீர் என்பதன் மரூஉ. இச்செய்யுள் ஆன்மாவைத் தலைமகளாகவும் இறைவனைத் தலைமகனாகவும் வைத்துப் பாடப்பட்டது. இவ்வாறு வருதலை,

'சொலமாலை பயிலுகின்ற குயிலினங்காள் சொல்லீரே
பன்மாலை வரிவண்டு பண்மிழற்றும் பழனத்தான்
முன்மாலை நகுதிங்கண் முகிழ்விளங்கு முடிச்சென்னிப்
பொன்மாலை மார்பனென் புதுநலமுண் டிகழ்வானோ.'

எனும் அப்பர் தேவாரத்தினுங் காண்க. (66)

பொது

67 தநத தானன தநத தானன
தநத தானன-தனதான.

கணடு போலமொழி வண்டு சேர்குழல
கணகள சேலமதி முகமமேவயம்தோள

கணடு பாவனை கொணடு தோளகளி
லொணடு காதலி லிருகோடு

மணடி மாரபினில வீணட தாமென
வந்த கூர்முலை மடவாரதம்

வஞ்ச மாலதில நெஞ்சு போய்மடி
கின்ற மாயம தொழியாதோ

கொண்ட லார்குழல கொண்டை போலவிழி
கொணடு கோகில மொழிகூறுங

கொங்கை யாள்குற மங்கை வாழ்தரு
குன்றில மாலகொடு செலுமவேலா

வெண்டி மாமன மணடு சூர்கடல
வெம்ப மேதினி தனிலமீளா

வென்று யாவையு மனறி வேலையும
வென்று மேவிய பெருமாளே.

(இ-ள்) கொண்டல் ஆர் குழல் - மேகத்தை ஒத்த கூந்தலையும், கெண்டைபோல் விழி கொண்டு - கெண்டை மீனையொத்த கண்களையுங் கொண்டு, கோகிலம் மொழி கூறும்-குயில்போன்ற இனிய சொற்களைப் பேசும், கொங்கையாள்-தமக்குத்தாமே ஒப்பாகிய ஸ்தனங்களை யுடையவளும், குறமங்கை - குறவர் பெண்ணுமாகிய வள்ளிநாயகி, வாழ்தரு குன்றில் - வாழ்கின்ற மலையில், மால்கொடு செலும் வேலா-மயக்கம்கொண்டு செல்லும் வேற்படையை உடையவனே!, வெண்டி மாமனம் மண்டு சூர்கடல் - பெரிய மனம்பொருந்திய சூரனாகிய கடல், வெம்ப-வாட, மேதினிதனில்-பூமியில், மீளா-மீண்டு, யாவையும் வென்று-எல்லாவற்றையும் வெற்றி கொண்டதுமன்றி, வேளையும் வென்றுமேவிய பெருமாளே-மன்மதனையும் வெற்றிகொண்டு விளங்கிய பெருமானே!, கண்டுபோல் மொழி - கற்கண்டைபோலும் சொற்களையும், வண்டு சேர் குழல்-வண்டுகள் சேர்ந்த கூந்தலினையும், கண்கள் சேல்-சேல்போன்ற கண்களையும், மதிமுகம் - சந்திரனை ஒத்த முகத்தையும், வேய்தோள்-பசுமை மூங்கிலைப்போன்ற தோள்களையும், கண்டு பாவனை கொண்டு-பார்த்து எண்ணங் கொண்டு, தோள்களில் ஒண்டுகாதலில்-தோள்களில்பொருந்திய காதலினால், இருகோடு மண்டி - இரண்டு கொம்புகள் நெருங்கி, மார்பினில் விண்டது ஆம் என-மார்பினில்பொருந்தியன என்று சொல்லும்படி, வந்த கூர்முலை மடவார்தம்-மேலெழுந்து தோன்றிய கூரிய ஸ்தனங்களையுடைய பெண்களின், வஞ்சம் மால் அதில்-வஞ்சமுள்ள காம மயக்கத்தில்,

தியன நெஞ்சுபோய-மனம் அழிந்து, மடிகின்ற மாயம் அது ஒழியாதோ - ஒழிகின்ற பொய்யொழுக்கம் நீங்காதோ. எ-று

(வி-ரை) கண்டு - கற்கண்டு. கோடு - யானைக்கொம்பு. வஞ்சமால் - பொய்யாகிய மயக்கம். கொண்டல் - மேகம்; நீரைக்கொள்ளுதல் காரணக்குறி. கோகிலம்-குயில். மால் கொடு செலும் வேலா-ஆசை மயக்கங்கொண்டு செல்லுகின்ற வேற்படையை யுடையோனே, மீளா-செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். வென்று - வெல் பகுதி; உ-வினையெச்ச விகுதி, ற்-இறந்தகால இடைநிலை, லன் ஆனது சந்தி யாவையும் என்புழி உம்மை முற்றுப் பொருளது. வேள்-மன்மதன், விரும்பத்தக்க அழகுடையவன். கட்டழகு-கட்டிளமை என்பனவற்றால் முருகன் மன்மதனிலுஞ் சிறத்தலின் 'வேளையும் வென்று' கூறினார் (67)

## குருகிரி (சுவாமிமலை)

68 தனதன தததத தததன தததத
தனதன தததத தததன தததத
தனதன தததத தததன தததத-தனதான.

தலைமயிர் கொக்குக் கொக்கந ரைத்துக்
கலகலெனப்பற் கட்டது விட்டுத்
தளர்நடை பட்டுத் தத்தடி யிட்டுத் தடுமாறித்

தடிகொடு தத்திக் கக்கல்பெ ருத்திட்
டசனமும் விக்கிச் சத்தியெ டுத்துச்
சளியுமி குத்துப் பித்தமு முற்றிப் பலகாலும்

திலதயி லததிட் டொககவெ ரிக்கத
திரிபலை சுககுத திபபிலி யிட்டுத
தெளியவ டிததுற் றுயததுடல செததிட டுயிர்போமுன்

திகழ்தமிழ் கறறுச சொறகளப யிறறித
திருவடி யைபபற றிதொழு துறறுச
செனனம றுகைகக குமர முததிக கருள்தாராய்

கலணை விசிததுப பககரை யிட்டுப
புரவிசெ லுததிக கைககொடு வெறபைக
கடுகந டததித திட்டென எட்டிப பொருசூரன

கனபடை கெட்டுத தட்டற விட்டுத
திரைகட லுககுட் புககிட எற்றிக
களிமயி லைசசித ரததிலந டததிப பொருகோவே

குலிசனம கட்குத தபபிய மறறக
குறவாம கட்குச சிததமும் வைததுக
குளிர்தினை மெத்தத் ததது புனத்திற றிரிவோனே

கொடியபொ ருபபைக குததிமு றிததுச
சமரமலி லைததுத தறபர முறறுக
குலகிரி யிறபுக குற்றுறை யுக்ரப பெருமாளே.

(இ-ள்) கலணை விசித்து-சேணத்தைக் கட்டி, பக்கரை இட்டு-அங்கவடியை இட்டு, புரவி செலுத்தி-குதிரையைச் செலுத்தி, கைக்கொடு வெற்பை - கையையுடைய கொடிய மலையை ஒத்த யானையை, கடுக நடத்தி - விரைவாகச் செலுத்தி, திட்டென எட்டி பொருசூரன் - திடுமென நெருங்கிச் சண்டைசெய்யும் சூரன், கனம் படை கெட்டு-பெரிய படை அழிய, தட்டு அறவிட்டு - தடுக்க முடியாத

படி கைவிட்டு, தி... லுகருள் புகுகிட-அலைகின்ற கடலி
னுள் புக, ஏறி களி... செருக்கையுடைய
மயிலை, சிதரத்தில நடத்தி பொருகோவே - அழகாக நடத்
திச சணடையிடும் தலைவனே', குலிசனமகட்கு தபபியும்-
இந்திரன மகளாகிய தெய்வயானைககுப பிழைததும்,
மறறு அ குறவர் மகட்கு-அந்த இழிவான குலபபெண்
ணாகிய வள்ளிககு, சிததமும வைத்து - மனம கொணடு,
குளிர் திணை மெதத தததுகுளிாநத திணை மிகவும் வளா
கினற, புனததில திரிவோனே-கொலலை நிலததில திரிகினற
வனே, கொடிய பொருபபை குததி முறிதது-கொடுமை
யான கிரவுஞ்ச மலையைககுததி அழிதது, சமரம் விளைநது-
சணடையை உணடாககி. தறபரம உறறு-தானே மேலான
பொருளாகப பொருநதி, குலகிரியில புககு உறறு சிறநத
மலையிற சென்று அமாநது, உறை உகரம பெருமாளே-
வசிககினற கோபததையுடைய பெருமானே', தலைமயிா
கொக்குக்கு ஒக்க நரைதது-தலைமயிா கொக்கின நிறததைப
பொருந்த வெளுததும், கலகலென பல கடடு அறுது விட்டு-
கலகலென்று பலகள் கடடு அழிநதும, தளா நடைபட்டு-
தளாந்த நடை உணடாகியும், தத்து அடி இட்டு தடுமாறி-
தத்துகின்ற அடிவைததுத தடுமாறமடைநதும, தடிகொடு
தத்தி-தடியைக்கொணடு தததி நடநதும், கககல பெருத்
திட்டு-இருமல மிகுந்தும, அசனமும் விக்கி-உணவும விககி
யும், சத்தி எடுத்து சளியும மிகுத்து-மேன்மேலும் இருமிச்
சளியும் அதிகரிக்தும், பித்தமும் முறறி பலகாலும் - பித்த

மும் முதிர்ந்து பலமுறையும், தில்ம தயிலத்து இட்டு-எண்ணெயில் போட்டு, ஒக்க எரிக்க-ஒத்துப்போகும்படி எரிக்க, திரிபலை சுக்கு திப்பிலி இட்டு-கடு, நெல்லி, தான்றி, சுக்கு, திப்பிலி ஆகிய இச்சரக்குகளை இட்டு, தெளிய வடித்து ஊற்று-தெளிவாக வடித்தெடுத்து, உய்த்திட்டு - வாய்க்குள் செலுத்தி, உடல செத்திட்டு உயிர் போமமுன் - உடல் அழிந்து உயிர் நீங்குவதற்கு முன்னர், திகழ புகழ் கற்று-விளங்குகின்ற தேவரீரது புகழைத் தெரிந்து, சொற்கள் பயிற்றி - அப்புகழ்க்குரிய சொற்களில் பழகும்படி செய்து, திருவடியைப் பற்றி - அழகிய அடிகளைப் பற்றிக் கொண்டு, தொழுது உற்று - வணங்கி, சனனம் அறுக்கைக்கு - பிறப்பை ஒழிப்பதற்கு, பரமுத்திக்கு அருள் தாராய் - மேலான மோக்ஷத்துக்குத் திருவருள் தருவாயாக எ-று.

(வி-ரை) தலைமயிர் கொக்குக்கு ஒக்க நரைத்தல-தலைமயிர் கொக்கின் நிறத்திற்கு ஒப்பாகும்படி அத்துணை வெண்மையாதல் இதுபோல,

> ‘குயிலொத் திருள்குஞ்சி கொக்கொத் திருமல
> பயில்பப் புகாமுன்ன நெஞ்சே—மயிலைத்
> திருப்புன்னை யங்கானல் சித்தியா யாகி
> லிருப்பின்னை யங்காந் திளைத்து.’

எனப் பதினோராந் திருமுறையில் வருதல் காண்க.

பலகட்டு - பல்லினது உறுதி. தளர் நடை - வினைத் தொகை. கலகலென-ஒலிக்குறிப்பு. அசனம்-சோறு. தில

தையிலம்-எண்ணெய். சித்தமும் என்புழி உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. திரிபலை - கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய். உய்த்து-செலுத்தி. பயிற்றி-பயில என்னும் தன்வினைப்பகுதி பயிற்று எனப் பிறவினையாகி இகர விகுதியைப் பெற்று உகரங்கெட்டு முடிந்தது. திருவடியே பிறவிக்கடல் நீந்துதற்குரிய தோணியாதலின் 'திருவடியைப் பற்றி' என்றார்.

திருவடியைப் பற்றி ஆசையிற் பற்ற வேண்டுதலின் அவ்வாறு கூறினார் என்னலுமாம். திருவடியின் பெருமையை

'அரவணையான் சிந்தித் தரற்றுமடி
அருமறையான் சென்னிக் கணியாமடி
சரவணத்தான் கைதொழுது சாருமடி
சார்ந்தார்கட் கெல்லாஞ் சரணாமடி
பரவுவார் பாவம் பறைக்குமடி
பதினெண் கணங்களும் பாடுமடி
விரவுநீர்த் தெண்கெடில நாடன் அடி
திருவீரட் டானத்தெஞ் செல்வனடி'

என வரூஉம் **திருநாவுக்கரசு சுவாமிகள்** திருவாக்கானறிக.

பரமுத்தி என்றார் அபரமுத்திகள் உண்மையின். திரைகடல்-வினைத்தொகை. குலிசன் மகள்-தேவேந்திரன் மகளாகிய தெய்வயானையம்மையார். தெய்வயானையம்மையார் அறியாவண்ணம் வள்ளி நாயகியாரிடம் சேறல் அருமை என்பார் 'குலிசன் மகட்குத் தப்பியும் மற்றைக் குறவர் மகட்குச் சித்தமும் வைத்து' என்றார். அகரச்சுட்டு இழிவு குறித்து நின்றது. பொருப்பு-மலை. சமரம்-சண்டை.

69 தனனதன தனனதன தனனதன தனனதன
தனனதன தனனதன-தனதான.

அளகநிரை குலையவிழி குவியவளை கலகலென
அமுதமொழி பதறியெழ அணியாரம்
அழகொழுகு புளகமுலை குழையஇடை துவளமிக
அமுதநிலை அதுபரவ அதிமோகம்
உளமுருக வருகலவி தருமகளிர் கொடுமையெனு
முறுகபட மதனிலமதி யழியாதே
உலகடைய மயிலினமிசை நொடியளவில வலம்வருமு
னுபயநறு மலரடியை அருள்வாயே
வளையுமலை கடலசுவற விடுபகழி வரதனிரு
மருதினொடு பொருதருளு மபிராமன்
வரியரவின மிசைதுயிலும் வரதசய மகளகொழுநன்
மருகஅமா முடுகிவரு நிருதேசர்
தளமுறிய வரைதகர அசுராபதி தலைசிதற
தகனமெழ முடுகவிடு வடிவேலா
தரளமணி வடமிலகு குறவாதிரு மகள்கணவ
சகலகலை முழுதும்வல பெருமாளே.

(இ-ள்) வளையும அலைகடல சுவற-பூமியைச சுற்றி யுள்ள அலைநின்ற கடலின் நீர வற்றிப போமபடி, விடு பகழி வரதன்-அம்பைச செலுத்தும வரதனே!, இருமருதினொடு பொருதருளும் அபிராமன் - பெரிய மருதமரத்தினுடன் போரைசசெய்யும் அழகனும், வரிஅரவின் மிசைதுயிலும்-வரிகளையுடைய ஆதிசேஷன்மேல அறிதுயிலஅமரும், வரத

சயமகள கொழுநன்-வரங்களைத்தரும் ஜயலக்ஷ்மியின் கண வனுமாகிய திருமாலுக்கு, மருக - மருமகனே, அமா முடுகி வரு நிருதேசா - சண்டைக்கு விரைந்து வருகின்ற அவுண ருடைய, தளம் முறிய - சேனைகள் தோல்வியடையவும், வரைதகர - கிரவுஞ்சமலை சிதறவும், அசுரா பதிதலை சிதற- அவுணா தலைவனாகிய சூரபதுமனுடைய தலை துண்டுபடவும், தகனம எழ - நெருப்புண்டாகவும், முடுக விடு வடிவேலா- விரைவாகச செலுததுகின்ற வடித்த வேலையுடையவனே!, தாளம் மணி வடம இலகு - முததுமாலையும இரத்தினமாலை யும் விளங்குகின்ற, குறவா திருமகள் கணவ - வள்ளிநாயகி யின கணவனே!, சகலகலை முழுதுமவல பெருமாளே - எல லாக கலைகளிலும் முழுதும் வலலவனாகிய பெருமானே!, அளகம நிரை குலைய-கூந்தலினது வரிசை அழியவும், விழி குவிய-கண்கள் மூடவும, வளை கலகலென - வளையல்கள் கல கலென ஒலிக்கவும், அமுதம் மொழி பதறி எழ-தேவாமிர் தத்தை ஒதத சொறகள பதறித தோன்றவும், அணி ஆரம்- அழகிய முத்துமாலை யணிந்த, அழகு ஒழுகு புளகம முலை- குழைய அழகு வடிகின்ற புளகத்தையுடைய ஸ்தனங்கள் சோர்வை யடையவும், இடை துவள - இடை தளரவும், அமுதம்நிலை அது மிக பரவ - அமுதநிலை மிகவும் பரவவும், அதிமோகம்-மிகுந்த ஆசையால, உளம் உருக-மனமானது உருகவும், வரு கலவி தருமகளிர - ஏறபடும் புணர்ச்சியைக் கொடுக்கும் பெண்களுடைய, கொடுமை எனும்-கொடுமை என்று சொல்லப்படும், கபடம் அதனில் மதி அழியாது-

வஞ்சகத்தில் அறிவு அழியாமல், உலகு அடைய மயிலின் மிசை-உலக முழுவதும் மயிலின்மேல், நொடி அளவில் வலம் வரும்-நொடிப்பொழுதில் சுற்றி வருகின்ற, உன் உபயம் நறுமலர் அடியை அருள்வாய் - தேவரீருடைய இரண்டாகிய வாசனை பொருந்திய தாமரை மலரை ஒத்த திருவடிகளை அளிப்பாயாக எ-று.

(வி-ரை) அளகநிரை-கூந்தலாகிய வரிசை; வளை-வளையல். ஆரம்-முத்துமாலை அமுதநிலை-பெண்களுக்குக் கலவிக் காலத்து அமுதம் பிறக்குமென்பர்.

உலகடைய - உலகம் முழுவதும் நொடி - நொடிப் பொழுது, சிட்டிகைப் போடும் நேரம். உபய நறுமலரடி- இரண்டாகிய மணம் வீசும் தாமரைமலர்போன்ற திருவடி. பகழி-அம்பு மருது-மருதமரம், வரியரவு-ஆதிசேஷன்

ஜயமகள்-வெற்றித்திரு கொழுநன - என்பதில் நகரம் பெயரிடைநிலை. மருக-அண்மைவிளி தளம்-சேனை, தரள மணி வடம்-முத்தாகிய இரத்தினத்தாலாகிய மாலை. (69)

## திருவாரூர்

70 தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன-தனதான

கரமு முளரியின் மலர்முக மதிகுழல்
கனமு தெனுமொழி கனிகதிர் முலைநகை
கலக மிடுவிழி கடலென விடமென மனதூடே

கருதி யனநடை கொடியிடை யியலமயில
கமழு மகிழுட னிளகிய மருகமத
களப புளகித கிரியினு மயலகொடு திரிவேனும்

இரவு பகலற இகலற மலமற
இயலு மயலற விழியினி ரிழிவர
இதய முருகியெ யொருகுள பதமுற மடலூடே

யெழுத அரியவள் குழமக ளிருதன
கிரியில முழுகிய இளையவ னெனுமுரை
யினிமை பெறுவது மிருபத மடைவது மொருநாளே

சுரபி மகவினை யெழுபொருள வினவிட
மனுவி னெறிமணி யசைவுற விசைமிகு
துயரில செவியினி லடிபட விரவுமி கிதிது

துணிவி லிதுபிழை பெரிதென வருமனு
வுருகி யரகர சிவசிவ பெறுமதொா
சுரபி யலமர விழிபுனல் பெருகிட நடுவாகப்

பரவி யதனது துயாகொடு நடவிய
பழுதின மதலையை யுடலிரு பிளவொடு
பரிய ரதமதை நடவிட மொழிபவ னருளாளா

படியி லறுமுக சிவசுத கணபதி
யிளைய குமரநி ருபபதி சரவண
பரவை முறையிட அயில்கொடு நடவிய பெருமாளே.

(இ-ள்) சுரபி-பசுவானது, மகவினை எழு பொருள வினவிட - தனது கன்று உயிா பிழைக்கின்ற தனமையைக் கேட்கும் பொருட்டு, மனுவின் எறி மணி அசைவுற-மனுவேநதனது அடிக்கப்படும் ஆராயச்சி மணி அசைகின்ற,

அ இசை-அந்த ஓசையானது, மிகுதுயரில-மிகக துனபத்தோடு, செவியினில அடிபட-காதினில் கேட்க, அதிதீது வினவுமின-(மநதிரிகளை நோக்கி அரசன இபபசுவுசகுறற) மிகக குறறம இனனதெனக கேளுஙகள என்று சொலலி அவாகளால இன்னதெனதெரிநது, துணிவில இதுபிழை பெரிது எனவரும-நிசசயமாக இசசெயல பெருஙகுற்றமெனறு நினைதத, மனு உருகி-மனுவேநதன பசு கனறிழநத துனபததை எணணி மனமுருகி, பெறும அது ஓா சுரபி அலமர - இததுனபததை அடைநத பசு சுழறசி அடைதலைப பாாதது, விழி புனல பெருகிட-கண்களினினறு நீர் பெருக, நடுவு ஆக-தனது செஙகோனமை தவறாமல் இருக்க வேணடுமென, அரகர சிவசிவ பரவி - அரகர சிவ சிவ என்னும நாமஙகளைச சொலலிச சிவனை வாழததி, அதனது துயாகொடு - இபபசுவினது கனறிழநத துயரததைத தானும தனககு நோநததாககொணடு, நடவிய பழுதில மதலையை-பசுககன்று இறககுமபடி தேரைச செலுததிய குறறமிலலாத தனது ஒரே புதலவனை, உடல இரு பிளவொடு படிய-அவனது உடமபு இரணடு பிளவுபடுமபடி, படிய ரதம அதை நடவிட-மாாபிலே சககரம் பொருநதும் படி இரதத்தைச செலுத்துக என்று, மொழிபவன - மநதிரிககுக கட்டளையிட்ட மனுவேநதனது, அருள அரூா படியில அறுமுக-அருள நிறைந்த திருவாரூரின்கண எழுந்தருளிய ஆறுமுக முடையவனே!, சிவசுத-சிவபெருமானுக்குக குமாரனே!, கணபதி இளைய-விநாயகப பெருமானுககு

இளையவனே', குமர-இளமையுடையவனே', நிருப பதி-அரச
சாக கரசனே', சரவண-சரவணப பொய்கையில அவதரித்த
வனே', பரவை முறையிட அயிலகொடு நடவிய பெரு
மாளே-கடல முறையிடுமபடி வேலைககொணடு செலுத்திய
பெருமானே', கரம் முளரியின மலா-கைகள தாமரை மலர்
களையும, முகமமதி-முகம சநதிரனையும, குழல கனம-கூந்
தல மேகததையும், எனுமமொழி கனி-மெனமையாகக்
கருதபபடும் சொல பழததினது சுவையையும், கதிர முகை
நகை-ஒளிபொருந்திய நகை முலலை அருமபையும் ஒக்கு
மென்று புகழ்ந்து கூறியும, கலகம இடும விழி கடல என
விடம என-காமமாகிய யுததததைச செயயும கணகள கட
லெனறும விஷமெனறும் சொலலியும, மனது ஊடு-மனத்
தில, கருதி-எணணி, அனம நடை-அனனம போன்ற
நடையிலும், கொடி இடை-காமவலலிபோனற இடை
யிலும, மயில இயல-மயிலபோனற சாயலிலும், கமழும்
அகிலுடன இளகிய மிருகமதம் களப புளகிதகிரியிலும்-
வாசனை வீசுகினற அகிலோடு இளகிய கஸதூரி கலவைச்
சாந்து முதலியவறறைப பூசிய புளகம்கொண்ட மலை
போன்ற ஸ்தனஙகளிலும், மயல கொடு திரிவேனும்-ஆசை
கொண்டு திரிபவனாகிய அடியேனும், இரவு பகல அற-
இரவு பகல என்பது ஒழியவும், இகல அற மலம் அற-பகை
யும் மலமும் ஒழியவும், இயலும் மயல அற-பயின்றுள்ள
ஆசையின் மயககம நீஙகவும், விழியின் நீா இழிவர-கண
களின் நீர்வடிய, இதயம் உருகி-மனம் நெகிழ்ந்து, ஒரு

குளம பதம் உற-ஒரு ப ககரைப பாகுபோலாகவும், மடல் ஊடு எடுத தஅரியவள - மடலினிடத்து எழுதுவதற்கு அருமையான அழகையுடையவளும, குறமகள - குறவருக்குத் திருமகளுமாகிய வளளிநாயகியினது, இருதனகிரியில முழுகின இளையவுன் - இரண்டு ஸதனங்களாகிய மலைகளில பொருநதிய குமரனே', எனும உரை இனிமைபெறுவதுட-எனனுட சொலலினது இனிமையைப பெறுவதும், இரு பதம அடைவதும்-இரணடு திருவடிகளைச சேர்வதும, ஒரு நாள-ஒருநாளில கிடைககுமோ? எ-று

(வி-ரை) முளரி-தாமரை கனம்-மேகம விடம-விஷமெனனும வடசொலலின திரிபு மனது - மனஸ எனனும வடசொலலின திரிபு களபபுளகிதகிரி-ஸ்தனம். திரிவேனும எனபதிலுளள உமமை இழிவு சிறபபு நீா எனபது குறுகிறறு குளம-சாக்கரை பேரழகால சிறநதவள எனபார மடலூடே எழுத அரியவள என்றார அழகின மிகுதியை நோக்கி ஓவியம வலலோர எழுதத துணிவாராயினும அவளை எழுதலாகாது எனபதாம் இககருததை,

'யாழு மெழுதி எழிலமுத தெழுதி யிருளின மென்பூச
சூழுமெழுதியொா தொணடையுந் தீட்டி யெனறெனபிர்வி
யேழு மெழுதாவகை சிதைததோன் புலியூரிளமாம [வே
போழுமெழுதிற்றொா கொம்பருண்டேற கொணடுபோதுக

என வரூஉம் திருககோவையாாலும உணாக.

திருவாரூா சிறபபுக கூறுவாா மநுமுறைகணட வரலாற்றை விரிததுக் கூறினர்.

அலமர-அலமா பகுதி. 'அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி' என்பது **தொல்காப்பியம்**. எறி மணி-ஆராய்ச்சி மணி. புத்தி பூர்வகமாகக் கொலைசெய்ததா லன்றென்பார் 'பழுதிலமதலை' என்றார்.

தேர்ச்சக்கரத்தில் தெரியாது அகப்பட்டு உயிர்துறந்த பசுக்கன்றின் பொருட்டு அதற்கேற்கச் சென்று தன் ஒரே மகனின் மார்பின்மீது தேரைச் செலுத்துமபடி கட்டளையிட்ட அரசனது செங்கோன்மை சிறந்த ஆரூர் என்றார்.

இதனை,

'ஒருமைந்தன் தன்குலத்துக் குள்ளானென் பதும்உணரான்
தருமந்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்
மருமந்தன் தேராழி யுறவூர்ந்தான் மனுவேந்தன்
அருமந்த அரசாட்சி அரிதோமற் றெளிதோதான்'

என்னும் **சேக்கிழார் சுவாமிகள்** திருவாக்கினுங் காண்க. (70)

**பழனிமலை**

71 தனத தனனத தனத தனனத
தனத் தனனத் தனத தனனத
தனத் தனனத தனத தனனத-தனதான.

குறித்தமணிப் பணிததுகிலைத்
திருத்தியுடுத் திருட்குழலைக்
குலைத்துமுடித் திலைச்சுருளைப் பிளவோடே

குதட்டியதுப் புதட்டைமடித்
தயிற்பயிலிட் டழைத்துமருட்
கொடுத்துணர்வைக் கெடுத்துக்க குறியாலே

பொறித்தனத் தணைத்து மனச்
செருக்கினர் கைப் பொருட்கவரப்
புணர்ச்சிதனிற் பிணிப்படுவித் திடுமாதர்
புலத்தலையிற் செலுத்து மனப்
ப்ரமத்தையறப் பரிசித்தமுறப்
புரிந்தருளித் திருக்கழலைத் தருவாயே
பறித்ததலைத் திருட்டமணக்
குருக்கள்சடக் குருக்களிடைப்
பழுக்களுகக் கழுக்கள்புகத் திருநீறு
பரப்பியதத் திருப்பதிபுக்
கனற்புனலிற் கனத்தசொலைப்
பதித்தெழுதிப் புகட்டதிறற் கவிராசா
செறித்தசடைச் சசித்தரியத்
தகப்பன்மதித்த துகப்பனெனச்
சிறக்கவெழுத் தருட்கருணைப் பெருவாழ்வே
திகழ்ப்படுசெய்ப் பதிக்குளெனைத்
தடுத்தடிமைப் படுத்தஅருட்
டிருப்புகழைச் சுகிக்குமரப் பெருமாளே.

(இ-ள்) பறித்ததலை திருட்டு அமணர் குருக்கள்-மயிர் நீங்கிய தலையையுடைய வஞ்சகத் தொழிலையுடைய சமணர்களின் ஆசாரியர்களின், அசட்டு உருக்களிடை - குற்றமுடைய உடம்புகளினிடையில், பழுக்களுக கழுக்கள்புக-விலாவெலும்புகள் முறியும்படி கழுவிலேற, திருநீறு பரப்பிய-திருநீற்றின் உண்மையை விளக்கிய, தத்திருப்பதிபுக்கு-அத்தலமாகிய மதுரையிலே சென்று, கனல் புனலில-நெருப்பினும் நீரிலும், கனத்த சொலை பதித்து எழுதி

புகட்ட - பெருமைபொருந்திய திருப்பாசுரங்களை ஓலையில் நன்கெழுதிவிட்ட, ஞால கவிராசா - வன்மையை யுடைய மாவேந்தனே', செறிந்த சடை - நெருங்கிய சடையினில், சசிதரி அத்தகப்பன-பிறையைத் தரித்த பெருமை வாய்ந்த தந்தையாகிய சிவபெருமான், மதித்து உகப்பன் என-நன்கு மதித்து மகிழ்வான் என்று, சிறக்க எழுதது அருள்கருணை பெருமை வாழ்வே-சிறப்பாகப் பிரணவோபதேசஞ் செய்த கிருபையையுடைய பெரிய வாழ்வாயுள்ளவனே', திகழ்படு செய்பதிக்குள்-விளங்குகின்ற செய்பதியினில், எனை தடுத்து அடிமைப்படுத்த அருள் - அடியேனைத் தடுத்து அடிமை கொள்ளக் கருணை செய்த, திரு பழநிகிரி குமான பெருமாளே அழகிய பழநிமலையில் வாழும் குமரனாகிய பெருமானே', குறித்த மணி பணி துகிலை திருத்தி உடுத்து-ஆராய்ந்து நன்றென எடுத்த இரத்தினங்கள் இழைத்த சித்திரமுள்ள ஆடையை ஒழுங்குபடுத்தித் தரித்தும், இருள் குழலைக்குலைத்து முடித்து-இருளைப்போன்ற கூந்தலை அவிழ்த்து முடித்தும், இலை சுருளை பிளவோடு - வெற்றிலைச் சுருளைப் பாக்குப்பிளவையுடன், குதட்டிய துப்பு உட்தட்டை மடித்து-குழைத்த பவளம்போற் சிவந்த இதழை மடித்தும், அயில் பயில இட்டு அழைத்தும் - வேல்போல கூரிய கண்களின் நோக்க விகற்பங்களால் அழைத்தும், மருள் கொடுத்து உணர்வை கெடுத்து - காம மயக்கத்தைத் தந்து அறிவைக் கெடுத்தும், நகம குறியால் பொறித்த தனத்து அணைத்து-நகக்குறியால் அழுத்தப்பட்டுள்ள ஸ்தனங்களில் அணைத்

தும், மனம் செருக்கினார் கைப்பொருள் கவர-மனம் ஆசை யால் அதிகரிக்கப்பட்டவர்களுடைய கையிலுள்ள பொருளை அபகரித்தற்கு, புணர்ச்சிதனில் பிணிப்படுவித்திடும் மாதர்-போகத்தில் கட்டுப்படுத்திவிடும் பெண்களுடைய, புலம் தலையில் செலுத்தும் - அறிவைத் தலையில் செலுத்துகின்ற, மனம் பிரமத்தை அற - மனத்தின் மயக்கம் ஒழியவும், பிரசித்தம் உற-பெருமை அடையவும், புரிந்து அருளி-விரும்பி அருள்செய்து, திருகழலை தருவாய் - அழகிய திருவடிகளை அருள்செய்வாய் எ-று.

(வி-ரை) இலை-வெற்றிலை பிளவு-பாக்கு துப்பு-பவளம் அயில் - வேல், இங்குக் கண்ணைக் குறித்தது மனச்செருக்கு-உள்ளமிகுதி. பிணிப்படுவித்து பிணிப்படுவி-பகுதி. பிணி படு என்னு மிரண்டு - சொற்கள் சேர்ந்து பிணிப்படு என ஒரு சொல்போல நின்றது. பறித்த தலை-மயிர் நீங்கிய தலை 'திருட்டமண் குருக்கள்" என்றது கொல்லாவிரதம் பூண்டோமென்று தருக்கித் திரிந்து பலர்க்கும் தீமை இழைத்தலின். திருநீறு பரப்புதலாவது-சமண சமயத்தைச் சார்ந்திருந்த கூன்பாண்டியனுக்கு நேர்ந்த சுரப்பிணியைத் திருநீற்றுப் பதிகம் கட்டளையிட்டு அதன் மேன்மையை யாவரும் உணரும்படி செய்தமையாம். திருப்பதி-மதுரை. "கன்றப் புனலிற் கன்றத் சொலைப் பதிகத்தெழுதிப் புகட்ட திறற்கவி ராஜா" என்பது **திருஞானசம்பந்த சுவாமிகள்** மதுரைமாநகரில் சமணரோடு செய்த அனல்வாதம் புனல்வாதம் என்னும் இரண்டையும் குறித்ததாம்.

கனத்த சொல் - பொருட்பேறுடைய திருப்பாசுரம். புகட்ட-புக்விட்ட சசி-சந்திரன். எழுத்து-பிரணவம். சப்தப் பிரபஞ்ச முழுவதும் பிரணவத்தினகண் பிறந்து விரிதலின் மிகச்சிறப்புடைய எழுத்தென்பார் அடைகொடாது எழுத்தென்றே ளாது கூறினார் (71)

## திருவாவினன்குடி

72 தனதான தந்தனத-தனதானா.

அபசார நிந்தைபட் டுழலாதே
அறியாத வஞ்சரைக் குறியாதே
உபதேச மந்திரப் பொருளாலே
உனைநானி னைந்தருட் பெறுவேனோ
இபமாமு கன்றனக் கிளையோனே
இமவான்ம டந்தையுத் தமிபாலா
செபமாலை தந்தசற் குருநாதா
திருவாவி னன்குடிப் பெருமாளே.

(இ-ள்) இபமாமுகன் தனக்கு இளையோனே-யானையினது பெருமை பொருந்திய முகத்தையுடைய விநாயகப் பெருமானுக்கு இளையவரே!, இமவான் மடந்தை உத்தமி பாலா-பர்வதராஜனுடைய புதல்வியாகிய மேன்மைக்குணம் பொருந்திய உமாதேவியாருக்குத் திருக்குமாரரே!, ஜபமாலை தந்த சற்குருநாதா-உருத்திராக்கமாலையைத் திருநாம மந்திரத்தை ஜபிக்கும் பொருட்டு அடியார்க்கு அளித்தருளிய உண்மையான குருநாதரே!, திருவாவினன்குடிப் பெருமாளே - திருவாவினன் குடி என்னும் திருப்பதியி லெழுந்

தருளியிருக்கும் பெருமாளே', அபசார நிந்தைபட்டு உழலாதே - தீயொழுக்க முடையனென்னும் இகழ்ச்சியாகிய மொழிக்கு ஆட்பட்டு அலைந்து திரியாமலும், அறியாத வஞ்சரைக் குறியாது - அறிவில்லாத கபடிகளைக் கருதாமலும், உபதேச மந்திரப் பொருளாலே - தேவரீர் அடியேனுக்குபதேசித்த மந்திரத்தைக் கொண்டு, உனை நான் நினைந்து அருட்பெறுவேனோ - தேவரீரை அடியேன் தியானஞ்செய்து திருவருளைப் பெறுவேனோ எ-று.

(வி-ரை) உழலாதே, குறியாதே என்பவற்றிலுள்ள ஏகாரங்கள் அசைநிலைப் பொருளில் வந்தன. உபதேச மந்திரம்-சடாக்ஷர மந்திரம். பெறுவேனோ என்பதிலுள்ள ஓகாரம் வினாப்பொருளது இடம்-யானை. திருவாவினன்குடி-திரு + ஆ + இனன் + குடி திரு - இலக்குமி, ஆ-பசு; இனன்-சூரியன், இலக்குமியும் பசுவும் சூரியனும் பூசை செய்த ஸ்தலம். (72)

## திருப்பிரமபுரம்

73 தனதனதனதன தநததானன
தனதனதனதன தந்ததானன
தனதனதனதன தந்ததானன-தநததான.

கனைகடலவயிறுகு ழம்பிவாயவிட
வடதமணியகிரி கம்பமாயநட
கணபணவிபரித கந்தகாளப யங்கராஜன

கயிறெனஅமரா னந்தகோடியு
முறைமுறையமுதுக டைந்தநாளொரு
கதியறவுலகைவி ழுங்குமேக ஒழுங்குபோல

விளைமதகரிகளு மெண்டிசாமுக
கிரிகளுமுருகிட அண்டகோளகை
வெடிபட எவரையும விளுசிமேலிடு நஞசுபோல

விடுகுழையளவும ளந்துகாமுக
ருயிாபலிகவாவுறு பஞசபாதக
விழிவலைமகளிரொ டனபுகூாவதொ ழிநதிடாதோ

முனைபெறவளைய அணைநதமோகர
நிசிசராகடகமு றிந்துதூளெழ
முகிலெனவுருவமி ருண்டதாருகன அஞசமீனம்

முழுகியதிமிரச ரஙகசாகர
முறையிடஇ மையவா தஙகளூாபுக
முதுகிரியுருவமு னிநதசேவக செமபொனமேரு

அனையகனவித சணடகோபுர
அருணையிலுறையும ருநதுணமுலை
அபிநவவனிதைத ருஙகுமாரநெ ருங்குமாலகொண்

டடவியில்வடிவுக ரநதுபோயொரு
குறமகள்பிறகுதி ரிநதகாமுக
அரியரபிரமபு ரநதராதியா தமபிரானே.

(இ-ள்) முனைபெறவளைய அணைநத-போாககளததைச சுற்றிச்சேர்ந்த, மோகரம நிசிசரர் - ஆரவாரததையுடைய அரக்கருடைய, கடகம் முறிந்து தூள் எழ - சேனைகள் தோறகப் பூமியில தூளி எழும்பவும், முகில் என உருவம் இருண்ட தாருகன் அஞ்ச-மேகம்போல வடிவம் கறுத்த-

தாருகாசுரன் பயப்படவும், மீனம் முழுகிய திமிரம் தரங்கம் சாகரம் முறையிட-மீன வடிவான அசுரன் முழுகியுள்ள இருண்ட அலைகளையுடைய கடல் முறையிடவும், இமையவர் தங்கள் ஊர் புக - தேவர்கள் தங்கள் இடங்களுக்குச் செல்லவும், முதுகிரி உருவ முனிந்த சேவக-பழைய கிரவுஞ்சமலை தூளபடும்படி கோபித்த தொழிலை யுடையவனே!, செம்பொன் மேரு அனையன-சிவந்த பொன்மயமான மேருமலையை ஒத்தனவாகிய, கனவித சண்டகோபுரம-பெருமையையுடைய பலவகைப்பட்ட பெரிய கோபுரங்களையுடைய, அருணையில் உறையும் மருந்து - திருவண்ணாமலையில் தங்கும் தேவாமிர்தம் போன்றவராகிய, உண்ணமுலை அபிநவம வனிதை தரும் குமார-உண்ணாமுலை என்னும் பெயரையுடைய அழகிய அம்மையார் பெற்ற புதல்வனே!, நெருங்குமால் கொண்டு-மிகுந்த ஆசைகொண்டு, அடவியில் வடிவு கரந்து போய-காட்டில் உருவத்தை மறைத்துச் சென்று, ஒரு குறமகள் பிறகு திரிந்த காமுக-ஒப்பற்ற வள்ளிநாயகிக்குப் பின்னாக திரிந்த காமுகனே!, அரி அரன் பிரமன் புரந்தரன் ஆதியர் தம்பிரானே-திருமால், சிவபெருமான், பிரமன், இந்திரன் முதலான தேவர்களுக்குத் தலைவனே!, கனைகடல் வயிறு குழம்பி வாய்விட-ஒலிக்கின்ற கடலின் வயிறு சேருகி வாயவிடவும், வடதமனிய கிரி கம்பம் ஆய்-வடக்கேயுள்ள பொன்மலையாகிய மேருமலை அசையவும், நட கண பண விபரித கந்த சாள புயங்க ராஜன்-நடனத்தையுடைய வட்டமான படத்தையுடைய

வேறுபாட்டையுடைய மிக்க விஷத்தையுடைய வாசுகியை, கயிறு என அமரர் அனந்த கோடியும் - கயிறென்று தேவர்கள் எல்லாரும், முறை முறை அமுது கடைந்த நாள்-முறை முறையாகத் தேவாமிர்தத்தைக் கடைந்த தினத்தில், ஒரு கதி அற உலகை விழுங்கும் மேகம் ஒழுங்குபோல-ஒரு கதி ஒழிய உலகத்தை அழிக்கும் மேகத்தின் ஒழுங்கைப்போல, விழை மதம் கரிகளும் - கொலைத்தொழிலையும் மதத்தையுமுடைய யானைகளும், எண் திசாமுகம் கிரிகளும் உருகிட-எட்டுத் திக்கிலுமுள்ள மலைகளும் உருகவும், அண்டம் கோளகை வெடி பட-ஆகாயம் பிளக்கவும், எவரையும் விஞ்சி - எல்லாருக்கும் மேற்பட்டு, மேல் இடு நஞ்சுபோல-மேலே வருகின்ற விஷத்தைப்போல, இடு குழை அளவும் அளந்து - தரிக்கப்பட்டுள்ள குண்டலம் வரையில் நீண்டு சென்று, காமுகர் உயிர் பலி கவர்வுறு - காமுகர்களுடைய உயிரைப் பலியாகக் கொள்ளும், பஞ்சபாதக விழி வலை மகளிரொடு - பஞ்ச மகா பாதகங்களில் செலுத்தும் கண் வலையையுடைய பெண்களிடத்தில் அன்பு கூர்ந்து ஒழிந்திடாதோ-ஆசை மிகக் கொள்வது ஒழியாதோ? எ-று

(வி-ரை) ஏனை கடல்-ஒலிக்கின்ற கடல், வினைத்தொகை. வடதமனியகிரி-வடக்கிலேயுள்ள மேருமலை. புயங்கராஜன்-வாசுகி. படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலையும் இயற்றும் மூவர்க்கும் இந்திரன்முதலிய தேவர்கட்கும் தலைவனாதலின், 'அரியரபிரம புரந்தராதியர் தம்பிரானே' என்றருளிச் செய்தார் (73)

## பொது

74 தைய தன தானத் - தன தான.

துள்ளுமத வேள்கைக் கணையாலே
தொல்லைநெடு நீலக் கடலாலே
மெள்ளவரு சோலைக் குயிலாலே
மெய்யுருகு மானைத் தழுவாயே
தெள்ளுதமிழ் பாடத் தெளிவோனே
செய்யகும ரேசத் திறலோனே
வள்ளல்தொழு ஞானக் கழலோனே
வள்ளிமண வாளப் பெருமாளே.

(இ-ள்) தெள்ளுதமிழ் - தெளிந்த தமிழ்ப்பாடல்களை, பாட தெளிவோனே-அடியார்கள்பாட அவற்றின் உண்மைப்பொருளைத் தெளிபவனே!, செய்ய குமரேசன திறலோனே - சிவந்த திருமேனியையுடைய குமரேசனாகிய வண்மையுடையவனே!, வள்ளல் தொழுஞானம் கழலோனே-வரையாது கொடுக்கும் சிவபெருமானும் வணங்கும் திருவடியை உடையவனே!, வள்ளி மணவாளன் பெருமாளே - வள்ளிக்கு நாயகனாகிய பெருமானே!, துள்ளும் மதவேள்-துள்ளுகின்ற மன்மதனுடைய, கை கணையால்-கையினின்று விடும் அம்பாலும், தொல்லை நெடும் நீலம் கடலால் - துன்பத்தைத்தரும் நீண்ட நீலநிறம் பொருந்திய கடலாலும், மெள்ளவரு சோலை குயிலால்-மெதுவாக வருகின்ற சோலையில் வாழும் குயிலாலும், மெய் உருகும் மானை தழுவாய்-உடம்பு உருகுகின்ற மான்போன்ற என் பெண்ணைத் தழுவுவாயாக. எ-று.

(வி-ரை) வள்ளல்-வரையாது கொடுப்போன். மெய்யுருகு மான - உடம்பு உருகுகின்ற மானபோன்ற விழியையுடைய என்மகள். இது செவிலித்தாய் தலைமகனை நோக்கிக் கூறியதாகப் பாடப்பட்டது. ஆன்மாவைத் தலைவியாகவும் கடவுளைத் தலைவனாகவும் அமைத்துச் செய்யுள் செய்தல் ஆன்றோர் மரபு. **திருக்கோவையார் திருவிருத்தம்** முதலிய நூல்கள் இம்முறையிலே அமைந்திருத்தல் காண்க. இத்தகைய பத்திமார்க்கம் **சன்மார்க்கம்** என்று கூறப்படும். இம்மார்க்கத்திலே நின்றவர் சைவ சமயாசாரியர் நால்வருள் **மாணிக்கவாசக சுவாமிகள்** அன்றியும் கடவுளைத் தலைவியாக்கிச் செய்யுள் இயற்றுதலும் உண்டு. அவ்வாறு வரும் ஆன்றோர் செய்யுட்களும் பல. இக்கருத்தே பற்றி வரும்,

'பேரின்பமான பிரமக்கிழத்தியோடு
ஓரின்பத் துள்ளாளென் றுந்தீபற
உலையாத மாயையென் றுந்தீபற'

என்னும் **திருவுந்தியார்** திருப்பாட்டை நோக்குக. தெள்ளு தமிழ் என்றார். சங்கத்தாரால் ஆராய்ந்து செப்பஞ் செய்யப்பட்டதாதலின். (74)

## நிம்பபுரம்

75 தந்ததன தான தந்ததன தான
தந்ததன தான-தனதான.

அஞ்சுவித பூத முங்கரண நாலு
மந்திபகல யாதும் அறியாத

அந்தநடு வாதி யொன்றுமில தான
அந்தமொரு வீடு பெறுமாறு
மஞ்சுதவழு சார லஞ்சயில வேடர்
மங்கைதனை நாடி வனமீது
வந்தசர ணார விந்தமது பாட
வண்டமிழ் விநோதம் அருள்வாயே
குஞ்சரக லாப வஞ்சியபி ராமி
குங்குமப டீர வதிரேசக
கும்பதன மீது சென்றணியு மார்ப
குன்றுதடு மாற இகல்கோப
வெஞ்சமர சூர னெஞ்சுபக வீர
வென்றிவடி வேலை விடுவோனே
விம்பமதில சூழு நிம்பபுர வாண
விண்டலம கீப பெருமாளே.

(இ-ள்) குஞ்சர கலாப வஞ்சி - தேவயானையென்னும் கலாபம் போன்ற கூந்தலையுடைய அம்மையாரின், அபிராமம் குங்குமம் படீரம் அதிரேசம் - அழகிய குங்குமமும் சந்தனமும் திமிர்ந்த மேன்மையுடைய, கும்பம் தனம்மீது சென்று அணியும் மார்ப - குடத்தை ஒத்த ஸ்தனங்களைச் சென்று பொருந்தும் மார்பை உடையவனே!, குன்று தடுமாற இகல்கோப - கிரவுஞ்சமலை தடுமாற்றத்தை அடையும்படி பகைக்கின்ற கோபத்தை உடையவனே!, வெஞ்சமரம் சூரன் நெஞ்சு பக - கொடிய போரைச்செய்யும் சூரனுடைய மார்பு பிளக்கும்படி, வீரம் வென்றி வடிவேலை

விடுவோனே-வீரமும் வெற்றியும் பொருந்திய வடித்த வேற்படையைச் செலுத்துபவனே!, விமலம் மதில் சூழும்-சாயையுடைய மதில்களால் சூழப்பட்ட, நிமபபுரம் வாண - வேபபூரில் வாழ்பவனே!, விண்டல மகிபா பெருமாளே-தேவலோகத்துத் தலைவர்களுக்குப் பெருமானே!, அஞ்சுவித பூதமும் நாலுகரணமும்-ஐவகைப்பட்ட பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பூதங்களும் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கு கரணங்களும், அந்தி பகல் யாதும் அறியாத - அந்தி பகலெனும் பொழுதும் மற்றப் பொருளும் தெரியாத, அந்தம் நடுவு ஆதி ஒன்றும் இலதான-முடிவும் நடுவும் முதலும் என்னும் ஒன்றும் இல்லாததாகிய, அந்த ஒரு வீடு பெறுமாறு-அப்படிப்பட்ட சிறந்த ஒப்பற்ற வீடுபேற்றை அடையும்படி, மஞ்சு தவழ் சாரல்-மேகங்கள் தவழ்கின்ற சாரலையுடைய, அம் சயிலம் வேடர் மங்கைதனை - அழகிய மலைகளில் வசிக்கும் வேடர்களின் பெண்ணாகிய வள்ளிநாயகியினை, நாடி வனம் மீது வந்த-விரும்பிக் காட்டுக்கு வந்த, சரணாரவிந்தம் பாட - திருவடிக்கமலங்களைப் பாடுவதற்கு, வண் தமிழ் வித்தம் அருள்வாய்-வளப்பம் பொருந்திய புமிழ்ப்புலமை அருள் செய்வாயாக. என்று.

(வி-ரை) அஞ்சுவிதபூதம் - ஐந்துவகைப்பட்ட பூதங்கள் அவை, மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம். கரணம் நாலு-மனம், புத்தி, சித்தம், அகங்காரம். பூதங்கள் கரணங்கள் ஆகிய தத்துவங்கள் எல்லாம் கடந்து, முதல்

22

நடு முடிவு என்னும் ஒன்றும் இல்லாததாய்ச் சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாதலின் வீடுபேற்றை, 'அஞ்சுவிதபூத......வந்த வொருவீடு' என்றார். வீடு பேற்றை அடையக் கருதிய அவர் மிகவிழிந்த வேடர் பெண்ணினுக்கு இரங்கி அருள் புரிந்த அழகிய சேவடியைப் பாடுதல் வேண்டினார். அங்ஙனம் பாடுதற்கு இசைந்தது தமிழ் மொழியே என்பார், 'பாடவண்டமிழ் விநோதம் அருள்வாய்' என்றார். தடம்-உயர்ந்தவிடம்; 'கொங்கைத் தடம்' என்புழிப் பேராசிரியர் தடம் என்பதற்கு இங்ஙனம் பொருளுரைத்ததைக் காண்க. சரணாரவிந்தம் - வடமொழிச்சந்தி. (75)

76 தன்ன தனத்தத் தனந்தனந்தன
தன்ன தனத்தத் தனந்தனந்தன
தன்ன தனத்தத் தனந்தனந்தன-தனதான.

முகமுமி னுக்கிப் பெருங்க ருங்குழல்
முகிலைய விழ்த்துச் செருந்தி சண்பக
முடியவி ழைத்துத் ததும்பி வந்தடி முன்பினுக

முலையை யசைத்துத் திருந்த முன்றரி
கலையைநெ கிழ்த்துப் புனைந்து வஞ்சக
முறுவல் விளைத்துத் துணிந்து தந்தொரு முன்றிலூட

மகளிர்வ ரப்பிற் சிறந்த பந்தியின்
மதனனு நிற்கக் கொழுந்து வெண்பிறை
வடவையெ றிக்கத் திரண்டு பண்டனை வண்டுபாட

மலய நிலத்துப் பிறந்த தென்றலும்
நிலைகுலை யத்தொட் டுடம்பு புண்செய
மயலை யளிக்கக் குழைந்து சிந்தைம யங்கலாமோ

பகலவன மட்கப புகுந்து கநதா
ககனமு கட்டைப பிளந்து மந்தர
பருவரை யொக்கச சுழனறு பின்பு ... றந்துபோகப

பணமணி பட்சத துரஙக முனதனி
முடுகிந டததக் கிழிந்து விநதெழு
பரவைய ரறப பரபஞ்ச நின்றுப யநதுவாடக்

குகனென முககட் சயமபு வுமபரிய
மிகஅசு ராகருக் குரமபை வந்தரு
குறஅமா குததிய பொருஙகொ டுமபடை வென்றவேளே

குழைசயை யொப்பற றிருநத சங்கரி
கவுரியெ டுத்துப பரிநது கொஙகையில
குணவமு தாபககத தெளிந்து கொணடருள தம்பிரானே.

(இ-ள) பகலவன் மட்க புகுநது-சூரியனது ஒளி மழுங்கும்படி சென்று, கநதரம் ககனம் முகட்டைபிளநது-மேகங்கள் தவழும் ஆகாய உசசியைப பிளந்து, மந்தரம் பருவரை ஒக்க சுழன்று - மநதரமாகிய பெரிய மலைககு ஒபபாகச் சுழனறு, பின்பு பறந்து போக - பினனே பறந்து செல்ல, பணம அளி-பாம்பின் படததைக கவவிக்கொண்டிருக்கும், பட்சம் துரங்கம - அனபுள்ள மயிலை, தனி முடுகி நடததி-தனியாக விரைந்து செலுததி, கிழிநது விந்து எழு பரவை அரற்ற-உடல் அறுந்து நீரத்துளி எழுகின்ற கடல அலறவும், பிரபஞ்சம் நின்று பயந்து வாட-உலகம் அசைவற்றுப் பயந்து வாட்டமடையவும், முக்கண சயம்புவும் - மூன்று திருக்கண்களையுடைய சிவபெருமானும், குகன் என பிரியம்

மிக - குகனென்று சொல்லி அன்பு மிகவும், அசுரர்க்கு குரம்பை வந்து அருகு உற - அசுரர்களுக்கு முடிவுக்காலம் வந்துசமீபிக்கவும், அமர்குத்தி-போரைச்செய்து, பொரும்-கொடுமை படைவென்றமேலோனே-எதிரேவந்து சண்டைசெய்யும் கொடிய அசுரர் சேனைகளைவென்ற முருகனே!, குழை-குண்டலங்களை அணிந்த, சயை - வெற்றியுடையவளும், ஒப்பு அற்று இருந்த சங்கரி - தனக்கோர் ஒப்பில்லாமல் இருந்த சங்கரியும், கவுரி - கௌரியுமாகிய அம்மையார், எடுத்து பரிந்து கொங்கையில்-கையிலேந்தி மனம் விரும்பி ஸ்தனங்களில், குணம் அமுது உய்க்க-சிறந்த பாலை ஊட்ட, தெளிந்துகொண்டு அருள் தம்பிரானே-எல்லாப் பொருள்களையும் தெளிந்துகொண்ட பெரியவனே!, முகம் மினுக்கி-முகத்தை மினுக்கியும், பெரு கரு குழல் முகிலை அவிழ்த்து-பெரிய கரிய மேகம்போன்ற கூந்தலை அவிழ்த்து, செருந்தி சண்பகம் முடிய நிறைத்து-செருந்தியையும் சண்பகமலரையும் முழுவதும் சூடி, ததும்பி வந்து அடி முன் பின் ஆக-நிரம்பிவந்து அடிமுன்னும்பின்னுமாக, முலையை அசைத்து-ஸ்தனங்களை அசைத்து, திருந்த முன்தரி துகிலை நெகிழ்த்து - திருத்தமாக முன்னே உடுத்திருந்த ஆடையைத் தளர்த்தி, புனைந்து-மீண்டும் உடுத்து வஞ்சகம் முற்ற வலை விளைத்து-வஞ்சகமான சிரிப்பை உண்டாக்கி, துணிந்து தம் தெருமுன்றில் ஊடு - மனத்துணிவுகொண்டு தமது தெருக்களின் முற்றத்தில், மகளிர் வரம்பில் - பெண்கள் நின்றுகொண்டிருக்கும் இடத்தில், சிறந்த பந்தியில் மதன

னும் நிற்க - சிறந்த வரிசையில் மன்மதனும் நின்றுகொண்டிருக்கவும், கொளுந்து வெண்பிறை வடவை எரிக்க - எரிக்கின்ற வெளிய சந்திரன் வடவாமுகாக்கினியை வீசவும், திரண்டு பண்தனை வண்டு பாட-ஒருங்கு கூடி வண்டுகள் ரீங்காரம் செய்யவும், மலயம நிலத்து பிறந்த தென்றலும்- பொதிய மலையில் தோன்றிய தென்றற்காற்றும், நிலைகுலைய தொட்டு உடம்பு புண்செய - நிலைகுலையும்படி வீசி உடம்பைப் புண்படுத்தவும், மயலை அளிக்க-ஆசையைக் கொடுக்க, சிந்தை குழைந்து மயங்கல் ஆமோ - மனம் உருகி மயங்கல் கூடுமோ? எ-று.

(வி-ரை) மகளிர் என்பதில் இர் பலர்பால் விகுதி. கொளுந்துதல்-எரித்தல். மலயநிலம் - பொதியமலை; தென் கோடியில் இருத்தலின் தென்றலை ஆண்டுப் பிறந்ததாகக் கூறினார், அன்றியும் அது தேவருக்கும் முனிவருக்கும் பொதுவில்லாதல் பற்றிப் 'பொதியில்' எனப் பெயர்பெற்றுச் சிறத்தலானும், அருந்தமிழ்க் குரவுபூண்ட பெருந்தவ அகத்தியனார் உறைவிடமாதலானும் அப்பெருமைகள் நோக்கியும் இனிதாகிய தென்மலை மலயத் துதித்தமையாகக் கூறினார் என்னலுமாம். இங்ஙனமே புலவர் புராண முடையாரும்,

'சந்தனமும் செந்தமிழும் தாமுமர
மகளிர்குழற் சவரிக்காடும்
அந்தகனை வென்றசித்தர் ஆகமுந்தோய்
தருசிறுகால் அதனை யேவி

மைந்தருடற் பிணிமுழுதும் ஆற்றிவிட
கடற்பருகும் வடவைத் தீயை
எந்தமலே அவிப்பதுவோ' அந்தமலே
சொந்தமலே யெமக்கு மாதோ'

என்று கூறினார்.

சுயம்பு-தானே தோன்றிய மூர்த்தி.

குணவமுது என்றார் பரஞானத்தைப் பெற்றிருக்கும் தன்மையால். அம்மையார் அளித்த திருமுலைப்பாலால் எல்லா உண்மைகளும் தெளிவுறப்பெற்ற பெருமான் எனப்பார். 'குணவமுதுயக்கத் தெளிந்து கொண்டருள் தம்பிரானே' என்றார். (76)

## திருவருணை

77 தனதனத் தானனத் தனனதத்த தானனத்
தனதனத் தானனத்-தனதான.

கயல்விழித் தேனைச் செயலழித் தாயெனக்
கணவகெட் டோனெனப் — பெறுமாது

கருதுபுத் ராவெனப் புதல்வரப் பாவெனக்
கதறிடப் பாடையிற் — றலைமீதே

மயில்குலத் தாரழப் பழையநட் பாரழப்
பறைகள்கொட் டாவரச் — சமனாரும்

பரியகைப் பாசம்விட் டெறியுமப் போதெனைப்
பரிகரித் தாவியைத் — தரவேணும்

அயிலறச் சேவலைக் கினிதராத் தோகையுற்
றருணையிற் கோபுரத் — துறைவோனே

அமரரத் தாசிறுக குமரிமுத தாசிவத
தரியசொற பாவலாக கெளியோனே
புயலிளை பாறுபொற சயிலமொயச சாரலிற
புனமறப பாவையைப புணாவோனே
பொடிபடப பூதரத தொடுகடற சூரனைப
பொருமுழுச சேவகப பெருமாளே.

(இ-ள்) அயில அறச சேவல - வேலையும தருவடிவமாகிய சேவலையும, கைககு இனிதர-திருககரததில இனிதாககொணடு, தோகை உறறு அருணையில கோபுரதது உறைவோனே-மயிலமேல பொருநதித திருவருணைக கோபுரததில வாழ்பவனே!, அமரா அததா-தேவாகடகுத தலைவனே!, சிறு குமரி முததா - இளைய வளளிநாயகிககு முததுபபோன்றவனே!, சிவதது அரிய சொல பாவலாககு எளியோனே - மஙகளகரமான அருமையான சொலலையுடைய புலவாகட்கு எளிமையானவனே!, புயல இளைபபு ஆறு-மேகங்கள் இளைபபாறுகின்ற, பொன் சயிலம் மொய் சாரலில-அழகிய மலையின நெருஙகிய சாரலில, புனம மறம் பாவையைப புணாவோனே-கொலலைநிலத்தைக் காததுவந்த வேடர் பெண்ணாகிய வளளியைச சோபவனே!, பொடிபட பூதரத்தொடு-தூகளாகுமபடி மலையுடனும், கடல் சூரனை பொரு-கடலில ஒளிததிருநத சூரனுடன போா செய்கின்ற, முழுசேவகம் பெருமாளே - மிகக தொழிலையுடைய பெருமானே, கயல விழிதேன - கயல மீன் போன்ற கண்ணையுடைய பெண்ணே!, எனை செயல ஒழிததாய எனை-

என்னை நீ இழந்தாய என்று சொல்ல, கணவகெட்டேன் எனப் பெறும்-கணவனே நான கெட்டேன் எனறு சொல்லபபெறும், மாது-மனைவியும், கருது புதரா என-மேன்மையாக எண்ணுகினற புததிரனே என்றழைகக, புதலவர் அபபா என கதறிட-மைந்தா அபபா எனறு சொலலிக் கதற, பாடையின் தலைமீது - பாடையாகிய இடததின் மேல, பயில குலத்தாா அழ-பழகிய சுறறததாா புலம்பவும், பழைய நடபாா அழ-பழமையான நண்பாகள அழவும், பறைகள கொட்டி வர - பறைகளை அடித்துககொண்டு வரவும, சமனும் பரிய கைபாசம் விட்டு எறியும்போது-யமனும் பருதத கையிலுள்ள கயிறறைவிட்டு வீசும் அவ்வேளையில எனை பரிகரிதது ஆவியை தரவேணும்-எனது மரணதுனபததை ஒழித்து உயிரைக கொடுககவேண்டும். எ-று.

(வி-ரை) கணவன், கண + அவன எனபபிரிதது மனைவிக்குப பறறுககோடாக உளளவன என அவயவபபொருள் காண்க. புதரன-புத எனனும் நரகினின்றும் விடுவிபபவன். குலத்தாா-சுறறததாா. 'பழைய நட்பாா' என்றாா பழமை பாராட்டுதல அவாகண்ணே இருததலின். 'ஆவியைத் தரவேணும்' என்றது என உயிா என் வயப்பட்டு ஆன்ம போதத்தைப் பெறறு நான் வாழவேண்டும் என்பதாம். இதனையே தாயுமானவரும,

'அன்னைபோல அருண்மிகுதது மன்னு ஞானவரதனே
என்னையே எனககளித்த நினனை யானும் மறவெனே'

என்றருளிச் செய்தார். ஆன்மதரிசனம் செய்த பின்னரே சிவதரிசனம் சித்திக்கும் என்பது கருத்து இக்கருத்தே பற்றிய பட்டினத்தடிகளாரும்,

'மாயப் படலங் கீறித்தூய
ஞான நாட்டம் பெற்றனன் பெற்றும்
என்னையுங் கண்டேன் உன்னையுங் கண்டேன்
நின்னிலை அனைத்துங் கண்டேன் என்னை
நினைக்கா மாந்தர்
தன்னைக் காணாத தன்மை யோரே.'

என்றருளியது காண்க. பூதரம்-மலை. (77)

78 தானதன தானத்த தானதன தானதத
தானதன தானதத-தனதான.

ஆலுமயில போலுற்ற தோகையர்க ளேமெத்த
ஆரவட மேலிட்ட முலைமீதே
ஆனதுகி லேயிட்டு வீதிதனி லேநிற்க
ஆமவரை யேசற்று முறையாதே
வேலுமழகார் கொற்ற நீலமயில் மேலுற்று
வீறுமுன தாரபத்ம முகமாறும்
மேவியிரு பாகத்தும் வாழுமனை மார்தக்க
மேதகவு நானிக்க முரையேனோ
நாலுமுக வேதற்கு மாலிலைபில மாலுக்கு
நாடவரி யார்பெற்ற ஒருபாலா
நாணமுடை யாள்வெற்றி வேடர்குல மீதொக்க
நாடுகுயில் பாரமிக்க எழில்மாது

வேலைவிழி வேட்சியார்க்கணவ னேமத்த
  வேழமுக வோனுக்கும் இளையோனே
வீரமுட னேயுற்ற சூரனணி மார்பத்து
  வேலைமிக வேவிட்ட பெருமாளே.

(இ-ள்) நாலுமுக வேதாக்கும்-நான்கு முகங்களையுடைய பிரமனுக்கும், ஆல் இலையில் மாலுக்கும் - ஆலிலையின்மேல் பள்ளிகொள்ளும் திருமாலுக்கும், நாட அரியார் பெற்ற ஒரு பாலா - தேடி யறிவதற்கு அரிய சிவபெருமான் பெற்ற ஒப்பற்ற பாலகனே!, நாணம் உடையாள்-நாணம் உடையவளும், வெற்றி வேடர் குலம்மீது-வெற்றியையுடைய வேடர் குலத்தில், ஒக்க நாடு குயில் - எல்லாரும் ஒன்றாகத் தேடும் குயில் போன்றவளும், பார் மிக்க எழில் மாது - பூமியில் மிகுந்த அழகையுடைய பெண்ணும், வேலைவிழி வேட்சியார் கணவனே - கடல்போலும் பரந்த கண்ணையுடைய வள்ளிநாயகிக்குக் கணவனே!, மத்தம் வேழம் முகவோனுக்கு இளையோனே - மதத்தையுடைய யானைமுகத்தையுடைய விநாயகப் பெருமானுக்கு இளையவனே!, வீரமுடனே உற்ற சூரன் அணிமார்பத்து - வீரத்தோடு எதிர்த்து வந்த சூரனுடைய அழகிய மார்பில், வேலைமிக விட்ட பெருமாளே-வேலை மிக நன்றாகச் செலுத்திய பெருமானே!, ஆலும் மயில்போல்-அகவுகின்ற மயிலைப்போல, உற்ற தோகையர்கள் - சாயல்கொண்ட பெண்கள், மெத்த ஆரவடம்மேல் இட்ட முலைமீது - மிகவும் முத்துமாலை தரித்த ஸ்தனங்களின்மேல், ஆன துகில் இட்டு வீதிதனில்

நிற்க-மென்மையான ஆடையைப் புனைந்து தெருவில் நிற்க, ஆம் அவரை சற்றும் உரையாது-வீணான அவர்களைச் சிறிதும் புகழாமல், வேலும்-வேற்படையையும், அழகு ஆர் கொற்றம் நீலமயில்மேல்-அழகு நிறைந்த வெற்றியையுடைய நீலநிறம் பொருந்திய மயிலின்மேல், உற்று வீற்றும் உனது ஆர் பதமம் முகம் ஆறும்-ஆரோகணித்துச் சிறக்கும் தேவரீருடைய பெருமை நிறைந்த தாமரை மலரை ஒத்த ஆறு முகங்களையும், மேவி இருபாகத்தும் வாழும்-பொருந்தி இரண்டு பக்கங்களிலும் வாழ்கின்ற, அனைமார் தக்க மேத்கவும்-தாயமார்களின் தகுந்த மேம்பாட்டையும், நான் நிதம் உரையேனோ-நான் நாடோறும் புகழமாட்டேனோ எ-று.

(வி-ரை) ஆரவடம் - முத்துமாலை. ஆலிலையில் மால்-ஆலிலையின்மீது பள்ளிகொள்ளும் திருமால் நாடவரியார்-சிவபெருமான். மாபதம்-யாபினிடத்து, இன சாரியை தொகுக்கும் வழித் தொகுத்தல். கொற்றம்-வெற்றி. பதம முகம்-செந்தாமரை மலரை யொத்த திருமுகம் அனைமார்-வள்ளி தேவயானையார் மால் வெற்பு-உயர்ந்த மலை. (78)

## திருவண்ணாமலை

79 தானதன தானத தானதன தானத்
தானதன தானத-தநததானா.

ஆலவிழி நீளத தாலதர பானத
தாலளக பாரக் கொண்டலாலே

ஆரநகை யாலவிற போதநுதலி னாலவித்
தாரநடை யாலந கொங்கையாலே

'சிறுகா பெருகா முறைபிறழ்ந்து வாரா
வுறுகாலத் தூறுகா வாமிடத்தே—யாருஞ்
சிறுகாலைப் பட்ட பொறியு மதனை
விறுகாலத் தென்னை பரிவு.'

போதமலர்-ஞானமாகிய மலர். பாடுவோர்களுக்குத் தோழன் பரமன் என்பார் 'பாடுமலர் தோழத் தம்பிரானே' என்றார்.

## பொது

80 தானந் தனதன தானந் தனதன
தானந் தனதன-தனதான.

தீயும் பவனமும் நீருந் தரணியும்
வானுஞ் செறிதரு பசுபாசத்
தேகந் தனைநிலை யேயென் றிருவினை
தீருந் திறலினை அறியாதே
ஓயும் படியறு நூறும் பதினுறாம்
நூறும் பதினிரு பதுநூறும்
ஓடுஞ் சிறுவுயிர் மீளும் படிநல
யோகம் புரிவது கிடையாதோ
வேயுங் கணியும் விளாவும் படுபுன
மேவுஞ் சிறுமிதன் மணவாளா
மீனம் படுகட லேழுங் கழலபட
வேதங் கதறிய ஒருநாலு
வாயுங் குலகிரி யாவுந் தளைபட
மாகந் தரமதில மறைசூரன்
மாயுந் துணையுறு தோளுந் துணிபட
வாள்கொண் டமர்செய்த பெருமாளே.

(இ-ள்) வேயும் கணியும் விளாவும் படுபுனம் - மூங்கி லும் வேங்கைமரமும் விளாமரமும் வளர்கின்ற புனத்தை, மேவும் சிறுமி தன் மணவாளா-விரும்புகின்ற வள்ளிநாயகி யாரின் கணவனே!, மீனம் படுகடல் ஏழும் - மீன்கள் வாழ் கின்ற ஏழு கடல்களிலும், தழல் பட - நெருப்புண்டாகவும், வேதம் கதறிய ஒரு நாலு வாயும்-வேதங்களை அருளிச் செய்த நான்கு வாய்களையுடைய பிரமனும், குலகிரியாலும்- சிறந்த கிரவுஞ்சகிரியின் பகுதியும், தளைபட-சிறைபடவும், மாகம் தர மதில் மறை சூரன் - ஆகாயத்தை அளாவியிருக் கும் மதிலிலே மறையும் சூரனுடைய, மார்பும் துணையுறும் தோளும் துணிபட - மார்பும் இரண்டு தோள்களும் வெட் டுப்படவும், வாள்கொண்டு அமர்செய்த பெருமாளே - வாளைக்கொண்டு போரைச்செய்த பெருமாளே!, தீயும் பவனமும் நீரும் தரணியும் - நெருப்பும் காற்றும் நீரும் நில மும், வானும் செறிதரு பசு பாசம் தேகமதனை-ஆகாயமும் என்னும் ஐம்பூதங்களின் சேர்க்கையாலாகிய ஆன்ம வினை யினால் எடுத்த உடம்பை, நிலை என்று இருவினை தீரும் திறல்வினை அறியாது-நிலையென்று நினைத்து இரண்டு வினை களும் ஒழிக்கும் வலிய நல்வினையை அறியாமல், ஓயும்படி அறுநூறும் பதினாறாழ நூறும் பதினிருபது நூறும் ஓடும் சிறுவுயிர் - இருபத்தோராயிரத்து அறுநூறு சுவாசங்களை நாளொன்றுக்கு உடைய சிற்றுயிர், மீளும்படி - இறப்பி னின்று மீட்சி யடையுமாறு; நல்யோகம் புரிவது - நல்ல யோகத்தைச் செய்வது, கிடையாதோ - அடியேனுக்குக் கிடைக்கமாட்டாதோ? எ-று.

(வி-ரை) பவனம் - காற்று. பஞ்சபூதக் கூட்டரவே தேகம் என்பார் 'தீயும் பவனமும் நீருந் தரணியும் வானுஞ் செறிதரு பசுபாசத் தேகம்' என்றார். நாளொன்றுக்கு இருபத்தோராயிரத்து அறுநூறு சுவாசங்கள் செல்லுகின்றன என்றும், அவற்றை அடக்கின் இறப்பொழியும் என்றும் அவ்வாறு அடக்குதற்கு உரிய வழி யோகம் புரிதலே யாகும் என்றும் யோகநூல்கள் முழங்கும். சிறு + உயிர் = சிற்றுயிர் எனப் புணருமேனும் சந்த வின்பம் நோக்கிச் 'சிறுவுயிர்' என்றாயிற்று. யோகம் - தியானம், கூட்டம், இதனை,

'பயில்புறக் கரண மனைத்தையும் விளங்கு
முட்கரணத் திட்டப் படுத்தி
மயலுறு மனனைப் புறக்கலனிடத்தி னொடுக்கி
மேலா யயங்கு சட்பாவம்
இயற்றுஞ் சட்டரங் கோச மோராறு
மியைந்திடாப் புறக்கலன் றனை
உயர்வுற வுயர்ந்த பரம்பொரு ளதனிற்
கூட்டுதல் யோகமென் றுரைப்பார்'

எனவரும் காசிகாண்டச் செய்யுளான் அறிக. (80)

## பொது

81 தன்ன தாத்தன தன்ன தாத்தன
தன்ன தாத்தன-தந்ததான.

பொதுவிலாத்தனிமுதல தாய்ப்பக
விரவு போயப்புகல இன்றுவேதப

பொருள தாயபபொருள முடிவ தாய்பபெரு
வெளிய தாயபபுதை — வின்றீறில்

கதிய தாயககரு தரிய தாய-பரு
கமுத மாயாபபுலன் — ஐநதுமாயக்

கரண மாயதெதனை மரண மாறறிய
கருணை வாாதைதயி — ருநதவாறென்

உததி கூப்பிட நிருத ராாபபெழ
உலகு போறறிட — வெஙகலாப

ஒருப ராகாம துரக மோடடிய
உரவ கோககிரி — நணபவானோர்

முதல்வ பாாபபதி புதலவ காாததிகை
முலைகள தேககிட — உணடவாழ்வே

முளரி பா கடல சயில மேறபயில
முதிய மூாததிகள — தமபிரானே.

(இ-ள) உததி கூபபிட நிருதா ஆர்பபு எழ-கடல் கதறவும அசுரருடைய ஆரவாரம உணடாகவும, உலகு போறறிட-உலகததாா வாழ்ததவும, வெம்கலாப ஒரு பராக கிரமம துரகம ஓடடிய உரவ-ஒபபறற வீரமுளள மயிலைச செலுததிய வலிமையுடையவனே!, கோகிரி நணப-சிறந்த மலைகளுககுத தலைவனே!, வானோா முதலவ-தேவாகளுககுக் காரணமானவனே!, பாாபபதி புதலவ-உமாதேவிககுக குமாரனே!, காாத்திகை முலைகள தேககிட உணடவாழவே-காாததிகையிலுடைய ஸதனஙகளைத தெவிட்டும்படி பருகிய வாழ்வானவனே!, முளரி பாற்கடல சயிலம்மேல பயில்-

தாமரைமலர் திருப்பாற்கடல் வெள்ளிமலை ஆகிய இவற்றின்மேல் வாழ்கின்ற, மூதிய மூர்த்திகள் தம்பிரானே-பழமையான மும்மூர்த்திகளுக்குத் தலைவனே', பொதுவதாய-எல்லாச் சமயத்தாருக்கும் பொதுவான பொருளாயும், தனிமுதலாய - ஒப்பற்ற காரணப்பொருளாயும், பகல் இரவுபோய்-பகல் இரவு ஒழிந்து, புகல்கின்ற வேதம் பொருளதாய-புகழப்படுகின்ற வேதங்களில் சொல்லப்படும் பொருளாயும், பொருள் முடிவதாய-எல்லாப் பொருள்களின் முடிவாயும், பெரு வெளியதாய - பெரிய வெளியாயும், மறைவு இன்றி ஈறு இல கதியதாய் - மறைவும் அழிவு மில்லாத நிலையையுடையதாயும், அரியதாய்-நினைப்பதற்கு அரியதாயும், பருகு அமுதமாய - உண்ணுகின்ற தேவாமிர்தமாயும், புலன் ஐந்தும் மாய கரணம் மாய்த்து-ஐம்புலன்களும் அழியவும் நான்கு கரணங்களையும் ஒழித்து, எனை மரணம் மாற்றிய-என்னை மரணத்தினின்றும் மாற்றிய, கருணை வார்த்தை இருந்த ஆறு என - அருள் மொழிகள் இருந்தபடி என்ன? எ-று.

(வி-ரை) மரணமாற்றிய கருணை வார்த்தை-இறப்பை ஒழிக்கத்தக்க உபதேசமொழி. அஃதாவது 'சும்மாவிரு சொல்லற' என்று அறுமுகப் பெருமான் இந்நூலாசிரியருக்கு அருளிச் செய்தது. அதனை இவர் தாம் பாடியருளிய **கந்தரநுபூதி** என்னும் நூலின்கண்,

'செம்மான் மகளைத் திருடுந் திருடன்
பெம்மான் முருகன் பிறவான் இறவான்

சும்மா இருசொல் லறவென் றலுமே
அம்மா பொருளே துமறிந் திலனே'

கூறியிருத்தல் காண்க.

உலகு-உயர்ந்தோர், ஆகுபெயர். மேககிரி - சிறந்த மலை. முளரி - பாற்கடல். சயிலமேற்பயில் முதிய மூர்த்திகள்-தாமரை மலர், திருப்பாற்கடல், கயிலாயகிரி இவைகளின்மேல் தங்கியிருக்கும் ஆதிமூர்த்திகளாகிய மூவர். (81)

## திருப்பரங்குன்றம்

82 தனத்தத்த தந்தனந் தனத்தத்த தந்தனந்
தனத்தத்த தந்தனந்-தன தான.

தடக்கைப் பங்கயங் கொடைக்குக் கொண்டலத் தண்
டமிழ்க்குத் தஞ்சமென் றுலகோரைத்

தவித்துச் சென்றிரந் துளத்திற் புண்படுந்
தளர்ச்சிப் பம்பரந் தலையூசற்

கடத்தைத் துன்பமண் சடத்தைத் துஞ்சிடுங்
கலத்தைப் பஞ்சஇந் த்ரியவாழ்வைக்

கணத்திற் சென்றிடந் திருத்தித் தண்டையங்
கழற்குத் தொண்டுகொண் டருள்வாயே

படைக்கப் பங்கயன் துடைக்கச் சங்கரன்
புரக்கக் கஞ்சைமன் பணியாகப்

பணித்துத் தம்பயந் தணித்துச் சந்ததம்
பரத்தைக் கொண்டிடுந் தனிவேலா

குடக்குத் தென்பரம் பொருப்பிற் றங்குமங்
குலத்திற் கங்கைதன் சிறியோனே

குறப்பொற் கொம்மைமுன் புனத்திற் செங்கரங்
  குவித்துக் கும்பிடும் பெருமாளே.

(இ-ள்) படைக்க பங்கயன் துடைக்க சங்கரன் புரக்க கஞ்சைமன் - படைப்பதற்குப் பிரமனையும் அழிப்பதற்குச் சிவபெருமானையும் காப்பதற்கு லக்ஷ்மீநாயகனாகிய விஷ்ணுவையும், பணியாக பணித்து - அவரவர் செய்யும் தொழிலாகச் செய்யும்படி நியமித்து, தம்பயம் தணித்து - அவ்வப்போது அவர்கட்குப் பலவகையால் உண்டாகும் அச்சங்களை ஒழித்து, சந்ததம் பரந்தை கொண்டிடும் தனிவேலா - எப்பொழுதும் எல்லாருக்கும் மேம்பட்ட தன்மையைப் பெற்று விளங்கும் ஒப்பற்ற வேற்படையை உடையவனே! குடக்குத் தென்பரம்பொருப்பில் தங்கும் - மதுரைக்கு மேற்றிசையிலுள்ள அழகிய திருப்பரங்குன்றத்தில் வாழும்; அம் குலத்தின் நங்கை தன் சிறியோனே - அழகிய குலத்தில் இருந்த நங்கை தேவியின் புதல்வனே! குறப்பெண் கொம்மை முன் புனத்தில் செங்கரம் குவித்துக் கும்பிடும் பெருமாளே - குறமகளாகிய பொன்கொடியை ஒத்த வள்ளியை முன்னொருகாலத்தில் தினைப்புனத்தில் சிவந்த கைகளைக் கூப்பி வணங்கும் பெருமானே', தடம் கை பங்கயம் - அகன்ற கைகள் தாமரைமலரை ஒக்குமென்று, கொடைக்குக் கொண்டல் - ஈகையில் மேகத்தை ஒப்பாவீர்களென்றும், தமிழுக்குத் தஞ்சம் என்று - தமிழுக்கு அடைக்கலப் பொருளாவீர்களென்றும் சொல்லி, உலகோரைத் துதித்துச் சென்று இரந்து உளத்தில் புண்படும் - உலகத்

தோரைப் பிரிந்துபோய் யாசித்து மனத்தில் துயரத்தை அடையும், தளர்ச்சி பம்பரமதனை - தளர்கின்ற பம்பரத்தை, ஊசல் கடத்தை-ஊசலாடும் கயிற்றை, துன்பம் மண் சட்டத்தை-துன்பத்தைத் தரும் மண்ணாலாகிய அழியும் பொருளை, துஞ்சிடும் கலத்தை-மரணமடையும் குடத்தை, பஞ்சம் இந்திரியம் வாழ்வை - ஐந்து புலன்களோடு கூடி வாழும் பொருளை, கணத்தில் சென்று இடம் திருத்தி-ஒரு க்ஷணப்பொழுதில் அடைந்து இடத்தைச் செம்மைப் படுத்தி, தண்டை அம் கழற்கு தொண்டு கொண்டு அருள் வாய - தண்டைகள் தரித்த அழகிய திருவடிகளுக்குத் தொண்டாகும்படி அருள்புரிவாய். எ-று.

(வி-ரை) துஷ்டத்தல் - அழித்தல். கஞ்சைமன் - திருமகள் கேள்வனாகிய திருமால். குடக்கு-மேற்கு. தமிழ் மெல்லோசை இன்பம் வாய்ந்து, செவிக்கு இனிமை பயத்தலின் 'தண்டமிழ்' என்றார். கடம்-கயிறு. பஞ்ச இந்திரியவாழ்வு என்றார் ஐந்து பொறிகளின் வழிச்சென்று போகநுகர்ந்து வாழும் வாழ்க்கையாதலின். ஐம்புலனிற் பற்றறாலன்றி அவன் கழற்குத் தொண்டுபூணுதல் அருமை யென்றும், அங்ஙனம் பற்றறுப்பதற்கும் அறுத்த வழியும் வேறுபிற கடவுளர்பால் தொண்டுபூணாது அவனுக்கே அடிமையாதலும் அப்பெருமான் தன்னாலே ஆகற்பாற்றென்றும் உணர்த்துவார், 'பஞ்ச இந்திரிய வாழ்வைக் கணத்திற் சென்றிடந்திருத்தித் தண்டையங்கழற்குத் தொண்டு கொண் டருள்வாயே' என்றார். (82)

## திருவருணை

83 தனனதன தான தத்த தனனதன தான தத்த
தனனதன தான-தனதான

முழுகிவட வாமு கத்தி னெழுகனலி லேபி றக்கு
முழுமதிநி லாவி னுக்கும் வசையாலும்
மொழியுமட மாத ருக்கு மினியதனி வேயி சைக்கு
முதியமத ராஜ னுக்கும் அழியாதே
புழுகுதிகழ் நீப மத்தி னழகியகு ராநி ரைத்த
புதுமையினி லாறி ரட்டி புயமீதே
புணரும்புகை தாளிணைந்த துணரும்வகை நீல சித்ர
பொருமயி லேறி நித்தம் வரவேணும்
எழுமகர வாவி சுற்று பொழிலருணை மாநகர்க்கு
ளெழுதரிய கோபு ரத்தில் உறைவோனே
இடைதுவள வேடு வச்சி படமசைய வேகனத்த
இளமுலைவி டாத சித்ர மணிமார்பா
செழுமகுட நாக மொய்த்த ஒழுகுபுனல் வேணிவைத்த
சிவனைமுத லோது வித்த குருநாதா
திசைமுகன்மு ராரி மற்று மரியபல தேவருற்ற
சிறையடைய மீளவிட்ட பெருமாளே

(இ-ள்) எழும் மகரம் வாவி சுற்று பொழில் அருணைமாநகர்க்குள்-மேலே தோன்றுகின்ற சுறாமீன்கள் வாழும் பொய்கைகள் சூழ்ந்த சோலைகளையுடைய திருவருணையென்னும் சிறந்த பதியில், எழுது அரிய கோபுரத்தில் உறைவோனே - சித்திரிப்பதற்கு முடியாத அவ்வளவு அழகுவாய்ந்த கோபுரத்தில் தங்குபவனே', வேடுவச்சி-

வள்ளிநாயகியினது, இடைதுவள-இடை சோர்வையடைய வும், படம் அசைய-ஆடை அசையும்படியும், கனத்த இள முலை-பருத்த இளைய ஸதனங்கள், விடாத சித்திரம மணி மாரபா - நீங்காத சநதனகோலத்தையுடைய அழகிய மார்பையுடையவனே!, செழும மகுடம நாகம மொயத்த-செழுமையான படங்களையுடைய பாம்புகள நெருங்கியுள்ள, ஒழுகு புனல வேணி வைத்த சிவனை - ஒழுகுகின்ற கங்கை யைச சடையினகண் தரித்த சிவபெருமானுககு, முதல ஓதுவித்த குருநாதா - காரணமாகிய பிரணவத்தை உப தேசித்த குருநாதனே!, திசைமுகன முராரி மற்றும அரிய பல தேவா-நானமுகனும விஷ்ணும மற்றுமுள்ள அருமை யான தேவாகள் பலரும, உற்ற சிறை அடைய மீளவிட்ட பெருமாளே - தாங்கள அடைககப்பட்ட சிறையினின்று முழுவதும் மீளும்படிசெயத பெருமானே!, வடவாமுகத் தின் முழுகி-வடவாமுகாக்கினியில முழுகி, எழு கனலிலே பிறககும - எழுகின்ற நெருப்பிலே உதிக்கின்ற, முழுமதி நிலாவினுக்கும்-பூரண சநதிரனுடைய கிரணங்களுக்கும், வசையாலும்-ஆடவா மனத்தை வளைகின்ற செயலகளுக் கும, மொழியும் மடம மாதருக்கும்-இனிமையாகப பேசும் மடப்பம் பொருந்திய பெண்களுக்கும், இனிய தனிவேய் இசைக்கும் - இனிமையான ஒப்பற்ற புல்லாங்குழலின் இசைக்கும், மதராஜனுக்கும் - மனமதனுக்கும், அழியாது-மனம் அழியாமல, புழுகு திகழ் நீபம் அத்தில - புனுகு விளங்குகின்ற கடப்பமாலையைத் தரித்திருத்தலால், அழகிய

குராநிரைத்த - அழகாக விருக்கின்ற குராமலர்களை வரிசை யாகச் சூட்டிய, புதுமையினில் ஆறு இரட்டி புயமீதே- புதிது புதிதாகத் தோன்றும் பன்னிரண்டு திருத்தோள் களின் மேலும், புணரும் வகை தான் நினைத்து உணரும் வகை-சேரும் வகையை எண்ணி அவற்றை உள்ளவாறு அறியும்படி, நீலம் சித்ரம் - நீலநிறம் பொருந்திய அழகிய, பொருமயிலில்-சண்டைசெய்யும் மயிலின் மேல், ஏறி நித்தம் வரவேணும் - ஆரோகணித்துத் தினந்தோறும் அடியேன் முன் வரவேண்டும் என்று

(வி-ரை) மையலுற்றாகத்து அம்மையலை வளர்த்தற்குக் காரணமாய் இருத்தலின் முழுமதியை, 'முழுகி வடவா முகத்தின் எழு கனலிலே பிறக்கும் முழுமதி' என்றார். 'இனிய தனிவேய இசை' என்றார், குழலிசை எல்லாவற்றி னும் இனிதாதலின், திருவள்ளுவரும் இது குறித்தே, 'குழ லினிது யாழினிது' எனக் குழலை முன் வைத்தது காண்க. எழுதரிய கோபுரம் - எழுதுவதற்கு அருமையான சித்திர வேலைகள் பொருந்திய கோபுரம் - கனத்த-பருத்த. முராரி- திருமால், முராசுரனைக் கொன்றவர். ஓதுவித்த - ஓதும்படி செய்த (83)

## உத்தரமேரூர்

84 தானதத் தனதான தானதத் தனதான
தானதத் தனதான-தனதான.

நீள்புயற் குழல்மாதர் பேரினிற் கருடையாகி
நேசமுற் றடியேனு நெறிகேடாய்

சேமியிற் பொருள்தேடி யோடியெய்த் துளம்வாடி
நீதியிற் சிவவாழ்வை நினையாதே
பாழினுக் கிரையாய நாமம்வைத் தொருகோடி
பாடலுற் றிடவேசெய் திடுமோச
பாவியப் படிவாழ்வ னேயாகக் குளதான
பாவைசற் றருளோடு பணியாயோ
ஆழியிற் றுயில்வோனு மாமலர்ப் பிரமாவு
மாகமப் பொருளோரு மனைவோரும்
ஆனைமத் தகத்தோனும் ஞானமுற் றியல்வோரு
மாயிரத் திருநூறு மறையோரும்
வாழுமுத் தரமேரூர் மேவியற் புதமாக
வாருசித் திரத்தோகை மயிலேறி
மாறெனப் பொருசூர னீறெழப் பொருதவேல
மானமக் குளனான பெருமாளே.

(இ-ள்) ஆழியில் துயில்வோனும்-திருப்பாற்கடலின் கண் அறிதுயில் செய்யுந் திருமாலும், மாமலர் பிரமாவும்-சிறந்த தாமரை மலரில் வாழும் பிரமதேவனும், ஆகமம் பொருளோரும்-சிவாகமங்களைக் கற்றுத் தேர்ந்தவர்களும், அனைவோரும் - மற்றுமுள்ளாரெல்லாரும், ஆனை மத்தகத்தோனும் - ஆனை முகத்தையுடைய விநாயகக்கடவுளும், ஞானம் உற்று இயல்வோரும்-ஞான பாகத்தைத் தெரிந்து கொண்டு அதன்படி ஒழுகுவோர்களும், ஆயிரத்து இருநூறு மறையோரும்-ஆயிரத்திருநூறு பிராமணர்களும், வாழும் உத்தரமேரூர் - வாழ்கின்ற உத்தரமேரூர், மேவி அற்புதம் ஆக - பொருந்திய ஆச்சரியமாக, வாரு சித்திரம்

தோகை மயில ஏறி - அழகிய சித்திரமான உருவத்தை யுடைய மயிலினமேல ஆரோகணித்து, மாறு என பொரு சூரன - பகை என்று வந்து சண்டைசெயயும சூரனுனவன, நீரு எழ பொரும்வேல-நீறுகப போமபடி சண்டைசெய்யும் வேறபடை யுடையானே!, மானமகடகு உளனஆன பெரு மாளே-மான் பெறற மகளாகிய வளளிநாயகிக்கு மணவாள னுக உள்ள பெருமானே', நீளபுயல குழலமாதா பேரினில கிருபை ஆகி-நீணட மேகமபோன்ற கூநதலையுடைய பெண் களினமேல கருணைகொணடு, நேசம் உறறு அடியேனும் நெறிகேடாய-ஆசைபொருநதி அடியேன நலவழிவிடடுத தீநெறியிற சோநது, நேமியில பொருள தேடி-பூமியில பொருளைததேடி, ஓடி எயததது உளம வாடி - ஓடி யிளைதது மனம் வருநதி, நீதியில சிவவாழவை நினையாது - நனனெறி யிலுல மஙகளகரமான சைவவாழககையை எண்ணுமல, பாழினுககு இரை ஆய நாமம வைதது-பாழ்போன்ற வயிற றுககு ஆகாரமாககூடிய ஒரு பெயரை இடடு, ஒரு கோடி பாடல உறறிட செயதிடும மோசம் பாவி - ஒரு கோடி பாடல தோனறும்படி பாடும் வஞ்சகச செயலையுடைய பாவியான நான், எபபடி வாழ்வன்-எவவாறு பரிசுததமான ஞான வாழவை அடைவேன? நேயாகடகு உளது ஆன பாரவை - அன்பாகளுககு உரிமையாக உள்ள அருட் பாரவை, சறறு அருளோடு பணியாய - அடியேனுக்கும கிடைக்கும்படி சிறிது கருணையுடனே பணித்தருள் வாள். எ-று.

(வி-ரை) நேமி-பூமி. எய்த்தல-இளைத்தல. சிவவாழ்வு-மங்கலமான வாழ்வு; சிவம் - மங்கலம் பாழ் - பாழ் நிலம். நேயர் கட்டுள்தான பார்வை - அன்பர்களுக்கும் அருட் பார்வை ஆகமப் பொருளோர்-ஆகமத்துக்கும் பொருளா யுள்ளவராகிய சிவபெருமான், 'அருளினு லாகமத்தே யறிய லாஞ் சிவனை' என்றார் பெரியாரும். 'ஆனை மதத்தகவோன்' என்றார் முகமொன்றே ஆனைவடிவிற்றதலின் மறையோர்-வேதியர். உத்தரமேரூர் - ஒரு ஸ்தலம், செங்கற்பட்டு ஜில்லாவிலுள்ளது. மானமகள்-வள்ளி நாயகியார் (84)

## திருவேரகம்

85 தனதனன தான தத்த தனதனன தான தத்த
தனதனன தான தத்த-தனதான

சரணகம லால யத்தை அரைநிமிஷ நேர மட்டில்
தவமுறைதி யானம் வைக்க அறியாத

சடகசட மூட மட்டி பவவினையி லேசனித்த
தமியன்மிடி யால்ம யக்கம் உறுவேனோ

கருணைபுரி யாதி ருப்ப தெனகுறையிவ் வேளை செப்பு
கயிலைமலை நாதர் பெற்ற குமரோனே

கடகபுய மீதி ரத்ந மணியணிபொன் மாலை செச்சை
கமழுமண மார்க டப்பம் அணிவோனே

தருணமிதை யாமி குத்த கனமதுறு நீள்சவுக்ய
சகலசெல்வ யோக மிக்க பெருவாழ்வு

தகைமைசிவ ஞான முத்தி பரகதியு நீகொ டுத்து
தவிபுரிய வேணும் நெய்த்த வடிவேலா

அருணதள பாத பத்ம மதுநிதமு மேது திக்க
அரியதமிழ் தான ளித்த மயிலவீரா
அதிசயம நேக முற்ற பழநிமலை மீது தித்த
அழகதிரு வேர கத்தின் முருகோனே.

(இ-ள்) கயிலைமலை நாதா-கயிலைமலைக்குத் தலைவராகிய சிவபெருமான், பெற்ற குமரோனே-பயந்தருளிய குமரனே, கடகபுயம் மீது - கங்கணம் அணிந்த தோளின்மேல், இரத்ந மணி அணி - இரத்நம் பதித்த ஆபரணத்தையும், பொன் மாலை செச்சை-பொன் மாலையையும் வெட்சிப் பூவையும்; கமழும் மணம் ஆர் கடப்பம்-வீசுகின்ற மணம் பொருந்திய கடப்பமாலையையும், அணிவோனே-தரித்துக் கொண்டிருப்பவனே, நெய்த்த வடிவேலா - நெய் பூசிய கூர்மையான வேலையுடையவரே, அருணதாம பத்ம பதமம் அது-மிகவும் சிவந்த இதழ்களையுடைய தாமரை மலரை ஒத்த திருவடியை, நிதமுமே துதிக்க-நாடோறும் வாழ்த்த, அரிய தமிழ்தான் அளித்த - அருமையான தமிழ்க் கல்வியைத் தந்தருளிய, மயில வீரா - மயில் வாகனத்தையுடைய வீரனே, அதிசயம் அநேகம் பல அற்புதங்கள், உற்ற பழநி மலைமீது - பொருந்திய பழநிமலையின்மேல், உதித்த அழக- உதித்த அழகனே, திருவேரகத்தின் முருகோனே- திருவேரகம் என்னும் திவ்விய ஸ்தலத்தில் எழுந்தருளி யிருக்கும் முருகப்பெருமானே, சரண கமல ஆலயத்தை- பாதாரவிந்தமாகிய கோயிலை, அரை நிமிஷம் நேரம்மட்டில-அரைநிமிஷநேரம் வரையில், தவம் முறை தியானம்-

தவத்தின் முறையாகிய தியானம், வைக்க அறியாத-வைப்ப தற்குத் தெரிந்துகொள்ளாத, சட சகட மூடமட்டி - வஞ்ச கத்தையும் குற்றத்தையு முடைய மயக்கம் நிறைந்த மடைய னும், பவம் வினையிலே-பிறவிக்கு ஏதுவாகிய வினையினாலே, சனித்த-பிறந்த, தமியனை-தனியானவனுமாகிய அடியேனை, மிடியால் தரித்திரத்தால், மயக்கம் உறுவேனோ-மயக்கத்தை அடைவேனோ, கருணைபுரியாது இருப்பது-அடியேனுக்கு அருள் செய்யாமல் இருப்பதற்கு எப்பட்ட. என்குறை-என்ன குறைசெய்தேனோ? இவ்வேளை செப்பு-இப்பொழுது சொல்லி அருளுவீராக, ஐயா-ஐயனே!, கருணை இது-இதுவே தக்கசமயம், மிகுத்த கனம் அது உறு - மிக்க பெருமை வாய்ந்த, நீள் சவுக்கியம்-அதிக சௌக்கியத்தை யும், சகல செல்வம் யோகம்-எல்லாச் செல்வங்களும் கூடிய, மிக்க பெருவாழ்வு - மிகுந்த பெரிய வாழ்வையும், தகைமை சிவஞானம் - பெருமை பொருந்திய சிவஞானத்தையும், முத்தி பரகதியும் - மோக்ஷமாகிய மேலான நிலையையும், நீ கொடுத்து - தேவரீர் எனக்குத் தந்து, உதவி புரிய வேணும்-உதவி செய்யவேண்டும் என்று.

(வி-ரை) கமலாலயம்-தாமரை மாளிகை. மிடியால் மயக்கம் உறுவேனோ என்றது, மிடி-அறிவு முதலியவற்றை அழிப்பதாகலின்,

‘நெருப்பினுள் துஞ்சலு மாகும் நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது’ என்றார்

**வள்ளுவரும்** செய்தத - மினுமினுப்புள்ள. அருணம்- சிவப்பு, தளம் - இதழ். அதிசயம் - அதிசயப்படத்தக்க பொருள்கள். (85)

**கதிர்காமம்**

86 தனதத்தா தனதத்தா தனத்தா தனத்தா
தனத்தா தனத்தா-தனதான.

சரதத்தே யுதித்தா யுரத்தே குதித்தே
சமர்த்தா யெதிர்த்தே வருகூர்சச
சரிப்போ னமட்டே விடுதா யடுத்தாய
தகாதத்தா யுடற்றான் இருகூறாச்
சிரத்தோ டுரத்தோ டறுத்தே குவித்தாய்
செகுத்தாய் பலத்தா விருதாகச்
சிறைசேர் வலபொற்றாய வலக்கார முற்றாய
திருத்தா மரைத்தாள் அருள்வாயே
புரத்தா வரத்தா சரசே கரத்தார்
பொரத்தா னெதிர்த்தே வருபோது
பொறுத்தா பரித்தா சிரித்தா எரித்தா
பொரித்தார் நுதற்பார் வையிலேபின்
கரித்தோ லுரித்தா விரித்தா தரித்தார்
கருத்தா மருத்தா மதனாரைக்
கரிக்கோ லமிட்டார் கணுக்கா னமுத்தே
கதிர்க்காம முற்றார் பெருமாளே.

(இ-ள்) புரத்தார்-திரிபுராதிகள், வரத்தார் - தாங்கள் பெற்ற சிறந்த வரங்களின் வல்லபத்தால், சரம் சேகரத்தார்- அம்புகளைச் சேர்த்துக்கொண்டவராய், பொர எதிர்த்து

வருபோது-சண்டை செய்ய எதிர்த்த காலத்தில், பொறுத்தார் புரித்தார்-பொறுத்துக்கொண்டும் தாங்கிக்கொண்டும் இருந்து, சிரித்தார் எரித்தார்-சிரித்து அம்முப்புரங்களையும் எரித்து, பொரித்தார் - பொரியாகும்படி செய்தவரும், நுதல் பார்வையில்-நெற்றிக்கண்ணின் விழிப்பினால், பின் கருத்து ஆர் மருத்து ஊர் மதனை கரிகோலம் இட்டார்-பின்னொரு காலத்தில் உலகத்தாருடைய கருத்தில் பொருந்திய தென்றற்காற்றுத் தேராக ஊரும் மன்மதனை அழித்தவரும், கரித்தோல் விரித்தார் தரித்தார் - யானையினது தோலை உரித்து விரித்து ஆடையாகத் தரித்துக்கொண்டவருமாகிய சிவபெருமானுடைய, கண்ணுக்கு ஆனமுத்தே-கண்களுக்கு விருப்பந்தரும் முத்தைப் போன்றவனே!, கதிர்க்காமம் உற்று ஆர் - கதிர்க்காமத்தில் பொருந்தி வாழும், முருகோனே-முருகப்பெருமானே!, சரத்தே உதித்தாய் - சரவணப்பொய்கையில் தோன்றினவனே!, உரத்து குதித்து சமர்த்தாய் எதிர்த்து வரு சூரை-திடத்துடன் குதித்துக்கொண்டு சாமர்த்தியமாய் எதிர்த்துவந்த சூரனை, சரிப்போனமட்டு விடுத்தாய் அடுத்தாய் - அவர்கள் வழியிலே சென்றவரையில் விட்டுப் பின்னவர்களைப் போர்க்களத்தில் சேர்ந்தாய், தகர்த்தாய்-அவர்களை அழித்தவனே!, உடல்தான் இரு கூறு ஆக-உடம்பு இரண்டு பிளவாகும்படி, சிரத்தோடு உரத்தோடு அறுத்து குவித்தாய் - தலைகளோடும் மார்போடும் அறுத்துச்சேர்த்தவனே!,செகுத்தாய்-அவர்களை அழித்தவனே!, பலத்தார் விருது ஆக சிறை

சேவல் பொறுய-பலத்தையுடைய அசுரர்களைக் கொன்ற தற்கு அடையாளமாகச் சிறகுகளையுடைய சேவலைக் கொடியாகப் பெற்றவனே', வலக்காரம் உற்றாய்-மிக்க வெற்றியைக் கொண்டவனே', திருதாமரை தாள அருள்வாய்-அழகிய செந்தாமரை யொத்த திருவடிகளை அடியேன் பெறும்படி கருணை செய்வாயாக என்று

(வி-ரை) சூர்-சூரன. செகுத்தல-அழித்தல வலக்காரம் வெற்றி. மறைத்தான-வேதங்களால போற்றப்படும திருவடி. வரத்தார் - வரப்பிரசாதம் பெற்றவர். நுதற பார்வை - நெற்றிக்கண். மருத்து-காற்று மருத்தூர் மதன-தென்றலைத் தேராகவுடைய மன்மதன கணுக்கான-கணுக்கான, விகாரம கதிர்காமம-இலங்கைத் தீவிலுள்ள ஒரு சுப்பிரமணிய ஸ்தலம (86)

## திருப்புலியூர்

87 தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன
தததத தததன தததத தததன
தததத தத்தன தததத தததன தனதான.

மருவு கடலமுகி லனைய குழலமதி
வதன நுதலசிலை பிறைய தெனும்விழி
மச்சப் பொறகணை முகக்குப்பொறகும்
மொப்பக் கதத்ரி யொத்திட்டசெவி
குமுத மலரித ழமுத மொழிநிரை
தரள மெனுநகை மிடறு கமுகென

வைத்துப பொறபுய பசைசத தட்டையொ
டொபபிட் டுககம லகைகப பொறறுகிர்

வஙகய விரலொடு கிளிகள் முகநக
மெனவு மிகலிய குவடு மிணையென

வட்டத் துததிமு கிழ்பபச சக்கரம்
வைததுப பொறகுட மொததிட் டுததிகழ்
முலைமேவும்

வடமு நிரைநிரை தரள பவளமொ
டசைய பழமர இலைவ யிறுபயி

ரறபத திககிணை பொறபுத தொபபுளும்
அப்புக குட்சுழி யொத்துப பொறகொடி

மதன னுருதுடி யிடையு மினலென
அரிய கடிதட மமிரத கழைரச

மட்டுப பொரகம லததிற சககிரி
துததிப பைககொரு மிததுப படடிடை

மருவு துடையிணை கதலி பாடுகொள
கணையு முழவென கமட மெழுதிய

வடடப புததக மொத்துப பொறசர
ணத்திற பிறபுய மெதநுத் ததமைநகள்
மயில்போலத

தெருவில முலைவிலை யுரைசெய தவரவா
மயிலகொ டணைவர மருள்செய தொழிலகொடு

தெட்டிப பறபல சொக்கிட டுபபொருள்
பறறிக கட்டில ணைககொப பிபபுணா

திலத மழிபட விழிகள் சுழலிட
மலாக ளணைகுழ லிடைகொள துகிலபட

தித்தித துப்பிதழ் வைததுக் கைக்கொடு
கட்டிக குத்துமு லைக்குட் கைபபட
திரையி லமுதென கழையில ரசமென
பலவில சுளையென வுருக வுயாமயல
சிக்குப பட்டுடல கெட்டுச சிதசமும்
வெடகித தாக்கமு முறறக கொககென
நரைமேவிச
செவியொ டொளிாவிழி மறைய மலசல
மொழுக பலவுரை குளற தடிகொடு
தெத்திப பிதகமு முறறித் த செய
லறறுச சிசசியெ னததுக கபபட
சிலாகள முதுவுடல் இனவு பொழுதினி
து நி முடை நமனு முயிாகொளச
செபபற் றுபபிண மொபபித் துபபெய
ரிட்டுப பொ பறை கொட்டச செபபிடு
சென்ன மிதுவென அழுது முகமிசை
அறைய அணைபவ ரெடென சுடலையில
சி றிக குககிரை யிட்டிட் டிபபடி
நிததத் துககமெ டுதிட் டுசசட
முழலவேனோ
குறவி னுருவென அருள்செய் துறையினில்
குதிரை கொளவரு நிறைத வசிதலை
கொறறப பொரபதம் வைத்திட் டபுத
மெறிப பொற்பொரு ளிட்டுக் கைககொளு
முதலவ ரிளகலை மதிய மடைசடை
அருண வுமைமழு மருவு திருபுயர்

கொட்டத் துப்புரா கெட்டுப பொட்டெழ
விட்டத் திககணை நககாக கரபுத

குமர னெனவிரு தொலியு முரசொடு
வளையு மெழுகட லதிர முழவொடு

கொட்டத துட்டரை வெட்டித தடகட
லொபபத் திககுட டுத்துத தத்திட
அமராமேவிக

குருகு கொடிசிலை குடைகள மிடைபட
மலைகள் பொடிபட வுடுக ளுதிரிட

கொத்திச் சக்கிரி பறபட பொற்பரி
எட்டுத திககுமெ டுதிட் டுக்குயல்

குமர குருபர குமர குருபர
குமர குருபர எனவொ தமரர்கள

கொட்பப புட்பமி றைத்துப பொற்சர
ணத்திற கைசசிரம் வைத்துக கும்பிட

குலவு நரிசிறை கழுகு கொடிபல
கருட னடமிட குருதி பருகிட

கொற்றப் பத்திர மிட்டுப பொறகக
னத்தைச சித்தமி ரடசித் துக்கொளு
மயில்வீரா

சிரமொ டிரணிய னுடலகி ழியவொரு
பொழுதி லுகிரொடு அரியெ னடமிடு

சிற்பத் திண்பதம் வைத்துச சக்கர
வர்த்திக் குச்சிறை யிட்டுச சங்கிரன்

அரிய விழிகெட இருபத முழுமை
கடைய நெடியவர் திருவு மழகியர்

தெற்குத் திக்கில ரக்கர்க் குச்சின
முற்றுப் பொற்சரா தற்குப் புத்திரன்
செயமுழு மணவலி சிலைகை கொடுகர
மிருப துடைகிரி சிரமொர் பதும்விழ
திக்கெட் டைக்கக னத்தர்க் குக்கொடு
பச்சைப் பொற்புய லுக்குச் சித்திர
மருமகோனே
திலத மதிமுக அழகி மரகத
வடிவி பரிபுர நடனி மலர்ப்பதம்
சித்தர்க் குக்குறி வைத்திட் டுத்தன
முத்துப் பொற்கிரி யொத்துச் சித்திர
சிவங்கொள் திருசா சுவதி வெகுவித
சொருபி முதனிய கிரிவி யியல்கொடு
செட்டிக் குச்சுக முற்றத் தத்துவ
சித்திற் சிற்பதம் வைத்துக் கற்புறு
திரையி லமுதென மொழிசெய் கவுரியி
னரிய மகனென புகழ்பு லிநகரில்
செப்புப் பொற்றனை முற்றப் பொற்குற
தத்தைக் குப்புள கித்திட் டொப்பிய
பெருமாளே

(இ-ள்) குருவின் உரு **என** - குருவின் வடிவம் என்று சொல்லுமாறு, அருள் செய் - அருள் புரிந்த, துறையினில் - திருப்பெருந்துறையில், குதிரை கொளவரும் - குதிரைகளை வாங்கவந்த, நிறைதவசி - நிறைந்த தவத்தையுடைய மாணிக்கவாசக சுவாமிகளினது, தலை - தலையின்மேல், கொற்றம் பொற் பதம் வைத்திட்டு - வெற்றிபொருந்திய பொன்

போன்ற திருவடிகளைச் சூட்டி, அற்புதம் எற்றி-அற்புத மான செயல்களைச் செய்து, பொற் பொருளிட்டு-பொன்னு லாகிய பொருளைத் திருப்பணியிலே செலவிட்டு, கைக் கொளும் - கைக்கொண்டருளிய, முதல்வர் - முதற்பொரு ளும், இளமை கலை மதியம் - இளமைபொருந்திய கலைகளை யுடைய சந்திரனை, அடை சடை - அடையும் சடையை உடையவரும், அருணை உழை மழு மருவு திருபுயர் - சிவந்த மானும் மழுப்படையும் பொருந்தியுள்ள அழகிய கைகளை யுடையவரும், கொட்டத் துப்புரர் செருக்கையுடைய திரி புராதிகள், கெட்டு பொட்டு எழவிட்ட - அழிந்து பொடி யாகும்படி விட்ட, தீக்கணை-நெருப்பையொத்த அம்பை யுடைய, நக்கர்க்கு - சிவபெருமானுக்கு, அற்புத குமரன் என-ஆச்சரியமான புதல்வன் என்று சொல்லும், விருது ஒலியும் முரசொடு-வெற்றி முழக்கும் முரசவாசியத் துடன், அலையும் எழுகடல் முழவொடு அதிர-சங்கும் மத் தளமும் எழு கடல்களின் ஒலியைப்போல முழங்க, கொட் டத் துட்டரை வெட்டி-செருக்குள்ள கொடிய அசுரர்களை வெட்டி, தடகடல் ஒப்ப-அகன்ற கடலை ஒக்கும்படி, திக்கு மடுத்துத் தத்திட-எட்டுத் திக்குகளிலும் சோர்ந்து தடுமாறும் படி, அமர்மேவி - போரைச்செய்து, குருகு கொடி-சேவற் கொடியும், சிலை குடைகள் மிடைபட-விலகும் குடைகளும் நெருங்கவும், மலைகள் பொடிபட - மலைகளெல்லாம் பொடி யாகவும், உடுகள் உதிரிட-நட்சத்திரங்கள் உதிரவும், கொத் திச் சக்கிரி பற்றி-கொத்திப் பாம்பைப் பற்றிக்கொள்ள,

பொன்பரி எட்டு திககும் எடுததிட்டு குரல் - அழகிய மயிலானது எட்டுத திககுகளிலும் எடுத்துக்கொண்டுகூவ, குமர குருபர குமரகுருபர குமரகுருபர என ஓது அமரர்கள்- குமரகுருபரா குமரகுருபரா குமரகுருபரா என்று வாழ்ததும் தேவர்கள், புட்பம இறைதது - மலர்களைத தூவி, பொன சரணத்தில - அழகிய திருவடிகளில், கை சிரம் வைத்து கும்பிட - கைகளைச சிரமேல வைததுககொண்டு கும்பிட, நரி சிறை கழுகு கொடி பல கருடன் நடம் இட- நரிகளும் சிறகுகளையுடைய கழுகுகளும் காக்கைகளும் பல வகைபட்ட பருநதுகளும் கூததாடவும், குருதி பருகிட- இரத்தத்தைக குடிககவும, கொறறம பத்திரம் இட்டு-வெற்றியையுடைய வேலைச செலுத்தி, பொன் ககனத்தை - அழகிய தேவலோகததை, சிததம் இரக்ஷிததுக் கொளளும்- ஆசைவைதது காததருளிய, மயிலவீரா - மயில்வீரனே!, சிரமொடு இரணியன உடல கிழிய-தலையுடன இரணியனது உடல கிழியும்படி, ஒரு பொழுதின் உகிர்கொடு-ஒரு நாளில் நகஙகளைக் கொண்டு, அரியென் நடம் இடு-சிங்கமெனத தோன்றி நடனஞ் செய்த, சிறப்பத் திண் பதம் வைத்து-அழகிய வலிமையுள்ள திருவடிகளை வைத்தும், சக்கரவாததிக்கு சிறை இட்டு - மஹாபலிச சககிரவாத்தியைச் சிறையில் இட்டும்,சுக்கிரன் அரிய விழிகெட-சுக்கிரனுடைய அருமையான கணகள் கெடவும, இருபதமும் உலகு அடைய-இரண்டு திருவடிகளும் ஈருலகங்களையும் அடையவும், நெடியவர் - திரிவிக்ரம வடிவத்தைக் கொண்டவரும்,

திருவும் அழகியா-திருமகளது அழகார் சிறந்தவரும், தெற்கு திக்கில-தென்திசையில, அரக்கர்கு சினம் உற்று-அரக்கன் மீது கோபமடைந்து, பொன் தசரதற்கு - அழகிய தசரத சக்கிரவாத்திக்கு, புத்திரன்-திருப்புதல்வனானவரும், செயமும மனவலி கை சிலை கொடு-வெற்றியையும மன வல்லமையையும் கரத்தில் வில்லையும கொண்டு, காம் இருபது உடை-இருபது கைகளையுடைய, கிரி சிரம் ஓர் பதும விழ மலையை ஒத்த பத்து தலைகளும் அறுபட்டுவிழ, திக்கு எட்டைக கனத்தாக்கு கொடு-எட்டுத திசைகளையும் தேவர்களுக்குக கொடுத்தருளியவருமாகிய, பச்சை பொன புயலுக்கு-பச்சை நிறமுள்ள அழகிய மேகவண்ணனாகிய திருமாலுக்கு, சித்திர மருகோனே!—அழகு பொருந்திய மருமகனே!, திலத மதிமுக அழகி - திலதமிட்ட சந்திரன் போன்ற முக அழகை யுடையவளும, மரகதவடிவி - மரகத ரத்நம் போன்ற திருவுருவத்தை யுடையவளும், பரிபுர நடனி-பரிபுரம என்னும ஆபரணத்தைத் தரித்துக்கொண்டு நடனஞ் செய்பவளும், மலர்பபதம் - தாமரை மலர்போன்ற திருவடிகளை யுடையவளும, சித்தர்க்கு குறிவைத்திட்டு-சிவபெருமானுக்குக குறியைவைத்து, முத்து-முத்துவடத்தை யணிந்த, தனம்-கொங்கைகள், பொன் கிரி ஒத்து - பொன் மலைகளுக்கு ஒப்பாகக்கொண்ட, சித்திரம் - அழகிய, சிவம் கொள்-மங்களகரமான, திரு சரசுவதி பெருவித சொரூபி முதுவிய கிழவி-திருமகள் முதலிய பலவகை வடிவத்தை யுடைய தேவதைகளுடைய, இயலகொடு - இயலைக்

கொண்டு, செட்டிக்குச்சுகம் உற்று - முருகனுக்கு நன்மை யைவைத்து, தத்துவசித்தில் - தத்துவஞானத்தில், சிற்பதம் வைத்து - ஞானபதத்தை வைத்து, கற்பு உற்ற - கற்பின் தன்மைபொருந்திய, திரையில் அமுது என-கடலில் பிறந்த அமுதம்போன்ற, மொழி செய - வார்த்தைகளைக் கூறும், கௌரியின்-உமாதேவியின், அரிய மகன் என-அருமைப் புதல்வன் என்று, புகழ்புலி நகரில் - புகழப்படுகின்ற திருப் புலியூரில், செப்பு பொன்தனம் உற்ற-கலசத்தையொத்த அழகிய முலைகளையுடைய, பொன் குறத்தத்தைக்கு-அழகிய குறப்பெண்ணாகிய கிளிக்கு, புளகித்திட்டு ஒப்பிய பெரு மாளே - மயிர்க்குச்செறிய மனம் ஒப்பிய பெருமானே', மருவு கடல் முகில் அனைய குழல் - பொருந்திய கடலிலே தோன்றும் மேகத்தைப்போன்ற கூந்தலையும், மதிவதனம்- சந்திரனைப்போன்ற முகத்தையும், நுதல் சிறு பிறை-வில்லை யும் பிறையையும் ஒத்த நெற்றியையும், விழி மச்சம் பொன் கணை-மீனையும் அழகிய அம்பையும் ஒத்த கண்களையும், மூக்கு பொருள்குமிழ் ஒப்ப-குமிழையொத்த நாசியையும், கத்தரி ஒத்திட்ட செவி-கத்தரியைப் போன்ற காதுகளையும், குமுதமலர் இதழ்-குமுத மலரைப் போன்ற இதழையும், அமுதமொழி - அமுதம்போன்ற வார்த்தையையும், நிரை தரளம் எனும் நகை-வரிசையாகிய முத்துக்கள் போன்ற பற்களையும், மிடறு கமுகு என - கமுகமரத்தைப் போன்ற கழுத்தையும், வைத்து - பெற்று, பொன்புயம் - பொன் போன்ற தோள்களை, பச்சை தட்டையொடு ஒப்பிட்டு-

பசளை மூங்கிலோடு ஒப்பிட்டுப் பார்த்து, கமலக்கை பொன் துகிர் அனைய - தாமரை மலர்போன்ற கைகளிலுள்ள அழகிய பவளத்தை நிகர்த்த, விரலொடு - விரலோடு, கிளிகள் முக நகம் எனவும் - கிளிகளின் முகத்தை யொத்துள்ளன நகம் எனவும், இகலிய குவடும் இணை என - கோபித்த குன்றும் இணையென்று கூற, வட்டத் துத்தி முகிழ்ப்ப - வட்டமான தேமல்கள் அரும்ப, சக்கரம் வைத்து - சக்கரவாகப் புள்ளை ஒத்து, பொன்குடம் ஒத்திட்டு - பொற்குடத்தையும் நிகர்த்து, திகழ் முலை மேவும் - விளங்குகின்ற கொங்கைகளின்மீது பொருந்திய, வடமும் நிரை நிரைதரள பவளமொடு அசைய - வரிசையாகிய முத்து ஆரம் பவள ஆரம் இவைகள் அசைபவும், பழு மர இலைவயிறு - பழுமரத்திலுள்ள இலையைப்போன்ற வயிறும், மயிர் அற்பத்துக்கிணை - சிற்றெறும்படை ஒத்த மயிரொழுங்கும், பொற்பு தொப்புளும் அப்புக்குள் சுழி ஒத்து - அழகிய நாபியும் நீர்க்குள் சுழியை ஒத்து, பொன் கொடி - பொன் கொடியையும், மதனன் உரு துடி மின்னல் எனும் இடையும் - உடுக்கையையும் மன்மதன் உருவத்தையும் மின்னலையும் போன்ற இடையும், அரிய கடி தடம் - சொல்வதற்கு அரிய நிதம்பமும், அமிர்தம் - அமுதத்தையும், கழை ரசம் - கரும்பு ரசத்தையும், மட்டு - தேனையும் ஒத்த சுவையமைந்து, பொன் கமலத்தில் - அழகிய தாமரைமலரைக் காட்டிலும், சக்கிரி துத்திக்கு ஒருமித்து - பாம்பினுடைய பொறியுள்ள படத்தை ஒத்து, பட்டு உடை - பட்டாடை, மருவு துடை இணை

கதலி-பொருந்திய வாழையை நிகர்த்த இரண்டு துடைகளை யும், பரடு கொளகணையும் முழவு என-பரடு என்று சொல் லப்படும் முழங்காலும் மத்தளம் என்று கூற, கமடம்-ஆமையையும், வட்ட புத்தகம ஒத்து - வட்டமாகிய புத்த கத்தை நிகாதது, பொன சரணத்தில-பொன்போன்ற கால் களின், பின்புறம் - பின்புறத்தில், எத்து - ஏமாற்றுகின்ற, தத்தைகள் - கிளிகளைப்போலவும், மயில்போல-மயில்களைப போலவும், தெருவில வீதியில, முலை விலை உரைசெய்து-கொங்கைகளின் விலையைச சொலலி, அவா அவர்-அவரவர் கள், மயலகொடு-மையலைககொண்டு, அணைவர அருள் செய் தொழிலகொடு - அணைந்து கருணை செய்கின்ற தொழிலைக கொண்டு, தெட்டி-ஏமாற்றி, ப பல சொககு இட்டு-பலபல விதமாகச் சொககுபபொடி போட்டு, பொருள்பறறி பொரு ளைப பறிததுக்கொண்டு, கட்டில அணைககு ஒப்பி-கட்டிலில் சயனத்துக்கு ஒத்துக்கொண்டு. புணர - சேர்கின்ற, திலதம் அழிபட - திலதம் அழியவும், விழிகள் சுழலிட - கண்கள் சுழலவும, மலர்கள் இணைகுழல இடைகொள் - மலர்கள் முடித்த கூந்தலை இடையில கொண்ட, துகில்பட-ஆடை நழுவவும், தித்தி துப்பு இதழ் வைத்து-மதுரமான பவளம் போன்ற இதழ்வைத்து, கைகொடு-கையைக்கொண்டு, கட்டி குத்து முலைக்குள் கைபட - அணைத்துக் குத்துகின்ற ஸ்தனங்களில் கைகள் பொருந்த, திரையில் அமுது என-கடலின் அமுதம் போலும், கழையில் இரசம் என - கரும் பின் இரசம்போலும், பலவின் சுளை என - பலாக்கனியின்

களையைப்போலவும், உருக - மனம் உருக, உயர் மயல் சிக்குப்பட்டு-சிறந்த மையலிலே அகப்பட்டு, உடல கெட்டு-உடம்பு கெட்டு, சித்தமும் வெட்கி - மனமும் வெட்கமடைந்து, துக்கமும் உற்று-விசனமும் உண்டாகி, கொக்கு என நரை மேவி-கொக்கின் நிறத்தைப்போன்ற நரைத்து, செவியொடு ஒளிவிழி மறைய-செவி கேளாமலும் ஒளியுள்ள கண்கள் தெரியாமலும், மலசலம் ஒழுக - மல மூத்திராதிகள் ஒழுகவும், பல உரை குழற - பலவிதமான வார்த்தைகளைக் குழறவும், தடிகொடு தத்தி - தடியைக் கையில் பிடித்துத் தத்தி நடந்து, பித்தமும் முற்றி-பித்தமும் முதிர்ந்து, தீசெயல் அற்று-பாவமான செயல்கள் நீங்கி, சிசி என துக்கப்பட-சிச்சி என்று வருத்தப்பட, சிலர்கள்-சிலபேர்கள், முது உடல இனவு பொழுதினில் - பழைய உடம்பைச் சூழ்கின்ற போது, உவா நிறம் உடை-கரிய நிறத்தையுடைய, நமனும் உயிர் கொள - யமனும் உயிரைப் பற்ற, செப்பு அற்று-வார்த்தை யொழிந்து, பிணம் ஒப்பித்து பெயர் இட்டு பிரேதம் என்னும் பெயரிட்டு, போன பறை கொட்ட - அழகிய பறையை அடிக்க, செப்பிடு சனனம் இது என அழுது நாம சொல்லும் பிறப்பின் லட்சணம் இதுவேயென்று புலம்பி, முகம்மிசை அறைய - முகத்தின் மீது அறைந்துகொண்டு, உணப்பவர் எடு என-வந்தவர்கள் எடுங்கள் என்று சொல்ல, சுடலையில் - மயானத்தில், சிற்றிக்கு இரை இட்டிட்டு-சிறிய தீக்கு இரையாக்கி, இப்படி-இவ்வாறு, நித்தம்-ஒவ்வொரு நாளும், துக்கம் எடுத்திட்டு-

துக்கம் கொண்டாடி, பட்ட உழலவேனோ - உடம்பால் துன்பமுறுவேனோ? என்-று.

(வி-ரை) மூக்கு முக்கு எனக் குறுகியது செய்யுள் விகாரம். கத்திரி செவிக்கு வடிவத்தால் உவமை ஆதலின் உருவுவமை. தட்டை - மூங்கில் கிளிமுகம் - நகத்துக்குச் சிவந்து வளைந்திருத்தலின் உவமையாகும். துத்தி - தேமல். பழு மரம்-ஆலமரம். மதனனுரு இடைக்கு உவமையாயது கண்ணால் காணமுடியாத நுண்மை உடைமையால் என்க. கடிதடம்-நிதம்ப பிரதேசம். கழை-மூங்கில். மட்டு-தேன். சக்கிரி - பாம்பு கமடம் - ஆமை, ஆமை முழங்காலுக்கு உவமை. திரையில் அமுது - திருப்பாற் கடலிலே கடைந்தெடுத்த தேவாமிர்தம். இரவு பொழுது-சூழ்கின்ற வேளை. உவரி நிறமுடை நமன் - கடலைப்போலக் கருநிறமுடைய இயமன்.

'குருவினுருவென அருள் செய்துறை'—சிவபெருமான் குருந்தமரத்தின் நிழலில் ஆசாரிய மூர்த்தியாய் எழுந்தருளி மாணிக்கவாசக சுவாமிகளுக்கு உபதேசஞ் செய்தருளிய திருப்பெருந்துறை. இது தஞ்சாவூர் ஜில்லாவில் அறந்தாங்கி புகைவண்டி நிலயத்துக்கு எட்டுக்கல் தூரத்திலுள்ளது.

'குதிரை கொளவரும் நிறை தபசி, அரிமர்த்தன பாண்டியன் கட்டளைப்படி பொற் களஞ்சியத்தினின்றும் பெருந்தொகையான பொருளைக் கொண்டுபோய்க் குதிரைகள் வாங்கச்சென்ற நிறைந்த தவத்தையுடைய மணிவாசகப்

பெருமான். அவர் கொணர்ந்த தொகையனைத்தையும் இறைவன் திருப்பணியில் செலவிடுமாறு செய்ததும், அதனால் விளைந்த செயல்களும் எல்லாம் அவனருள் விளையாட்டே என்பார், 'அற்புதம் எற்றி பொற்பொருளிட்டுக் கைக்கொளும் முதல்வா' என்றார் 'கொற்றப் பொற்பதம் வைத்திட்டு'—திருவடி மலரைச் சூட்டி. திக்கணை-தீக்கணை; குறுக்கல் விகாரம். வளை-சங்கம். குப்பிட-கும்பிட, வலித்தல் விகாரம். கொடி-காகம். பத்திரம்-வாள்.

**சுக்கிரன் விழிகெடுத்து** வாமனனாக வந்து மூன்றடி மண் இரப்பவன் திருமாலே என்றும் அவன் வஞ்சகத்தால் தன் வாழ்வு அழியும் என்று வற்புறுத்தியும் கேளானாய், மாபலி தன் உரைப்படியே மூன்றடி மண் தாரைவார்த்ததாகக் கொடுப்பச் செல்ல, அவன் ஆசாரியாராகிய சக்கிராசாரியார் அத்தாரை யொழுக்கை அடைத்து நிற்க, பலியும் கையால் அடைப்பை நீக்க முயலுகையில் சுக்கிரன் கண்ணிழந்தான் என்பதாம்.

**சிவபெருமான் முலைத்தழும்பு பொறுத்து** காஞ்சீபுரத்திலே உமையம்மையார் இறைவனை நோக்கிக் கம்பையாற்றிலே மணலைக் குவித்துச் சிவலிங்க வடிவமாக அமைத்துப் பூசனை புரியாநிற்ப, அவ்வம்மையாருடைய உண்மை யன்பைத் தேர்ந்து தெளிவிக்க ஏகம்பநாதர் கம்பாநதியிலே வெள்ளம் புரண்டு வரச்செய்ய, அவ்வெள்ளப் பெருக்கு சிவலிங்கப் பெருமானை அழிக்க வரலும் அம்மையார் அஞ்சி நடுநடுங்கி, அப்பனின் திருமேனியைக் கட்டி யணைத்துக்

கொண்டமையால் அவரது வளைத்தழும்பும் முலைத்தழும்பும் இறைவன் பெற்றான் என்பது இதனைப் பின்வரும் **பெரியபுராணச் செய்யுட்களாலும்** உணர்க.

'நாதரும்பெரு விருப்பொடு நயந்து நங்கை
யர்ச்சனை செய்யுமப் பொழுதிற்
காதல் மிக்கவோர் திருவிளையாட்டினாற்
கணங்குழைக் கருள்புரிந்திட வேண்டி
ஓதமார் கடலேழு மொன்றாகி யோங்கி
வானமு முட்டப் பரந்து
மீது செல்வது போல்வரக் கம்பை
வெள்ளமாந் திருவுள்ளமுஞ் செய்தார்'.

'அண்ணலா ரருள் வெள்ளத்தை நோக்கி
அங்கயற் கண்ணிதம் பெருமான்மேல்
விண்ணெலாங் கொள்வரும் பெருவெள்ளமீது
வந்துறுமென வெருக் கொண்டே
உண்ணிலாவிய பதைப்புறு காதலுடன்
றிருக்கையாற் றடுக்க நில்லாமை
தண்ணிலா மலர் வேணியினாரைத் தழுவிக்
கொண்டனள் தனையே யொப்பாள்.'

'மலைக்குலக் கொடிபரிவுறு பயத்தால் மாவின்
மேவிய தேவர் நாயகரை
முலைக்குவட் டொடுவளைக் கையால் நெருக்கி
முறுகு காதலால் இறுகிடத் தழுவச்

சிலைத்தனித் திருநுதல திருமுலைக்குஞ்
செந்தளிர்க் கரங்களுக்கு மெத்தெனவே
கொலைக்களிற் றுரிபுனைந்த தம்மேனி குழைந்து
காட்டினார் விழைந்த கொள்கையினார்'

இழிந்த குலத்திலே பிறந்த வள்ளிநாயகியாரையும் அவருடைய அன்பைநோக்கி ஆட்கொண்டான் என்பார், 'பொற்குன்றத்தைக் குப்புளகித்திட் டொப்பிய பெருமாளே' என்றார். (87)

## பொது

88 தத்தனா தான தத்தனா தான
தத்தனா தான-தனதான.

சுட்டபோ லாசை விட்டுலகா சார
துக்கமிலா ஞான சுகமேவிச்
சொற்கரா தீத நிர்க்குணமோ டாடு
சுத்தநிரா தார வெளிகாண
மொட்டலர்வா ரீச சக்கரசடா தார
முட்டவுமீ தேறி மதிமீதாய்
முப்பதுமா றாறு முப்பதும்வே றான
முத்திரையா மோனம் அடைவேனோ
எட்டவொணா வேத னத்தொடு கோகோவே
னப்பிரமா ஓட வரைசாய
எற்றியவே ழாழி வற்றிடமா றாய
எத்தனையோ கோடி அசுரேசர்

பட்டொருசூர் மாள விக்ரமவேல் ஏவு
  பத்திருதோள் வீர தினைகாவல
பத்தினிதோள் தோயு முத்தமமா றாது
  பத்தி செய்வா னோர் பெருமாளே.

(இ-ள்) எட்ட ஒணா-தாங்கமுடியாத, வேதனைத்தொடு-வருத்தத்தோடு, பிரமா - பிரமதேவன், கோகோ என ஓட-கோவென்று கதறியோடவும், வரை - அஷ்டகுல பர்வதங்கள், சாய-சாய்ந்து விழவும், எற்றிய ஏழ ஆழி-அலை மோதுகின்ற ஏழுசமுத்திரங்கள், வற்றிட-வற்றிப்போகவும், மாறு ஆய-தன்னோடு மாறுபட்ட, எத்தனையோ கோடி அசுரேசர்-எவ்வளவோ கோடிக்கணக்கான அசுரத் தலைவர்கள் பட்டு-இறந்து, ஒரு சூர் மாள - ஒப்பற்ற சூரபதுமன் இறக்கவும், விக்ரம வேல்-மிக்க வீரம்பொருந்திய வேற்படையை, ஏவு-விடுகின்ற, பத்து இருதோள் வீர-பன்னிரண்டு புயங்களை யுடைய வீரனே!, தினைகாவல - தினைப்புனத்தைக் காவல் செய்திருந்த, பத்தினிதோள் - வள்ளிநாயகியாரது தோள்களை, தோயும்-சேர்கின்ற, உத்தம-உத்தமனே!, மாறாது-எக்காலமும் மாறாமல், பத்திசெய-அன்பு செய்கின்ற, வானோர் பெருமாளே-தேவர்களுக்குப் பெருமானே!, சுட்டது போல்-சுட்ட பொருளைக் கைவிடுதல் போல, ஆசைவிட்டு-ஆசையை ஒழித்து, உலக ஆசாரம்- உலக வொழுக்கமும், துக்கம் இலா-துக்கமும் இல்லாத, ஞானசுகம் மேவி-ஞானத்தால வரும் இன்பத்தை யடைந்து, சொல் கரண அதீத-வாக்கு மனங்களுக்கு எட்டாத, நிர்க்குணம் ஊடாடும்-

நிர்க்குணம் பொருந்திய, சுத்த நிராதாரவெளி - சுத்தமான ஆதாரமற்ற வெளியாகிய துவாதசாந்தத்தை, காண - காண்பதற்கு, மொட்டு அலர் வாரிசம் - அரும்பு மலர்ந்த தாமரைகளையும், சக்கரசட் ஆதாரம் - சக்கரங்களையுமுடைய ஆறு ஆதாரங்களையும், முட்டவும் - பொருந்தி, மீது ஏறி - அதன் மேற் சென்று, மதிமீது ஆய - சந்திர மண்டலத்திற் பொருந்தி, முப்பத்தும் ஆறும் ஆறும் முப்பதும் - தொண்ணூற்றாறு தத்துவங்களுக்கும், வேறு ஆன - வேறுபட்ட, முத்திரையாம் மோனம் - சின் முத்திரையாகிய அத்துவித மௌனநிலையை, அடைவேனோ - பெறுவேனோ? எ-று.

(வி-ரை) ஆசாரம் - ஒழுக்கம். 'சுட்டதுபோலாசை விட்டு' என்றது ஒரு பொருள் சுட்டவுடன் அதை உடனே கை நழுவ விடுவதுபோல ஆசையை அது தோன்றுஞ் செப்பத பொழுதே விடவேண்டும் என்பதாம். 'சுட்டிப் பட்டது கைவிட்டது' என வழங்கும் பழமொழியையுங் காண்க. கரணாதீதம் - கரணங்கள் எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டது, வாக்கு மனத்துக் கெட்டாதது. சுத்த நிராதார வெளி - துவாதசாந்தம். சட் ஆதாரம் - ஆறாதாரம், அவையாவன மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை. 'வாரி சக்கர சட்டாதாரம்' என்றார் கமலங்களையும் சக்கரங்களையு முடையனவாதலின். முப்பதும் ஆறும் ஆறும் முப்பதும் - தொண்ணூற்றாறு தத்துவங்கள் முத்திரையாம் மோனம் - சின்முத்திரையாகிய அத்துவித மௌனநிலை. மௌனநிலை எல்லாத் தத்துவங்களுக்கும் கடந்த

நிலை என்பார் 'முப்பதும் ஆறும் முப்பதும் வேறான .. .. மோனம்' என்றார். (88)

## திருக்குறட்டி

89 தானதன தத்ததான தானதன தத்ததான
தானதன தத்ததான-தனதான.

நீரிழிவு குட்டமீளை வாதமொடு பித்தமூதை
நீள்குளிர்வெ துப்புவேறு முளநோய்கள்
நேருறுபு ழுக்களோடு நாலுமுக னெடுத்த தூலி
நீடியவி ரத்தமூளை தசைதோல்சீ
பாரியந வத்துவார நாறுமும லத்திலாறு
பாயபிணி யிக்குராமை நரிநாய்பேய்
பாறொடுக ழுக்கள் கூகை தாமிவைபு சிப்பதான
பாழுடலெ டுத்து வீணில் உழலாமே
நாரணிய றத்தினாரி ஆறுசம யத்திபூத
நாயகிபு ரத்துகாமி மகமாயி
நாடக நடத்திகோல நீலவரு ணத்திவேத
நாயகியு மைச்சிநீலி திரிசூலி
வாரணிமு லைச்சிஞான பூரணிக லைச்சிநாக
வாணுதல ளித்தவீர மயிலோனே
மாடமதில் முத்துமேடை கோபுர மணத்தசோலை
வாகுளகு றட்டிமேவு பெருமாளே.

(இ-ள்) நாரணி-துர்க்கையும், அறத்தின்நாரி-தருமத்தின் செல்வியும், ஆறு சமயத்தி-அறுவகைப்பட்ட சமயத்

தோக்கும் அவ்வவர் கொண்ட முதற்பொருளாய் நிற்ப வளும், பூதநாயகா இடத்துகாமி - சிவபெருமானிடத்து விருப்பமுள்ளவளும், மகம் ஆயி-யாகமுதல்வியும், நாடகம் நடத்தி-நடனஞ் செய்பவளும், கோல நீலவருணத்தி-அழகு பொருந்திய நீல நிறமுடையவளும், வேதநாயகி - வேதங் களுக்குத் தலைவியும், உமைசசி-பிரகாசமுள்ளவளும், நீலி-நீலியும், திரிசூலி - திரிசூலப் படையை உடையவளும், வார் அணி முலைசசி-கச்சை அணிந்த ஸ்தனங்களை உடையவளும், ஞானபூரணி - நிறைந்த ஞானமுடையவளும, கலைசசி-அறு பத்து நான்கு கலை ஞானங்களையும் உணர்ந்தவளும், நாக வாள் நுதல - இமயமலையரையன் திருமகளாகித் தோன்றிய ஒளிபொருந்திய நெற்றியை உடையவளுமாகிய உமாதேவி யார், அளித்த-பெற்றருளிய, வீர-வீரனே! மயிலோனே-மயிலவாகனத்தை உடையவனே!, மாடம் மதில்-மாடங்களை யும் மதில்களையும், முத்துமேடை - முத்துமேடைகளையும், கோபுரம் - நகரவாயில்களையும் உடைய, மணத்த சோலை-வாசனைபொருந்திய சோலைசூழ்ந்த, வாரு உள குறட்டி-அழகிய குறட்டி என்னும் தலத்தில், மேவும பெருமாளே, தங்கியிருக்கும் பெருமாளே!, நீரிழிவு-நீரிழிவும், குட்டம்-குஷ்டரோகமும், ஈளை - இருமலும், வாதமொடு பித்தம்-வாதரோகங்களோடு பித்தரோகங்களும, நீர் குளிர் வெதுப்பு - மிக்க குளிரையுடைய சுரமும், வேறும் உள நோய்கள்-இவற்றிற்கு வேறாக உள்ள மற்ற நோய்களும், சேர் உறு பொருந்திய புழுக்கள் கூடு - புழுக்கள் வசிக்கின்ற

கூண்டும், நானமுகன - பிரமதேவன், எடுதத வீடு-கட்டிய வீடும், நீடிய இரத்தம மூளை - மிகக இரதததமும் மூளையும, தசை தோல்சீ - தசையும தோலும சீயுமாகிய, பாரிய நவத்துவாரம் நாறும - பெரிய ஒன்பது வாயில்களும நாறுகின்ற, மும்மலத்தில - மும்மலஙகளாகிய, ஆறு பாய-ஆறு பெருக கெடுந்து, பிணி இயற்று-நோயை உண்டாககுகிற, பாவை-பதுமையும, நரி நாய பேய-நரியும் நாயும பேயும, பாறொடு கழுக்கள்-பருந்துகளோடு கழுகுகளும, கூகை தாம்-ஆந்தைகளும, இவை புசிபபது ஆன - இவைகளால புசிககப்படுவதான, பாழ் உடல எடுதது - பயனபடாத உடலைபபெற்று, வீணில உழலவேனோ-வீணாகத தேவரீரது திருவருளுக்குப் பாத்திரனாகாமல வருந்துவேனோ? எ-று

(வி-ரை) விலதுபபு-சுரா நவத்துவாரம-கண், காது, மூக்கு வாய், குதம், குயயம பாறு பருந்து.

அறததின நாரி-உமாதேவியார்; தருமததின செலவி; முப்பத்திரண்டு அறஙகளையும வளாப்பவள். ஆறுவகைச சமயததோாககும அவ்வவா பொருளாய விளஙகுவாள என பார் 'ஆறு சமயத்தி' என்றாா. பூதநாயகா-சிவபெருமான். கலைச்சி-அறுபத்து நானகு கலைஞானஙகளையும அறிந்தவள். நாகமலை குட்டி-ஒரு ஸ்தலம். 'புழுக்கள கூடு' 'நான்முகன எடுத்தவீடு' 'பிணியியற்றுபாவை' முதலியன உடம்பின் இழிந்த இயலபை நன்கெடுத்து விளக்கு முகத்தான் அதனை மாட்டுச செய்யும் பற்றைச செயவன இங்குப் பட்டினத்தடிகளார் வாக்கு உணாறபாலது.

அங்கோ டிங்கோ டலமருங் களவர்
ஐவர் கலகமிட் டலைக்குங் கானகம்
சலமலப் பேழை இருவினைப் பெட்டகம்
வாதபித்தங் கோழை குடிபுகுஞ் சீறூர்
ஊத்தைப் புன்றோல் உதிரக் கட்டளை
நாற்றப் பாண்டம் நான்முழத் தொன்பது
பீற்றற் றுண்டம் பேய்ச்சுரைத் தோட்டம்
அடலைப் பெரிய சுடலைத் திடருள்
ஆசைக் கயிற்றில் ஆடும் பம்பரம்
ஓயா நோய்க்கிடம் ஓடும் மரக்கலம்
மாயா விகாரம் மரணப் பஞ்சரம்
சோற்றுத் துருத்தி தூற்றும் பத்தம்
காற்றிற் பறக்குங் கானப் பட்டம்
விதிவழித் தருமன் வெட்டுங் கட்டை
சதுர்முகப் பாணன் தைக்குஞ் சட்டை
ஈமக்கனலில் இடுசில் விருந்து
காமக்கனலிற் கருகுஞ் சருகு
கிருமி கிண்டுங் கிழங்கஞ் சருமி
பவக்கொழுந் தேறுங் கவைக்கொம்பு
மண்மாய நடக்கும் வடிவின் முடிவிற்
பிணமாய்க் கிடக்கும் பிண்டப் பிண்டம்
ஊரிற் கிடக்க வொட்டா வுபாதி
காலெதிர் குவித்த பூளை காலைக்
கதிர்காப் பட்ட கடும்பனிக் கூட்டம்
அந்தரத் தியங்கும் இந்திர சாபம்
அதிரும் மேகத் துருவின் அருநிழல்
நீரிற் குமிழி நீர்மேல் எழுத்து
கண்டுயில் கனவிற் கண்ட காட்சி
அதனினும் பொல்லா மாயக் களங்கம். (89)

## பொது

90 தனதன தானத தானன தனதன தானத் தானன
தனதன தானத தானன-தனதான.

முருகம யூரச் சேவக சரவண ஏனற் பூசரி
முருகுள படீரக் கோமளை முலைமீதே
முழுகிய காதற காமுக பதிபசு பாசத தீவினை
முதிய புராரிக் கோதிய குருவேஎன
றுருகியு மாடிப் பாடியு மிருகழல நாடிச சூடியு
முணர்வினொ டேடிக கூடியும வழிபாடுற
றுலகினொ ராசைப் பாடற நிலைபெறு ஞானத தாலினி
உனதடி யாரைச் சேர்வதும் ஒருநாளே
மருகனெ னாமற் சூழ்கொலை கருதிய மாமப பாதகன்
வரவிடு மாயப் பேய்முலை பருகாமேல்
வருமத யானைக் கோடவை திருகிவி ளாவிற காய்கனி
மதுரையில் வீழச சாடிய சதமாபுட்
பொருதிரு கோரப பாரிய மருதிடை போயப போதொரு
சகடுதை யாமற் போர்செய்து விளையாடிப்
பொதுவியர் சேரிக் கேவளர் புயல்மருகா வஜ்ராயுத
புரமதில் மாபுத தேளிர்கள் பெருமாளே.

(இ-ள்) மருகன் எனுமல சூழ் கொலை கருதிய-தன் மருகன் என்றும் பாராமல் உபாயத்தோடு செய்யும் கொலையை எண்ணிய, மாமன் பாதகன் வரவிடும் - மாமனாகிய பாவி போகும்படி ஏவிய, மாயம்பேய் முலைபருகா- மாயமானபேய் வடிவங்கொண்ட பூதகியின் முலையை

உண்டு, மேலவரும் மதம்யானை கோடு அவைதிருகி-மேல எதிர்த்து வரும் மும்மதங்களையுடைய யானையின் கொம்புகளை உடைத்து, விளாவில காய கனி மதுகையில் வீழச சாடிய - விளாமரத்திலுள்ள காயகனிகளை வனமையினல விழும்படி வீசிய, சதமா புள் பொருது-நூறுறாக கணக்கான வண்டுகளுடனும பறவைகளுடனும் சண்டைசெய்துபு, இரு கோரம் பாரிய மருது இடை போய - இரண்டு கோரமான பெரிய மருதமரத்தின இடைசசென்று, அப்போது ஒரு சகடு உதையா-அபபோது ஒரு சக்கர வடிவாக வந்த அசுரனை உதைததது, மலபோாசெயது விளையாடி-மலயுதததைசசெய்து விளையாடிககொணடும், பொதுவியா சேரிககு வளா புயல மருகா - இடையா சேரியில வளாந்து வந்த மேகம்போன்ற நிறத்தையுடைய திருமாலுககு மருமகனே!, வஜராயுதபுரம அதில - வஜராயுதநகரததில வாழ்கின்ற, மா புத்தேளிாகள பெருமானே-சிறந்த தேவாகளுக்குத தலைவனே!, முருக மயூரம் சேவக சரவண-முருகனே! மயிலின்மேல் ஏறிசசெலலும் தொழிலை யுடையவனே! சரவணபபொய்கையில் அவதரிததவனே!, எனல பூதரிதினைவளாகின்ற மலையில வாழும வளளிநாயகியினது, முகுளம் படீரம் கோமளம் முலைமீது - அரும்பைபயொத்த சந்தனம் பூசிய இளைய ஸ்தனஙகளில், முழுகிய காதல காமுக-முழுகியுள்ள காதல மிகுந்த காமுகனே!, பதிபசு பாசம் தீா வினை-பதிபசுபாசத்தின துணி பொருளை, முதிய புராரிக்கு ஓதிய குருவே - பழமையான சிவபெருமானுக்கு

உபதேசஞ்செய்த குருவே', என்று உருகியும் ஆடிப் பாடியும்-என்று சொல்லி உருகியும் ஆடியும் பாடியும், இருகழல் நாடி சூடியும் - இரண்டு திருவடிகளையும் விரும்பிச்சூடியும், உணர்வினொடு ஊடி கூடியும் - ஞானவுணர்ச்சியினொடு ஊடியும் கூடியும் வழிபாடு உற்று - வழிபாடு பொருந்தி, உலகினர் ஆசைப்பாடு ஆசைப்பாடு அற - உலகத்தார் ஆசைப்படுதல் ஒழிய, நிலைபெற்ற ஞானத்தால்-நிலைபெற்ற பேருணர்வினால், உனது அடியாரைச் சேர்வதும் ஒருநாளே-தேவரீருடைய அடியாரைச் சேர்வதாகிய ஒருநாளும் உண்டோ? எ-று

(வி-ரை) பதிபசுபாசத் தீர்வு - பதிபசுபாசங்களின் இயல்பு. அதனைப் பிரணவ வாயிலாக உணர்த்தியது, பிரணவத்திலே இம்முப்பொருளின் இயல்பும் அடங்கியுள்ளது ஆதலின் இவ்வாறு அருளிச்செய்தார். அடியவரைச் சார்ந்தொழுகின் வீடுபேறு எளிதில் சித்திக்குமாதலின் அவர் தம் கூட்டுறவைக் கொள்ளுதலே அமையும் என்பார் 'உனதடியரைச் சேர்வதும் ஒருநாளே' என்றார்.

நிலைபெறுஞானம் - எவ்வாற்றானும் மாறாத மெய்யுணர்வு. அடியவர் பெருமையை,

'அன்பர்பணி செய்யவெனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே.'

எனவரூஉம் **தாயுமானவர்** திருவாக்கானும்

'ஈசனுக் கன்பில்லார் அடியவர்க் கன்பில்லார்
எவ்வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கும் அன்பில்லார்

'பேசுவதென் அறிவிலலாப பிணங்களை நாம் இணங்கிற
பிறப்பிணிலும இறப்பினிலும் பிணங்கிடுவர் விடுநீ
ஆசையொடும அரனடியார அடியாரை அடைந்திட்
டவாகருமம உனகருமம ஆகச செய்து
கூசி மொழிந்தருளஞானக் குறியில நின்று
கும்பிட்டுத தட்டமிட்டுக கூத்தாடித திரியே.'

என்பதும் அருணந்தி சிவம திருவாக்காலும் அறிக. (90)

## திருவாலங்காடு

91 தனதன தானந தாதத தனதன தானந தாதத
தனதன தானந தாதத-தனதான.

வடிவது நீலங் காட்டி முடிவுள காலனை கூட்டி
வரவிடு தூதனை கோட்டி விடுபாசம்

மகளொடு மாமனை பாட்டி முதலுறு வோருங் கேட்டு
மதிகெட மாயநீட்டி யுயிர்போமுன்

படிமிசை தாளுங் காட்டி யுடலுறு நோய்பண் டேற்ற
பழவினை பாவந் தீர்த்துன அடிபேணப்

பரிவொடு நாளுங் காத்து விரிதமி ழாலங் கூர்த்த
பரபுகழ் பாடென ஆட்கொண் டருள்வாயே

முடிமிசை சோமன் சூட்டி வடிவுள ஆலங் காட்டில்
முதிர்நட மாடுங் கூத்தர் புதல்வோனே

முருகவிழ் தாருஞ் சூட்டி பொருதணி வேழங் கூட்டி
முதலமர் மானினை சேர்க்கை மயல்கூர்வாய

இடியென வேகங் காட்டி நெடிதரு சூலந் தீட்டி
யெதிர்பொரு சூரன் தாக்க வரவுகி

இலகிய வேலகொண் டார்த்து உடலிரு கூறன் றாக்கி
இமையவ ரேதந் தீர்த்த பெருமாளே.

(இ-ள்) முடிமிசை சோமனை சூடி - திருமுடியின்மேல் பிறைச்சந்திரனை அணிந்துகொண்டு, வடிவு உள ஆலங்காட்டில் - அழகுபொருந்திய திருவாலங்காடு என்னுந் திருத்தலத்தில், முதிர நடம் ஆடும் கூத்தர் புதல்வோனே - ஆனந்த மிகுந்த நடனத்தைச் செய்கின்ற சிவபெருமானுக்கு மகனே! முருகு அவிழ்தாரும் சூடி - வாசனையை விரிக்கின்ற மாலையைத் தரித்தும், ஒரு தனி வேழம் கூட்டி - ஓர் ஒப்பற்ற யானையைக் காணும்படி வருவித்தும், முதல மரம் மானின் சோகமை மயல் கூர்வாய - முதலாகிய மாறுபாட்டைச் செய்த மான்போன்ற வள்ளிநாயகியின் புணர்ச்சிக்கு ஆசை மிகுபவனே!, இடி என வேகம் காட்டி - இடியென்று சொல்லும்படி வேகத்தைக் காட்டியும், நெடி தரு சூலம் நீட்டி - நீண்ட சூலத்தைத் தீட்டிக்கொண்டும், எதிர் பொரு சூரன் தாக்க வர - எதிரே சண்டைசெய்யும் சூரன் தாக்குதற்கு வர, ஏகி இலகிய வேல்கொண்டு ஆர்த்து - எதிரே சென்று விளங்கிய வேலைக்கொண்டு ஆர்ப்பரித்து, உடல் இரு கூறு அன்று ஆக்கி - உடலை இரண்டு கூறாக அவனை இல்லையாம்படி செய்து, இமையவர் ஏதம் தீர்த்த பெருமாளே - தேவர்களது துன்பத்தை ஒழித்த பெருமானே!, வடிவு அது நீலம் காட்டி - நீலநிறம் பொருந்திய உருவத்தைக் காட்டி, முடிவு உள காலன் - ஆயுள் முடியும் காலத்தில் உள்ளவனாகிய இயமன், கூட்டி வரவிடு தூதன் - என உயிரைக் கட்டிக்

கொண்டு வரும்படி அனுப்பும் தூதன், கோட்டிவிடு பாசம்-வளைத்துச் செலுத்தும் கயிற்றை, மகனொடு மாமன் பாட்டி முதல உறவோடும் - மகனொடு மாமன் பாட்டி முதலான சுற்றத்தாரும், கேட்டு மதிகெட மாயம் தீட்டி உயிர் போம் முன-கேட்டு அறிவுகெட மாயத்தைச் செய்து உயிர் போவதன் முன்பு, படிமிசை தாளும் காட்டி - பூமியின்மேல அடியேனுக்குத் திருவடியைக் காட்டியருளி, உடல உறு நோய் - உடம்பிலே சேர்ந்த நோயையும், பண்டு வரும் பழவினை பாவம்-முன்னமே செய்துகொண்ட பழவினையால வரும் பாவத்தையும், தீர்த்து உன அடியேனை-ஒழித்து உன்து அடியனாகிய என்னை, பரிவொடு நாளும் காத்து-அன்போடு எந்நாளும் காத்தருளிச்செய்து, விரி தமிழால்-பல துறைகளாக விரிந்த தமிழ் மொழியினாலே, அம கூர்த்த பரம் புகழ்பாடு என்று ஆளகொடு அருள்வாய் - அழகு மிகுந்த சிறந்த புகழைப் பாடுவாய் என்று ஆட்கொண்டருளுவாயாக. எ-று ஏ-அசை.

(வி-ரை) கோட்டி-கோஷ்டி; கூட்டம். ஆலங்காடு-திருவாலங்காடு என்னுந் திவ்விய க்ஷேத்திரம்; அரக்கோணத்துக்கு அருகேயுள்ளது. திருவாலங்காட்டில் சிவபெருமான் காளியோடு தாண்டவஞ் செய்தனர். அங்கே இரத்தின சபை உள்ளது. இத்தலத்திலேதான் காரைக்காலம்மையார் திருநடனங்காணும் பெருவாழ்வு பெற்றது. இதன் பெருமையை 'வீடு நமக்குத் திருவாலங்காடு' எனக் கூறிய பட்டினத்துப்பிள்ளையார் திருவாக்கானும்உணர்க. முருகு-வாசனை.

## பழநிமலை

92 தனன தனன தனன தனன
தனன தனன - தனதான

தமரு மமரு மனையு மினிய
  தனமு மரசு — மயலாக
தறுகண் மறலி முறுகு கயிறு
  தலையை வளைய — எறியாதே
கமல விமல மரக தமணி
  கனக மருவு — மிருபாதம்
கருத அருளி யெனது தனிமை
  கழிய அறிவு — தரவேணும்
குமர சமர முருக பரம
  குலவு பழநி — மலையோனே
கொடிய பகடு முடிய முடுகு
  குறவர் சிறுமி — மணவாளா
அமர ரிடரும் அவுண ருடலும்
  அழிய அமர்செய் — தருள்வோனே
அறமு நிறமும் அயிலு மயிலும்
  அழகு முடைய — பெருமாளே.

(இ-ள்) குமர சமர முருக பரம குலவு பழநி மலையோனே-குமரனே!, சண்டைசெய்யும் முருகனே-மேலானவனே பெருமை விளங்கும் பழநிமலையை இருப்பிடமாகக் கொண்டவனே', கொடிய பகடு முடிய முடுகு குறவர் சிறுமி

மணவாளா - மதம் பொழிகின்ற யானைகள் மாறும்படி ஆம்பை விரையச் செலுத்தும் வேடமகளாகிய வள்ளி நாயகிக்கு மணவாளனே, அமரர் இடரும் அவுணர் உடலும் அழிய அமர் செய்து அருளவோனே - தேவர்களுக்கு உற்ற துன்பமும் அசுரர்களுடைய உடம்புகளும் ஒருங்கு கெடும்படி போரை செய்தருளபவனே, அறமும் நிறமும் அயிலும் மயிலும் அழகும் உடைய பெருமானே - தருமத்தையும் ஒளியையும் வேலையும் மயிலையும் அழகையும் உடைய பெருமானே தமரும் அமரும் மனையும் இனிய தனமும் அரசும் அயல் ஆக - சுற்றத்தாரும் வாழும் வீடும் இன்பத்தைத் தரும் பொருளும் ஆளும் அரசும் வேறுபட்டுப் பிரிந்து நீங்க, தறுகண் மறலி முறுகு கயிறு தலையை வளைய எறியாது - அஞ்சாமையையுடைய யமன் தனனுடைய முறுக்கு விட்ட கயிற்றைத் தலையைச் சுற்றி வீசாதபடி, கமலம் விமலம் மரகதம் மணி கனகம் மருவும் இருபாதம் - செந்தாமரை மலரை ஒத்த பரிசுத்தமான மரகதரத்தினத்தின் ஒளியையும் பொன்னின் ஒளியையும் பொருந்துகின்ற இரண்டு திருவடிகளையும், கருத அருளி எனது தனிமை கழிய அறிவு தர வேணும் - தியானஞ் செய்வதற்கு அருள்செய்து எனது தனிமையிருக்கும் நிலைமை ஒழிய மெய்யுணர்வைத் தரவேண்டும் என்றவாறு.

(வி-ரை) 'தறுகண் மறலி' என்றார் எத்துணைப் பெரியராயினும் கருதாது உயிர் வௌவுதலானும் 'பேட்டிருக்கும் பிள்ளையைத் தாயலறக் கோடலானும்' என்பது

'கமல விமல மரகதமணி கனக மருவும் இருபாதம்' என்றது செந்தாமரை மலரையொத்த தூய்மையான வள்ளி நாயகியாரும், தெய்வயானை அம்மையாரும் சேரும் இரண்டு திருவடிகள் என்பதாம். மரகதமணி வள்ளிநாயகியார்; அவர் நிறம் மரகதம் போன்றிருத்தலைக் காண்க. கனகம்-பொன், தெய்வயானை அம்மையார் நிறம் பொன்வடிவிற்று என்க. (92)

## திருக்குராவடி

93 தனதத தானன தனதன-தனதான.

மருகுலாவிய மலரணை கொதியாதே
வளர்தகை தாயதமா வசையது மொழியாதே
கருக்குலாவிய அயலவா பழியாதே
கடப்ப மாலையை யினிவா விடவேணும்
கருகுலாவிய கொடியிடை மணவாளா
சமர்த்தனே மணி மரகத மயில்வீரா
திருக்குராவடி நிழல்தனில் உறைவோனே
திருக்கை வேல்வடி வழகிய பெருமாளே.

(இ-ள்) கருகுலாவிய கொடி இடை மணவாளா-கற்பக விருட்சத்தைச் சுற்றிப் படர்ந்துவிளங்கும் காமவல்லிபோல நுணுகிய இடையை உடைய தேவயானையாருக்கு மணவாளனே', சமர்த்தனே மணி மரகதம் மயில்வீரா-சாமர்த்தியம் உடையவனே! நீலம் மரகத என்னும் இரத்தினங்களின் ஒளியை உடைய மயில் வாகனத்தை யுடைய

வீரனே', திருகுரா அடி நிழலதனில உறைவோனே - அழகிய குராமரத்தின் அடிநிழலில கோயில்கொண் டெழுந் தருளி இருபபவனே', திருகைவேல அழகிய வடிவு பெருமாளே-அழகிய கையில வேறபடையை தாஙகிய அழகிய உருவததையுடைய பெருமானே', மருகுலாவிய மலர் அணை கொதியாது -மணம விளங்குகின்ற பூககள பரப்பிய படுககை வெபபமடையாமலும், வளாதத தாய் தமா வசை மொழியாது-பெற்று வளாத்த தாயும் சுறறத்தாரும் பழிச் சொலலைக கூறாமலும், கரு குலாவிய அயலவா பழியாது-கொடுமைக் குணங்கள் விளங்கும ஏதிலாா பழிக்காமலும், கடபபமாலையை இனி வரவிடவேணும் - கடப்ப மாலையை இபபொழுதே எனககுச சேரும்படி அனுப்ப வேண்டும். எ-று.

(வி-ரை) பிரிவால விளையும் காமமிகுதி உணர்த்துவார் 'மருக்குலாவிய மலரணை கொதியாதே' என்றாா. வசை-இவளால இவள இறந்து பட்டாள் என்னும் வசைமொழி. தலைவி தலைவன அணிந்துள்ள மாலையைக் கேட்பதாகப் பாடபபடடது இசசெய்யுள் இதுபோல வரும்,

'வேம்பாகிலும் இனிய சொல்லுக்கு நீபுனைந்த
வேமபா கிலுமுதவ வேண்டாவோ—பாம்பாயும்
வேலையிலே வேலைவைத்த மீனவா நின்புயத்து
மாலையிலே மாலைவைத்தாள மான்'

என்னுந் தனிப்பாடலையும் காண்க. (93)

## பொது

94 தனதன தந்தனத்த தனதன தந்தனத்த
தனதன தந்தனத்த-தனதான

மொழியநி றங்கறுத்து மகரவி னங்கலக்கி
முடியவ ளைந்தரற்று கடலாலும்
முதிரவி டம்பரப்பி வடவையு முகந்தழற்குள
முழுகியெ ழுந்திருக்கு நிலவாலும்
மழையள கந்தரித்த கொடியிடை வஞ்சியுற்ற
மயலதணி யுமபடிக்கு நினைவாயே
மரகத துங்கவெற்றி விகடந டங்கொள்சித்ர
மயிலினி லெந்தமுத்தி தரவேணும்
அழகிய மெனகுறத்தி புளகித சந்தனத்தி
னமுதத னம்படைத்த திருமார்பா
அமரர்பு ரந்தனக்கு மழகிய செந்திலுக்கு
மருணைவ ளம்பதிக்கும் இறையோனே
எழுபுவ னம்பிழைக்க அசுரர்சி ரந்தெறிக்க
எழுசயி லந்துளைத்த சுடர்வேலா
இரவிக ளந்தரத்தா அரியர பங்கயத்தா
இவர்கள்ப யந்தவிர்த்த பெருமாளே.

(இ-ள்) அழகிய மெனகுறத்தி-அழகையுடைய மென்மைத் தன்மை வாய்ந்த வள்ளிநாயகியினது, புளகித சந்தனத்தின் அமுததனம் - புளகத்தையுடைய சந்தனம் பூசிய தேவாமிர்தம்போல் அடைதற் கருமையான ஸ்தனங்களால்,

படைத்த திருமார்பா - தழுவப்படும் அழகிய மார்பை உடையவனே', அமராபுரம் தனக்கும் - தேவலோகத்திற்கும், அழகிய செந்திலுக்கும்-அழகிய திருச்செந்தூ ரென்னுந் தலத்திற்கும், அருணை வளம்பதிக்கும் இறையோனே - அருணையாகிய வளப்பமான நகரத்திற்கும் தலைவனே', எழு புவனம் பிழைக்க-ஏழு உலகங்களும் உய்ந்தற்கும், அசுரர் சிரம் தெறிக்க - அசுரர்களுடைய தலைகளெல்லாம் சிதறியொழியவும், எழு சயிலம் துளைத்த சுடர் வேலா - எழு மலைகளையும் துளைத்த ஒளிபொருந்திய வேற்படையை உடையவனே', இரவிகள் அந்தரத்தர் - சூரியர்கள், தேவர்கள், அரி அரன் பங்கயத்தன்-திருமால், சிவன், பிரமன் எனனும், இவர்கள்-இவர்களுடைய, பயம் தவிர்த்த பெருமாளே - அச்சத்தை ஒழித்தருளிய பெருமானே', மொழியநிறம் கறுத்து - சொல்லுகின்ற அந்நிறமானது கறுத்து, மகரம் இனம் கலக்கி-மகரமீன்களின் கூட்டங்களால் கலக்கப்பட்டு, புடிய வளைந்து-பூமி முழுவதும் சுற்றிக்கொண்டு. அரற்று கடலாலும் - சப்திக்கின்ற கடலினாலும், முதிரவிடம் பரப்பி - முதிரும்படி விஷத்தைப் பரப்பி, வடவை முகந்து - வடவாமுகாக்கினியை மொண்டு கொண்டு, அழற்குள முழுகி எழுந்திருக்கும் நிலவாலும்-முழுகி எழுந்திருக்கின்ற சந்திரனாலும், மழை அளகம் தரித்த - மேகம்போன்ற கூந்தலையுடைய, கொடி இடை வஞ்சி - கொடிபோன்ற இடையை உடைய என் பெண்ணுக்கு, உற்ற மயல தணியும்படிக்கு நினைவாய-உண்டாகிய

ஆசை மயக்கம் தீரும்படி திருவுளங் கொள்வாய், மரகதம் துங்கம் வெற்றி - பசசை நிறம் பொருந்திய சிறந்த வெற்றியையுடைய, விகடம் நடம் கொள் சித்திர மயிலினில் - அழகிய நடனத்தைச் செய்கின்ற சித்திரமான உருவத்தையுடைய மயிலின்மேல், வந்து முத்தி தரவேணும் - எழுந்தருளிவந்து அடியேனுக்கு மோக்ஷத்தைக் கொடுத்தருள வேண்டும் எ - று.

(வி - ரை) கடலோசை தலைவரைப் பிரிந்திருக்கும் மகளிருக்கு மையலை விளைத்தலின் அதனைக் கூறினர். அம்மையால் பிருதிவியை விளக்குவார் கடவுளுக்குச் செய்கை புணர்த்தோதினார். இவவாறே நிலவிற்கும் காண்க. வடவை-வடவாமுகாக்கினி. மழையளகம் - மேகம்போல இருண்ட கூந்தல். அளகம்-பெண்பால் மயிருக்கு ஆகும். அமுத தனம - அமுதம்போல இனிமை பயக்கும் ஸ்தனங்கள். அமரர் புரம-தேவலோகம். எழுபுவனம்-எழுலகம. அசுரர்களைக் கொன்றமையால் அவர்களால் அமரர் முதலிய யாவருக்கும் விளையுந் தீங்கை ஒழித்தாராதலின் 'எழுபுவனம் பிழைக்க' என்றார், இரவிகள-பன்னிரு சூரியர்; அவர்கள் பெயர் தாத்தரு, சக்கரன, அரியமன், மித்திரன், வருணன், அஞ்சுமான், இரணியன், பகவான், திவசசுவான், பூடன், சவித்துரு, துவட்டா என்பன.

அரியர பங்கயத்தர் - திருமால், சிவன், பிரமன் ஆகிய மூவர். (94)

## திருவருணை

95 தனன தனதன தனன தனதன
தனன தனதன-தனதான

இறுகு மணிமுலை மருவு தரளமு
மெரியு மமிழ்மதி நிலவாலே
இரவி லெனதுயி ரவர வருகுழ
லிசையி னுறுகடல் அலையாலே
தறுகண் ரதிபதி மதனன விடுகொடு
சரமி லெளியனும் அழியாதே
தருண மணிபொழி லருணை நகருறை
சயில மிசையினில் வரவேணும்
முறுகு திரிபுர மறுகு கனலெழ
முறுவ லுடையவர் குருநாதா
முடிய கொடுமுடி யசுரர் பொடிபட
முடுகு மரகத மயிலவீரா
குறவர் மடமகள் அமிர்த கனதன
குவடு படுமொரு திருமார்பா
கொடிய சுடரிலை தனையு மெழுகடல
குறுக விடவல பெருமாளே.

(இ-ள்) முறுகு திரிபுரம் - பாவம் மிகுந்த முப்புரங்களை, மறுகு கனல் எழ-சுழலகின்ற நெருப்புண்டாகும்படி,

முறுவல் உடையவர்-சிரிப்பை உடையவராகிய சிவபெருமா னுக்கு, குருநாதா-ஆசாரியனே', முடிய-முழுவதும், கொடு முடி அசுரர் பொடிபட-வளைந்த கிரீடத்தையுடைய அசுரர் கள் தூளாகும்படி, முடுகும் மரகதம் மயில்வீரா-செலுத் தும் பச்சைமயில் வீரனே', குறவர் மடமகள்-குறவருடைய மடப்பம் பொருந்திய மகளாகிய வள்ளிநாயகியினது, அமிர் தம் கனம் தனம் குவடுபடும் ஒரு திருமார்பா - அமிர்தம் நிறைந்த பெரிய ஸதனங்களாகிய மலைகள் பொருந்துகின்ற ஒப்பற்ற அழகிய மார்பை உடையவனே', கொடிய சுடர் இலைதனை - பகைவருக்குத் தீங்கைச் செய்யும் பிரகாசம் பொருந்திய இலைவடிவமாக உள்ள வேற்படையை, எழு கடல் குறுக விடவல் பெருமாளே-ஏழுகடல்களையும் சேரும் படி செலுத்த வல்லவனாகிய பெருமானே', இறுக்கு மணி முலை மருவுதரளமும் - திண்மையான அழகிய ஸ்தனங் களில் தரித்துள்ள முத்துமாலையாலும், எரியும் மதி உமிழ் நிலவால் - பிரகாசிக்கின்ற சந்திரன் விடுகின்ற கிரணங்களா லும், இரவி எனது உயிர் கவர - வருத்தி என்னுடைய உயிரை அபகரிக்க, வருகுழல் இசையில் உறு கடல் அலை யால்-செவியில்படும் குழலிசையாலும் மிக்க கடலின் அலை யாலும், தறுகண் ரதிபதி மதனன்-அஞ்சாமையை உடைய ரதிக்கு நாயகனாகிய மன்மதன், விடுகொடு சரமதில்- செலுத்துகின்ற வளைந்த அம்பினாலும், எளியனும் அழி யாது - எளியேனும் அழியாமல், தருணம் அணிபொழில்- இளமையை யுடைய வரிசையாகவுள்ள சோலைசூழ்ந்த,

அருணைநகர் உறை சயிலம் மிசையினில வரவேணும்-திருவருணை நகரத்திலே உள்ள மலையின்மேல் வரவேண்டும். எ-று.

(வி-ரை) இறுகுழலை-வினைத்தொகை. தாளம்-முதலு மாலையை உணர்ததலின் ஆகுபெயர் இரவி - இரவி, வருத்தி. சுடரிலை-என்றது வேலபடையை எழுகடலை-ஏழு கடலகளை; பண்புதொகை. 'எளியனை' எனறார் அறிவு புலனை வழிச் செலலுமாறு விடுத்துத துனபுறுமை அதனைமீட்டு நிறுத்தும் வன்மை இன்மையான. அததகைமையேனும் தேவரீர தரிசனம் வாயககபபெறின உயவேன என்பார், 'அருணை நகருறை சயிலமிசையினில வரவேணும' என்றார். வேண்டும் எனபது வேணும் எனமருவியது. (95)

## திருவருணை

96 தனதனத தததத் தனத்தத தனதன
தனதனத் தத்தத் தனத்தத் தனதன
தனதனத் தத்தத தனத்தத் தனதன-தனதான.

கமலமொட் டைககட் டழித்துக குமிழியை
நிலைகுலைத துபபொரு குடத்தைதத தமனிய
கலசவர்க் கத்தைதத தகர்ததுக குலையற இளநீரைக்

கறுவிவட் டைபபிற றுரததிப் பொருதப
சயம்விளைத் துசசெப் படித்துக் குலவிய
கரிமருப் பைப்புக் கொடித்துத் திறல்மதன் அபிஷேகம்

அமலர்நெ றிக்கட லழுகுட் பொடிசெய்து
அதிகசக் ரபபுட் பறக்கக் கொடுமையி
னடல்படைத் தச்சப் படுத்திச் சபதமொ டிருதாளம்

அறைதல்கற் பித்துப் பொருப்பைப் பாவிய
சிறகறுப் பித்துக் கதிரத்துப் புடைபடு
மபிநவச் சித்ரத் தனகதித் திருடிகள் உறவாமோ

தமரமிக் குத்திக் கதிர்க்கப் பலபறை
தொகுதொகுக் குதகொத் தொகுகத்தத் தொகுதொகு
திரிகிடந் தததத் தரிகத் தரிகிட எனவோதிச

சவடுறப் பக்கப் பழுவொத்திப் புகையெழ
விழிகளுட செக்கச் சிவத்துக் குறளிகள்
தசைகள்பட் சித்துக் களிக்கக் கழுதொடு கழுகாட

அமலையுற் றுக்கொக் கரித்துப் படுகள
அசுரரத் தத்திற் குளித்துத் திமியென
அடிநடித் திட்டிட் டிடித்துப் பொருதிடு மயிலோனே

அழகுமிகச் சித்ர பச்சைப் புரவியி
னுலவுமெய்ப் பரத்ய க்ஷந, சற குருபர
அருணையிற் சிந்தித் தெனகருத் தெளிவருள் பெருமாளே.

(இ-ள்) தமரம் மிக்கு திக்கு அதிர்க்க - ஓசைமிகுந்து திசைகள் எல்லாம் அதிர்ச்சி கொள்ளவும், பலபறை- பலவாச்சியங்கள், தொகு தொகுக்கு தொத்தொகுக்கு

தொகுதொகு தரிகிட தத்தத் தரிக்க தரிகிட எனஒதி-தொகுதொகுதகு என்னும் ஓசையைச் செய்யவும், சவடு உற பக்க பழு ஒத்தி - பக்கத்துப் பழுவெலும்புகள் நெரிய முடக்கிய கைகளை ஒத்தித் துணங்கைக் கூத்தாடியும், புகை எழ-புகை எழும்புமாறு, விழிகள் உள செகக்சிவந்து-கண்கள் உள் நன்றாகச் சிவந்தும், குறளிகள் தசைகள் பட்சித்துகளித்து கழுதொடு கழுதுஆட - பூதங்கள் இறைச்சிகளைத் தின்று மிக்க மகிழ்ச்சி கொள்ளவும் பேயோடு கழுதுகள் ஆடவும், அமலை உற்று கொக்கரித்து - ஓலசமிக்க கொக்கரித்து, படுகளம் அசுரர் ரத்தத்தில் குளித்து-போர்க்களத் தில் மடிந்த அசுரர்களுடைய உதிரத்திலே முழுகி, திமி என அடிநடித்துஇட்டு இடடு பொருந்திடும் அயிலோனே-திமி எனனும் ஓசை உண்டாம்படி அடியை எடுத்திட்டு நடனஞ்செய்து சண்டையிடும் வேற்படையை உடையவனே! அழகு மிக்க சித்ரம பசசை புரவியின - அழகு மிகுந்த பலவித நிறம பொருந்திய பசுமையான மயிலின் மேல, உலவு மெய் பிரத்தியக்ஷம நசை குருபர - ஏறிச் செல்லுகின்ற உண்மையான கண்ணுக்கு நேரே தோன்றுகின்ற நல்ல உண்மையான குருபரனே!, அருணையில் சிந்தித்து எனக்கு தெளிவு அருள பெருமாளே - திருவண்ணாமலையில் எனக்கு மனம் பொருந்தித் தெளிவை அருள் செய்யும் பெருமானே!, கமலம் மொட்டை கட்டழித்து - தாமரையின் அரும்பின் அழகை ஒழித்தும் குமிழியை நிலைகுலைத்து - குமிழியின் தன்மையை நீக்கியும்,

பொன்குடத்தை-பொன்னுற் செய்த குடத்தையும், தமனியம் கலசம் வாகத்தை தகர்த்து-பொன்னுற்செய்த கலசக் கூட்டங்களை உடைத்ததும், குலை அற இளநீரை எறிவி-குலையினின்று நீங்கும்படி இளநீரைக் கோபித்ததும், வட்டைபின் துரத்தி-சூதாடுங் கருவியைப் பின்வாங்கும்படி துரத்தியும், பொருது அப்பயம் விளைத்து-சண்டையிட்டுத் தோல்வியை உண்டாக்கியும், செப்பு அடித்து - செப்பை அடித்ததும், குலவிய கரிமருப்பை புக்கு ஒடித்து-விளங்கிய யானையின் கொம்பைப்புகுந்து ஒடித்தும், திறல மதன அபிஷேகம் - வெற்றி பொருந்திய மன்மதனுடைய கிரீடத்தை, அமலர் நெற்றிகண் தழற்குள் பொடிசெய்து - சிவபெருமானது நெற்றிக் கண்ணின் நெருப்புக்குள் பட்டு நீறும்படி செய்தும், அதிகம் சக்ரப்புள் பறக்க கொடுமையின் அடலபடைத்து அச்சப்படுத்தி - சிறந்த சக்ரவாகப்பறவை பறக்கும்படி கொடுமையாகப் போர்செய்து பயப்படுத்தியும், சபதமொடு இருதாளம் அறைதல் கற்பித்து-சபதத்துடன் இரண்டு தாளங்கள் சப்திக்கும்படி புகட்டியும், பொருப்பை பரவிய சிறகு அறுப்பித்து-மலைகளைப் பரந்துள்ள சிறகுகளின்கண் அறுப்பித்தும், கதித்து புடைபடும் அவிரவம் சிதரம தனது திருடிகள் உறவு ஆமோ - ஒளிமிகுந்து பக்கந்திரண்டுள்ள புதிய அழகு பொருந்திய ஸ்தனங்களையுடைய வஞ்சனை மிகுந்த பெண்களின் நேசம் எனக்கு இருப்பது நன்றோ எ-று (அஃது ஒழியும்படி திருவருள் செய்வாய் என்பது குறிப்பெச்சம்.)

(வி-ரை) ஸ்தனங்களுக்கு அழகு மிகுதி கூறுவார் அவற்றோடு ஒபமிக்கத்தக்க பொருள்களையெல்லாம் எடுத்துக்கொண்டு அவை தோற்றுவிட்டன என்றும் தோற்ற காரணத்தானே பலவாறு தண்டிக்கப்பட்டன என்றுங் கற்பித்துச் சிலேடை அணி தோன்றக்கூறிய சதுரப்பாடு பாராட்டத்தக்கது.

கமலமொட்டைக் கட்டுரித்தல்-மலர்தல், கட்டுக்குலைதல். பொன்குடத்தைத் தகர்த்தல்-பொற்குடம் உடைக்கப்படுதல். கரி மருப்பைப் புகலொடித்தல் - யானைக்கொம்பை ஒடித்தல். அபிஷேகம்-கிரீடம். சகரப்புள் - சக்ரவாகம், அது தோற்றுப் பறந்தது என்றார். இருதாளம் 'அறைதல் கற்பித்து - இரண்டு தாளங்களும் ஓசையுடையனவாயின. பொருப்பைப் பரவிய சிறகறுப்பித்து-மலைகளின் இறகுகளை இந்திரனைக்கொண்டு அறுப்பித்து 'திருடிகள்' என்றார் பொய்யும் வஞ்சமும் களவும் குடிகொண்டோராதலின். குறளிகள்-பூதங்கள். (96)

பொது

97 தனதத்த் தானத தனதான
தனத்தத தானத-தனதான

கருப்பத் தூறிய பிறவாதே
கனக்கப் பாடுற் றுழலாதே
திருப்பொற் பாதத் தநுபூதி
சிறக்கப் பாலித் தருள்வாயே

பரபபற் ருருக குரியோனே
பரத்தப பானுக கணியோனே
திருகைகச சேவற் கொடியோனே
செகத்தி சோதிப பெருமானே.

(இ-ள்) கருபபதது ஊறி-கருபபததிலே தஙகி, பிறவாது - பிறவாமலும், கனகக பாடு உறறு - மிகவும் வருத்தமடைநது, உழலாது - துன்பமடையாமலும், திரு பொன பாததது - அழகிய பொன்போலும அருமையான திருவடிகளின், அநுபூதி சிறகக - அநுபவம மிக, பாலிதது அருள வாய-காபபாறறி அருளவாய, பரபபு அற்ருருககு - சித்த விருததி ஒழிததவருககு, பரதது அபபானுககு - மேன்மையான ஞான வெளிககு, அணியோனே - சமீபததிலுளளவனே! திரு கை-அழகிய கையில, சேவல் கொடியோனே-சேவற் கொடியை உடையவனே!, செகத்தில - உலகததில, சோதி - சோதி வடிவமான, பெருமானே - பெருமானே!. எ-று. ஏ-ஈறறசைகள.

(வி-ரை) கருபபத்திலே உயிாபடுந் துனபத்திறகு அளவில்லை யாதலின 'கருபபத்தூறிப பிறவாதே' என்ருா. பிறந்த பின் படும் துயரமும் மிகுதி எனபாா 'கனகக...... உழலாதே' எனறனா. அநுபூதி என்றது யான் எனது என்னும் அகபபுறபபறறுக்கள அழிந்து, ஆன்மா ஆனநதமயமான திருவடியிலே இரண்டறக கலத்தலாகிய பேரின்பம் அடைதற்குரிய அநுபத்தை. 'பிறந்தா ருறுவது பெருகிய

துன்பம் பிறவாருறுவது பெரும் பேரின்பம்' என்று **இளங்கோவடிகள்** கூறியபடி இவரும் பிறப்பால் வருவது துன்பமே எடுத்துக்கூறினர். இனிப் பிறவாநெறியை நான் அடையும்படி எனக்கு உன்பாதத்தனுபூதி கிடைக்கும்படி அருள்புரிய வேண்டுமென்பார், 'அனுபூதி அருள் வாயே' என்றனர். சூரபதுமன் சேவலும் மயிலுமாகி முறையே முருகனுக்குக் கொடியும் ஊர்தியுமாயினன் ஆதலின் 'சேவற் கொடியோனே' என்றார். பரப்பு - சித்த விருத்தி, சித்தவிருத்தி அடங்கிய பெரியோர்கள் உள்ளத்தில் தியானிக்கப் படுபவன் என்பார், பரப்பறுருக் குரியோனே' என்றார். தாயின் கருப்பத்தில் பத்துமாதமும் உயிர் படுந்துன்பத்தைப் பின்வரும் **மணிவாசகப் பெருமான்** திருவாக்காலும் உணர்க.

'ஒருமதித் தானறியி னிருமையிற் பிழைத்து
மிருமதி விளைவி னொருமையிற் பிழைத்து
மும்மதி தன்னு ளம்மதம் பிழைத்து
மீரிரு திங்களிற் பேரிருள் பிழைத்து
மஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்து
மாறு திங்களி னூறலர் பிழைத்து
மேழு திங்களிற் றாழ்புவி பிழைத்து
மெட்டுத் திங்களிற் கட்டமும் பிழைத்து
மொன்பதில் வருதரு துன்பமும் பிழைத்துந்
தக்க தசமதி தாயொடு தான்படுந்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்,' (97)

## திருவிடைமருதூர்

98 தனதனன தனதனன தனதனன தனதனன
தான தானனா தான தானனா தனதன தனதான.

அறுகுநுனி பனியனைய சிறியதுளி பெரியதொரு
ஆக மாகியோர பால ரூபமாய
அருமதலை குதலைமொழி தனிலுருகி யவருடைய
ஆயி தாதையார மாய மோகமாய
அருமையினி லருமையிட மொளுமொளென உடலவளர
ஆறு மேளமாய வால ரூபமாய
அவரொரு பெரியோராய்
அழகுபெறு நடையடைய கிருதுபடு மொழிபழகி
ஆவி யாயவோர தேவி மாருமாய
விழுசுவரை யரிவையர்கள் படுகுழியை நிலைமையென
வீடு வாசலாய மாட கூடமாய
அணுவளவு தவிடுமிக பிதிரவிட மனமிறுகி
ஆசை யாளராய் ஊசி வாசியாய
அவியுறு சுடரபோலே
வெறுமிடிய னொருதவசி யமுதுபடை யெனுமளவில
மேலை வீடுகேள் கீழை வீடுகேள
திடுதிடென நுழைவதன்முன எதிரமுடுகி யவர்களொடு
சீறி ஞாளிபோல ஏறி வீழ்வதாய்
விரகினொடு வருபொருள்கள் சுவறியிட மொழியுமொரு
வீணி யாரசொலே மேலதாயிட
விதிதனை நினையாதே

மினுக்குமினுக் கெனுமுடல மறமுறுகி நெகிழ்வுறவும்
வீணா சேவையே பூணு பாவியாய
மறுமையுள தெனுமவரை விடும்விழலை யதனின்வரு
வாரகள் போகுவார காணு மோனன
விடுதுறவு பெரியவரை மறையவரை வெடுவெடென
மேள மேசொலாய ஆளி வாயராய
மிடையுற வருநாளில்

வறுமைகளு முடுகிவர உறுபொருளு நழுவவில
வாத மூதுகா மாலை சோகைநோய
பெருவயிறு வயிறுவலி படுவனவர இருவிழிகள
பீளை சாடிட ஈளை மேலிட
வழுவழென உமிழுமது கொழுகொழென ஒழுகிவிழ
வாடி யூடெலாம் நாடி பேதமாய
மனையவள் மனமவெறுய

மறுகமனை யுறுமவர்கள நணுகுநணு கெனுமளவில
மாதர் சீயென வாலர் சீயென
கனலுதனி லிரதமொடு குதிரைவர நெடியசுடு
காடு வாவென வீடு போவெனா
வலசழிய விரகழிய உரைகுழறி விழிசொருகி
வாயு மேலிட ஆவி போகுநாள
மனிதர்கள் பலபேச

இறுதியதொ டறுதியென உறவின்முறை கதறியழ
ஏழை மாதரார் மோதி மேல்விழ

எனதுடைமை யெனதடிமை மெனுமறிவு சிறிதுமற
ஈமொ லேலென வாயை ஆவென
இடுகுபறை சிறுபறைகள திமிலையொடு தவிலறைய
ஈம தேசமே பேயகள் சூழவதாய்
எரிதணி விடும்வாழ்வே

இணையடிகள் பரவுமுன தடியவர்கள் பெறுவதுவும்
ஏசி டாாகளோ பாச நாசனே
இருவினையு மலமுமற இறவியொடு பிறவியற
ஏக போகமாய் நீயு நானுமாய்
இறுகும்வகை பரமசுக மதனையரு ளிடைமருதில்
ஏக நாயகா லோக நாயகா
இமையவா பெருமாளே.

(இ-ள) பாசம் நாசனே - ஆன்மாக்களின் வினையை ஒழிபபவனே', இடைமருதில ஏகம நாயகா-திருவிடைமருதூரில் எழுந்தருளியிருககும் ஒப்பற்ற தலைவனே!, லோகம் நாயகா - உலகங்களுககுத் தலைவனே', இமையவர் பெருமாளே-தேவாகட்குப பெருமானே', அறுகு நுனி பனி அனைய சிறிய துளி - அறுகம்புல்லின் முனையிலுள்ள பனித் துளியை ஒதத சிறிய துளியானது, பெரியது ஒரு ஆகம் ஆகி-பெரியதாகிய ஒருடமபாகி, ஓர் பாலன் ரூபம் ஆய்-ஓர் இளைய வடிவங்கொண்டு, அருமதலை குதலைமொழி தனில உருகி-அருமையான குழந்தையினது மழலைச் சொற்களைக் கேட்டு மனமுருகி, அவருடைய ஆயி தாதையார் மாயம்

மோகம் ஆய்-அவர்களைப் பெற்ற தாய் தந்தையர் மாயமான ஆசை யுடையவர்களாய், அருமையினில் அருமை இட- அதிகம் அருமை பாராட்ட, மொளுமொளென உடல வளர - பரபரப்புடனே உடம்பு வளர்ச்சியடைய, ஆளும் மேளம் ஆய்-அவரும் மேளம்போல, வாலரூபம் ஆய-வாலிப வடிவமாகி, அவர் ஒருபெரியோர் ஆய-பின்பு அவர்கள் பெரியவர்களாகி, அழகுபெறும் நடை அடைய-அழகை யுடைய நடையை நடந்து, கிருதுபடும மொழி பழகி-பெரு மிதமுடைய வார்த்தைகளிலே பயின்று, ஆவி ஆப ஓர் தேவிமாரும் ஆய்-உயிர்போன்ற மனைவிமார்களை மணந்த வர்களாய், விழுசுவரை-விழுகின்ற சுவர்போன்ற உடலையும், அரிவையர்கள் படுகுழியை-பெண்களது படுகுழிபோன்ற அல்குலையும், நிலைமை என்-நீடித்திருப்பவை என்று எண்ணி, வீடு வாசல ஆய் மாடம் கூடம் ஆய் - வீடு வாசலை யுடைய வர்களாயும், மாளிகைகளும் கூடங்களும் உடையவராகி, அணு அளவுதவிடும் இக பிதிரவிட - அணுவளவு தவிடு தானும் இங்கே சிதறவிடுவதற்கு, மனம் இறுகி - மனம் அழுந்தி, ஆசை ஆளர் ஆய் - ஆசையுடையவர்களாகி, ஊசி வாசி ஆய-ஊசிபோனவிடம் தேடுகிறவர்களைபோல நுணுக்க முடையவர்களாய், அவி உறு சுடர் போல வெறுமிடியன்- அணைந்துபோகின்ற விளக்குப்போலக் கெட்டு வறுமை யினிலை மூண்டவனேனும, ஒருதவசி - ஒரு துறவியேனும் யந்து, அமுதுபடை எனும் அளவில் - சோறுபடைக்க என்று கேட்ட மாத்திரத்தில, மேலைவீடுகேள் கீழைவீடு

கேள்-மேலவீட்டைச் சேர்ந்துகேள் கீழவீட்டைச் சேர்ந்து கேள் என்று சொலலி, திடுதிடு என நுழைவதன்முன் எதிர்முடுகி - விரைவாக அவர்கள் புகுவதற்கு முன் எதிரே சென்று, அவர்களோடுசீறி ஞாளிபோல எறிவீழ்வது ஆய- அவர்களுடன் கோபித்து நாயபோல் மேற்சென்று விழு வதை யுடையவராகி, விரகினொடு வருபொருள்கள் சுவறி விட - தமது தந்திரத்தினால் தம்மைச் சேர்ந்த பொருள்கள் எல்லாம் வறண்டுபோக, மொழியும் ஒருவீணியர் சொலே மேலதுஆயிட - அவர்கள் மட்டுக்கிசைய பேசும் வீணர் கள் சொல்லே மேன்மையாக விளங்க, விதிதனை நினையாது- விதியைச் சிறிதும் எண்ணுமல், மினுகு மினுகு எனும் உடலம் - மினுமினுவென்றிருக்கும் உடம்பு, மரம் முறுகி நெகிழவுற - பாவம் மிகுந்ததால் நெகிழ்ச்சி அடைய, வீணர் சேவையே பூணுபாவியாய - பயனில்லாதவரைச் சேவித்தலையே மேற்கொள்ளும் பாவியாகி, மறுமை உளது எனும் அவரை-மறுபிறப் புண்டென்று சொல்லுமவர்களை, விழலைவிடும்-அது வீண்பேச்சு விடும், அதனில வருவார்கள் போகுவார் காணுமோ என - அதைப்பெற்று வருவோரும் போவாருமாகியவர்களைப் பார்க்கின்றோமோ என்று பேசி, விடு துறவு பெரியவரை மறையவரை-உலகப்பற்றை விட்டுத் துறந்த பெரியோர்களையும் பிராமணர்களையும், வெடு வெடென மேளமே சொல ஆய் ஆளிவாயர் ஆய்-மேளம் போல முழங்கப்பேசிச் சிங்கம்போன்ற வாயை உடையவ ராய், மிடை உறவரும் நாளில்-கலப்புப்பொருந்த வரும்

காலத்தில், வறுமைகளும முடுகிவர - தரித்திர காலஙகளும் விரைவுடன் வந்துசேர, உறு பொருளும நழுவ - கையிலே இருந்த மிககபொருளும் செலவாகிவிட, சில வாதம் ஊது காமாலை சோகை நோய் பெருவயிறு வயிற்றுவலி படுவன் வர-வாதநோய பெருக்கின்ற காமாலை சோகைநோய பெரு வயிறு வயிற்றுநோய படுவன முதலிய சில நோயகள் தமமை வந்து சேர, இரு விழிகள் பீளை சாறிட - இரண்டு கணகளிலும் பீளை சரிய, ஈளை மேலிட-சளிமேலாக, வழவழென உமிழும அது கொளகொளென ஒழுகிவிழ - வழவழென துபபுப சளி கொகொளெனறு ஒழுகி விழ, ஊண் எலாம் வாடிநாடி பேதம் ஆய் - தசையெல்லாம வாடி நரம்புகள் அனைத்தும மாறி, மனையவள் மனம வேறாய மறுக-மனைவியினுடைய மனம் மாறுபடடுச சுழல, மனைஉறும் அவாகள் நணுகு நணுகு எனும் அளவில-வீட்டிலுள்ளவர்கள் வருக வருக என்று சொலலுமளவில, மாதா சீஎன வாலா சீயென-பெணகள் சீயெனறு இகழ்நதுசொலலவும், வாலிபா சீஎனறு இகழ்நது சொலலவும், கனவுதனில இரதமொடு குதிரைவர-கனவினகண தேருடனே குதிரைவர, நெடிய சுடுகாடு வாஎன - நீணட சுடுகாடு வாஎனெனவும, வீடுபோ என-வீடுபோ என்று சொலலவும், வலது அழிய விரகு அழிய - பலன்அழிய அறிவும்கெட, உரைகுழறி-சொறகள குழறுபாடு அடைந்து, விழி சொருகி - கணகள் உள்ளே சென்று, வாயு மேலிட ஆவிபோகும் நாள்-காறறு அதிகரிக்க உயிர்போகும் நாளில, மனிதர்கள் பலபேச-மனி

தாகள் பலவிஷயங்களைப பேச, இறுதியதொடு அறுதி என உரவின முறை கதறி அழ - முடிவுககாலம் அதனோடு எலலா வாழவும போயவிடடதெனறு சுறறததாா வாய் விடடுக கதறிப புலமப, ஏழை மாதராள மோதி மேலவிழ- அறிவிலலாத மனைவி கையால முகததை மோதிககொணடு மேலேவிழ, எனது உடைமை எனது அடிமை எனும் அறிவு சிறிதும அற - எனனுடைய பொருள எனனுடைய வேலையாட்கள எனனும அறிவு யாதும் நீஙக, ா மொமேலல் எனாகள மொமேலலெனறு இரைகக, வாயை ஆ என- வாயை ஆவெனறு திறநது, இடுகு பறை சிறு பறைகள்- இடைசுருஙகிய பறைகளும சிறிய பறைகளும, திமிலையொடு தவில அறைய-சலலரியோடு தவில எனனும வாததியததை வாசிகக, ாமம தேசமே பேயகள் சூழவது ஆய-சுடுகாட்டில் பேயகள் சுறறியிருபபதாகி, எரிதனில விடும வாழவே- நெருபபிலபோடும வாழககையையே, இணை அடிகள பாவும உனது அடியவாகள பெறுவதும்-இரண்டாகிய திருவடிகளை வாழததும் தேவரீரது அடியாாகள் அடைவதையும், எசிடாாகளோா - கறறிந்தோா பழிககமாட்டாாகளோா?, இருவினை மும்மலமும் அற - இருவினைகளும் மூன்று மலஙகளும் நீஙகவும், இறவியொடு பிறவி அற-இறப்போடு பிறபபு ஒழியவும, ஏகம் போகம ஆய் நீயும நானும் ஆய - ஒரே அனுபவமாய் நீயும் நானுமாகி, இறுகும் வகை பரமாகம் அதனை அருள்-அழுந்தும்படி மேனமையான அத்துவிதாநந்தத்தை அருள்வாயாக எ-று.

(வி-ரை) குதலை மொழி - பொருள் திரம்பாநசொல. ஆயி தாதையரா-தாய் தந்தையர். மொளுமொமொளன-ஒலிக் குறிப்பு. கிருதுபடுமொழி-செருக்குடைய சொல. ஆவியாய ஓர் தேவிமார்-உயிருக்கு ஒப்பான மனைவிமார். விழுசுவர்-விளைதொகை. மனமிறுகி - சிந்தை, தாராளமாகச் செலலாது அடங்கி, லோபத்தன்மைகொண்டு. ஊசி வாசியாய்-ஊசிபோனவிடம் தேடுகின்றவர்களைப்போல அவ்வளவு நுணுக்க முடையோனாய. ஞாளி-நாய. அவியுறு சுடர் போலே வெறுமிடியன-அணைகின்ற விளக்குப்போல உயிர்க் களையற்று, இருக்கும் வறிஞன 'வீணாசேவையே பூணு பாவி' என்றார், அடியார் சேவை கொள்ளாமைக்கு இரங்கி. மறுமையுள தெனுமவர்-மறுபிறப்பு உண்டென்று சொல்லு வோர். விழலை-வீண் வார்த்தை. துறவு பெரியவர்-முனிவர். மேளமே சொலாய - மேளம் போல உரத்துப்பேசி. ஆளி வாயர் - சிங்கம்போலக் கர்ச்சிக்கும் வாயை உடையவர். ஊது காமாலை - உடலை பருக்கும் காமாலை என்னும் நோய். மறுக - சுழல. வலது - சாமார்த்தியம். இடுக்குபறை-இடை சுருங்கு பறை. திமிலை-சல்லரி, தாளம். ஈமதேசம் - சுடலை யிடம். காடுவாவென வீடுபோவென' என்பது முதுமை யைக் குறிக்கும் தொடர் மொழி. வாலர்-வாலிபர். ஏழை மாதரார்-மனைவி 'எரிதனிலிடும் வாழ்வு' என்றார் இறந் தலை முடிவாகக்கொண்டு போற்றிவளர்த்த உடல் நெருப்பி லிடப்படுதலின்' இக்கருத்தை பற்றி அப்பர் சுவாமி களும்,

நடலை வாழ்வுகொண் டென்செய்தீர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே
கடலி னஞ்சமு துண்டவர் கைவிட்டால்
உடலி னார்கிடந் தூர்முனி பண்டமே

என அருளிச்செய்ததூஉங் காண்க

இத்தகைய வாழ்வை உனதடியவர்கள் பெறுவது ஏச்சல்லவோ என்றார், அவர் வீடுபேற்றுக் குரியராதலின். 'செத்தேபோனால் சிரியாரோ' என்றார் பெரியாரும். இருவினை - நல்வினை, தீவினை. மும்மலம் - ஆணவம், கன்மம், மாயை. இறவி - இறப்பு. ஏகபோகம்-தட்டின்றிக் கலந்து நுகரும் போகம், அஃதாவது இரண்டற அத்துவிதமாகக் கலத்தல், அத்துவிதம்-ந+துவிதம்-இரண்டற்றது, ஒன்று மன்று, இரண்டுமன்று-இரண்டு அற்ற தன்மை, அத்துவித இன்பத்தை எய்துவது இருவினைத்தொடர்ச்சி அற்று ஆணவம் முதலிய மலங்களும் சத்தி கெட்டு அழிந்த பின்னரே யாதலின், 'இருவினை மும்மலமற' என்றார். அத்தகைய பரமசுகத்தைப் பெறுநருக்கு இறப்புப் பிறப்புகள் அற்றுப்போதலின், 'இறவியொடு பிறவியற' என்றார்.

இடைமருது - திருவிடைமருதூர், இது தஞ்சாவூர் ஜில்லா கும்பகோணந் தாலூகாவிலுள்ள ஒரு பெரிய சிவஸ்தலம் (98)

## திருக்கரபுரம்

99 தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதனத் தனதனத் தனதனத் தனதனத் - தனதான.

ஒருவரைச் சிறுமனைச் சயனமெத் தையினில்வைத்
தொருவரைத் தமதலைக் கடையினிற் சுழலவிட்
டொருவரைப் பரபரப் பொடுதெருத் திரியவிட் டதனாலே

ஒருவருக் கொருவர்சக் களமைபிற் சருவவிட்
டுருவுபத் திரமெடுத் துறையின்மற் புரியவிட்
டுயிர்பிழைப் பதுகருத் தளவிலுச் சிதமெனச் செயுமானார்

தருமயற் பரமைதனிற் றவநெறிக் கபலெனச்
சரியையிற் கிரியையிற் றவமுமற் றெனதுகைத்
தனமவத் தினிலிறைத் தெவருமுற் றிகழவுற் றிரிவேனைச்

சகலதுக் கமுமறச் சகலசற் குணம்வரத்
தரணியிற் புகழ்பெறத் தகைமைபெற் றனதுபொற்
சரணமெப் பொழுதுநட் பொடுநினைத் திடஅருட் டருவாயே

குருமொழித் தவமுடைப் புலவரைச் சிறையிலிட்
டறவுமுக் கிரம்விளைத் திடுமரக் கரைமுழுக்
கொடியதுர்க் குணஅவத் தரைமுதற் றரிசறுத் திடுமவேலா

குயிலமொழிக் கயல்விழித் துகிரிதழ்ச் சிலைநுதற்
சசிமுகத் திடநகைக் கனகுழற் றனகிரிக் [னே
கொடியிடைப் பிடிநடைக் குறமகட் டிருவினைப் புணர்வோ

கருதுசட் சமயிகட் கமைவுறக் கிறியுடைய
பறிதலைச் சமணரைக் கழுமுதற் பொடிபடக்
கலகமிட் டடலுயிர்க் கழுவினுச் சியினில்வைத் திடுவோனே
கழுநீர் குழையுறக் கதலியிற் கனியுகக்
கழையின்முத் தமுதிரக் கயல்குதித் துலவுநற்
கனவயற் றிகழ்திருக் கரபுரத் தறுமுகப் பெருமாளே.

(இ-ள்) குருமொழி தவம் உடை புலவரை - மேன்மையான சொல்லையும் தவவொழுக்கத்தையுமுடைய புலவரை, சிறையில் வைத்து அறவும் உக்கிரம் விளைத்திடும் - மிகவும் கோபத்தை உண்டாக்கும் இராகத்தை, முழு கொடிய துர்க்குணம் அவத்தரை - முற்றும் கொடுமையான தீய குணமுடைய வீணரை, முதல் தூரிசு அறுத்திடும் வேலா - அடியோடு அவர்கள் குற்றத்தை ஒழிக்கும் வேற்படை உடையவனே!, குயில்மொழி - குயில்போன்ற இனிய சொல்லையும், கயல் விழி - சேல்போன்ற கண்ணையும், துகிர் இதழ் - பவளம் போன்ற இதழையும், சிலை நுதல் - வில்லைப்போல வளைந்த புருவத்தையும், சசிமுகம் - சந்திரனைப்போன்ற முகத்தையும், இளநகை - புன்னகையையும், கனம் குழல் - மேகம் போன்ற கூந்தலையும், தனமகிரி - மலைகளைப்போன்ற ஸ்தனங்களையும், கொடி இடை - பூங்கொடிபோல நுட்பமான இடையையும், பிடிநடை - பெண் யானையை ஒத்த நடையினையும் உடைய, குறமகள் திருவினை புணர்வோனே - குறமகளாகிய வள்ளிநாயகியின் அழகை நுகர்பவனே!, 'கருது சட்சமயிகட்கு - எண்ணப்படும் ஆறு சமயத்தாருக்கும், அமைவுற-

பொருந்த, கிறிஉடை பறிதலை சமணரை - வஞ்சமுடைய பறித்த தலையை உடைய சமணர்களை, குலமுதல பொடிபட-குலத்தோடு அழியும்படி, கலகம் இட்டு உடல் உயிர்மாறுபட்டு வருந்துகின்ற உயிர்களை, கழுவின் உச்சியில் வைத்திடுவோனே - கழுமரத்தின் உச்சியில் ஏற்றிவைத்தவனே! கமுகினில் குலை அற்று-பாக்குமரத்தில் குலைகள் அற்று விழவும், கதலியின் கனி உக - வாழைமரத்தில் பழங்கள் சொரியவும், கழையில் முத்தம் உதிர-கரும்பில் முத்துக்கள் உதிரவும், கயல்குதித்து உலவும்-கயல் மீன்கள் துள்ளிச் செல்கின்ற, நல் கனம் வயல் திகழ - செழுமை பொருந்திய பெரிய வயல்கள் விளங்கும், திருக்காபுரத்து அறுமுகம் பெருமாளே - அழகிய விரிஞ்சிபுரத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமானே', ஒருவரை சிறுமனை-ஒரு புடனை சிறிய வீட்டின், சயன மெத்தையினில் வைத்து - படுக்கை மெத்தையில் வைத்தும், ஒருவரை தம தலைக்கடையினில் சுழல விட்டு-ஒரு புருஷனைத் தம்முடைய தலைக்கடையில் சுற்றும்படி செய்தும், ஒருவரை பரபரப்பொடு தெருத்திரியவிட்டு-ஒரு புருடனை விரைவாகத் தெருவில் திரியும்படிவிட்டும், அதனால் ஒருவருக்கு ஒருவர் சக்களமையில் சருவவிட்டு-ஒருவருக்கு ஒருவரைச் சக்களத்திக் காய்ச்சலில் பொருந்தும்படி விட்டும், உரு உபத்திரம் எடுத்து-அச்சமும் துன்பமும் அவர்களுக்குள் உண்டாக்கியும், அறையில் மல்புரிய விட்டு-படுக்கை அறையில் சண்டைசெய்யும்படி செய்தும், உயிர் பிழைப்பது கருத்து அளவில்-உயிர் வாழ்வதே என்

னுங்கால், உசிதம் என செயும் மானா - மேன்மை என்று எண்ணும்படி செய்யும் பெண்கள், தரும மயல் பிரமையில் - கொடுக்கும் ஆசைமயக்கத்தில், தவம் நெறிக்கு அயல் என - தவமார்க்கத்திற்கு அந்நியமாகி, சரியையில் கிரியையில் தவமும் அற்று - சரியையிலும் கிரியையிலும் ஒழுக்கத்தையும் விட்டு, எனது கைத்தனம் அவத்தனில் இறைத்து - என்னுடைய கைப்பொருளை வீணாகச் செலவழித்து, எவரும் உற்று இகழ்வுற - எல்லாரும் சேர்ந்து இகழும்படி, திரிவேனை - திரிபவனாகிய அடியேனை, சகலம் அகற்றும் அற - எல்லாத் துன்பங்களும் ஒழியவும், சகலம் சற்குணம் வர - எல்லா நற்குணங்களும் உண்டாகவும், தரணியில் புகழ்பெற - உலகத்தில் புகழை அடையவும், தகைமைபெற்று - பெருந்தன்மை பெற்று, உனது பொன் சரணம் - தேவரீரது அழகிய திருவடிகளை, எப்பொழுதும் நட்பொடு நினைத்திட அருள்தருவாய் - எக்காலத்திலும் அன்புடன் தியானிக்கக் கருணைசெய்வாய். எ-று.

(வி-ரை) சக்களமை-விரோதம். புலவர்-தேவர். அவத்தர்-வீணர். துகிர்-பவளம். சசி-சந்திரன். கனகுழல்-மேகம் போன்ற கூந்தல். தனகிரி முலைகளாகிய மலைகள். பிடிநடை-பெண் யானையைப் போன்ற நடை. சட்சமயிகள் - ஆறு சமயத்தார். பறிதலைச் சமணர் - மயிரைப் பறித்துக்கொள்ளும் தலையையுடைய சமணர். கலகமிட்டு - வாதுசெய்து, திருஞானசம்பந்தர் முருகப்பெருமான் திருவவதாரமே என்பார், அவர் செய்த செயல்களை இவர்மேலேற்றிக் கூறி

ஞர். கரபுரம் - விரிஞ்சிபுரம், இது வேலூருக்கு அருகில் உள்ள ஒரு சிவஸ்தலம். நீர்வள மிகுதியால வயல்களிலே கயலமீன் குதித்துத் துள்ள கமுகமரத்திலுள்ள குலை அற்றும, வாழைக்கனிகள் கீழே விழுந்தும் கருமபிலே முத்துக் கள் உதிர்ந்து போகும் என்று கூறினா இவவாறு தொடாபு செயது கூறுதல புலவா மரபு. (99)

## விநாயகமலை

100 தனதன தானு தனுதன தனதன தானு தனுதன
தனதன தானு தனுதன-தனதான

சரவண சாதா நமோநம கருணைய தீதா நமோநம
சததள பாதா நமோநம அபிராம
தருணக தீரா நமோநம நிருபமல வீரா நமோநம
சமதள வூரா நமோநம சகதீச
பரமசொ ரூபா நமோநம சுராபதி பூடா நமோநம
பரிமள நீபா நமோநம உமைகாளி
பகவதி பாலா நமோநம இகபர மூலா நமோநம
பவுருஷ சீலா நமோநம அருள்தாராய்
இரவியு மாகாச பூமியும் விரவிய தூளே றவானவ
ரெவர்களு மீடேற எழ்கடல முறையோவென்
றி டபட மாமே ருபூதர மிடிபட வேதா ளிசாசர
ரிகல்கெட மாவே கநீடயில விடுவோனே
மரகத ஆகார ஆயனு மிரணிய ஆகா ரவேதனும்
வசுவெனு மாகார ஈசனும் அடிபேண

மயிலுறை வாழ்வே விநாயக மலையுறை வேலா மகீதர
வனசர ராதா ரமாகிய பெருமாளே.

(இ-ள்) சரவண சாதா நமோ-சரவணப் பொய்கையில் தோன்றினவரே உமக்கு நமஸ்காரம், கருணை அதீதா நமோ நமோ - அருளையுடைய மேலானவரே உமக்கு நமஸ்காரம், சததளபாதா-நூறு இதழ்களையுடைய தாமரை மலர் போலும் திருவடிகளை யுடையவரே!, அபிராம - அழகு நிறைந்தவரே!, தருணக-இளம்பருவமுடையவரே!, தீரா-வலிமையுடையவரே!, நிருப - அரசனே!, மலவீரா - போர வீரரே!, சமதள ஊரா-திருப்போரூரில் எழுந்தருளி யிருப்பவரே!, சகதீச - உலகத்துக்குத் தலைவரே!, பரமசொரூபா-திவ்விய வடிவமுடையவரே!, சுராபதி பூபா-தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரனுக்குத் தலைவரே, பரிமள நீபா-மணம் பொருந்திய கடப்பமாலையை அணிந்தவரே! உமை காளி பகவதிபாலா - கருநிறமுடையவரும் ஆறு குணங்களுடையவருமாகிய உமாதேவியார் புதல்வரே!, இகபர மூலா-இகத்துக்கும் பரத்துக்கும் காரணமானவரே!, பவுருஷ சீலா-ஆண்மைமிக்க ஒழுக்க முடையவரே!, இரவியும் - சூரிய மண்டலமும், ஆகாச பூமியும்-ஆகாசமும் பூமியும், விரவிய தூள் எற - நெருங்கியதுகள் பரப்பவும், வானவர் எவர்களும் ஈடேற-தேவர்கள் எல்லாரும் மேன்மையடையவும், ஏழ்கடல - ஏழுகடல்களும், முறையோ என்று இடர்பட-இது முறைமையோ என்று துன்பப்படவும், மாமேரு பூதரம் இடிபடவே-மகாமேருவாகிய மலை இடிபடவும், நிசா

சரா-இராககதரது, இகலகெட-வலியழியவும், மாவேகம்-மிகக வேகமுடைய, நீடு அயில - சிறநத வேற்படையை, விடுவோனே - விடுபவரே! மரகத ஆகாரம் - பசசையைப் போலுந திருமேனியையுடைய, ஆயனும் - திருமாலும், இரணிய ஆகாரம-பொனனைபொத்த திருமேனியையுடைய, வேதனும் - பிரமதேவனும, வசு என ஆகாரம - அககினி யென்று சொலலபபடும வடிவையுடைய, ஈசனும்-காலாக் கினி ருத்திரனும், அடிபேணி-திருவடிகளைத தொழ, மயில் உறை வாழ்வே-மயிலில ஊாகினற வாழவை யுடையவரே', விநாயகமலை-விநாயகமலை எனனும திவ்விய ஸ்தலததில, உறைவேலா-வசிககினற வேலனே', மகீதர-மலையில வசிபப வரே', வனசரா ஆதாரமாகிய பெருமாளே - காட்டில வசிக் கினற வேடர்களைப பாதுகாககும பெருமாளே! எ-று.

(வி-ரை) சாதம்-பிறபபு. அதீதன் - ததுவஙகளுககு அபபாறபட்டவன. சததளம் - நூறறிதழ்; தாமரையைக் குறிக்கும. அபிராமம-அழகு. தருணம-இளமை. நிருபன்-அரசன. சமதளவூா-திருபபோரூா, சமம்-போா 'இகபர மூலா' எனறூா. இம்மைமறுமைவீடுபேறுமுதலிய எலலாவற றிறகுங் காரணபபொருளாய் இருததலின். பவுருஷம்-ஆண்மை; புருஷசம்பநத முடையது; தத்திதாந்தம். ஏழ் கடல்-உவர்நீர்ககடல், பாறகடல, தயிாக்கடல, நெய்க்கடல, கருப்பஞ்சாற்றுக்கடல, தேன்கடல், நன்னீர்ககடல. ஆகா ரம்-வடிவு; வடமொழி, இரணிய ஆகார வேதன்-பொன் வடிவததையுடைய பிரமதேவன். வேதன் - வேதததுககுத்-

தலைவன். வசு-அக்கினிதேவன், இங்ஙனம் காலாக்கினி ருத்தி ரனைக் குறித்தது. விநாயகமலை - ஒரு முருகன் ஸ்தலம். மகீரதம்-பூதரம் போல மலைக்கு ஒரு பெயர், வடமொழி. பேணி என்னும் செய்தெனெச்சம் பேண என்ச் செயவெனெச்சமாகத் திரித்துப் பொருளுரைக்கப்பட்டது

ஆகப் பாடல்கள் 100

திருப்புகழ் விருத்தியுரை முற்றிற்று.

## திருப்புகழ் விருத்தியுரையின்

# பாட்டு முதற்குறிப் பகராதி




| பாட்டு | பக்கம் | பாட்டு | பக்கம் |
|---|---|---|---|
| அ | | உ | |
| அஞ்சுவிதபூதம | 335 | உருக்கார வாளிகண்கள் | 149 |
| அதல சேடனாராட | 196 | உ,வின முறை கதறி | 205 |
| அபகாரநிந்தைபட்டு | 329 | எ | |
| அருக்குமங்கையா | 53 | எதிரிஇரு குழையை | 251 |
| அருமாமதனைப்பொரு | 193 | எல்லாரு ஞானத | 34 |
| அளகநிரை குலையவிழி | 318 | எனையடைந்த குட்ட | 237 |
| அளகபாரமலைந்து | 188 | ஏ | |
| அறிவிலாப்பித்தருன்ற | 244 | ஏறுமயிலேறி | 38 |
| அறுகுநுனி பனியனைய | 412 | ஒ | |
| அனிச்சங்கார் முகம | 106 | ஒருவரைச சிறுமனைச | 421 |
| ஆ | | க | |
| ஆலமேற்ற விழியினா | 295 | கடலைச சிறைவித்து | 210 |
| ஆலம வைத்த விழி | 180 | கடலை பொரியவரை | 218 |
| ஆலுமயில போலுற்ற | 345 | கண்டுபோலமொழி | 311 |
| ஆலவிழிநீலத் தாலத | 347 | கதியை விலக்கு | 115 |
| இ | | கமலமாதுடன் | 84 |
| இடருக்கிடராகிய | 302 | கமலமொட்டடைக்கட | 405 |
| இருகுழை யெறிந்த | 90 | கயல்விழித்தேனைச | 342 |
| இலவிதழ கோதிநேதி | 160 | கரமுமுளரியின் மலா | 320 |
| இறுகுமணிமுலை மருவு | 403 | கருப்பத்தூறிப்பிரவாதே | 409 |

| பாட்டு | பக்கம் |
|---|---|
| கருவடைந்து | 76 |
| கருவினுருவாகி | 111 |
| கறுத்து நீவிடுகூரவேலி | 277 |
| களவுகொண்டு கைக்காசி | 248 |
| களபமொழுகிய | 98 |
| கறுக்குமஞ்சன | 58 |
| கனகக்கும்பமிரண்டு | 171 |
| கனைகடல வயிறுகுழம்பி | 330 |
| கனறிவரு நீல | 103 |
| **கா** | |
| காதல் மோகந்தரும | 291 |
| காரணிந்தவரை | 118 |
| **கு** | |
| குடத்தைத்த தகாதது | 185 |
| குமர குருபரமுருக | 123 |
| குயிலொன்று மொழி | 307 |
| குவளை பொருதிரு | 284 |
| குறித்த மணிப்பிணித | 325 |
| குறிப்பரிய குழகுமதி | 256 |
| **கை** | |
| கைத்தல நிறை | 43 |
| **கோ** | |
| கோமள வெ பிணை | 130 |
| **ச** | |
| சரணகமலாலயத்தை | 363 |
| சரதமே யுதித்தாயுரத்தே | 366 |
| சரவணசாதாநமோ | 425 |
| சருவுமபடி | 64 |
| **சீ** | |
| சீருலாவிய வோதிம | 152 |
| **சு** | |
| சுட்டது போலாசை | 383 |
| **சே** | |
| சேலையடர்த்தாலமிகு | 266 |
| **த** | |
| தடக்கைப் பங்கயங் | 355 |
| தமருமமருமனையு | 396 |
| தலைமயிர் கொக்கு | 313 |
| தறையின் மானிட | 146 |
| **தி** | |
| திருப்புகழ்படிக்கு | 35 |
| **தீ** | |
| தீயும்பவனமும் நீரும் | 350 |
| **து** | |
| துள்ளுமத வேள்கை | 334 |
| **தோ** | |
| தோகப பெரும்பயோ | 264 |
| **நி** | |
| நிறைந்ததுப் பிதழ் | 260 |
| **நீ** | |
| நீரிழிவு குட்டமீளை | 386 |

| பாட்டு | பக்கம் |
|---|---|
| நீள்புயற் குழலமாதா | 360 |
| **நெ** | |
| நெடியவடகுவ | 233 |
| **ப** | |
| பஙகமேவும பிரபபந்த | 240 |
| பந்தாடியஙகை | 155 |
| பழுதர ஒதிக்கடந்து | 269 |
| **பா** | |
| பாதிமதி நதிபோது | 305 |
| **பு** | |
| புடவிக கணிதுகிலென | 222 |
| புணரியு மனஙக | 141 |
| புகுவத்தைநெரிதது | 280 |
| **பூ** | |
| பூததாரகூடுங கொததலா | 200 |
| **பொ** | |
| பொதுவதாயத்தனிமுத | 352 |
| **ம** | |
| மதவெங்கரிககிரண்டு | 287 |
| மருக்குலாவிய மலரணை | 398 |
| மருவுகடல முகிலணைய | 368 |
| மருவே செறித்த | 128 |
| மலரணி கொண்டை | 227 |
| மனறலஙகொநது | 80 |
| **மு** | |
| முகமு மினுககிபபெரும் | 338 |
| முததுககுசசிட்டு | 215 |
| முத்தைத்தரு | 49 |
| முருகு மயூரச சேவக | 390 |
| முழுகிவடவா முகத்தி | 358 |
| **மொ** | |
| மொழிய நிறஙகறுத்து | 400 |
| **வ** | |
| வஞ்சக லோபமூடர் | 135 |
| வஞ்சஙகொண்டுந்திட | 230 |
| வடிவது நீலங்காட்டி | 393 |
| வரிசோநதிடு சேல | 175 |
| வரைததடங | 71 |
| **வா** | |
| வாரண முகஙகிழிநது | 164 |
| **வி** | |
| விடுங்கைக் கொத்தகடா | 273 |
| விடுமதவேள்வாளியின் | 298 |
| **வெ** | |
| வெஞ்சரோருக | 95 |
| **வே** | |
| வேனின் மதனேந்து | 167 |


பாட்டு முதர்குறிபபகராதி முற்றிறறு.

